# மனித மேம்பாட்டிற்குச் சிவசங்கரியின் பங்களிப்பு

முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெற்ற ஆய்வேடு


ஆய்வாளர் :

**க.இராஜலட்சுமி,** எம்.ஏ., எம்.ஃபில்.,
தமிழ் விரிவுரையாளர் (முதுநிலை)
ஜவகர் அறிவியல் கல்லூரி,
நெய்வேலி - 607 803

நெறியாளர் :

முனைவர் **சு.அமிர்தலிங்கம்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர்,
முதுகலைத் தமிழ் ஆராய்ச்சித்துறை
திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக்கல்லூரி,
விருத்தாசலம்-606 001.


**முதுகலைத் தமிழ் ஆராய்ச்சித்துறை**



**திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக் கல்லூரி,**

**விருத்தாசலம் - 606 001.**

**மே - 2007**

<u>**நெறியாளர் சான்றிதழ்**</u>

முனைவர் **சு.அமிர்தலிங்கம்,**
இணைப் பேராசிரியர்,
முதுகலைத் தமிழ் ஆராய்ச்சித்துறை,
திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக்கல்லூரி,

விருத்தாசலம்
நாள் : 23-05-2007

---

"**மனித மேம்பாட்டிற்குச் சிவசங்கரியின் பங்களிப்பு**" என்னும் தலைப்பில் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக என் மேற்பார்வையில் விருத்தாசலம் திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக்கல்லூரி முதுகலைத் தமிழ் ஆராய்ச்சித் துறையில் பகுதி நேர ஆய்வாளராக இருந்த திருமதி. **க.இராஜலட்சுமி** அவர்கள் ஆய்வு நிகழ்த்தியபோது ஆய்வாளரின் சொந்த முயற்சியில் உருவானது இந்த ஆய்வேடு. இஃது இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப்பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை எனச் சான்றிதழ் வழங்குகிறேன்.




சு. அமிர்தலிங்கம்
நெறியாளர். 23/5/07
Dr. S. AMIRTHALINGAM,
M.A., M.Phil., Ph.D.
Reader, Department of Tamil,
T.K. Govt. Arts College,
VRIDDHACHALAM - 606 001.

# ஆய்வாளர் உறுதிமொழி

**க. இராஜலட்சுமி,** எம்.ஏ., எம்.ஃபில்.,
பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
முதுகலைத் தமிழ் ஆராய்ச்சித்துறை,
திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக்கல்லூரி,
விருத்தாசலம் - *606 001.*

---

"**மனித மேம்பாட்டிற்குச் சிவசங்கரியின் பங்களிப்பு**" என்னும் தலைப்பில் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக நிகழ்த்தப்பட்ட இவ்வாய்வு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப்பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என உறுதியளிக்கிறேன்.

நாள் : 23-05-2007

க. இராஜலட்சுமி
ஆய்வாளர்.

தலைவர்,
தமிழ்த் துறை,
திரு. கொளஞ்சியப்பர் அரசு கலைக் கல்லூரி
விருத்தாசலம்-606 001.

23/5/07
முதல்வர்
திரு. கொளஞ்சியப்பர்
அரசு கலைக் கல்லூரி
விருத்தாசலம்.

## நன்றி மலர்கள்

நெய்வேலி ஜவகர் அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறையில் விரிவுரையாளராகப் பணிபுரியும் எனக்குப் பகுதிநேர முனைவர் பட்ட (பிஎச்.டி.,) ஆய்வு நிகழ்த்த, சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் அவர்களும் மற்றும் ஆட்சிக்குழு உறுப்பினர்களும் அனுமதி அளித்து உதவினார்கள்.

ஆய்வு நிகழ்த்த ஜவகர் அறிவியல் கல்லூரியின் செயலர், ஜவகர் கல்விக் கழகப் பொறுப்பாளர்கள், முதல்வர் பேராசிரியர் முனைவர் ச.அரங்கராசன் ஆகியோர் முழு மனதுடன் அனுமதி வழங்கி இசைவளித்து உதவினார்கள்.

சந்திக்கின்றபோதெல்லாம் ஆய்வின் அவசியத்தை வலியுறுத்தி ஊக்கமளித்த சென்னைப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் பேராசிரியர் முனைவர் பொற்கோ அவர்கள் இவ்வாய்வை நிறைவு செய்யப் பல்வேறு கருத்துரைகள் வழங்கிப் பல்லாற்றானும் உதவினார்கள்.

விருத்தாசலம் திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக்கல்லூரி முதல்வர் பேராசிரியர் லோ.பழனியாண்டி அவர்களுக்கும், முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் திரு.ஆ.தண்டபாணி அவர்களும், தமிழ்த் துறைத் தலைவர் முனைவர். அ.அழகிரிசாமி அவர்களும், தமிழ்த்துறைப் பேராசிரியர் முனைவர் சு.தங்கத்துரை அவர்களும், பேரா. திரு. முத்தழகன், பேரா. திரு. ஆ. தண்டபாணி, திரு. பேரா. கி.சிவகுமார், திருமதி. முனைவர் வெ.ராணி, பேரா. திருமதி.புவனேஸ்வரி ஆகியோர்களும், கல்லூரிப் பொது நூலகர் திரு.மன்னர்மன்னன் அவர்களும் தேவையான உதவிகளைச் செய்துதவினார்கள்.

என் ஆய்விற்கு வழிகாட்டியாக விளங்கி ஆய்வை நிறைவு செய்வதற்கு மேற்பார்வையாளர் பேராசிரியர் முனைவர் சு.அமிர்தலிங்கம் அவர்கள் பெரிதும் துணைநின்று உதவினார்கள்.

ஆய்வுத் தொடர்பாகத் தேவையான செய்திகளைத் தொலைபேசி மூலமாகவும், நேரிலும் எழுத்தாளர் சிவசங்கரி அவர்கள் வழங்கி ஊக்கமளித்து இவ்வாய்விற்கு உதவினார்கள்.

ஆய்வேட்டைப் பேராசிரியர் திரு. கி. சிவகுமார் அவர்கள் மெய்ப்புத்திருத்தம் செய்து கொடுத்துதவினார்கள்.

ஆய்வுப்பணி மேற்கொண்டபொழுது ஊக்கமளித்து உதவிய எம் தோழியர் பேரா.முனைவர் ம. சரோஜா, பேரா. முனைவர் கெச்.அனார்கலி மற்றும் பேரா. முனைவர் வி.எஸ்.தியாகராஜன், பேரா. முனைவர் டி.மனோகரன், பேரா. முனைவர் க.இராஜாராம், திரு. டி. காமராஜ், மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர் முனைவர் ம. இராசா மற்றும் நண்பர்கள் உதவினார்கள்.

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக நூலகர், உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவன நூலகர், ஜவகர் அறிவியல் கல்லூரி நூலகர் திரு இளங்கோவன், நெய்வேலி பழுப்பு நிலக்கரி பொது நூலக நூலகர் ஆகியோர் தேவையான அரிய நூல்களைக் கொடுத்து உதவினார்கள். கணிப்பொறி மைய நிறுவனர் ஓசை ராஜு அவர்கள், ஓசை மறுதோன்றி அச்சகத்தில் பணிபுரியும் நண்பர்கள் சிறந்த முறையில் கணினி வடிவமைப்பு மற்றும் கட்டமைப்பு செய்து உதவினார்கள்.

என் கணவர் பொறியாளர் திரு. க.விஜயகுமாரன் அவர்கள், ஆய்வை நிகழ்த்துவதற்குத் தேவையான அரியக் கருத்துக்களை வழங்கி ஒத்துழைப்பு நல்கினார்கள். என் மகள் செல்வி வி. அபர்ணாஸ்ரீ இவ்வாய்வுக்குத் தன்னால் இயன்ற உதவியைச் செய்துதவினார். உறவினர்களும், நண்பர்களும் இவ்வாய்வு முழுமைபெறப் பல்லாற்றானும் ஒத்துழைப்பு நல்கினார்கள்.

இவ்வனைவருக்கும் என் இதயம் கனிந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

க. இராஜலட்சுமி

க. இராஜலட்சுமி
ஆய்வாளர்.

# மனித மேம்பாடிற்குச் சிவசங்கரியின் பங்களிப்பு

## பொருளடக்கம்

# முன்னுரை

இலக்கியங்கள் மனித நாகரிகத்தையும் மனித வரலாற்றையும் உணர்ந்துகொள்ள உதவும் கருவியாகின்றன. காலச் சூழலுக்கு ஏற்ப மனித சமுதாயம் மாறிவந்துள்ளது. அந்த மாற்றங்களை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

18, 19 ஆம் நூற்றாண்டுகளை உரைநடையின் காலம் என்றே குறிப்பிடுவர். அன்று செய்யுள் இருந்த இடத்தை இன்று உரைநடை பிடித்துக்கொண்டு ஆதிக்கம் செலுத்தத்தொடங்கி அதில் வெற்றியும் கண்டது.

உரைநடை மக்களின் பயன்பாட்டிற்கு வந்தநிலையில் அதன் வகைமைகள் பெருகின. அதன்சொல்லும் பொருளும் எளிமைபெற்றன. அதனால் எல்லோராலும் அது விரும்பி ஏற்றுக்கொள்ளப்பட்டது.

உரைநடையைக் கையில் எடுத்த படைப்பாளர் பலரும், பல வகைமைகளைக் கையாண்டனர். அவை நாவல், சிறுகதை, நாடகம், கடித இலக்கியம், பயணநூல்கள், வாழ்க்கை வரலாற்று நூல்கள், நாள்குறிப்புகள் என்றாயின.

இவற்றின் வாயிலாகச் சமுதாய ஆக்கத்திற்கும், பண்பாட்டு வளர்ச்சிக்கும், மாற்றங்களுக்கும் பயனளிக்கும் வகையில் படைப்புகள் அமைந்தன. அவை தனிமனித உணர்வுகளுக்கும், மேம்பாட்டிற்கும் வழி வகுப்பவையாகவும் விளங்குகின்றன. மனித இனம் சிறக்கத் தனிமனிதன் சிறத்தல் அவசியம். அவன் எண்ணங்கள் சிறக்க வேண்டும். நல்ல மனிதர்கள், நல்ல நூல்கள் தனிமனிதனை மேம்படுத்தும். இன்றைய படைப்பாளர்கள் அவற்றைச் செய்கின்றனர். அவர்களுள் குறிப்பிடத்தக்க எழுத்தாளர் சிவசங்கரி.

எழுத்தாளர் சிவசங்கரி நாவல், சிறுகதை, கட்டுரை, பயணக்கட்டுரை, வாழ்க்கைச் சரிதங்கள் என்று தம் இலக்கியப் படைப்பின் வகைகளை விரிவுபடுத்தியுள்ளார்.

தம்முடைய எழுத்துக்கள், மனிதனை மேம்படுத்த வல்லனவாக அமைய வேண்டும் என்பதில் உறுதியுள்ளவர். எழுத்துப் பணியுடன் நிற்காமல், தனிமனிதன் மேம்படச் செயலாற்றியும் வருகின்றார். 'அக்னி' (*AGNI - Awakened Group for National Integration*) என்ற அமைப்பின் மூலம் தேசிய ஒருமைப்பாட்டை இளைஞர்களிடத்து உண்டாக்கியுள்ளார்.

சென்னை - அடையாறு தரமணியில் உள்ள வி.எச்.எஸ் மருத்துவமனையில், போதை மருந்து மற்றும் மது அடிமைகளுக்குச் சிகிச்சையளிக்கும் 'ராஜாஜி புனர்வாழ்வு மையம்' அமைத்து அது சிறப்புடன் இயங்க வழிவகை செய்துள்ளார்.

'நேற்று, இன்று, நாளை' என்ற தலைப்பில், சிவசங்கரி நடத்திய கலந்துரையாடல் நிகழ்ச்சி சன்தொலைக்காட்சியில் ஒவ்வொரு வாரமும் ஒளிபரப்பப்பட்டது.

'ஒரு பெண்ணின் கதை' என்ற அவரது நெடுந்தொடர் சென்னைத் தொலைக்காட்சியில் ஒளிபரப்பாகியது. 'திரிவேணி சங்கமம்' என்ற நாவல் 'நிம்மதி உங்கள் சாய்ஸ்' என்ற தொடராகவும், பின்னர் 'வாழ்க்கை' என்ற தலைப்பில் தொலைக்காட்சிக்காக எழுதப்பட்ட கதை, சன் தொலைக்காட்சியில் ஒளிபரப்பட்டது என்பதும் குறிப்பிடத்தக்கவையாகும். தமது பணிக்காகவும், படைப்பு களுக்காகவும் பல விருதுகளையும் பாராட்டுக்களையும் பெற்றவர்.

மனித இனமேம்பாட்டிற்குத் தமது கருத்துக்களை மனஉறுதியுடன் படைப்புகளில் பதிவுசெய்து வருகிறார். கால ஓட்டத்தின் விரைவினாலும், அறிவியல் தகவல் தொடர்புச் சாதனங்களின் பரவலினாலும் ஏற்படும் தனிமனித சமுதாய மாற்றங்களையும், அதனால் ஏற்படும் தாக்கங்களையும் இவரது படைப்புகளில் காணமுடிகிறது.

**ஆய்வுத் தலைப்பு**

எழுத்தாளர் சிவசங்கரியின் படைப்புகளில், அவரது கட்டுரைகள் மட்டுமே ஆய்வுக்குரியனவாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. கட்டுரைகளின் வாயிலாக எழுத்தாளர் சிவசங்கரி தனி மனிதன், குடும்பம், சமூகம் எப்படி விழிப்புணர்வுடன் வாழ, வளர வேண்டும் என்ற நோக்கில் பிறரைச் சிந்திக்கத் தூண்டியவர். அவர் உணர்த்தும் மனித மேம்பாட்டுச் சிந்தனைகளையும், கருத்துக்களையும் வெளிப்படுத்தவே,

**“மனிதமேம்பாட்டிற்குச் சிவசங்கரியின் பங்களிப்பு”**

என்ற தலைப்பு ஆய்வுத் தலைப்பாகத் தேர்வு செய்யப்பெற்றது.

**ஆய்வு நோக்கம்**

எழுத்தாளர் சிவசங்கரி தம் எழுத்துக்களில் தனித்தன்மையை வெளிப்படுத்தும் முன்னணிப் படைப்பாளர் தமது எழுத்துக்களின் மூலம் தனிமனித, சமுதாயம் மேம்பட வேண்டும் என்ற முற்போக்குச் சிந்தனையாளர். சிவசங்கரியின் கட்டுரைகளில் காணப்படும் தனிமனித மேம்பாட்டுச் சிந்தனை, அவன் சந்திக்கும் சிக்கல்கள் மற்றும் தனிமனிதன் குடும்பத்திலும், சமுதாயத்திலும் சந்திக்கும் சிக்கல்கள், அவற்றிற்கான தீர்வுகள் குறித்துத் திறனாய்வு செய்வதும், அதற்காக அவர் கையாண்டுள்ள தன்மைகள் குறித்தும் ஆய்ந்தறிவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு மூலங்கள்**

சிவசங்கரி எழுதியுள்ள கட்டுரை நூல்கள் 18 தொகுப்புகள் ஆகும். அவற்றுள் ஒன்பது நூல்கள் மட்டுமே இவ்வாய்விற்குரிய முதன்மை ஆதாரங்களாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

1. அப்பா
2. இந்திராவின் கதை
3. உரத்த சிந்தனை
4. என் கண்ணோட்டத்தில்
5. குழப்பங்கள்
6. கொஞ்சம் யோசிக்கலாமே
7. சில அனுபவங்கள் சிலமனிதர்கள்
8. சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது?
9. புதிய கோணங்கள்

மனித மேம்பாடு குறித்து வெளிவந்துள்ள திறனாய்வு நூல்களும், சமுதாயம், மக்கள் வாழ்வியல், பண்பாட்டுக் கூறுகள் பற்றிய நூல்களில் இடம் பெற்றுள்ள கருத்தாக்கங்களும், ஆசிரியரின் பிற படைப்புகளும் அவை தொடர்பான திறனாய்வுகளும், அக்கால, இக்காலத் தமிழிலக்கியங்களும் இந்த ஆய்விற்குத் துணை ஆதாரங்களாகும்.

## ஆய்வு அணுகு முறை

இந்த ஆய்வில் விளக்கமுறை, மானுடவியல், உளவியல், சமுதாயவியல், பண்பாட்டியல், ஒப்பாய்வு ஆகிய திறனாய்வு அணுகு முறைகள் பின்பற்றப்பட்டுள்ளன.

## ஆய்வுத் திட்டம்

**'மனித மேம்பாட்டிற்குச் சிவசங்கரியின் பங்களிப்பு'** என்னும் தலைப்பில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வு, முன்னுரை முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

முன்னுரை

இயல்-1 சிவசங்கரியின் வாழ்வும் பணியும்

இயல்-2 தனிமனித மேம்பாட்டிற்குச் சிவசங்கரியின் சிந்தனைகள்

இயல்-3 குடும்பநல மேம்பாட்டுச் சிந்தனைகள்

இயல்-4 தனிமனித வளர்ச்சிக்குரிய சமுதாய மேம்பாட்டுச் சிந்தனைகள்

இயல்-5 சிவசங்கரியின் படைப்புகளில் உத்திகள்

முடிவுரை

துணைநூற்பட்டியல்

**இயல் விளக்கம்**

'முன்னுரை' தலைப்புத் தேர்வு, ஆய்வின் நோக்கம், ஆய்வு ஆதாரங்கள், ஆய்வுத்திட்டம், பயன் முதலானவற்றின் அறிமுகமாக அமைக்கப்பட்டுள்ளது.

'**சிவசங்கரியின் வாழ்வும் பணியும்**' என்னும் இவ்வியலில் குடும்பச்சூழல்- வளர்ப்புமுறை-புகுந்தவீட்டுச் சூழல்-போராட்ட உறவுகளில் நல்லுறவு-சிவசங்கரியின் எண்ணப்புரட்சி எழுத்தாக வெடித்தவிதம், படைப்புகளின் நோக்கம், சிவசங்கரியின் பன்முகத்திறன்கள், விருதுகள் முதலியவற்றைப் பற்றி ஆராயப்படுகிறது.

'**தனிமனித மேம்பாட்டிற்குச் சிவசங்கரியின் சிந்தனைகள்**' என்ற இயல், தனிமனித வளர்ச்சிக்குத் தடையாகும் பண்புகள் - சுயமதிப்பீடு - சுயவிமர்சனம் - சுற்றுச்சூழல் உணரப்படுதல் - தனிமனிதன் கடைப்பிடிக்க வேண்டிய பண்புகள் - தனிமனிதனின் ஆரோக்கிய விழிப்புணர்வு - தனிமனிதனின் பொருளாதார மேம்பாடு போன்றவற்றைத் தெளிவாக ஆராய்கிறது.

'**குடும்பநல மேம்பாட்டுச் சிந்தனைகள்**' என்னும் இயல், குடும்பம் சொல் பொருள் விளக்கம் - குடும்பத்தின் தோற்றம் - திருமணம் என்ற அமைப்பு - முறையான இன்பநுகர்ச்சிக்குக் குடும்பம் துணைநிற்றல் -

இலக்கியங்களில் திருமணம் - சிவசங்கரி கூறும் இந்துக்களின் திருமணச் சடங்குவிளக்கம் - இஸ்லாமியர், கிறித்துவர்களின் திருமணங்கள் - குடும்பத்தில் உறவுகளும் உறவுநிலைப் பெயர்களும் - குடும்பத்தின் கடமை - பொருள்நிலைமதிப்புகள் - பகிர்தல் உணர்வின் இன்றியமையாமை - குடும்பத்தில் கணவன், மனைவி நெறிப்படுத்துதல் - கணவன், மனைவி நினைவுகொள்ளச் சில கருத்துக்கள் - திருமண முறிவுகளும் அதற்கான காரணங்களும் - இல்வாழ்வின் பெரும்பயன் மக்களைப் பெறுதல் - குடும்ப வாழ்க்கையின் வெற்றி ஆகியவற்றை ஆராய்கிறது.

'**தனிமனித வளர்ச்சிக்குத் துணைநிற்கும் சமுதாய மேம்பாட்டுச் சிந்தனைகள்**' என்னும் இவ்வியல், சமுதாயம் என்பதன் விளக்கம் - பண்பியலின் பிழிவு - சமூகக் கட்டுப்பாடும் பராமரிப்பும் - சமுதாயமும் மதிப்புகளும் - சமுதாயப் பொதுநலன் - அடிப்படைச் சுகாதாரம் - சுற்றுப்புறச் சுகாதாரம் - இளைய தலைமுறையும் தேசியமும் - தேசியக் கொடியும் இளைஞர்களும் - சமூக உடைமைகளும் பாதுகாப்பும் - எய்ட்ஸ் விழிப்புணர்வு - பெண்களும் இன்றைய சமுதாயமும் - பசிப்பிணி போக்குவோம் ஆகியவை பற்றி விரிவாக ஆராய்கிறது.

'**சிவசங்கரியின் படைப்புகளில் உத்திகள்**' என்னும் இயல் இலக்கிய உத்திகள் - உத்திவரையறை - சிவசங்கரியின் படைப்புகளில் உத்திகள்.

வாசகர்கடிதங்களுக்கு விளக்கம், ஆலோசனை அளித்தல்.

உளவியல் நோக்கில் சிக்கல்களுக்குத் தீர்வு கூறல்.

வினா, விடை மூலம் புதிய கருத்துக்களை மக்களிடம் கொண்டு செல்லல்.

சின்னச்சின்ன கதை மூலம் கருத்துக்களுக்கு வலுச்சேர்த்தல்.

முக்கியக் கருத்துக்களைப் பட்டியலிட்டு வரிசைப்படுத்தி உரைத்தல்.

மொழிநடை

ஆகியவை பற்றி ஆராய்கிறது.

**'முடிவுரை'** ஒவ்வோர் இயலின் இறுதியிலும் அவ்வியலின் உள்ளடக்கத்தில் ஆராயப்பட்ட கருத்துக்கள் ஆய்வு முடிவுகளாகத் தொகுத்துரைக்கப் பட்டுள்ளன. அவற்றுள் கூறப்பட்டவை தொகுத்து முடிவுரையில் கொடுக்கப்பட்டுள்ளன.

**ஆய்வுப் பயன்**

இந்த ஆய்வின் மூலம் எழுத்தாளர் சிவசங்கரி அவர்கள், எழுத்துலகில் அடிஎடுத்து வைத்த சூழலை அறிந்து கொள்கிறோம்.

தனிமனிதன் சுய மதிப்பீட்டின் மூலம் தன்னிடமுள்ள வேண்டாத குணங்களை நீக்கி, நல்ல பண்புகளை வளர்த்துக் கொள்ளவும் முடியும் என்பதையும், நல்ல பண்புகள் மனிதனை நல்லவனாக விளங்கச் செய்யும் என்பதையும் வெளிக்காட்டுவதாக இவ்வாய்வு அமைந்துள்ளது.

தனிமனிதன், குடும்பம், குடும்பஉறவுகள், அதன்கடமை, பகிர்ந்துகொள்ளலின் இன்றியமையாமை, கணவன் மனைவி இணைந்து வாழ்தல், நெறிப்படுத்துதல், நன்மக்களைப் பெறுதல், அவர்களை நல்வழியில் வளர்த்து உருவாக்கல் ஆகியன குடும்பத்தின் வெற்றி என அறியப்படுகிறது.

எழுத்தாளர் சிவசங்கரி தம் எழுத்தின் மூலம் முற்போக்குச் சிந்தனைகளைப் படைத்துத் தந்துள்ளார் என்பதும், பலருக்கும் வழிகாட்டியாகத் திகழ்கிறார் என்பதும், தனிமனிதனிடம் தம் எழுத்து மூலம் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தி வருகிறார் என்பதும் இந்த ஆய்வின் மூலம் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.

சமூகத்தில் இன்று புரையோடிக் கிடக்கும் அவலங்களை நீக்கல், மக்கள் விழிப்புணர்வுடன் வாழ்தலின் அவசியம். இளைஞர்களிடம் தேசப்பற்று உருவாக்கலினால் உலக அரங்கில் பாரதத்தை உயர்த்த இயலும். இளைஞர்களிடம் ஆரோக்கியம், சுகாதாரம் குறித்த கருத்துக்களை எடுத்துக்கூறி, அவர்கள் மூலம் சமூக விழிப்புணர்வு உண்டாக்கலும், பள்ளி கல்லூரிகள் வாயிலாக அவற்றை நடத்துதலும்

பெரும் பயன் அளிக்கும் என்ற சிவசங்கரியின் கருத்தை நடைமுறைப் படுத்துதல் சமூகத்தின் வெற்றியாகும். மனித மேம்பாட்டிற்குச் சிவசங்கரியின் எழுத்துப்பணியும், சமூகப் பணியும் ஒப்பற்றனவாகும் என்பதை அறிகிறோம்.

கால வளர்ச்சிக்கேற்பச் சமுதாயம் மாறிவருகின்றது. எழுத்தாளர் சிவசங்கரி தம் எழுத்துகளில் சமுதாய மாறுதல்களைப் பதிவு செய்தல், மாறிக் கொண்டுவரும் சமூக நிகழ்வுகளுக்குரிய காரண காரியங்களை அறிந்து அதனைப் பிரதிபலித்தல், சமூகப் பொருளாதார அமைப்புகளைப் புரிந்து அதன் விளைவுகளை வெளியிடுதல் முதலியவை எழுத்தாளர்களுக்குரிய கடமையாக விளங்குகின்றன. இக்கடமை சிவசங்கரியின் எழுத்துகளில் மேன்மை பெற்று வெளிப்பட்டு விளங்குவதை இவ்வாய்வின் மூலம் உணர்கிறோம்.

எழுத்தாளர் சிவசங்கரி அன்றாட வாழ்வியல் நிகழ்வுகளையும் அரசியல் செய்திகளையும், கல்வி, பெண்கள் நிலை, நிர்வாகச் சீர்கேடுகள், பொருளாதார ஏற்றத்தாழ்வு என்பன போன்ற சமுதாயம் சார்ந்த பல செய்திகளையும் தம் எழுத்துக்களில் எளிய முறையில் எடுத்துக் கூறியுள்ளார். அவற்றைப் புதிய நோக்கிலும், போக்கிலும் தம் கட்டுரைகளில் பதிவு செய்துள்ளார் என்பதை இவ்வாய்வு தெளிவுபடுத்துகிறது.

இவரது கட்டுரைகள், மேலும் பல சமுதாய ஆய்வுக்குரிய கருத்துக்களைக் கொண்டுள்ளன. அவ்வாறு மேற்கொள்ளப்படும் ஆய்வுகளுக்கு இந்த ஆய்வு பயன்படும் என்பது திண்ணம்.

——— ○ ◯ ○ ———

*இயல் - 1*

# சிவசங்கரியின் வாழ்வும் பணியும்

**முன்னுரை**

தமிழ் எழுத்துலகில் பல்வேறு கால, களச் சூழலில் எண்ணற்ற படைப்பாளர்கள் தோன்றியுள்ளனர்; தோன்றியும் வருகின்றனர். அவர்களில் ஆண்களும் பெண்களும் அடங்குவர். படைப்பாளர்கள் சமூகத்தைத் தம் மன உணர்வுகளில் கண்ட காட்சியைக் கேட்ட நிகழ்வுகளைக் கற்பனை கலந்து படைப் பிலக்கியமாகப் பதிவு செய்து வருகின்றனர். அப்பதிவுகள் சமுதாய ஆக்கத்திற்கும், பண்பாட்டு வளர்ச்சிக்கும், மாற்றங்களுக்கும் பயனளிக்கின்றன. அவை மனித இனப் பெருமை உணர்வுகளுக்கு உதவி, மேம்படச் செய்யவும் வழி வகுக்கின்றன. அதனால் படைப்பிலக்கியங்கள் விரும்பப்படுகின்றன. மனித இனம் சிறக்க, மனிதன் சிறத்தல் அவசியம். எண்ணம் மனம் சார்ந்தது. மனம் எண்ணங்களை மேம்படுத்தும். இப்பணியை இன்றைய படைப்பாளர்கள் கையில் எடுத்துள்ளனர். அவர்களில் குறிப்பிடத்தக்க ஒருவர் சிவசங்கரி. சிவசங்கரியின் வாழ்க்கை வரலாற்றையும் அவரின் எழுத்துப்பணி உள்ளிட்ட பிற பணிகளையும் ஆய்வதாகச் '**சிவசங்கரியின் வாழ்வும் பணியும்**' எனும் இவ்வியல் அமைகிறது. அதுபற்றி இவ்வியலில் இனிக் காண்போம்.

**பிறப்பும் கல்வியும்**

சூரியநாராயணன் இராஜலட்சுமி எனும் தம்பதியருக்கு **4**-ஆவது மகளாகச் சிவசங்கரி ***14.10.1942*** இல் சென்னையில் பிறந்தார். அவர் சென்னையிலேயே தம் பள்ளி, கல்லூரிப் படிப்பை நிறைவுசெய்தார். பள்ளிக் கல்லூரிகளில் படிக்கும்போதே சாரணர் இயக்கம், தேசிய மாணவர்படை போன்றவற்றில் சேர்ந்து பயிற்சி பெற்றவர். ஏழு வயதுச் சிறுமியாக இருக்கும்போதே மேடையில் பேசினார். அன்னதான இயக்கத்தை அவர் தந்தை எடுத்து நடத்தியபோது, ஆயிரம்பேர்

கூடியுள்ள கூட்டத்தில் பேசினார். அங்கே முன்னாள் தமிழக முதல்வர் பக்தவச்சலம், கல்கி போன்ற பெரியோர்களால் பாராட்டப்பெற்றார். கல்லூரியில் படிக்கும்போது சிவசங்கரியின் தந்தையும், அவரின் கல்லூரிப் பேராசிரியரும் கொடுத்த ஊக்கத்தால், நன்கு படித்துக் கல்லூரியிலேயே பிஎஸ்.சி., வகுப்பில் முதலாவதாகத் தேர்ச்சிபெற்றுள்ளார்.

**குடும்பச் சூழல்**

சிவசங்கரியின் தந்தை சூரியநாராயணன் தணிக்கை யாளராகப் பணிபுரிந்தவர். அவர் தம் குழந்தைகளிடம் அன்புமிக்கவர். எனினும் கண்டிப்பும் கட்டுப்பாடும் கொண்டவர். பொருளாதாரத்தில் மேம்பட்ட குடும்பம் என்றாலும் மேல்நாட்டு நாகரிகத்தை விரும்பாதவர். பாரம்பரியம் மிக்க பழக்கவழக்கங்களைக் கடைப்பிடித்தார். பெண்குழந்தைகள் மேனாட்டு ஆடை (கவுன், பிராக்) அணிவதையோ, தலைமுடியைக் குட்டையாக வெட்டிக் கொள்வதையோ அனுமதிக்காதவர். பெண் குழந்தைகள் ஆண் குழந்தைகளுக்கு நிகராக உடல், மனவலிமை பெற வேண்டும் என்ற கொள்கை உடையவர். அதனால் தம் வீட்டுப் பெண்களுக்குப் பாட்டு, வீணை, நடனம், நீச்சல் போன்றவற்றில் திறன்களை வளர்த்தார் மற்றும் பள்ளிக் கல்லூரிகளில் சாரணம் இயக்கம், தேசிய மாணவர்படையில் பயிற்சிபெறச் செய்தார். இச்சூழலில் வளர்ந்த சிவசங்கரி இளம் வயதிலேயே தன்முனைப்புடையவராக விளங்கினார். தம்முடைய அறையில் *"If I want a thing be done it shall be done and it will be done"* என்ற ஆங்கில வாசகத்தை எழுதிவைத்துக்கொண்டு அதை தினமும் நான்குமுறை உரக்கப்படித்துச் செயல்படுவார்.[1] தம்மை உருவாக்கிய தந்தையைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளமை வருமாறு :

*மனிதாபிமானம், நேர்மை, கண்டிப்பு, தன்னம்பிக்கை, அன்பு, திறமை என்று அத்தனைக் குணங்களையும் ஒன்றாகக் கலந்த கலவை என் தந்தை. அவர் சூரி அண்ட் கோ என்ற நிறுவனத்தை*

*ஏற்படுத்தினார். தன்னுடைய அயராத உழைப்பினால் நாட்டின் தலைசிறந்த தணிக்கையாளர்களில் ஒருவராக உயர்ந்தார். சூரி அண்ட் கோ நிறுவனக்கிளையை முதன் முதலில் வெளிநாட்டில் (மலேசியாவில்) திறந்தவர். தணிக்கையாளர் (ஆடிட்டர்) சூரியநாராயணன் கால்குலேட்டர் பயன்படுத்தாத அந்தக் காலத்திலேயே லட்சம், கோடிரூபாய்க் கணக்குகளைக்கூட எட்டுவரிசையில் கோடிக்கணக்கில் - பக்கம் பக்கமாகக் கூட்டிக் கழித்துக் கணிக்கும் ஆற்றல் மிக்கவர்* [2]

என்கிறார் சிவசங்கரி.

இத்தகைய தந்தை, வீட்டில் குழந்தைகளைக் கவனிப்பதிலும் மேம்படுத்துவதிலும் தவறியதில்லை. வேலை காரணமாக வெளியூர் சென்று வந்தாலும், குழந்தைகளை அழைத்து அவர்கள் வளர்ச்சி, படிப்பு குறித்துக் கேட்டு அறியும் ஆர்வலர். குழந்தைகள் மீது அக்கறைகொண்டவர். வாரம் தவறாமல் வெள்ளிக்கிழமைகளில் சென்னைக் கபாலீஸ்வரர் கோயிலுக்கு அழைத்து வந்து இறைவனை வணங்கச் செய்வார். ஆன்மீகம் மனிதனை நல்வழிப்படுத்தும் என்ற நம்பிக்கை கொண்டவர். கோயிலில் இருந்து வெளியில் வந்து ஏழை எளியோருக்குக் காசு கொடுத்துத் தான தர்மங்கள் செய்யப் பழக்கினார். அச்செயல் அறச்சிந்தனையை இளம்வயதில் உருவாக்க உதவியது. சிவசங்கரியின் தாய் பெண்மையைப் போற்றியவர். அவரது குடும்பத்தில் தாய் தந்தையர் சண்டை சச்சரவு ஏதுமின்றி அமைதியாக ஆக்கப்பூர்வமாகக் குடும்பத்தை நடத்தியுள்ளனர்.

பெரியோரைப் போற்றுதல், மதித்தல் வேண்டும் எனக் குழந்தைகளுக்குச் சிவசங்கரியின் தந்தை வலியுறுத்தி வந்துள்ளார்.

*பெரியோர் இல்லாவிட்டால் நாம் இல்லை, உடல், குணம், புத்திசாலித்தனம் எல்லாம் வழிவழியாக இளம் தலைமுறையினருக்கு வழங்குபவர்கள் பெரியோர்கள்தான். இப்பண்புகள் யாவும்*

*பெரியோர்கள் நமக்குக் கொடுத்த மூலதனம் என்றும் அவர்களிடம் நாம் அடக்கத்தோடும் பணிவோடும் நடந்துகொள்ளவேண்டும்.* [3]

என்றும் கூறுவார்.

வளமான சமுதாய அமைப்பிற்கு ஆரோக்கியமான குடும்பங்கள் தேவை. அக்குடும்பங்களே அடித்தளமாக அமைகின்றன. விட்டுக்கொடுத்தல், இருப்பதைப் பகிர்ந்து கொள்ளல், எல்லோரிடமும் அனுசரித்து நடத்தல், வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக்கும் என்று சிவசங்கரியின் தந்தை நம்பினார். அதனையே கற்றும் கொடுத்தார். தந்தையின் அந்த நம்பிக்கையை ஏற்று நடந்து வாழ்ந்து சமுதாயத்திற்கும் தம் எழுத்துக்களின் மூலம் வழங்கி வருகிறார் சிவசங்கரி.

சிவசங்கரியின் தாய் ராஜலட்சுமி கணவரின் எண்ணங் களைத் தம் எண்ணமாகக் கொண்டவர்.

*தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற*
*சொற்காத்துச் சோர்வுஇலாள் பெண்*[4]

என்ற வள்ளுவர் வாக்கிற்கேற்பத் தம் கணவன், குழந்தை குடும்பத்தைக் காப்பதில் சிவசங்கரியின் தாய் உயர்ந்து விளங்கியதைக் குறிப்பிடுகிறார். குடும்ப வாழ்க்கைக்குச் சிவசங்கரியின் பெற்றோர் ஒரு முன்னுதாரணம் என்பார். தம் தாய் தந்தையர் சண்டை போட்டுப் பார்த்ததில்லை.

*அம்மா தலைநிறையப் பூவும் பெரிய குங்குமப்பொட்டும், தழைய உடுத்திய புடவையும், வாய்நிறையச் சிரிப்புமாய் விளங்குபவர் என்கிறார்.*[5]

குழந்தைகள் பெரியவராக வளரும்போது, பெற்றோரின் குணநலன்களில் பெரும்பான்மை அவர்களிடம் பதிவாகும். எனவே பெற்றோரின் நடத்தைப் பண்பு, செம்மையாக அமைதல் வேண்டும் என்பதைச் சிவசங்கரியின் பெற்றோர் உணர்ந்து வாழ்ந்துள்ளனர் என்பதை இவ்வாய்வு நிறுவுகிறது.

**புகுந்தவீட்டுச் சூழல்:**

பெண்களுக்குப் பிறந்தவீடு நாற்றங்கால் என்றால், புகுந்தவீடு விளைநிலமாகும். இது தமிழ்ச்சமுதாய அமைப்பாகும். சிவசங்கரியின் 21-ஆம் வயதில், 1963 ஆம் ஆண்டு, சென்னையில் டி.எஸ்.சந்திரசேகரனுக்குத் திருமணம் செய்துவைத்தனர். திருமணத்திற்குப்பின் ஓராண்டு போபாலிலும், அதன்பின் சென்னையிலும் வாழ்ந்தனர். 1971 முதல் 1984 ஆம் ஆண்டு வரை விழுப்புரத்தில் வாழ்ந்துள்ளனர். சிவசங்கரியின் கணவர் 1984 இல் இயற்கை எய்தினார். சிவசங்கரியின் கணவர் சந்திரசேகர் அவர்கள், 'பெண்கள் ஆண்களைச் சார்ந்து வாழ்தல் கூடாது; தனித் தன்மையுடன் வாழவேண்டும்' என்ற புரட்சித் சிந்தனையாளர். ஆகையால் சிவசங்கரியைத் திருமணத்திற்குப்பின் சென்னையில் வங்கியில் பணிபுரியச் செய்தார். உயர்ந்த நிலையில் வாழ்ந்தாலும், வேலைக்காரர்களையும் மனிதர்களாக நடத்த வேண்டும். வாழ்க்கையை அதன்வழியில் ஏற்கப்பழகவேண்டும். எதையும் இலவசமாக எதிர்பார்க்கக்கூடாது. நிம்மதியை விலையாக எதற்கும் தரக்கூடாது என்ற கொள்கை உடையவர் என்று நினைவு கூர்கிறார் சிவசங்கரி.

> *காட்டாறாக இருந்த சிவசங்கரியை, இரு கரைகளாக நின்று பொங்கிவரும் போதெல்லாம் நிதானப்படுத்தியவர். எந்தச் சூழலிலும் அவர்நிலை தடுமாறாமல் இருக்க, அழுத்தமான நங்கூரமாக விளங்கியவர், அவர் கணவர்* [6]

என்று குறிப்பிட்டுள்ளார்.

மரியாதை, அன்பு, ஆராதனை ஆகிய மூன்றும் சேர்ந்ததுதான் குடும்பவாழ்க்கை என்பதைச் சிவசங்கரிக்குத் துல்லியமாக விளக்கியவர் அவர் கணவர் சந்திரசேகரன் ஆவார்.

**(சேரதாண்டவம்) – போராட்ட உறவுகளில் – நல்லுறவு**

குடும்ப உறவில் மாமியார் மருமகள் உறவு போராட்ட உறவாக அமைவதே பெரும்பான்மை. ஆனால் சிவசங்கரியின் மாமியார் உறவு

நட்புறவாக, இணக்க உறவாக அமைந்திருந்தது. பெரியவர்கள் வயதான காலத்தில் பிள்ளைகளோடு விட்டுக்கொடுத்து, பிடிவாதம் செய்யாமல், அவர்களுக்குத் துணையாக வாழ வேண்டும் என்ற கொள்கையுடையவர் அவர். சுறுசுறுப்பு, தூய்மை, ஒழுங்குமுறைகளைக் கடைப்பிடிப்பவர். தம் மருமகள் ஓர் எழுத்தாளர் என்பதில் பெருமை கொண்டவர். அதே நேரத்தில் சிவசங்கரியின் எழுத்துக்களில் உள்ள நிறைகுறைகளையும் விமர்சிக்கக்கூடிய ஒரு விமர்சகர் என்கிறார் சிவசங்கரி.

உறவுகள் தாங்குந் தன்மையதாக இருக்கும்போது, அவ்வுறவு ஆதரவு உணர்வைத் தருகிறது. பெண்களுக்குப் பிறந்த வீட்டு உறவும், அவர் வயிற்றுக் குழந்தைகள் உறவும்தான் ஆறுதல் உறவாக அமைவது இயல்பு. உளவியல் அடிப்படையில் மாமியார்- மருமகள் உறவு போராட்ட உறவாக, பிரிவுபட்ட உறவாக, முரண்பட்ட உறவாகவே அமைந்து காணப்படுகிறது. ஒரே குடும்பத்தவராக இருந்தால்கூட, அவர்களிடையேயும் போராட்ட உறவே மேலோங்கி, மருமகளுக்கு ஆதரவு தரவேண்டிய நேரத்தில் அதைத் தரமறுக்கும் உறவாக அமைவதே இன்றளவும் பெரும்பான்மையாக விளங்குகிறது. ஆனால் சிவசங்கரியின் மாமியார் என்னும் உறவு, இழப்புக்காலத்தில் மனஆதரவு தரும் உறவாக அமைந்துள்ளது.

*மாமியார் மெச்சிய மருமகள் இல்லை*
*மருமகள் மெச்சிய மாமியார் இல்லை* [7]

என்ற மொழியைப் பொய்த்துப் போகச் செய்தனர் சிவசங்கரியும் அவர் மாமியாரும்.

*'மகன் செத்தால் சாகட்டும் மருமகள் கொட்டம்*
*அடங்கினாற் போதும்'*
*"மவன் செத்தாலும் பரவாயில்லை*
*மருமகள் தாலி அறுக்கணும்"* [8]

என்ற பழமொழியையும் மாற்றி, தம்மைவிட அதிகம் பாதிக்கப் பட்டவர் தம் மருமகள் என்று எண்ணி மிகவும் வருந்துகிறார்

சிவசங்கரியின் மாமியார். அந்தத்தாய்,

> *தான் தன் தலைமகனை இழந்து தவிப்பதைவிடத் தன் மருமகள் அவளின் கணவனை இழந்த தவிப்பு மிகப் பெரியது என்று தன்னைத் தேற்றியவர்* [9]

என்கிறார்.

சிவசங்கரி, அவரின் மாமியார் இடையிலான உறவை, நல்உறவைச் சிவசங்கரியின் வீட்டில் தங்கியிருந்தபோது அறிந்த கிருபானந்த வாரியார் தம் சொற்பொழிவில் அவ்விருவரின் (மாமியார் - மருமகள்) உறவைப் பாராட்டிப் பேசினார். அதை நினைவுப்படுத்திப் பெருமிதம் அடைகிறார் சிவசங்கரி. [10]

என் மாமியாரை அவரின் நல்ல குணநலன்களுக்காக மட்டுமல்லாமல் சந்திரசேகரன் என்ற அற்புதமான ஆண் மகனை எனக்கு அளித்து, வார்த்தைகளில் என்னால் விவரிக்க இயலாத அருமையான குடும்ப வாழ்க்கையை அவரோடு 22 ஆண்டுகள் வாழ வழி செய்ததற்காகவும், உடம்பு, வாக்கு, புத்தி, அவயங்கள் எல்லாவற்றாலும் ஆயிரம் முறை வணங்க விரும்புகிறேன் என்று வெளிப்படையாகப் போற்றுகிறார். [11]

சிவசங்கரியின் தந்தை பெரியோரை மதிக்கக் கற்றுக்கொடுத்த பாங்கும், போராட்ட உறவான மாமியார் உறவை இணக்க உறவாக அமைத்துத் தந்ததையும் அறிய முடிகிறது.

தமிழ்ச் சமுதாய அமைப்பு முறையில் பெண் வளரவளர, குடும்பச் சூழலிலும், சமுதாய அமைப்பு முறையிலும், அவள் பல்வேறு தடைகளைச் சிக்கல்களைச் சந்திக்க வேண்டியது, தீர்க்கப்பட வேண்டியது பெண்ணின் பொறுப்பாகிறது. அது அவளின் கடமையாகவும் அமைகிறது. அதனால் பெண்ணுக்கு என்று சில பண்புகளில் மிகைத் தன்மை அவசியமாகிறது.

பெண் என்பவள் பெண்மை, அன்பு, மனிதாபிமானம், தன்னம்பிக்கை, புத்திக்கூர்மை, விட்டுக்கொடுத்தல், மனோபலம், யாரையும் அவரவர் நிலையில் நின்று அவரவர் குறை நிறைகளோடு ஏற்கும் தன்மை, யதார்த்த மனப்போக்கு [12]

ஆகிய பண்புகளை வளர்த்துக்கொள்ள வேண்டும் என்று கூறும் சிவசங்கரி, தம் பெண்மையின் வெற்றிக்குக் காரணகர்த்தாக்களாக விளங்கியவர்கள் தம் குடும்ப உறுப்பினர்கள் என்கிறார்.

கட்டுப்பாடான குடும்பத்தில் பிறந்து வளர்ந்த சிவசங்கரி கல்வியோடு நீச்சல் போன்ற பிற கலைகளையும், பயிற்சிகளையும் பெற்று விளங்கியதால், அவை அவரது மனதுக்குள் தன்னம்பிக்கையை வளர்த்ததோடு மட்டுமல்லாமல், மனநல மேம்பாட்டையும் வளர்த்துள்ளது. பெண் தன்னைச் சுயஅலசல், சுய விமர்சனத்திற்கு ஆட்படுத்திக்கொள்வது அவசியம் என்ற கொள்கையுடையவர். மேலும் இந்தச் சுயஅலசல் பெண்ணின் வாழ்க்கைக்கு மேன்மைக்குத் துணைபுரிவதாக உள்ளது என்று எழுத்தாளர் சிவசங்கரி நம்புகிறார். இந்தப் பாங்கு பெண்ணுக்குத் துன்பம் வரும் நேரங்களில் அவள் இடிந்து விழாமல் தற்காத்து நிற்கத் துணை புரிவதாகவும் நம்புகிறார்.

*"இது என் வாழ்க்கை, இதைச் சீர்தூக்கி நேர்மையாக வாழ்ந்து முடிப்பது என் கடமை"* [13]

என்கின்ற உள்ள உறுதி ஒவ்வொரு பெண்ணுக்குள்ளும் கட்டாயம் வளர வேண்டிய ஒரு பண்பு என்று சிவசங்கரி கூறுகிறார். அவ்வாறு தாம் சிந்தித்ததை, உணர்ந்ததை, தெளிந்து செயல்பட்டதைத் தம் எழுத்துக்களின் மூலம் சமூகத்திற்கு வழங்குகிறார்.

பன்முகத்திறன் கொண்டிருந்த சிவசங்கரியின் ஆற்றலை ஒழுங்குபடுத்தி, ஒருமுகப்படுத்தி எழுத்துப் பணியை ஏற்கச் செய்தவர் அவரின் கணவர்.

சிவசங்கரியின் திருமண வாழ்வில் குழந்தைப்பேறு கிடைக்காததற்கு வருந்தி ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக்கொள்ள நினைத்தவருக்கு அவரின் கணவர் "இந்த சமுதாயத்தையே தத்து எடுத்துக்கொண்டு, அதன் வளர்ச்சிக்குப் பாடுபடலாம்"[14] என்று சிவசங்கரியின் வருத்தம் தீர்த்து அவரின் மனதை எழுத்துலகிற்கு மடைமாற்றம் செய்தவர். அவ்வகையில் சிவசங்கரியின் எழுத்துப் பணி சமுதாயத்தின் நோய் தீர்க்கும் பணியாகப் பல நேரங்களில் பரிமாணம் பெற்றுள்ளது.

**சிவசங்கரியின் எழுத்துப் பணியின் தொடக்கச் சூழல்**

எழுத்தாளர்களுக்கும், படைப்பாளர்களுக்கும் மன உந்துதல்தான் அவர்தம் படைப்புக்குக் காரணமாக அமையும். மன உந்துதல் தற்சார்பு அல்லது புறச்சார்புடையதாக அமைந்து மனத்தாக்கத்தை ஏற்படுத்துமேயானால், அத்தாக்கம் உணர்வு பெற்றுப் படைப்பாக வெளிவருகிறது. இது அடிப்படை உளவியல் கருத்தாகும். சிவசங்கரி இயல்பில் எழுத்தாளர் கிடையாது என்பதை,

> *"25 - ஆவது வயதில் சற்றும் எதிர்பாராத விதமாய் எழுத்தாளராக, மக்களால் அங்கீகரிக்கப்பட்டதை, என் வாழ்க்கையில் நடந்த மிக முக்கியமான, இனிமையான விபத்து என்பேன். எழுத வேண்டும் என்கிற சின்னவயசுத் துடிப்போ, ஆதி நாளைய கனவோ இருந்ததில்லை என்பதோடு எனக்கு எழுத வரும் என்றுகூட நான் கற்பனை பண்ணிப் பார்க்கத் துணிந்ததில்லை."* [15]

என்ற அவர் கூற்று தெளிவுபடுத்துகிறது.

சிவசங்கரி 1968 -இல் ஒரு வளைகாப்பு நிகழ்ச்சியில் பங்குகொள்கிறார். தாய்மையுற்ற பெண்ணுக்குக் கைகளில் வளையல்கள் அடுக்கி, அவளுக்கு இன்பச் சூழ்நிலையை உருவாக்கியிருந்தனர். அச்சமயத்தில் திருமணமாகிப் பல ஆண்டுகள் கழிந்தும் குழந்தைப்பேறு கிட்டாத பெண்ணின் கையில் அம்மிக்குழவி ஒன்றைக் கொடுத்து அதைக் குழந்தையாகப் பாவித்துக் குளிப்பாட்டச்

செய்கின்றனர். உடனிருந்த பெண்கள் குளிப்பாட்டும் பெண்ணிடம் "பார்த்து மெதுவாக, குழந்தை பத்திரம்"என்று கூறிக்கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் சொல்லச் சொல்ல ...... அப்பெண்ணும் அம்மிக் குழவியைப் பரிவோடு, பாதுகாப்போடு குளிப்பாட்டுவதைப் போல் குளிப்பாட்டுகிறாள். கல்லைக் குழந்தையாகப் பாவித்துக் குளிப்பாட்டும் பெண்ணின் மனதிலும் உடலிலும் ஏற்படும் தாய்மை உணர்வு விரைவில் அவளைத் தாய்மையாக்கும் என்ற நம்பிக்கையில் அச்சடங்கு தமிழகத்தில் நடைபெறுகிறது. அந்நம்பிக்கையை வலியுறுத்தும் அறிவியல் உண்மையும் உண்டு. குழந்தைப்பேறு இல்லாதவர்கள், ஒரு குழந்தையைத் தத்து எடுத்து வளர்க்கும்போது இயல்பாக அவர்களுக்கு மகப்பேறு உண்டாகிறது. அந்த உணர்வுப் பூர்வமான தாய்மைத் தன்மை, உடலில் ஏற்படுத்திய மாற்றம் என்கிறது அறிவியல். அவ்வாறு தமிழர் தம் சடங்குகளில் பல அறிவியல் உண்மைகளும் மறைந்துதான் கிடக்கின்றன என்பது தெரிகிறது. அந்த வளைகாப்புச் சடங்கிற்குச் சென்ற சிவசங்கரியின் மனதில் குழந்தைப்பேறு இல்லாத பெண்ணால் செய்யப்பட்ட நிகழ்வுகள் மனத்தாக்கத்தை ஏற்படுத்தின. திருமணமாகி ஏழாண்டுகள் நிறைவுபெற்றும் குழந்தைப்பேறு இல்லாத சிவசங்கரியின் மனதில் அத்தாக்கம் துன்ப உணர்வை ஏற்படுத்தியது. அவரின் மனத்தாக்கம், அந்த உணர்வு, "அவர்கள் பேசட்டும்" என்ற முதல் சிறுகதை எழுதக் காரணமாக இருந்தது. அக்கதை கல்கி இதழில் *1968* ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் வெளிவந்தது.

இரண்டாவது சிறுகதையான "உனக்குத் தெரியுமா?" சிறுகதைக்கான கருவும், நிகழ்வுகளும் சிவசங்கரி பார்த்து உணர்ந்தவையாகும். கட்டுப்பாடான குடும்பத்தில் பிறந்து வளர்ந்த சிவசங்கரிக்குத் திருமணத்திற்குப் பின் வங்கியில் மக்கள் தொடர்பாளராகப் பணி செய்யும் வாய்ப்புக் கிட்டியது. சமுதாயத்தில் பொருளாதார மேல்மட்டத்தில் வாழும் சில ஆண்களும், பெண்களும் குடிகாரர்களாக, உயர்பண்பு எதுவும் இல்லாதவர்களாக இருப்பதை

அவர் காண்கிறார். ஒரு நாள் இரவு அலுவலக விருந்துக்குச் சென்றுவிட்டுத் திரும்பும்போது சில நண்பர்களின் இரவு நேர அவல வாழ்க்கையைப் பார்க்க நேரிடுகிறது. இந்நிகழ்ச்சி அவரின் மனதை உறுத்திய அதே நேரத்தில் அவரின் மனதில் 'உனக்குத் தெரியுமா?' என்ற சிறுகதையும் பிறக்கிறது. தமக்கு ஏற்பட்ட அனுபவங்கள், தாம் கண்ட அனுபவங்கள் இவைகளில் எவையோ, அல்லது எல்லாமோ எழுத்தாளரின் மனதைப் பாதித்துப் படைப்புகளை உருவாக்குகிறது. சிவசங்கரியின் சொந்த அனுபவம், அவர்கண்ட அனுபவம் ஆகிய இரண்டும் அவரின் முதல், இரண்டாவது சிறுகதைகள் பிறக்கக் காரணமாக அமைந்தன என்பது தெளிவாகத் தெரிகிறது.

**சிவசங்கரி படைப்பின் நோக்கம்**

எழுத்தாளர்கள் பல்வேறு காரணங்களுக்காக எழுதுகின்றனர். தாம் உணர்ந்த அனுபவங்களை வெளிக்கொணர வேண்டும் என்ற உந்துதலால் எழுதுகின்றவர்கள் உண்டு. இன்னும் சிலர் பாதிக்கப்பட்ட மன உளைச்சல்களை தீர்த்துக்கொள்ள எழுதுவர். இன்னும் சிலர் சமுதாயம் புரையோடிப் போகக் காரணமாக இருக்கும் சிக்கல்களைக் கண்டறிந்து அடையாளம் காட்டவும், இன்னும் சிலர் சிக்கல்களுக்குத் தீர்வு காணவும் எழுதுவதுண்டு. சிவசங்கரியின் எழுத்துக்கள் சமுதாயத்தின் பல கோணங்களையும் நுணுகிக்கண்டு, மனிதர்களின் பல்வேறு நிலைகளையும் அதன் பின்னணியோடு ஆய்ந்து சிக்கல்களைக் கண்டறிந்து அவற்றைத் தீர்க்க முயல்வதாக அமைகின்றன.

இன்றைய பொருளாதார நிலையில் கூட்டுக் குடும்பம் சிதைந்து தனிக் குடும்பமாய் ஆணும் பெண்ணும் பொருளீட்ட விரும்பி நகரக்குடியிருப்பையே நாடுகின்றனர். அதனால் அவர்களின் வாழ்க்கையில் வசதி மேம்படுகிறது என்றாலும் குழந்தை வளர்ப்பில் சிக்கல் ஏற்படுகிறது. குழந்தையைக் காப்பதில் சரியான அரவணைப்புக் கிட்டாமல் குழந்தையின் மன, உடல்நலம் பாதிக்கப்படும் நிலை உண்டாகிறது. குழந்தையைக் காப்பகத்தில் கொண்டுபோய்விட்டு அழைத்து வருவதில் குடும்ப உறவில் சிக்கல் ஏற்படுகிறது. அதனால்

மன இறுக்கம், மன அழுத்தம் ஏற்பட்டு, கணவன் மனைவி உறவில் சிக்கல் தோன்றுகிறது. அதைத் தீர்க்க மனம் திறந்து பேசுதல், விட்டுக்கொடுத்தல் போன்றவைகள் ஆலோசனைகளாகத் தரப் படுகின்றன. அதனைச் சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது என்ற நூல் விளக்குகிறது. அதனால் மனித உறவு மேம்படுவதோடு மனித வளமும் மேம்படுகிறது.

தன்னைச் சுற்றியுள்ள மனிதர்களை அவர்களின் உணர்வுகளை நேசிக்குமாறு எழுத்தாளர் சிவசங்கரி கூறுகின்றார். அதை எழுத்தில் வெளிப்படுத்துகின்றார். வறுமைக்கோட்டிற்குக் கீழ் உள்ளவர்களுக்குச் சிக்கல் ஏற்படுவதற்கான சில தனிப்பட்ட காரணங்கள் உண்டு. அவற்றைக் கண்டறிந்து கூறுவதன் மூலம் அவர்களின் வாழ்க்கையைப் பற்றிய கண்ணோட்டத்தைச் சமூகத்திற்கு சிவசங்கரிப் புலப் படுத்தியுள்ளார்.

'விழுப்புரம் தனக்கு விழிப்பைத் தந்த புரம்' என்கிறார். நகரவாழ்க்கையில் வசதி வாய்ப்புகளோடு வாழ்ந்து பழகியவருக்குக் கிராமியச் சூழல், இயற்கை அழகு அவரை வெகுவாகக் கவர்ந்தது. அதற்கும் மேலாக அவரது உள்ளத்தைத் தொட்டது. அங்கு வாழும் கிராமிய மக்கள் அவர்களது வறுமை, அதற்கான காரணங்கள், சிவசங்கரியை மிகவும் வருந்தச் செய்தது. தாம் அறிந்திராத மக்களின் சோகங்கள் சிவசங்கரியின் படைப்புகளாகியுள்ளன.

தம்மைச் சுற்றியுள்ள பலதரப்பட்ட மக்களையும் அவர்களது மன உணர்வுகளையும் சமுதாய அக்கறையுடன் நோக்குகின்றார்.

கணவனால் கைவிடப்பட்ட பிச்சம்மாள், தன் குழந்தைகளை வளர்த்து எடுக்கும் முயற்சி, அவர்களுக்கு எந்த இடையூறும் வர அனுமதிக்காத தாய்மையை எண்ணிப் பதைக்கிறார்.

இரண்டாம் தாரமாக வாழ்க்கைப்பட்டு, கணவன் இறந்தபின் மூத்ததார மக்களால் துரத்தப்பட்ட நிலையில், தன் வாழ்க்கையின் அவலத்தை எண்ணிப் புலம்பாமல் இயல்பாக எடுத்துக்கொண்டு

சுயமாக வாழ அவள் எடுக்கும் முயற்சி, சாணி பொறுக்கி, வரட்டி தட்டி விற்று அதில் வரும் பணத்தைக்கொண்டு வாழ்க்கை நடத்தும் வயதான பெண்மணி தன்னைப் போன்றோருக்கு ஒரு வழிகாட்டியாய் தன்னம்பிக்கையுடன், சுயமாக வாழும் நிலையைச் சிவசங்கரி தம் எழுத்துக்களில் வெளிப்படுத்தி மற்றவரையும் பின்பற்றச் செய்துள்ளார்.

இந்திராணி, வெள்ளப் பெருக்கில் தன் குழந்தையைப் பறிகொடுத்துத் துடிதுடித்து அழுகின்ற நிலைக்குக் காரணம் அவளது அறியாமை. எதை எப்போது செய்ய வேண்டும் என்ற கூறுபாடு இன்மையே இழப்புக்குக் காரணம் என்று வருத்தம் தெரிவித்து உள்ளார். அத்தகைய இந்திராணிகளின் அறியாமையைப் போக்க, கல்வி இன்றியமையாதது என்று தம் எழுத்துகளின் மூலம் அறிவுறுத்தியுள்ளார்.

கணவன் இறந்த பின்னும், அவன் குடும்பத்தினருக்காக உழைக்கும் கர்ப்பிணிப் பெண், அவளின் கடமை உணர்வு, பொறுப்பு அவற்றை எண்ணிப் பார்க்கும் சிவசங்கரி கருணை தன் இல்லத்திலிருந்து தொடங்கட்டும் (Charity beings at home) என்ற வரிகளின் பொருளை உணர்ந்தவர்கள் அத்தகைய ஏழை எளியோரே என்பதைப் பிறர் அறியும்படி, ‘குழப்பங்கள்’ என்ற நூலில் விளக்கியுள்ளார். அவர்களைச் சமுதாயத்தினருக்கு வழிகாட்டிகளாக, முன்னுதாரணங்களாகக் காட்டுவதும் தெரிகிறது.

**சிவசங்கரியின் பன்முகத் திறன்கள்**

சிவசங்கரி களம் இறங்கி ஆற்றிய பணிகள் எழுத்தில் மட்டும் அல்லாமல் களத்தில் இறங்கி, போதைப் பொருள், எய்ட்ஸ், சூதாட்டம் போன்றவற்றிற்கு அடிமையாகி உள்ள மக்களை மேம்படுத்த வழிகாட்டியாகச் சிவசங்கரி விளங்குகின்றார்.

அடையாறு தரமணியிலுள்ள வி.எச்.எஸ். மருத்துவமனையில் போதை மருந்து மற்றும் மது அடிமைகளுக்குச் சிகிச்சையளிக்கும் ராஜாஜி புனர்வாழ்வு மையம் என்ற சிகிச்சைப்பிரிவு, இந்தியன் வங்கியின் பொருளுதவியுடன் துவங்கப்படப் பெரிதும் காரணமாக இருந்தவர் சிவசங்கரி என்பது குறிப்பிடத் தகுந்த செய்தியாகும்.

150-க்கும் மேற்பட்ட சிறுகதைகள் குறுநாவல்கள், 35 நாவல்கள், 13 பயணக்கட்டுரைத்தொடர்கள், 7 கட்டுரைத் தொகுப்புக்கள், 2 வாழ்க்கைச் சரிதங்கள், பிற எழுத்தாளர்களின் சிறுகதைத் தொகுப்பு ஒன்று ஆகியவை வெளியாகியுள்ளன.

கண்தானம் குறித்த கட்டுரை மக்களால் பெரிதும் வரவேற்கப்பட்டு இறந்தபின் தங்கள் கண்களைத் தானம் செய்வதாகப் பலரையும் உறுதி கொள்ள வைத்தது.

ஊனமுற்றோர், முதியோர், மனவளர்ச்சிக் குன்றியோர், அலிகள் எனப் பலவகை மனிதர்களைப் பற்றிய சிவசங்கரியின் பல கட்டுரைகள், சமுதாய விழிப்புணர்வைத் தூண்டிவிட்டிருக்கின்றன. ஒரு மனிதனின் கதை தமிழ்த்தொடராக இரண்டு முறை தொலைக்காட்சியில் ஒளி பரப்பாகியது.

பிரதமர் ராஜீவ்காந்தி அவர்களுடன் இரு முறை சோஹம் (CHOGM) வெளிநாட்டுப் பயணங்களின் போது உடன் சென்ற ஒரே பெண் எழுத்தாளர் என்ற பெருமைக்குரியவர். அப்பயணக் கதைகள் ஜப்பானிய மொழியில் மொழி பெயர்க்கப்பட்டு, ஜப்பானில் முதல் மொழிபெயர்ப்புப் பயணக்கதையாக மே 1995-இல் வெளியிடப் பட்டது.

மலேசிய தினசரி ஒன்றின் ஆண்டுவிழா நிகழ்ச்சியில் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொள்ள இருமுறை மலேசியா சென்று வந்த முதல் தமிழ் எழுத்தாளர் ஆவார். 1986-இல் செப்டம்பரிலிருந்து நான்கு மாதங்கள் அமெரிக்காவிலுள்ள அயோவா (IOWA) நகரில் சர்வதேச எழுத்தாளர் மாநாட்டில் பங்கெடுத்திருக்கின்றார். 'அவன்' என்ற தலைப்பிலான நாவல், உக்ரேனிய, ஆங்கில மொழிகளில் மொழியாக்கம் செய்யப்பட்டிருக்கிறது. ஒரு மனிதனின் கதை என்ற நாவல் தியாகு எனும் பெயரில் ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்யப்பட்டுப் புத்தகமாக வெளிவந்துள்ளது.

மத்திய திரைப்படத் தணிக்கைக்குழுவின் நியமன உறுப்பினராகப் பணியாற்றியுள்ளார்.

அக்னி (AGNI - Awakened Group for National Integration) என்ற பெயரில் தனிமனித விழிப்புணர்வின் மூலம் தேசிய ஒருமைப்பாட்டுக்கு வழிகோலுவதில் நம்பிக்கையுள்ள அமைப்பின் நிறுவனர்.

நேற்று, இன்று, நாளை? என்ற தலைப்பில் சன் தொலைக் காட்சியில் ஒவ்வொருவாரமும் பல தலைப்புகளில் அவர் நடத்திய கருத்தரங்குகள், பின்னர் சிங்கப்பூர் தொலைக்காட்சியிலும் சன் செய்திப் பிரிவிலும் ஒளிபரப்பப்பட்டன.

'ஒரு பெண்ணின் கதை' என்ற அவரது நெடுந்தொடர், சென்னைத் தொலைக்காட்சியில் ஒளிபரப்பாகியது. 'திரிவேணி சங்கமம்' என்ற நாவல் 'நிம்மதி உங்கள் சாய்ஸ்' தொடராகவும் மெள்ள மெள்ள என்ற நாவல் 'சொந்தம்' என்ற நெடுந்தொடராகவும், பின்னர் 'வாழ்க்கை' என்ற தலைப்பில் தொலைக்காட்சிக்காக எழுதப்பட்ட கதை, சன் தொலைக்காட்சியில் நெடுந்தொடராகவும் ஒளிபரப்பாயின என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

தற்சமயம் இலக்கியம் மூலம் இந்திய இணைப்புப் பணியில் ஈடுபட்டு, 18 இந்திய மொழிகளைச் சார்ந்த முக்கிய எழுத்தாளர்களைச் சந்தித்துப் பேட்டியெடுத்து வருகிறார். பேட்டிகளுடன் அந்த எழுத்தாளர்களது படைப்புகளும், அந்தந்த மாநிலப் பயணக் கதைகளும், ஒவ்வொரு மொழியின் இலக்கியப் பின்னணி குறித்தான விரிவான கட்டுரைகளும் ஒன்றாகத் தொகுக்கப்பட்டுப் புத்தக வடிவில் தமிழிலும் ஆங்கிலத்திலும் இந்தியிலும் வெளிவந்துள்ளன. அதன் முதல் தென்னிந்திய மொழித்தொகுப்பு 1998 ஜனவரியிலும், இரண்டாவது கிழக்கிந்திய மொழித் தொகுப்பு 2000 செப்டம்பரிலும், தமிழ் மற்றும் ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலும் வெளியிடப்பட்டன. பின்னர், மூன்று, நான்காவது தொகுதிகளும் முழுமை பெற்று வெளிவந்துள்ளன.

**விருதுகள் :**

ஆனந்த விகடன், கல்கி, அமுதசுரபி போன்ற வார, மாத இதழ்களில் வெளியான பல சிறுகதைகள் இலக்கியச் சிந்தனை போன்ற பல இலக்கிய அமைப்புகளின் பரிசுகளை வென்றுள்ளன.

இந்நூற்றாண்டின் மூன்று தலைமுறை நிகழ்ச்சிகளைச் சித்தரிக்கும் பாலங்கள் நாவல், கஸ்தூரி சீனிவாசன் விருதைப் பெற்றுள்ளது.

சிந்தனையைத் தூண்டும் சுயமுன்னேற்றக் கட்டுரைகளைக் கொண்ட 'சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது?' தொகுப்பு, மதிப்புமிக்க ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் பரிசைப் பெற்றுள்ளது.

கலப்புமணம் செய்த தம்பதியின் வாழ்வில் நிகழும் பிரச்சனைகளைப் பிரதிபலிக்கும் 'வேரில்லாத மரங்கள்' நாவல், கல்கத்தாவில் பாரதிய பாஷா பரிஷத் அமைப்பின் பரிசைப் பெற்றுள்ளது.

1976 - இல் சென்னை ஜேசீஸ் அமைப்பினால் சிறந்த இளைஞர் விருது பெற்றார்.

விருதுகளைத் தென்னிந்திய புத்தகப் பதிப்பாளர்கள் மற்றும் வெளியீட்டார்கள் சங்கம், சென்னை ரோட்டரி சங்கம் ஆகியவை வழங்கியுள்ளன.

தமிழகக் காங்கிரஸ் கமிட்டியின் ராஜீவ்விருது, தஞ்சைத்தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் தமிழன்னை விருது, அரிமா சங்கத்தினரின் மெல்வின் ஜோன்ஸ் விருது, சென்னை தெலுங்கு ஆர்ட்ஸ் அகாடமி விருது ஆகியவை அவர் பெற்ற விருதுப்பட்டியலில் குறிப்பிடத் தகுந்தவையாகும்.

அறிவைத் தூண்டும் எழுத்தாற்றலுக்காகப் பாரத் எலக்ட்ரானிக்ஸ் நிறுவனம் அவரைக் கௌரவித்துள்ளது.

ஃபெமனா ஆங்கிலப் பத்திரிகையினால் 15.8.1997இல் சுதந்திரப் பொன்விழாவின் போது, இந்தியாவை உருவாக்கிய ஐம்பது பெண்மணிகளுள் ஒருவராகக் கௌரவிக்கப்பட்டுள்ளார்.

'அம்மா சொன்ன கதைகள்' என்ற தலைப்பில் குழந்தைகளுக்கான ஆறு கதைகளையும், அக்கதைகளைத் தம் குரலிலேயே வாசித்து ஓர் ஒலிநாடாவையும் இணைத்து அவர் வெளியிட்ட பேசும் புத்தகத்திற்கு, 1998-இன் சிறந்த சிறுவர் நூலுக்கான விருதை வழங்கியுள்ளது திருப்பூர் தமிழ்ச்சங்கம்.

திருச்சியிலுள்ள அனைத்து மகளிர் சங்கங்களும் இணைந்து 'சிந்தனைச் செல்வி' என்ற விருதை மார்ச் 1998-இல் வழங்கியுள்ளன.

பாரதீய வித்யாபவன் கேந்திரமும், டைரக்டர் கே.சுப்ரமணியம் நினைவு அறக்கட்டளையும் இணைந்து 'ஸ்த்ரீ ரத்னா' விருதை 8.3.1998-இல் உலக மகளிர் தினத்தன்று வழங்கின.

அமெரிக்காவின் டென்னஸ்ஸி மாகாணத்திலுள்ள ஓக் ரிட்ஜ் நகரின் மேயர், 1999 ஜூலையில் ஓக் ரிட்ஜ் நகரின் கௌரவப் பிரஜை விருது வழங்கிக் கௌரவித்துள்ளார். அவர், அவ்விருதினைப் பெறும் முதல் தமிழரும் தமிழ் எழுத்தாளருமாவார்.

சர்வதேச மகளிர் சங்கத்தின் 1999-ஆம் ஆண்டின் சிறந்த பெண்மணி விருது மார்ச் 2000-இல் வழங்கப்பட்டது.

தொலைக்காட்சித் தொடர்களின் மூலம் சமுதாயப் பிரச்சினைகள் குறித்தான விழிப்புணர்வை ஏற்படுத்தி வருவதற்காக அவருக்கு 1999-ஆம் ஆண்டிற்கான விருதினை அக்டோபர் 2000-இல் வழங்கிக் கௌரவித்துள்ளது.

கல்கத்தாவிலிருந்து செயல்படும் ராஷ்ட்ரிய இந்தி அகாடமி, 'பிரேம்சந்த் ராஷ்ட்ரிய சாஹிடாய சம்மான்' என்ற விருதை அக்டோபர் 2001-இல் வழங்கிக் கௌரவித்தது.

**கல்வி நிறுவனங்களின் அங்கீகாரங்கள்**

'சிவசங்கரியின் எழுத்துக்கள்' என்ற தலைப்பில் ஐந்து பல்கலைக் கழகங்களின் எட்டுப் பேராசிரியர்கள் கலந்துகொண்ட இரண்டு நாள் கருத்தரங்கு ஒன்று, மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தில் நடத்தப்பட்டுள்ளது.

ஐம்பதுக்கும் மேற்பட்ட மாணவர்கள் தங்கள் எம்.ஃபில்., மற்றும் பிஎச்.டி., பட்டம்பெற அவரது கதைகளை ஆய்வு செய்துள்ளனர்.

**கல்வி மற்றும் கலாச்சாரப் பின்னணி**

சிவசங்கரி கல்லூரியில் முதல் இடத்தையும், பல்கலைக் கழகத்தில் ஒன்பதாவது இடத்தையும் பெற்ற விலங்கியல் பட்டதாரி.

பரதநாட்டியத்தில் தேர்ச்சி பெற்று முன்னூறுக்கும் மேற்பட்ட முறைகள் அரங்கேறியவர்.

தென்னிந்திய கர்நாடகச் சங்கீதத்தில் தேர்ச்சி பெற்றவர்.

**சிவசங்கரியின் பன்முகத் திறன்கள்**

தனி மனிதன் ஒவ்வொருவனும் ஒரு புத்தகம் என்று கொள்ளலாம். மற்றவர் அவனுடன் பழகிப் பல பண்புகளைப் பெறலாம். புத்தகத்தினுள் எவ்வளவோ அரிய கருத்துகள் நிறைந்து கிடக்கின்றன. அதைப் படிப்பவர் பயன்பெறுவர். அதைப் போல தனி மனிதருடன் பழகத் தெரிய வேண்டும். பழகி மற்றவரிடம் உள்ள நல்ல பண்புகளைக் கண்டறிந்து கொள்ள வேண்டும். அந்த வகையில் சிவசங்கரி பல உயர் பண்புகளைக் கொண்டவர். அவரின் சுய அலசல் பண்பு இங்கு ஆயப்படுகிறது.

**சிவசங்கரியின் சுய அலசல்**

சுய அலசல் என்பது தன்னிடம் உள்ள நிறை குறைகளை ஆராய்ந்து அறிந்து குறைகளை நீக்கி, நிறைகளைப் பெருக்கிக் கொள்ளுதல் ஆகும். மனதுள் புதைந்து கிடக்கும் வேண்டாத உணர்வுகளால் துன்பம் பெருகும். மனதின் ஆழத்தில் புதைந்து கிடக்கும் நிகழ்வுகளை,

அதனால் வரும் மனத்துயர்களைப் போக்கிக்கொள்ள நல்ல நண்பர்கள், மனநலமருத்துவர்கள் போன்றோரை அணுகி ஆலோசனை பெற்று மனதைப் பேண வேண்டும். இதுவே சுய அலசல் ஆகும்.

எழுத்தாளர் சிவசங்கரி எழுதத் தொடங்கிய சில ஆண்டுகளில் அவரின் கல்லூரிப் பேராசிரியர் ஒருவரைக் காணுகிறார். அவர் சிவசங்கரி எழுதுவது குறித்து மகிழ்ந்து, வியந்து பேசுகிறார். வருமாறு:

> "*நீயா எழுதுகிறாய்? மனதின் மெல்லிய உணர்வுகளும், சமுதாயப் பிரச்சனைகளும் ஒருவிதப் பாதிப்பை உண்டாக்கும்படி எழுதுவது உண்மையிலேயே நீதானா? உன்னிடமா இந்த மாற்றம்? இது எப்படி நிகழ்ந்தது? எப்போது நிகழ்ந்தது? என்று கண்கள் விரிய நம்ப முடியாமல் திரும்பத் திரும்ப வினவியதை*"[16]

இப்போதும் எண்ணிப் பார்க்கிறேன் என்று சிவசங்கரி கூறுகிறார்.

பேராசிரியர் இப்படி வியந்து பேசியதைச் சிவசங்கரி தமக்குள் எத்தகைய மாற்றம் ஏற்பட்டிருந்தால், அவர் அப்படி கேட்டிருப்பார் என நினைத்துப் பார்க்கிறார். தமக்குள் ஏற்பட்ட அந்த மாற்றத்தை எப்படிச் சொல்லலாம் என்று எண்ணிய சிவசங்கரி கூறுகிறார், "ஆங்கிலத்தில் சொல்லப்படும் (*Metamorphose*) 'மெடாமார்ஃபோஸிஸ்' என்று. அதாவது புழுவிலிருந்து பட்டாம் பூச்சி வளர்ந்து வெளிவரும் நிலை. பட்டாம்பூச்சி லார்வா பருவத்தில் கூட்டுக்குள் அடங்கி இருந்து, அதனுள் பல மாற்றங்களைப் பெற்று, மற்றவர் கண்டு மகிழப் பறந்து விரிந்து வருவது போல், தன்னுடைய மாற்றம் தன்னுள் புதைந்திருந்த உணர்வுகள் அழகுடன் சொல்வீச்சாக வெளிவந்து எழுதப் பயன்படுகின்றன"[17]

என்கிறார் சிவசங்கரி தம்மைப் பட்டாம்பூச்சியுடன் ஒப்பிட்டுக் கூறியுள்ளார்.

அவரின் சிறுபருவத்தில் தம்மிடம் இருந்த குழந்தைத் தனம், தெரியாத்தனம் போன்ற நூலிழைகளை அறுத்துக் கொண்டு

சுதந்திரமாய் இன்று தான் முன்னோக்கி வந்திருப்பதும் உண்மை என்பது புலப்படுகிறது.

சிவசங்கரி தம் வாழ்க்கையில் விளையாட்டாக, மற்றவர் மனம் வருத்தப்பட்டு இருந்த போது, தம்மை அறியாமல் சிரித்துக் கேலி செய்த பழைய நினைவுகளை அவர் எழுதத் துவங்கிய காலங்களில் எண்ணிப்பார்க்கிறார்.

இன்று மற்றவர்களுக்கு ஆறுதல் கூறும் சிவசங்கரி அன்று மற்றவரைப் பார்த்துக் கேலி செய்து சிரித்து விளையாடியது தவறு என்று உணர்ந்து தாம் அவ்வாறு செய்திருக்கக்கூடாது. ஏன் தனக்கு அப்படி ஒரு குணம் தோன்றியது. அது தான் ஸாடிசம் என்று கூறுவார்களே அந்த வக்ர குணமா? என்றெல்லாம் எண்ணிப் பார்க்கிறார். அந்தக் குற்ற உணர்வுகளைத் தாம் எவ்வாறு போக்கிக் கொள்வது என்ற நிலையில் ஒரு மனோதத்துவம் படித்த நண்பரிடம் விவரித்துக் கூறுகிறார்.

மனோ தத்துவ நண்பர் சிவசங்கரி கூறிய நிகழ்வுகளை எல்லாம் கேட்டு, பின்னர்த் தீர்வு காணும் நிலையில் சிவசங்கரியிடம் சில கேள்விகளைக் கேட்கிறார்.

1. காமாட்சி என்ற சிறுமியின் காலில் முள் குத்திக் கொண்டபோது அதைப் பார்த்துச் சிரித்தேன் என்றாயே அதில் உன்னைச் சிரிக்கத் தூண்டிய காட்சி எது என்பது உன் நினைவுக்கு வருகிறதா? அது, அந்த உணர்வு அவருடைய அவஸ்தையா? இல்லை வேறு ஏதாவது வேடிக்கையான விசயமா? என்கிறார்.

இல்லை, நிச்சயமாக அவளின் அவஸ்தை (துன்பம்) இல்லை. அவள் அணிந்திருந்த பாவாடைக்குள் சிக்கிக் கொண்ட முள் புஸ்ஸென்று பலூன் மாதிரி இருந்ததோடு, நீட்டிக் கொண்டிருந்த குச்சி அவளுக்கு வால் மாதிரியும் தோன்றியது, அந்தத் தோற்றத்தைக் கண்டுதான் சிரித்தேன்.

2. உன் கணவர் காலில் வெந்நீர் கொட்டினதற்கு ஏன் சிரித்தாய்? அவர் துடிதுடித்ததைப் பார்த்தா?

சத்தியமாய் இல்லை. ஒரு காலைத் தூக்கிக் கொண்டு அவர் குதித்தது வேடிக்கையாக இருந்தது. அதனால் தான் அந்தக் காட்சியைக் கண்டவுடன் அது வேடிக்கையாகத் தோன்றச் சிரித்து விட்டேன்.

3. மீண்டும் ஒரு முறை அவர் காலில் வெந்நீர் கொட்டினால் எத்தனை நன்றாக இருக்கும் என்று நினைத்தாயா? என்று கேள்வி கேட்கிறார்.

சிவசங்கரி, ஐயையோ... அப்படி நினைக்கவில்லை என்கிறார்.

4. யாராவது வழுக்கி விழுந்தாலும் முதலில் சிரிப்பு வந்துவிடுகிறது என்கிறாயே அந்தச் சந்தோஷத்துக்காக வேண்டுமென்றே வாழைப்பழத் தோலைப் போட்டு வைக்கிறாயா? என்கிறார்.

சிவசங்கரி அதனையும் மறுத்து இல்லை என்கிறார்.

நண்பர், நீ சிரித்தது நிச்சயம் மற்றவர் துன்பத்தைக் கண்டு மகிழும் தன்மை அல்ல என்று கூறிவிடுகின்றார். பின்னர் ஸாடிஸம் அதாவது வக்ர குணம் என்றால் என்ன என்பதை விளக்குகின்றார்.

> *"பிறர் அல்லது தன் வேதனையில் இன்பம் காணும் குணமே ஸாடிஸம். 18-ஆவது நூற்றாண்டில் கவுண்ட்டிஸாதே என்கிற எழுத்தாளர் தம் நாவலில் இந்த வக்ர குணம் பற்றிப் பரவலாக எழுதியதன் காரணமாக இதற்கு ஸாடிஸம் என்று பெயர் வைத்தார்கள். தெரியாத பருவத்தில் செய்யும் செயல்கள் வேறு. இது இப்படித்தான் இருக்கும் என்று தெரிந்து அதை எதிர்பார்த்துச் செய்யும் செயல்கள் வேறு. இந்த வித்தியாசம் புரியாமல் வீணாகக் குழப்பிக் கொள்ள வேண்டாம் என்று சிவசங்கரியின் நண்பர் குறிப்பிட்டுள்ளார்"* [18]

அவ்வாறு சிவசங்கரி தம் மனதை உறுத்திக்கொண்டிருந்த அந்தச் செயல்களை மனநல மருத்துவரிடம் கூறித் தெளிவு பெற்றபின் தம் தோழிக்கு உதவுகிறார்.

அம்ருதா என்ற தோழி சிறுவயதில் செய்த வேண்டாத செயல்களால், நடந்த சில நிகழ்வுகளை மனதில் வைத்து அழுந்தியவைகளைத் தூக்கி எறிந்து நிம்மதியாக வாழ உதவினார். அந்த நிலையில் வாழும் மற்றவரும் தங்கள் உணர்வுகளைப் புதைத்து வைக்காமல் உற்றவர், நண்பர், மருத்துவர் போன்றவர்களிடம் கூறி மனம் திறந்து பேசி மனம் அமைதி கொள்ள வேண்டும் என்றவர் சுய அலசல் வாழ்வை அமைதியாக வாழ வழி செய்யும் என்பதைத் தம் எழுத்தில் விளக்கியதுடன், தம்மையே உதாரணமும் காட்டுகிறார்.

அப்படி மாற்றம் பெற்ற சிவசங்கரி, இந்தச் சமுதாயத்திற்குச் செய்ய வேண்டிய செயல்களை எண்ணிப் பார்க்கிறார். தாம் இன்னும் போக வேண்டிய தூரம், வளர வேண்டிய உயரம் அதிகம் என்று உணர்ந்துள்ளார். தம்மைச் சுற்றியுள்ள இம்மக்களுக்குச் செயலாற்ற வேண்டியது ஏராளம் என்று தம் பணியில் மூழ்குகிறார்.

> "*எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்*
> *திண்ணிய ராகப் பெறின்*" **19**

என்ற குறளுக்கு இலக்கணமாக வாழ்ந்து வருகிறார்.

சிவசங்கரி சுயஅலசல் பெற்று, மற்றவர்க்கு வழிகாட்டியாக வாழும் நிலையில் தம்முடைய கடமைகளைச் சமுதாயம் மேம்படத் தாம் மேற்கொள்ளவிருக்கும் செயல்களை எண்ணிப்பார்த்து, தம் பணியின் அளவு அதிகம், தாம் செல்ல வேண்டிய தூரம் அதிகம், வளர வேண்டிய நிலை அதிகம் என்று நினைப்பது, ராபர்ட் பிராஸ்ட்டின் கவிதை வரிகளுடன் ஒப்ப நோக்கச் செய்கிறது.

> "*கானகங்கள் கருமையாகவும்*
> *அடர்ந்தும் இருக்கின்றன.*
> *ஆனால் காக்க வேண்டிய*
> *வாக்குறுதிகள் உள்ளன.*
> *உறங்குமுன் கடக்கப் பலமைல்*

*கற்கள் உள்ளன;*

*பல மைல் கற்கள் உள்ளன*"[20]

முடிவெடுப்போம் ! சிக்கல்களை முறியடிப்போம் ! என்ற நூலில் சிந்தனையாளர் தி.க.சந்திரசேகரன் எடுத்துக்காட்டுவதுடன் ஒப்புநோக்கத்தக்கதாகும்.

உயர்ந்த சிந்தனையாளர்களின் எண்ணங்கள் பலவும் ஒன்றாக இருப்பதை இக்கவிதை மெய்ப்பிக்கிறது.

**சூழ்நிலைகளை ஏற்றுக் கொள்ளல்**

சிவசங்கரி கண்ணைக் கட்டிவிட்ட குதிரையாய் இருந்த தன்மை நீங்கி, சுற்றிலும் பார்க்க, கேட்க, கண், காது, வாய், புத்தி, இதயம் என்று அத்தனை புலன்களும் புதுவேகம் பெற மனிதாபிமானம் என்றால் என்ன என்பதை உணர்ந்து, நெகிழ்ந்து, சிலிர்த்து நோக்குகிறார். இது சிவசங்கரி வளர்ந்து வந்துள்ள மற்றொரு கோணம். அவர் விழிப்புணர்வைப் பெற்றுள்ளார் என்பதை விளக்குகிறது.

"அன்னை தெரசா நடத்தும் 'ஆதரவு அற்றவர்களின் சாவு இல்லத்தைப் பார்த்துவிட்டு, அன்னையின் மனசு என்ன உன்னதம் எப்படிப்பட்ட தொண்டு என்று நினைத்து, மனசு தவித்த அந்த நாளில் ஒரு தொழிலதிபரைச் சந்தித்துத் தம் மன உணர்வை வெளியிட, அந்த அதிபர் வாய்விட்டுச் சிரித்து, என்ன அசட்டுத் தனம் இது? ஏன் அந்த இல்லத்தைப் போய்ப் பார்த்தாய், பிறகு ஏன் இப்படிப் புலம்புகிறாய்? என்று கூறிச் சாவதற்கு என்று ஒரு இடமா? அனாதைகள் எங்குச் செத்தால் என்ன?' என்று மிகமிக அலட்சியமாகக் கூற இவரும் ஒரு மனிதரா? என எண்ணி, அவரிடம் இருக்கும் புத்தி, பணம், படிப்பு அத்தனைக்கும் உரிய அர்த்தம் தான் என்ன? என்று சினந்து வருந்தத் தோன்றியது" என்கிறார் சிவசங்கரி.

அந்தத் தொழிலதிபரைப் போல், தாம் இல்லாமல் "வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்" என்று வாடிய வள்ளலார்

வழியைப் பின்பற்றிய, அன்னைத் தெரசாவைப் போற்றி அவர் பாதையில் நடக்க முயற்சித்த சிவசங்கரி, மற்றவர் வாழ்க்கைத் தமக்கு ஒரு பாடம் என்று கூறி, அதைத் தம் எழுத்துக்களிலும் வடிக்கின்ற நிலை மிகவும் சிறப்புடையதாகிறது.

**சிவசங்கரியின் ஆன்ம நேயம்**

இனிய மெல்லிய உணர்வுகளை வெளியிடவும், உள்வாங்கவும் இயற்கை மனிதனுக்குக் கிடைத்துள்ள அரிய செல்வமாகும். அந்த இயற்கையைப் பருக, பேண மனிதன் கற்றுக்கொள்ள வேண்டும். மனித வளர்ச்சி ஒவ்வொன்றும் இயற்கையின் வெளிப்பாடே. சிவசங்கரி இயற்கையிலும், அதன் சூழலிலும் பெற்ற உணர்வுகளைப் பகிர்ந்து கொள்கிறார். ஆன்ம நேயத்தை அனுபவித்துக் கூறுகிறார்.

**ஆன்ம நேயம்**

*“புல்ஆகிப் பூடாய்ப் புழுவாய் மரம் ஆகிப்*
*பல்விருகம் ஆகிப் பறவையாய்ப் பாம்பு ஆகிக்*
*கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்*
*வல் அசுரர் ஆகி முனிவராய்த் தேவராய்ச்*
*செல்லாஅ நின்றஇத் தாவரச் சங்கமத்துள்*
*எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்பெருமான்”* [21]

என்றார் மாணிக்கவாசகர்.

டார்வினின் பரிணாமக் கொள்கையும் இதுதான். இவ்வாறு, மாணிக்கவாசகரும் மனிதனின் பரிணாமத்தைக் கூறி, தம் பிறப்பின் நிலையை விளக்குகிறார். அதனால் தான் மனிதப் பண்புகளுள் அத்தகைய குணங்களும் அடங்கிக் காணப்படுகின்றன. இயற்கையை உற்று நோக்கி அதன் செயல்களைக் கவனித்தால், மனிதப் பண்பும் அதனோடு ஒன்றிக் காணப்படும் நிலையை உணர முடியும். சிவசங்கரி உற்று நோக்குகிறார் நேசிக்கிறார் அனுபவிக்கிறார் இன்பத்தை, பறவைகளின் ஒலி, சிற்றுயிர்களின் செயல், பூத்து, காய்த்து, கனிந்து நிற்கும் தாவரங்களின் இனிய காட்சி மனதை மயங்கச் செய்கின்றன.

நண்பகல் பொழுதில் சிவசங்கரி மனம் மகிழ்ந்திருந்த வேளையில், தம் அறைக் கதவைத் திறந்து தோட்டத்தை நோட்டம் விடுகிறார். அங்கு மாடியில் உள்ள நீர்த்தொட்டி நிரம்பி, வழிந்து ஓடித்தோட்டத்துச் செடிகளில் தேங்குகிறது.

**குருவிகளின் குளியல்**

தேங்கிய நீரில் நீராட ஓடி வருகின்றன சில சாம்பல் குருவிகள். சில சிறகை விரித்து நீரில் நனைந்து கீச்கீச் என ஆனந்தம் பாடுகின்றன. அந்த இனிய குரலில் காட்சியில் மகிழ்கிறார். ஒரு குருவி பயந்து நடுங்கி நிற்க, மற்றொரு குருவி அதன் அலகால் மூக்கோடு மூக்கு உரசி "நான் இருக்கேன் நீ வா நீராட என்றழைக்கிறது. அக்குருவி மறுத்து, பின்னாலேயே நடந்து குளிக்க மறுக்கிறது" அந்தப் பறவைகளின் பாசப் பரிவுகள் ஒரு தாயும் குழந்தையும் செய்யும் செயல்களாக அன்புச் சூழலாகச் சிவசங்கரியின் கண்களுக்குப் புலனாகிறது.[22]

**அணிலும் காக்கையும்**

துறுதுறுவென அணில் கூட்டம் ஓடி வந்து தொட்டு விளையாடுகின்றன. வரிசையாய் நடப்பட்டுள்ள மிளகாய்ச் செடியில் பழுத்துத் தொங்கும் மிளகாய்க் கனியைக் கொத்தித் தின்று காரமாய் இருக்கிறது என்று தலைசாய்த்துக் கரைகிறது காகம். திரும்பித் திரும்பிப் பார்த்துத் தன் இனத்தை நோக்கி கரைகிறது; பகுத்துண்ண அழைக்கிறது.[23]

**வானத்து மேகங்கள்**

நீலவானில் வேகமாய் உருமாறிச் செல்லும் வெள்ளை மேகங்கள். அந்தச் சூழலில் அங்கு ஓடித் திரியும் சின்னஞ்சிறு சிற்றுயிர்களின் செயல் அவரை மயக்குகின்றன. பாரதியின்

"காக்கை குருவி எங்கள் சாதி - நீள்
கடலும் மலையும் எங்கள் கூட்டம்" [24]

என்ற வரிகள் எத்தனை உண்மையானவை என்று உணரப்படுகிறது.

"இறைவன் கவிஞர்களுக்காகவும், படைப்பாளர் களுக்காகவும் தான் இத்தனை இயற்கையை, அழகைப் படைத்தானோ! படைப்பாளிகள் அந்த அனுபவங்களைத் தம் சொல்லாற்றலால் மெருகூட்டுகிறார்கள். எத்தனை கோடி 'இன்பம் வைத்தாய் இறைவா' என்று ஆசையுடன் ஜன்னல் கம்பியில் கன்னங்களை அழுத்திக் கொள்கையில் அந்த இயற்கை மனசையும் மகிழ வைப்பது புரிகிறது."[25] என்கிறார் சிவசங்கரி.

**சிவசங்கரியின் ஸ்யாமா (வளர்ப்புநாய்)**

சிவசங்கரியின் செல்லப் பிராணி நாய். அதன் பெயர் ஸ்யாமா.

மனிதன் தன் தேவைக்காக விலங்குகளை வளர்த்தாலும், அவை உண்மையான அன்புடனே பழகுகின்றன. எதிர்பார்ப்பில்லாத அன்பைப் பொழிகின்றன. பல நேரங்கலில் அவை மனிதனின் உற்ற துணையாகவும் வாழ்கின்றன.

*"செல்லப் பிராணிகள் என்றைக்கும் நிபந்தனை இல்லாத அன்பைக் காட்டக் கூடியனவாகும் (Unconditional love) அவை விளையாடும், குறும்புத்தனம் செய்யும், சொன்ன படியும் வேலை செய்யும். இவை அல்லாமல் தன்னலமற்ற அன்பைச் செலுத்தும் தன் ஸ்யாமாவைப் பற்றித் தன்னை வளர்ப்பவர் அடித்தாலும், விரட்டினாலும், பட்டினி போட்டாலும் அதை எல்லாம் மறந்துவிட்டு வளர்ப்பவரின் ஒரு அன்பான பார்வைக்காகத் தட்டிக் கொடுத்தலுக்காக, அவர் பின்னாலேயே ஏக்கத்துடன் சுற்றிவரும். அவர் அடித்தார் என்பதற்காக அவரிடம் முரண்டு செய்யாமல் ஓடி வந்து அன்பைக்காட்டும் நாய்களின் இத்தகைய அன்பைத் தான் Unconditional love என்று நிபுணர்கள் குறிப்பிடுகின்றனர்."*[26]

"வெளியூருக்குப் போய்விட்டு விமானம் தாமதமாகி அர்த்த ஜாமத்தில் வீடு திரும்பினாலும், கம்பி கேட்டருகில் படுத்திருந்து, கார் விளக்கு வெளிச்சம் கண்டதும் எழுந்து கண்கள் பளபளக்க, பிரிவுக்கு முடிவு வந்துவிட்ட சந்தோஷத்துடன் தலைகால்

*புரியாமல் குதித்து வரவேற்கும் ஸ்யாமா. அழுதால் பரிதவித்துக் கொண்டு கண்களைத் துடைக்கும் பாவனையில் கண்ணீரை நக்கும் ஸ்யாமா. யாரையாவது அதட்டினால் கூட நின்று தன் பங்குக்குக் கண்டிக்கிற மாதிரி கத்தும் ஸ்யாமா, வேண்டியவர்களோடு குரல் உயர்த்தித் தர்க்கம் பண்ணுகையில் என்ன அசட்டுத் தனம் இது ! உங்களுக்குள் எதற்கு வாக்குவாதம்? என்று கண்டிப்பு கலந்த குரைப்பு மூலம் நம்மைத் தடுத்து நிறுத்திவிடும் ஸ்யாமா" [27]*

என்கிறார்.

*முறையாகப் பயிற்சி எதையும் பெறாத ஸ்யாமா இவ்வாறு இதமாக நடந்துகொள்கிறது. தன்னலமற்ற அன்பை வாரி வழங்கும் நாய்களுக்குப் பயிற்சி அளிப்பதாலும் அவற்றின் விசுவாசத்தைச் சரியான விதத்தில் வெளியிடக் கற்றுக் கொடுப்பதாலும், அவை பல அற்புதமான காரியங்களைச் சாதிக்கின்றன.*

**மனிதருக்குத் தோழர்**

*இன்று உலகளாவிய அளவில் செல்லப்பிராணிகள் வளர்த்தல் சிறப்புடன் நடைபெறுகிறது. அவைகளுக்குப் பலவகையான பயிற்சிகளைக் கற்றுக் கொடுத்துச் சவால்களைச் சந்திக்கவும், போட்டிகளில் பங்குகொண்டு வெற்றி பெறவும் ஊக்குவிக்கப் படுகின்றன. பாரதி, நாய்கள் மனிதருக்குத் தோழனடி பாப்பா என்றார்.*

**~~சீசர்~~ – ரிச்சர்ட் - ஸீஸர்**

*ரிச்சர்ட் என்பவர் ஒரு விமான ஓட்டி விபத்து ஒன்றில் கண்களை இழந்தவர். அதனால் அவருடன் வாழ முடியாது என்று அவர் மனைவி விவாகரத்துப் பெற்றுக்கொண்டார். அதன்பின் 'ஸீஸர்' என்ற அல்சேஷன் நாயைத் தமக்கு உறவாக நண்பனாக ஆக்கிக் கொண்டார் ரிச்சர்ட்.*

*இப்படிப்பட்ட நாய்கள் அமெரிக்காவில் 'Seeing eye Dog' என்பர். அந்த நாய்களுக்கு அரசாங்க அலுவலகம் செல்ல அனுமதி*

அளிக்கப்பட்டுள்ளது. வாடகைக்காரில் டிரைவர் ஏற்ற மறுத்தால் அது அங்குக் குற்றமாகும்.

**ரிச்சர்ட்க்கு ஸீஸரின் பணிவிடைகள்**

'வார்' அணிவித்துவிட்டால் ட்யூட்டியில் இருப்பது புரிந்து, மிகவும் சுறுசுறுப்பாகி விடுவான். எஜமானருக்கு முன்னால் ஓடிச் சென்று, அவர் தங்கு தடையின்றி நடக்க வழி பண்ணுவான். லிஃப்ட் பட்டன் நடுவில் தலைவைத்து நின்று பட்டன் இருக்கும் இடத்தை எஜமானருக்கு உணர்த்தினான். படிகள், பள்ளம் ஏதேனும் குறுக்கிட்டால் நடப்பதை நிறுத்தி எஜமானருக்கு நிலைமையைப் புரிய வைத்தான். எதிர்பாராமல் அன்னியர் கிட்டத்தில் வந்தால் லேசாக உறுமி 'ஜாக்கிரதை' என்று எச்சரித்தான். தெரிந்தவர், தெரியாதவர்களுக்கு வருவது யார் என்று தெளிவாக்கினான். மொத்தத்தில் எஜமானருக்குக் கண் தெரியாது. அதனால் அவரைக் காப்பதுடன் அவருக்கு வழிகாட்டுவதுடன், நண்பனாகவும் இருக்க வேண்டும் என்பதைப் புரிந்து கொண்டான்" [28]

என்று ஸீஸரின் செயல்களைக் கண்ட சிவசங்கரி வியந்து கூறுகிறார்.

**ஸீஸா – தாமஸ்**

தாமஸ் என்ற இளைஞன் பிறந்ததிலிருந்து (ஸ்பாஸ்டின் சைல்ட்) தசை, கை, கால், இயங்காமல் மனம் சோர்வுற்றிருந்தான். அவனுக்குத் துணையாகப் பயிற்சி பெற்ற நாய் உதவியது. கை, கால் முடக்கத்தினால், தன்னால் எதுவும் செய்ய இயலவில்லை என்ற ஆற்றாமையால் தாமஸ் வருந்துகிறான். அதனை வெளிப்படுத்தக் கோபம், கத்தல், அழுகை என்றிருந்தவனுக்கும் மருத்துவர் ஆலோசனையில், பயிற்சி பெற்ற நாய் ஸீஸா பரிசாக வழங்கப்படுகிறது. ஸீஸா முதலில் முரட்டுப் பிடிவாதம் செய்த தாமஸை, ஒரு மாதத்துக்குள் தன் வழிக்குக் கொண்டுவந்துள்ளது. பின்னர் தாமஸ்க்குத் தாயாக, தோழனாக, பணியாளனாக, வழிகாட்டியாகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டுள்ளது.

*"லீஸா - தாமஸுடன் பள்ளி, கல்லூரிகளுக்குச் செல்கிறது. வகுப்பு நடக்கையில் அவன் அருகே படுத்துக்கொள்கிறது. படிக்க உதவியாய் 'ம்'என்ற (சிக்னல்) அடையாள ஒலி கொடுத்தும் புத்தகத்தின் பக்கத்தைத் திருப்பித் தருகிறது. பேனாவை எடுத்துத் தாமஸ் கையோடு இணைக்கப்பட்டிருக்கும் கருவியில் சரியாகப் பொருத்தி, எழுத உதவுகிறது. பந்து விளையாடி அவனை மகிழ்விக்கிறது. இரவு விளக்கை அணைத்துவிட்டு அவனோடு படுக்கையில் சேர்ந்து உறங்குகிறது. மொத்தத்தில் கண் விழிப்பதிலிருந்து இரவு தூங்கப் போகும் வரை தாமஸுக்கு சகலமுமாய் இயங்கி, அவனை வாழ்க்கையில் நாட்டமுள்ள ஒரு உற்சாகமான இளைஞனாக மாற்றியிருக்கிறது"* [29]

என்கிறார்.

சிவசங்கரி அவருக்கே உரிய ஆன்மநேய நோக்குடன் உணர்வதால், சிறுவயது முதல் நாய்களுடன் நட்புகொண்டு பழகியதாலும் மனிதர்களிடம் குறைந்து போன நன்றி உணர்வை வெளிக்காட்டவும், இருண்டு போன மனிதர்களின் வாழ்க்கையில் ஒளி விளக்காகவும் நாய் விளங்குகிறது என்பதை மேற்குறிப்பிட்ட இரண்டு மனிதர்களின் வாழ்க்கையின் மூலம் சிவசங்கரி விளக்கியுள்ளார். இவற்றின் மூலம் பிற உயிர்களிடம் செலுத்தும் அன்பு, எதிர்பார்ப்பு இல்லாத தூய அன்பு என்பது புரிகிறது.

**புளூ கிராஸ்**

செஞ்சிலுவைச் சங்கம் (ரெட் கிராஸ்) என்பது மனிதர்களுக்கு உதவத் தேவைப்படும் இரத்தத்தைத் தானமாகப் பெற்றுச் சேமித்து, அவசரத் தேவைகளுக்காகத் தந்து உதவும் ஓர் அமைப்பாகும்.

அதைப்போல் புளூ கிராஸ் என்பது மனிதரல்லாத பிற உயிரினங்களுக்காக-விலங்கு, பறவைகளுக்காக 1964 ஆம் ஆண்டில் கேப்டன் சுந்தரம் என்பவரால் ஆரம்பிக்கப்பட்டது. இன்று அடையாற்றில் தியசாஃபிகல் என்ற அமைப்பிற்குச் சொந்தமான இடத்தில் அமைதியாகச் செயல்பட்டு வருகிறது.

மத்திய மாநில அரசுகள் வழங்கும் மானியத்துடன் செயல் படுகிறது. விலங்குகளை நேசிப்பவர்கள் அன்பாக வழங்கப்படும் பணத்திலும் இந்த புளூ கிராஸ் நடத்தப்படுகிறது. இந்த அமைப்பின் மேலாளர் மார்டின் வில்ஸன் என்பவர், டாக்டர்.வீரசுப்ரமணியன் அங்கு வாழும் விலங்குகளின் நலனுக்காகப் பாடுபடுபவர். அவர்கள் அந்த வாயில்லா உயிர்களின் சோதனைக் கதைகளைக் கூறுகின்றனர்.

> *"கிணற்றில் விழுந்த பூனை, கூட்டிலிருந்து விழுந்த பறவைக்குஞ்சு, விபத்தில் சிக்கியதால் கால் ஒடிந்த மாடு, வளர்ப்பவர்கள் வீட்டைக் காலி செய்து போன போது அவர்கள் விட்டுச் சென்று அனாதையாய்த் தவித்த நாய், தாரில் விழுந்து மீட்கப்பட்ட ஆடு"*[30]

என்று ப்ளூ கிராஸில் பலவகைப்பட்ட விலங்குகள் வாழ்கின்றன என்பதை அறிந்த சிவசங்கரி கூறுகின்றார்.

இந்தப் புளூ கிராசை மக்களுக்கு அறிமுகம் செய்து, அங்கு வாழும் உயிரினங்களுக்கு உதவ வேண்டிக்கொள்கிறார். இந்த அமைப்புக்கு விலங்குகள் கொண்டு வந்தும் விடப்படுகின்றன. தகவல்கள் கொடுப்பின் சென்று பெற்றுக்கொள்வதற்கு மூன்று ஆம்புலைன்ஸ்களும் வைத்துள்ளனர்.

**அந்த உயிர்களுக்கான உணவு**

அங்கு வாழும் உயிர்களுக்கு இரண்டு வேளைக்கு ராகி, பயிறு, கொண்டைக்கடலையும், கோதுமை அரிசி கலந்த கூழும், பால் ரொட்டியும் வழங்கப்படுகிறது. கழுதை, ஆடு, மாடு போன்றவற்றுக்குச் சத்தான தீவனம் அளிக்கப்படுகிறது.

**தான தர்மங்கள் வழங்குதல்**

புளூ கிராசின் நிர்வாகி கூறுகிறார் விருப்பம் உள்ளவர்கள் தங்கள் பிள்ளைகள் பிறந்தநாள் மற்ற சிறப்பு நாட்களில் ரூ.250 வழங்குகின்றனர். அன்று விலங்குகளுக்கு நன்கொடை வழங்கியவர்களின் நினைவாக

உணவு வழங்கப்படுகிறது. அவர்கள் குழந்தைகளுடன் வந்து அந்தப் பேசத்தெரியாத உயிர்களின் அன்பைக் கண்டுகளித்து மகிழ்ந்து செல்கின்றனர்.

உலகில் அன்பு செலுத்துவதற்கு எந்த உயிர் என்றில்லை உணர்வுகளைப் புரிந்து கொள்ளும் ஒவ்வோர் உயிரும் அன்பைப் பெற, வெளிக்காட்டத் தயங்குவதில்லை. அந்த உணர்வைச் சிவசங்கரி தாம் அனுபவித்த விதத்தில் தம் நூல்களை வாசிக்கும் நேயர்களுடன் பகிர்ந்து மகிழ்ந்துள்ளமை தெரிகிறது.

**சிவசங்கரியின் துணிச்சலான அனுபவங்கள்**

சிவசங்கரி எல்லாக் குழந்தைகளைப் போலவும் குழந்தைப் பருவத்தில் குதுகலித்து மகிழ்ந்துள்ளார். கூட்டுக் குடும்பப் பின்னணியில் சிறார்களின் மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. விடுமுறை நாட்களில் குழந்தைகள் கூடிவிட்டால் கொண்டாட்டம் தான். குறும்புத்தனமான விளையாட்டுகள், மொட்டை மாடிகளில் ஏறிக் குதித்தல், அங்கிருந்து அடுத்த மாடிகளுக்குத் தாவுதல், மரங்களில் ஏறிக் காய்கள் பறித்துத் தின்பதும் ஒளிந்து விளையாடலும் அவர்களின் சுதந்திரமான சிறுபருவக் காலங்கள் ஆகும். இன்றைய குழந்தைகள் கணிப்பொறிகளிலும், சின்னத்திரைகளின் முன்பாகவும் உட்கார்ந்து உடலசைவுகளற்ற விளையாடல்களை விரும்புவதால், அவை அவர்களின் உடல் ஆரோக்கியத்தை மட்டுமல்லாது மனதையும் பாதிக்கின்றன.

இந்தத் துடிப்பான விளையாட்டுப் பருவத்துச் செயல்கள், சிவசங்கரியைப் பெரிய பெண்ணாகியும், எக்காரியத்தையும் செய்யும் துணிவைக் கொடுக்கும் உந்து சக்தியாக அமைந்துள்ளது. சிவசங்கரியின் தந்தையும் குழந்தைகள் துணிவு பெற்றவர்களாக இருக்க வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர். அவரது முயற்சியால் சிவசங்கரி சிறு பருவத்திலேயே நீச்சல், சாரணர் இயக்கம், தேசிய மாணவர்படையில் பயிற்சி பெற்றிருந்தார்.

எந்த ஒரு காரியத்திற்கும் தூண்டுகோலாக இருப்பவர் அவர் தந்தை. உல்லாசப் பயணம் குடும்பத்தினருடன் சென்றபோது ஏரியில் குழந்தைகளிடம் துடுப்பைக் கொடுத்துப் படகைச் செலுத்தச் செய்தார்.

உலகிலேயே உயரமான "ஜோக்" நீர்வீழ்ச்சியைக் காண அழைத்துச் சென்ற போது செங்குத்தான நிலையிலிருந்து அதன் அடிவாரத்திற்கே அழைத்துச் சென்று வந்தவர் சிவசங்கரியின் தந்தை. தந்தையின் இந்தத் துணிவான செயல்பாடுகளே சிவசங்கரி வளர்ந்து வந்தபின் பல திகிலான அனுபவங்களை அனுபவித்துப் பார்க்கத் தூண்டியது.

சிவசங்கரி பெற்ற சில அனுபவங்களை வாசகர்களுடன் பகிர்ந்து கொள்கிறார். இன்றைய இளைஞர்கள் இத்தகைய துணிவுடைய வர்களாக எதையும் துணிந்து ஏற்கும் பான்மை பெற்றவராக வளர வேண்டும் என்ற நோக்குடன் விளக்குகிறார்.

1. ஸ்னார்க்கிளிங் - *Snorkelling*
2. பாராஸெய்லிங் - *Para Sailing*
3. ராஃப்டிங் - *Rafting*

போன்ற விளையாட்டுகள் புதிய அனுபவத்தை அவருக்குத் தந்தவை.

**ஆழ்கடலில் நீந்துதல் (*Snorkelling*)**

கண்ணாடி, சுவாசிக்க உயிர் வாயுக் குழாய்களுடன் கடலுக்கடியில் சென்று அங்குள்ள பலவகையான உயிரினங்களைக் கண்டுகளிக்கும் நீர் விளையாட்டே ஸ்னார்க்கிளிங் எனப்படும்.

இதனை மாலத்தீவுகளுக்குத் தம் குடும்பத்தினருடன் சென்றிருந்த போது சிவசங்கரி அனுபவித்து மகிழ்ந்துள்ளார்.

> *"கடல் நீருக்குள் இத்தனை ஜீவராசிகளா? வான வில்லின் வர்ணஜாலங்களா? மூச்சை நிறுத்தும், பிரம்மிக்கச்செய்யும் காட்சிகளா? என்று பரவசப்பட்டதும், நெகிழ்ந்ததும், சிலிர்த்ததும் நிஜம், நிஜம், நிஜம்"* [31]

என்கிறார்.

இதில் ஆழ்கடல் மூழ்குதல் என்று ஒன்று உண்டு *(Deep sea diving, Scuba diving)* இவற்றுக்கு மூன்று நாள் தொடர் பயிற்சி தேவை. அது பெறாமல் யாரும் அனுமதிக்கப்படுவதில்லை. அதனையும் அனுபவித்தவர் சிவசங்கரி. ஆழ்கடல் மூழ்குதல் பற்றித் தம் அனுபவத்தை விவரிக்கின்றார்.

"முதல் சிறுநூறு அடிகள் செல்லும் வரை எந்த வித்தியாசமும் தெரியவில்லை. நீர்க் குமிழிகளை வெளியிட்டவாறு மூஞ்சிக்கு நேரே வந்து கொட்டக் கொட்ட விழிக்கும் மீன் கூட்டங்கள், கூர்மையான கத்தி போன்ற நுனிகளைக் கொண்ட பவளக் கொடிகள் அமானுஷ்ய நிசப்தம்...

ஐந்து மாடிக் கட்டிடத்தின் உச்சியிலிருந்து கைப்பிடிச் சுவரைத் தாண்டிக் கீழே தரையைப் பார்ப்பது போல... திடுமென சற்றும் எதிர்பாராவிதமாய் அப்படி ஒரு கிடுகிடு அதளபாதாளம் ஆழ்கடல் ஆறு அடியிலிருந்து அறுபது அடியாக கண்சிமிட்டும் நேரத்தில் மாறியது. நீரின் தெளிவு

காரணமாய் அடிமட்டத்தில் விளக்கை அடித்தவாறு நகரும் ஸ்கூபாடைவர்கள், நம்ப முடியாத சைஸில் ராட்சஸ மீன்களையும் துல்லியமாகத் காண முடிந்தது.... உடம்பு உதறிப் போடப் பெரிசாக தூரத்தில் என்னமோ அசைகிறதே எ.... என்ன? சு... சுறா மீனா? ........ ....... ........

மேலே யோசிக்க விடாமல் வெகு அருகில் திடுமென நிழலாட பதட்டத்தோடு திரும்பினேன் நம்ப வேண்டும்...... பத்தடி சதுரமுள்ள ஒரு 'ரேஃபிஷ்' தன் நீள ஒற்றை வாலை அசைத்தபடி மெதுவாக என்மேல் உரசாத குறையாகச் சென்றது. அதன் பின் சுற்றி இருந்த பயங்கர அழகை ரசிக்க முடியாதபடி படபடத்து, நான் போகிறேன் என்று, கூட வந்தவரிடம் சைகை காட்டி அவசர அவசரமாய் மேலே வந்து சேர்ந்தேன்"[32]

என்று குறிப்பிட்டுள்ளார்.

**விமானக்குடையில் பறத்தல் *(Para sailing)***

பாராசெய்லிங் என்பது பறக்கும் விமானத்திலிருந்து இறங்குவதற்குப் பயன்படும் குடையை, இடுப்பில் கட்டிக்கொண்டு கடல்பரப்பின்மேல் பறக்கும் ஒரு விளையாட்டு. இதை மேல்தட்டு மக்கள் ஒரு விளையாட்டாகச் செய்கின்றனர். ஆர்வமும், துடிப்பும் மிக்கவர் யாரும் புதுமையான, திகிலான செயல்களைச் செய்யவிரும்புவர். சிவசங்கரி இயல்பாகவே துணிவும், துடிப்பும் மிக்கவர். அவர் பாராசெய்லிங் அனுபவத்தையும் பெற்றுவிட வேண்டும் என்ற ஆர்வத்துடன், அதில் பறந்து புது அனுபவத்தையும் பெற்றுள்ளார். அதையும் வாசகர்களுடன் பகிர்ந்து கொள்கிறார்.

மிகப் பெரிய பாராச் சூட்டை இடுப்பில் அணிந்துகொண்டு, நீளமான கயிற்றின் ஒரு முனையைத் தன் இடுப்பிலும், மறு முனையை விசைப்படகில் உள்ள கொக்கியிலும் மாட்டிக்கொண்டு படகில் செல்ல வேண்டும். படகு கயிற்றை இழுக்க, அது பாராசூட்டை அணிந்திருப்பவரை இழுக்க, பாரா சூட்டும் இதனால் இழுக்கப்பட்டு காற்றின் வேகத்தில் பறந்து விரிந்து வானில் சுமார் 300 அடி உயரத்திற்குப் பறந்து செல்லும் இதற்குப் பெயர் பாரா செய்லிங் (பறக்கும் விமானத்திலிருந்து இறங்கப் பயன்படும்) குடையில் பறத்தல் ஆகும்.

இதனைத் தாய்லாந்து நாட்டின் படாயா கடற்கரையில் அனுபவித்து மகிழ்ந்துள்ளார். அந்த அனுபவத்தைப் பகிர்ந்து கொள்ளவும் செய்கிறார்.

> *“படகின் வேகம் அதிகரிக்க அதிகரிக்க பாராச் சூட் உதவியால், தான் ஆகாயத்தின் மேலே மேலே பறந்து மிதந்தேன். கண்ணுக்கெட்டிய வரை நீலக் கடல் அதன் மேலே அங்கும் இங்கும் மிதந்திருந்த படகுகள் நீல வானின் பின்னணியில் கவலை இன்றிப் பறக்கும் பறவையாய் நான்.”*[33]

அப்போது கவிஞர் கண்ணதாசனின் பாடல் வரிகள் நினைவில் தோன்ற,

*"அதோ அந்தப் பறவை போல வாழவேண்டும்*
*இதோ இந்த அலைகள் போல ஆட வேண்டும்"*[34]

என்னும் பாடலின் பொருளுக்கேற்ப, அந்தப் பறவையைப் போல நீலவானில் கடலின் மேலே பறந்த அனுபவம் சிவசங்கரிக்கு ஏற்பட்டது என்பது தெரிகிறது.

இக்காலத்தில் விமானப்படை வீரர்கள், பார்வையாளர்களுக்காக இதனைச் செய்து காட்டுகிறார்கள். பொதுமக்கள் அதனைக் கண்டு மகிழ்கிறார்கள். ஆனால் சிவசங்கரி பல்லாண்டுகளுக்கு முன்பே இந்த நிகழ்வைச் செய்து அனுபவித்து மகிழ்ந்துள்ளார் என்பது வியப்பைத் தருகிறது. இன்றைய இளைஞர்கள் இத்தகைய பயிற்சிகளைப் பெற்று நெஞ்சுரம் மிக்கவராக விளங்கச் சிவசங்கரியின் அனுபவங்கள் எடுத்துக்காட்டாக விளங்குகின்றன.

**நீர்விளையாட்டு** - *Rafting*

பாய்மரத்தின் மூலம் ஆற்றில் விளையாட்டும் ஒரு விளையாட்டு. ரப்பர் மிதப்பானின் மீது இருந்து கொண்டு ஓடும் நீரின் வேகத்திற்கு ஏற்ப ஆற்றில் ஓடி விளையாடும் ஒருவகை நீர் விளையாட்டு. சிவசங்கரி இந்த நீர்விளையாட்டிலேயும் பங்கு கொண்டு திகிலான அனுபவத்தைப் பெற்று விவரிக்கின்றார்.

சுழல்களையும், நுரைத்து ஓடும் வெள்ளப்பெருக்கையும் கொண்ட நதிகளில் ஓரடி விளிம்பு கொண்ட ரப்பர் படகில் *(Raft - dingy)* நீரின் வேகத்தோடு பயணிக்கும் ஒரு வகை விளையாட்டுக்கு ராஃப்டிங் என்று பெயர்.

இவ்விளையாட்டை நேபாள நாட்டிற்குச் சென்ற போது திரிசூல் நதியில் அனுபவித்து மகிழ்ந்தேன்.

நவம்பர் மாதத்தின் நல்ல குளிர் சூழ்ந்த நிலையில் திரிசூல் நதியில் ஒன்பது வெளிநாட்டவருடன், பத்தாவது ஆளாக இந்தியப் பெண்மணி சிவசங்கரியும் பங்கு பெற்றுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

ஓட்டுநர் பயணிகளுக்கான பயணவிதிகளை விளக்கியது வருமாறு:

*"பயணிகளே கவனியுங்கள், ராபீட்ஸில் பயணிக்கும் போது எழுந்திருக்கவோ, இடம்மாறவோ கூடாது. சுழலில் படகு செல்லும் போது அனைவரும் சேர்ந்தே துடுப்பு போட வேண்டும். வெள்ளத்தின் ஆட்டத்தில் படகு கவிந்து நதியில் பயணி விழுந்து விட்டால், நீரின் வேகத்தோடு சென்று, கொஞ்சம் நிதானித்துக் கொண்டு நீந்த வேண்டும். பாறைகள் மேல் மோதினால் மண்டை உடையும் அபாயமும் உண்டு, என்று விதிகளை விளக்கிக் கூறினார்."* [35]

அதன் பின்னர் பயணம் தொடங்கியது.

*"ராபீட்ஸ் (ரப்பர் படகு) நதியில் செல்லத் தொடங்கியது. நதி அமைதியாக ஓடும் இடங்களில் நிதானமாகச் சென்றது படகு. நதியின் வேகம் அதிகரிக்க படகும் விரைந்து சென்றது. படகு நீரின் ஓட்டத்தோடு ஓடிச் சுழன்று, குதித்து, தாவி பாறைகளில் மோதி, வெள்ளத்தில் மூழ்கிச் சுமார்ஐந்து மணி நேரம் பயணத்திற்குத் திரிசூழ் நதியின் இருபதுக்கும் மேற்பட்ட சுழல்களில் சுழன்று பயணித்த அனுபவம் வாழ்நாள் முழுக்க மறக்கவியலாத பயங்கர அனுபவம்"* [36] ஆகும் என்கிறார்.

எதையும் செய்து பார்க்கும், அறிந்து பார்க்கும் ஆர்வம் சிறுவயது முதலே பெற்ற சிவசங்கரி இந்த விளையாட்டுக்களையும் துணிந்து விளையாடி புதிய அனுபவங்களைப் பெற்றுள்ளார். இவை சிவசங்கரியின் பன்முகத்திறன்களுக்கு எடுத்துக்காட்டாய் விளங்குகின்றன.

**பாரதியின் தாக்கம் பெற்ற சிவசங்கரி**

வருவது உரைக்கும் உணர்வுமிக்கவர் பாரதி. பாரதி படைத்த புரட்சிப் பெண்ணாக விளங்கும் சிவசங்கரி. இளம் வயதிலேயே பாரதியின் பாடல்களில் ஒருவித ஈர்ப்பும், ஈடுபாடும் பெற்றிருந்தார். பின்னாளில் சிவசங்கரியின் மனவலிமைக்கு அவை உரமாக அமைந்தன.

சிவசங்கரி ஒவ்வொரு பருவத்திலும் பாரதியின் பாடல்கள் ஒவ்வொரு தாக்கத்தை, விருப்பத்தை ஏற்படுத்தின என்பதை நயமாக உரைக்கின்றார். பள்ளிப்பருவத்துச் சிறு வகுப்புகளில் சுதந்திர வேட்கையை ஏற்படுத்திய பாரதியின் பாடல் வருமாறு :

*"ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே"*
*"விடுதலை விடுதலை விடுதலை"*
*"வெற்றி எட்டுத்திக்கு மெட்டக்கொட்டு முரசே...*
*வேதம் என்றும் வாழ்கவென்றும் கொட்டு முரசே..."* [37]

போன்ற பாடல்வரிகள் மீண்டும் மீண்டும் காலை, மாலை இரவு என்றில்லாமல் எப்போதும் பாடிப்பாடி மகிழ்ந்த பாடல்கள் என்கிறார்.

**கடவுள் வாழ்த்துப்பாடுதல்**

சிவசங்கரியின் தந்தையும் அவரது நண்பர்களும் சேர்ந்து, ஒரு மருத்துவமனை கட்டத் திட்டமிட்டு, அதற்கான அடிக்கல் நாட்டுவிழாவை ஏற்பாடு செய்திருந்தனர். அதில் சிவசங்கரி கடவுள் வாழ்த்துப் பாடல்பாடினார். அவர் பாடிய பாடல் பாரதியின்,

*"ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் - பராசக்தி"* [38]

என்ற பாடல் ஆகும். அந்த விழாவிற்கு வந்திருந்த தந்தையின் நண்பர்கள், சிவசங்கரியைப் பார்த்து, 'ஏன்! இந்தப் பாடலைப் பாடினாய்? எத்தனை பக்திப் பாடல்கள் உள்ளன. அவற்றை பாடவில்லை' என்று கேட்க, 'பாரதியின் பாடல் என்றால் எனக்குப் பிடிக்கும். இந்தப் பாடலும் சக்தி மற்றும் எல்லாக் கடவுளையும் உட்கொண்ட பாடல்தானே' என்று பெருமிதத்துடன் கூறியுள்ளார்.

தேசிய மாணவர் படையில் சேர்ந்து பயின்ற போது சிவசங்கரியின் 13, 14 ஆம் வயதில் தேசிய மாணவர் படையில் சேர்ந்தார். அதில் நாட்டுப் பற்று, தேசிய ஒருமைப்பாடு இவைகளைப் பற்றிய உணர்வுகள் ஏற்படுத்தப்பட்டன. தேசியப் பயிற்சிப் படையில் பயிற்சி பெற்ற போது வீறு கொண்டு பாடப்பட்ட பாடல்,

*"ஒளிபடைத்த கண்ணினாய் வா வா வா*
*உறுதிகொண்ட நெஞ்சினாய் வா வா வா*
*சிறுமை கண்டு பொங்குவாய் வா வா வா*
*எளிமை கண்டு இரங்குவாய் வா வா வா*
*இளைய பாரதத்தினாய் வா வா வா*
*ஏறுபோல் நடையினாய் வா வா வா*
*ஒரு பெரும் செயல் செய்வாய் வா வா வா"*[39]

என்ற பாடல் வரிகளை, அப்பாடலின் சொற்களின் சக்தியை, ஆற்றலை எண்ணி எண்ணி வியக்கின்றார். அச்சொற்களை அதன் ஆற்றலைத் தமக்குள் உள்வாங்கிக் கொண்டதாகக் கூறுகிறார். பள்ளி இறுதி வகுப்பு படித்த போது,

*"நல்லதோர் வீணை செய்தே அதை*
*நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ*
*சொல்லடி சிவசக்தி எனைச் சுடர்மிகும் அறிவுடன்*
*படைத்து விட்டாய்"* [40]

என்ற பாடல் வரிகளின் சொல்லாற்றலை, அதன் கற்பனையைப் பாரதியின் வேண்டுகோளை எண்ணிப்பார்த்து, இவ்வரிகள் ஒவ்வொரு மனிதனும் பெற வேண்டிய மந்திரச் சொற்கள் என்று கூறுகின்றார்.

சக்தி மிக்க பந்து போல உடலும் உள்ளமும் நினைத்தபடி யெல்லாம் செயல்பட அருள் வேண்டுதலை எண்ணி வியந்துள்ளார். அது கிடைத்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்

"விசையுறு பந்தினைப் போல்
உள்ளம் வேண்டிய படி செல்லும் உடல் கேட்டேன்"

அந்த ஆற்றலைப் பராசக்தி அருளினால் நன்மை பல கிட்டும் எனப் பாரதி நம்பினார்.

**கணவருடன் சேர்ந்து மகிழ்ந்த நேரங்களில்**

கப்பலோட்டிய தமிழன் படத்தில் இடம் பெற்ற பாரதியின் பாடல்,

> "காற்று வெளியிடைத் கண்ணம்மா; நின்தன்
> காதலை எண்ணிக் களிக்கின்றேன்"

இப்பாடல் அவரை மிகவும் கவர்ந்த பாடல் என்கிறார்.

> "உன் நினைவுஎன்னை வேறு எந்த வித நினைப்பும்
> இல்லாமல் செய்வதோடு இங்கு ஓர் விண்ணவனாக
> தேவனுக்கு ஒப்பானவனாக வாழச் செய்யும் ... ...
> "உன்னை நினைத்த அளவில் என் துன்பங்கள்
> எல்லாம் மறைந்து விடுகின்றன. நீயே என்
> சித்தம் - என் சிந்தனை என்று பாரதி கூறும்
> காதலின் வலிமைதான் எத்தனை ஆழம் மிக்கது."[41]

என்று போற்றுகின்றார்.

இவ்வரிகள் சிவசங்கரி தமக்கும் தம் கணவருக்கும் இடையே ஆழ்ந்த அன்பை ஒரு பிணைப்பை ஏற்படுத்திய வரிகள் என்று கூறி மகிழ்கின்றார்.

சிவசங்கரி தம்முடைய 26-ஆம் வயதில் எழுதத் தொடங்கிய காலங்களில் பாரதியைப் பின்பற்றி அவரது மொழிப்பற்றும், பாரதி பெண்மையிடத்துக் கொண்டிருந்த பெண் விடுதலை உணர்வும், அறிவியல் நோக்கும் பற்றி அறிந்து ஆழ்ந்து பயின்றதாகக் கூறுகிறார்.

**பாரதியின் நேர்முகச் சிந்தனை** *(Positive thoughts)*

பாரதியின் நேர்முகச் சிந்தனையை ஆழ்ந்து நோக்கிய சிவசங்கரி, இன்று சுதந்திரம் பெற்று ஐம்பதாண்டுகளுக்கு மேல் ஆகியும் கவிஞர்கள் இல்லாமையும், ஏழ்மையையும் பாடித் திரிகின்ற போது, பாரதி மட்டும் அன்றே, தான் எந்த நேரத்திலும் கைது

செய்யப்படலாம் என்ற சூழலிலும் படிப்பறிவு அற்ற மக்களிடையேயும், பல சிக்கல்களுக்கு இடையேயும் பாரதி வாழ்ந்த போதும் எங்கோ உயரத்தில் தெரிந்த வெளிச்சக் கீற்றைப் பார்த்து நம்பிக்கையுடன் பாடியுள்ளான்.

> ***"ஆடுவோமே பள்ளு பாடுவோமே***
> ***ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமே"*** [42]

என்று பாடிய அவரது தீர்க்கதரிசன உணர்வைப் போற்றிக் கூறுகின்றார்.

அப்பாடலிலுள்ள பொருள் பொதிந்த வரிகளை நினைவு கூர்கின்ற சிவசங்கரி பாரதியின் நேர்முகச் சிந்தனையை தன்னுள் வளர்த்துக் கொண்டதாகக் கூறுகிறார்.

ஒரு தனிமனிதன் முன்னேறி, சமூகம் முன்னேற, நாடு முன்னேற இந்த நேர்முகச் சிந்தனை (Positive thinking) என்ற ஆக்கப்பூர்வமான நம்பிக்கை மிகமிக அவசியமாகிறது. எதிர்மறைச் சிந்தனை புற்றுநோயை விடக் கொடியது என்பது சிவசங்கரியின் நம்பிக்கையாகும்.

> "என் பலவீனங்களைக் குறைக்கவும், பலத்தை வளர்த்துக் கொள்ளவும், யதார்த்தத்தை எதிர் நோக்கவும், புதியதோர் உலகம் செய்வேன் என்கிற உறுதியுடன் எந்தச் சூழ்நிலையிலும் தன்னம்பிக்கை இழக்காமல், இடிந்து போகாமல் இருக்க முயற்சிக்கிறேன் என்றால் அதற்குப் பாரதி என்னுள் உண்டாக்கியுள்ள தாக்கம், அது எனக்குக் கொடுத்த உறுதியும், தைரியமும் கூட ஒரு காரணமாகும்" [43]

என்கிறார்.

சிவசங்கரி மற்ற படைப்பாளர்களின் படைப்புகளைப் படித்து அறிந்தாலும், அதன் உத்திகள், அணுகு முறைகள், கையாளப்பட்ட திறன்களை வியந்து போற்றும் நல்ல திறனாய்வாளராக விளங்கியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**தலைவர்களுடன் நல்லிணக்கம்**

சிவசங்கரி பெரிய பதவியில் உள்ள மனிதர்களுடன், எழுத்தாளர் என்ற முறையில் நல்ல தொடர்பும், நட்பும் கொண்டு விளங்கியுள்ளார். இந்த நல்லிணக்கத்திற்கு அவரின் குடும்பப் பின்னணியும் சிவசங்கரியின் எழுத்துப் பணியும் துணை நின்றன. சிவசங்கரி முன்னாள் பாரதப் பிரதமர் திருமதி.இந்திராகாந்தி அவர்களை அணுகி, அவர்களின் வாழ்க்கை வரலாற்றை எழுத அதனை நூலாக வெளியிட விரும்பி அதற்கு அனுமதியும், எழுதுவதற்குத் தேவையான ஆதாரங்களையும் பெற்றுள்ளார். நேரம் கிடைத்தபோது நேர்முக உரையாடலும் நிகழ்த்தியுள்ளார்.

**பிரதமர் திருமதி. இந்திராகாந்தியுடன் சந்திப்பு**

பிரதமர் இந்திராகாந்தி அவர்கள் கி.பி. 1972-இல் பாரத - பாகிஸ்தான் போர் முடிந்து, பங்களாதேஷ் என்ற நாடு தனியே பிரிக்கப்பட்டு உலகிற்கு அறிவிக்கப்பட்டது. அப்போது பிரதமர் இந்திராகாந்தி உலகெல்லாம் போற்றப்பட்ட ஒருவராக விளங்கினார்.

உலகமெல்லாம் மூக்கில் விரல் வைத்து வியக்கும் அந்த அரசியல் தலைவருக்குள் அடங்கி இருந்த பெண்மையின் தன்மை என்ன? என்பதை ஆராயப் புறப்பட்டவர்தாம் சிவசங்கரி.

சிவசங்கரி பிரதமர் இந்திராவிடம் கேட்டுக்கொண்டதெல்லாம் "இந்திரா என்ற அரசியல் தலைவருக்குள் மறைந்திருக்கும் பேத்தி, பாட்டி, பெண், அம்மா, மருமகள், மனைவி, மாமியார் போன்ற முகங்களைத் தரிசித்துத் தமிழகத்து மக்களுக்கு அறிமுகம் செய்து வைக்க விரும்புகிறேன்"[44] என்று பாரதப் பிரதமர் இந்திராவிடம் வேண்டிக் கொள்கிறார். அனுமதி வழங்குகிறார் இந்திரா.

அலுவலகத்தில் பிரதமரைப் பொதுவான நிலையில் அறிந்த போது, "உதவியாளர் விமலாவிற்கு முதுகில் பிடிப்பு உண்டானபோது, தாமே அவர் அறைக்குச் சென்று தைலம் தேய்த்து விட்டுள்ளார்.

மற்றொரு உதவியாளரின் தாயார் உடல் நலமின்றி மருத்துவமனையில் சேர்க்கப்பட்டபோது அடிக்கடி சென்று பெற்ற தாயைக் கவனிப்பது போன்று பாசத்துடன் பேணியவர் இந்திரா"[45] என்று அலுவலகத்தில் உள்ளவர்கள் கூறக் கேட்டு எழுதுகிறார் சிவசங்கரி.

**எதையும் செய்து பார்க்கும் பண்பாளர்**

பெண்மைக்கே உரிய தன்மையில் இந்திரா பத்திரிக்கைகளில் விசேஷமான உணவு, அழகுக் குறிப்புகளைப் படிக்க நேரும்போது அதனை உடனடியாகக் குறித்து வைத்து நேரம் கிடைக்கும்போது முயன்று பார்க்கும் பண்பாளர்.[46]

**பாராட்டும் பண்பாளர்**

தன் வீட்டுச் சமையல்காரரைச் சாப்பிடவுடன் அழைத்து இன்று சாப்பாடு நன்றாக இருந்தது என்று பாராட்டுவார். "வீட்டில் வாழைக்காய் பொறியல் சமைத்த நாளில் சமையற்காரரை அழைத்து அடுத்தமுறை இதன் தோலை வீணாக்காமல் சமையல் செய்துபார்" என்றும் அன்றைய பொறியல் நன்றாக இருந்தது என்றும் கூறுவார்.[47]

இவ்வாறு அவரிடம் பேட்டி எடுத்த நேரங்களில் மற்றவர்களைப் போன்று உட்கார்ந்த இடத்திலேயே அமர்ந்து உரையாடாமல் இயல்பாகச் சின்னச் சின்ன செயல்களைச் செய்து கொண்டு பேசியது பிரதமரின் தனித்தன்மையை வெளிக்காட்டியது.

**இயல்பான பெண்மணி இந்திரா**

பாரதப் பிரமராக இருந்தபோது நேர்காணல் நிகழ்ச்சிக்கிடையே "பூ ஜாடிகளில் மலர்களை நேர்த்தியாக அடுக்கினார். மேஜைப் புத்தகங்களை ஒழுங்கு செய்தார். புல்வெளியில் கிடக்கும் குப்பைகளைப் பொறுக்கி எடுத்துக் கூடையில் போட்டார். தோட்டக் காரனிடம் 'இந்தச் செடி ஏன் வாடி இருக்கிறது?' என்று வினவினார். அறைக்குள் நுழையும்முன் கோணலாய்க் கிடந்த மிதியடியைச் சரி

செய்தார்...." எந்த வீட்டிலும் ஒரு குடும்பத் தலைவி வெகு இயல்பாகச் செய்யும் பல சின்னச் சின்ன வேலைகளை நேர்த்தியாக, இயல்பான நிலையில் செய்தவர் பிரதமர் இந்திரா. அவர்கள் செய்த செயல்கள் என்னைப் பிரமிக்கச் செய்தன"[48] என்று சிவசங்கரி குறிப்பிட்டுள்ளார்.

இந்திராவின் நினைவாற்றல் பற்றியும் அடுத்தவர்களுக்கு மதிப்பளித்து நடக்கும் குணம் பற்றியும் சிவசங்கரி உயர்வாகப் பேசுகிறார்.

**முதல்வர் கலைஞர் கருணாநிதியுடன் சந்திப்பு**

புதிய கோணங்கள் என்ற நூலின் முதல் கட்டுரையே கலைஞர் கருணாநிதி அவர்களைப்பற்றியது. "ஒரு புதிய கோணம் - கலைஞர் கருணாநிதி"என்ற தலைப்பில் 1975-இல் எழுதப்பட்டதாகும்.

எழுத்தாளர் சிவசங்கரி, கருணாநிதியை "ஒரு அரசியல்வாதி அல்லது முதலமைச்சர் என்ற முறையில் கலைஞரைப் பேட்டி காண விரும்பவில்லை. கருணாநிதி ஒரு தனிப்பட்ட மனிதர் என்ற முறையில், ஒரு பெண்ணின் பொது நோக்கில் அணுகிச் சில கேள்விகளைக் கேட்கிறார்"[49] என்ற முன்னுரையுடன் கட்டுரைத் தொடர் ஆரம்பமாகிறது.

அதில் கருணாநிதி அவர்களுக்குத் தெய்வபக்தி இல்லை; காரணம் பெரியாரின் எழுத்துகளில் ஏற்பட்ட ஈடுபாடு. அவருடைய வீட்டிலும் யாரும் கடவுளை வழிபடுவதில்லை. கருணாநிதியின் பெற்றோர் கடவுளாக வணங்கப்படுகிறார்கள்.

**பெண்கள் குறித்து**

அன்றைய சூழலில் பெண்கள் வேலை பார்க்கப் போவதே தவறு என்பது இருபதாண்டுகளுக்கு முன்பிருந்த பிரச்சனை. இப்போது வேலை பார்க்கும் இடங்களில் எப்படி அலங்காரம் செய்து கொள்ளலாம் என்பது பிரச்சனை. இவை எல்லாம் காலம் மாற மாறச் சரியாகிவிடும் என்றார் கருணாநிதி.

கருணாநிதியிடம் சிவசங்கரி கேட்கிறார், "நீங்கள் சின்ன வயதில் அடைய வேண்டும் என்று ஏங்கிய சிலவற்றை இப்போது, அதை அனுபவிக்காத சிலருக்குக் கொடுக்க முயற்சி செய்கிறீர்களா?" என்ற இக்கேள்விக்கு,

இப்போது அரசின் சார்பில் செய்யப்படுகிற சமுதாய மேம்பாட்டுப் பணிகள் எல்லாம் அதன் விளைவு தான்"**50** என்று கலைஞர் கூறுகின்றார்.

"கருணாநிதியைக் கடவுளுக்குச் சமமாகப் பலர் பேசும்போது உங்கள் உணர்வு எப்படி இருக்கும்" என்றதற்கு 'கூச்சமாக இருக்கும்' என்கிறார்.

அவருக்குப் பிடித்த பூ எது? என்றதற்குச் 'சிரிப்பு' என்று கூறிச் சிரிக்கின்றார். பிறகு மல்லிகை என்று பதில் சொன்னார். பிடித்த வண்ணம் - பச்சை என்று கூறியுள்ளார். சிவசங்கரிக்கு 'கவியரங்கில் கலைஞர்' என்ற நூலில் தன் கையெழுத்தைப் போட்டுக் கொடுத்து - அதில் தனக்குப் பிடித்த, 'இதயத்தைத் தந்திடு அண்ணா' என்ற கவிதையை உணர்ச்சியுடன் படித்துக் காட்டியுள்ளார்.

சிவசங்கரியின் கேள்விகளுக்கு மகிழ்வுடனும் நகைச் சுவையுடனும் பதில் கூறியதற்கு நன்றி தெரிவித்ததற்கு,

"ஆயிரமாயிரம் வேலைகள், பிரச்சனைகள் தலைக்கு மேல் இருக்கையில் கவிதைப் புத்தகத்தைக் கையில் வைத்துக் கொண்டு, ஒவ்வொரு கவிதையைப் படித்துக் காட்டும் போது, கருணாநிதி ஒரு தனிப்பட்ட மனிதராக எளிமையுடன் ஒளிர்கிறார்" **51** என்று சிவசங்கரி குறிப்பிட்டுள்ளார்.

சிவசங்கரி முக்கிய மனிதர்களின் சிறந்த பண்புகளை வாசகர்கள் அறிந்து கொள்ளும் வகையில் பேட்டி எடுத்து எழுதுவது சாதாரண மக்களும், உயர்ந்த இடத்தில் இருப்பவர்களின் எளிமையை, பண்பை அறிய வழி வகுப்பதாகும் என்பது தெரிகிறது.

**முதல்வர் எம்.ஜி.ஆருடன் அமெரிக்காவில் சந்திப்பு**

முதல்வராக இருந்த எம்.ஜி.ராமச்சந்திரன் உடல் நலம் குறித்துப் பலவாறு வதந்திகள் பரவிக் கொண்டிருந்த நேரத்தில் சிவசங்கரி எம்.ஜி.ஆர் அவர்களைச் சந்தித்தார்.

காமன்வெல்த்மாநாடு கனடாவில் உள்ள வான்கூவர் நகரில் காமன்வெல்த் மாநாடு நடந்தது. அதில் இந்தியப் பிரதமர் ராஜீவ்காந்தி கலந்து கொண்டார். அவருடன் சிவசங்கரி சென்றிருந்தார்.

அமெரிக்காவில் இந்தியத் தூதுவராகப் பணியாற்றியவர் கௌல் என்பவர். அவர் பிரதமருக்கு அங்கு ஒரு வரவேற்பு விருந்து அளித்தார். அதில் யாரும் எதிர்பாராவண்ணம் எம்.ஜி.ஆர் அவர்கள் கலந்து கொண்டார்கள். அது அங்கு வந்திருந்த உள்நாட்டுப் பிரமுகர்களுக்கும், இந்தியப் பிரமுகர்களுக்கும், பத்திரிக்கையாளர்களுக்கும் பெரிய வியப்பையும் பரபரப்பையும் ஏற்படுத்தியது.

இச்சூழலில்தான் சிவசங்கரி தமிழக முதல்வர் எம்.ஜி. ராமச்சந்திரன் பற்றி எழுதுகிறார்.

> *"எம்.ஜி.ஆர் படுத்த படுக்கையில் இருக்கிறார். அவருக்கு மீண்டும் மாற்றுச் சிறுநீரகம் பொருத்தும் அறுவைச் சிகிச்சை நடந்துள்ளது. அவர் எழுந்து நடமாடவோ, பேசவோ முடியாதவராய் இருக்கின்றார் என்ற செய்திகள் உலவிக்கொண்டிருந்த நேரத்தில், எம்.ஜி.ஆர் திடமாக, ஆரோக்கியமாக வரவேற்பில் கலந்து கொண்டது ஏற்கனவே பேசப்பட்ட வதந்திகளைப் பொய்த்துப் போகச் செய்தது"* [52]

என்று சிவசங்கரியுடன் வந்திருந்த மற்ற பத்திரிக்கையாளர்கள் பேசிக் கொண்டனர் என்கிறார்.

**எம்.ஜி.ஆருடன் ஒரு நேர் காணல்**

முதல்வரைச் சந்திக்க தனிப்பட்ட முறையில் அனுமதி பெற்றார். பின்னர் மறுநாள் எம்.ஜி.ஆர் தங்கி இருந்த பால்டிமோர் நகரத்திற்குச் சென்றார்.

**முதல்வரிடமிருந்து அழைப்பு**

சிவசங்கரி "காலைச் சிற்றுண்டிக்கே சாப்பிட வரச்சொல்லி விடுங்கள்" என்று முதல்வரின் அன்பான அழைப்பைத் தெரிவித்தார் மருத்துவர் பெரியசாமி, தொலைபேசியின் மூலம் பெற்றுக்கொண்ட அழைப்பினை ஏற்று அவர்கள் குறிப்பிட்ட நேரத்திற்கு எழுத்தாளர் சிவசங்கரியும் அங்குச் சென்று சேர்ந்தார்.

**முதல்வர் வீட்டில் சிற்றுண்டி**

முதல்வர் வீட்டில் காலைச் சிற்றுண்டியாக, "இட்லி, வடை, சாம்பார், கேசரி போன்ற இந்திய உணவு வகைகள் பரிமாற, அருகில் இருந்த முதலமைச்சர் சாப்பிடச் சொன்னதும், பின்னர் முதல்வர், அவரது மனைவி ஜானகி, சிவசங்கரி ஆகிய மூவரும் சுமார் ஒன்றரைமணி நேரம் பல விசயங்கள் குறித்துப் பேசியதும் அருமையான அனுபவம்"[53] என்று சிவசங்கரி எழுதியுள்ளார்.

தொப்பி, கறுப்புக் கண்ணாடி எதுவும் அணியாமல் சிகப்புப் பட்டு லுங்கி, வெள்ளை ஜிப்பாவில் எளிமையாக இருந்த முதலமைச்சர் நல்ஆரோக்கியத்துடன் காணப்பட்டார் என்று தமிழக மக்களுக்கு முதலமைச்சரின் நலனை எழுதியவர் சிவசங்கரி.

**வினா – விடை முறை**

கேள்வி கேட்டு அறியாமை இருளை நீக்க வேண்டும் என்றார் தத்துவஞானி சாக்ரட்டீஸ்.

போர்க்களத்தில் அர்ச்சுனனின் ஐயத்தைப் போக்கினார் கிருஷ்ணபகவான், அதுதான் பகவத்கீதையாக மலர்ந்தது.

நச்சுப் பொய்கையில் தன் சகோதரர்களை மீட்கத் தர்மராஜன் விடுத்த சிக்கலான கேள்விகளுக்குக் தகுந்த விடையளித்து அவர்களை மீட்டார் தருமர்.

அவை இதிகாச நிகழ்ச்சிகளாயினும் அதில் வினா - விடை அமைப்பு இடம் பெற்றுள்ளது. அந்த உத்தி இன்று வரை மனித வாழ்க்கையில் ஒன்றாகவே அமைந்து தங்களின் கருத்துக்களை அறிய, வெளிப்படுத்தப் பயன்பட்டு வருகிறது.

சிவசங்கரியும் அந்த உத்தியைப் பயன்படுத்துகின்றார். அவர் தனக்குள் சுயஅலசல் பெற்றதும் அத்தகைய வினா - விடைகளின் மூலம்தான்.

எனவே அந்த அணுகு முறையில் முதல்வரிடம் தனக்கு ஏற்பட்ட ஐயங்களைத் தீர்த்து, அவர் உடல் நலத்தை அறிந்து தமிழக மக்களுக்கு விளக்கியுள்ளார்.

**சிவசங்கரி – முதலமைச்சர் எம்.ஜி.ஆரிடம் கேட்ட சில வினாக்கள்**

1 உங்கள் உடல் நிலை குறித்து ஏதேதோ செய்திகள் உலவுவதால் தயவு செய்து உண்மையான நிலை என்ன என்பதைக் கூற முடியுமா? என்று கேட்கிறார். இக்கேள்விக்கு விடை எம்.ஜி.ஆரின் மருத்துவர் டாக்டர் பி.ஆர்.சுப்ரமணியம் கூறுகிறார்.

முதல்வர் எந்தவித உடல் கோளாறுமின்றி ஆரோக்கியத்துடன் இருக்கின்றார். அவரின் இரத்த அழுத்தம் சீராக உள்ளது. சர்க்கரை அளவு கட்டுப்பாட்டில் உள்ளது. முன்பு பொருத்தப் பட்ட சிறுநீரகம் சரியாக வேலை செய்கிறது. புரிந்து, செயல்படும் ஆற்றல் (மெண்டல் அலர்ட்னஸ்) வெகு சிறப்பாக இருக்கிறது. அதை நீங்களே உணர்ந்திருப்பீர்கள். முன்பு குண்டடிப் பட்ட போது ஏதோ ஒரு சில நரம்புகள் துண்டிக்கப்பட்டதைத் தொடர்ந்து 1984-இல் ஸ்ட்ரோக் உண்டானதில் இன்னும் சில நரம்புகள் பாதிக்கப்பட்டு விட்டதால் நினைப்பதைச் சரளமாகப் பேசுவது ஒன்றுதான் அவரால் இயலாததாக உள்ளது என்று டாக்டர் பி.ஆர்.எஸ் கூறினார்.[54]

2. அவரது கை கால்களில் உள்ள வீக்கத்திற்கு என்ன காரணம்?
ஒரு குறிப்பிட்ட வயதைத் தாண்டியதும் கால்களைத் தொங்கப் போட்டு உட்கார்ந்தால் வீக்கம் உண்டாவது இயற்கை என்றார்.

3. அப்படியானால் அமெரிக்கா வந்தது எதற்கு?
1984 ஆம் ஆண்டுக்குப் பிறகு வருடா வருடம் இங்கு வந்து முறையாகபரிசோதனை செய்து கொள்கிறோம். இந்தப் பயணமும் அதற்காக மேற்கொள்ளப்பட்டது தான் என்றார் டாக்டர். தினமும் ஐம்பதுக்கும் குறையாமல் கோப்புகளைப் படித்து முடிவுகள் எடுத்துக் கையெழுத்துப் போடுகிறார். கேட்கும் திறன் அபாரமாய் உள்ளது என்று கூறி, மீண்டும் 'அசல் பாம்பு செவிதான்' என்றும் கூறியுள்ளார்.

4. 'ராஜீவ் காந்தியிடம் எத்தனை பிணைப்பு கொண்டிருக்கிறார்கள்'.
"உங்கள் இருவரிடையே தந்தை. மகன் போன்ற பாசம் இருப்பதாகக் கூறுகிறார்களே" என்ற கேள்விக்கு, அது உண்மைதான் என்று கூறியபோது முதல்வர் வெகுவாக உணர்ச்சிவசப்பட்டுப் போனார்கள் என்றார் சிவசங்கரி.

5. கட்சியில் உங்களுக்கு அடுத்தபடியாகப் பிரபலம் வலிமை பெற்றவர் யார், என்பது பற்றி மக்களிடையே பலவிதமாகப் பேசப்படுகிறதே! அதுகுறித்து என்று கேட்டபோது வாய்விட்டுச் சிரித்துள்ளார். பின்னர் "எனக்கு எல்லாம் தெரியும், எப்போது எதை வெளியிட வேண்டுமோ அப்படிச் செய்வேன்" என்று கூறி மீண்டும் சிரித்தார் என்கிறார்.[55]

சிவசங்கரி பத்திரிக்கையாளர் என்ற முறையில், மிக முக்கியமான நேரங்களில் மிகச் சரியானவர்களை அணுகி, மக்களுக்கு ஏற்பட்டுள்ள குழப்பங்களைத் தெளிவுபடுத்தும் ஆற்றல் மிக்கவர் என்பதை இந்த வினாவிடை கருத்துக்கள் வெளிப்படுத்துகின்றன. அத்துடன் சிவசங்கரியின் தனித்தன்மையும் புலப்படுகின்றது.

**சமூக மேம்பாட்டாளர்கள்**

இந்தியாவும் அதில் தமிழகமும் பாரம்பரியம் மிக்க நாடுகளாகும். அதன் பெருமையும் வலிமையும் அம்மக்களின் ஈகைத் தன்மையே ஆகும். சங்க இலக்கியங்கள் மன்னர்களின் கொடைத்தன்மையையும், அவர்களின் சமுதாய மேம்பாட்டுச் சிந்தனைகளையும் எடுத்துரைக்கின்றன. தமிழகத்தின் மிகப்பெரிய கோயில்களும், கரிகால் சோழனின் கல்லணையும் மன்னர்களின் சமூக மேம்பாட்டுச் சிந்தனையைப் போற்றுகின்றன.

மூவேந்தர்களுக்குப் பின் கடையெழு வள்ளல்களின் வள்ளல்தன்மையை ஆற்றுப்படை இலக்கியங்கள் விரிவாக உரைக்கின்றன.

பக்தி இலக்கியங்கள் அடியார்கள் புரிந்த தொண்டினை 'மக்கள் தொண்டே மகேசன் தொண்டு' என்று சமூகத் தொண்டு பற்றி விளக்குகின்றன.

இன்றும் ஆன்மீகப்பணியுடன், சமூகப்பணியாகக் கல்வி, மருத்துவம் போன்ற பணிகளை உலகளாவிய நிலையில் விவேகானந்தர் ராமகிருஷ்ணர், ஷீரடி-சாய்பாபா, புட்டபர்த்தி சாயி பாபா, அன்னை சாரதா, அரவிந்தர், அமிர்தானந்த மாயி, ஆதிபராசக்தி வழிபாட்டு அமைப்பு போன்ற அமைப்புகள் தொண்டுகள் புரிந்து வருகின்றன. கிருத்துவ மையங்களும் தொண்டு புரிகின்றன.

மேலும் பல தன்னார்வத் தொண்டு மையங்களும் பலவழிகளில் மக்களுக்குச் சமூகப் பணிபுரிவதை நாளும் அறிய முடிகிறது. அவ்வரிசையில் சிவசங்கரி பாபா ஆம்தே என்ற சமுதாயத்தொண்டர் பற்றி, அவரின் அளப்பரிய பணிபற்றியும் தம் எழுத்துகளில் வடித்துள்ளார்.

**பாபா ஆம்தே**

சிவசங்கரி ஒருமுறை தம் நண்பர் ஒருவரிடம் பாபா ஆம்தே சென்னைக்கு வருகிறார். அவரைத் தமிழக மக்கள் அனைவரும் கண்டு அவரின் அளப்பரிய பணியின் உயர்வைப்பற்றிக் கேட்டு அறிந்து போற்ற வேண்டும் என்று வீறு கொண்டு பேசுகிறார். ஆனால் அந்த நண்பருக்கோ பாபா ஆம்தே என்பவர் யார்? என்று தெரியவில்லை பாபா ஆம்தே பற்றி மக்கள் அறிந்து கொள்ள அவரின் வாழ்க்கையைச் சிவசங்கரி எழுதியுள்ளார்.

மத்தியப் பிரதேசத்தில் நாற்பதாண்டு காலமாகப் பணியாற்றி வருபவர். மனித சமுதாயம் மேம்பட அயராது உழைக்கும் அற்புதமான சாதனையாளர் என்று சிவசங்கரி குறிப்பிட்டுள்ளார்.

**முரளிதர் தேவதாஸ் ஆம்தே**

முரளிதர் தேவதாஸ் ஆம்தே என்பது இவரது பெற்றோர் இட்ட பெயர். இவர் அந்தணர் ஜமீன் குடும்பத்தில் பிறந்தவர். ஆனால் ஜாதி, பணம் இவற்றில் ஈடுபாடு இல்லாதவர்.

'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பதற்கேற்ப, சிறுபருவத்தே ஏழை எளியோருக்கு உதவும் பண்பு கொண்டவராக விளங்குகிறார். அவருடைய 13-ஆம் வயதில் ஒரு தீபாவளித் திருநாளில் பட்டாசு வாங்கக் கடைக்குச் சென்றார். வழியில் தெரு ஓரத்தில் கண் தெரியாத ஒரு பிச்சைக்காரரைக் கண்டு மனம் பதைத்து, பட்டாசு வாங்கக் கொண்டு சென்ற காசை அவருக்குக் கொடுத்துவிட்டுச் செல்கிறார். அந்த நேரத்தில் உதித்ததுதான் அந்தத் தொண்டு எண்ணம். எதிர்காலத்தில் ஏழைகளின் உயர்வுக்காக உழைக்க வேண்டும் என்ற அந்த வித்து வளர்ந்து வந்துள்ளது. 1938 -இல் சட்டப் படிப்பு முடித்தார். அத்தொழிலில் பணம் அதிகம் வந்து கொட்டினாலும் அதில் அவர் மனம் ஈடுபாடு கொள்ளவில்லை.[56]

TA
57



**பாபா ஆம்தேயின் அரசுப்பணி**

1947 -இல் 'உழைப்பு' என்ற ஆசிரமத்தை ஏற்படுத்தினார். அதில் சாதி மதம் பார்க்காது கூட்டாக மக்கள் சேர்ந்து வாழ பாடுபட்டார். அப்போது "வரோரா" என்ற நகரின் முனிஸிபாலிட்டி உதவித் தலைவராகப் பதவியும் வகித்து வந்தார். அங்கு மனிதக்கழிவை அகற்றும் பணியைச் செய்யும் பணியாளர்கள் துன்பத்தை தாமும் அனுபவப்பூர்வமாக உணர வேண்டி, அவர்களுடன் சேர்ந்து கழிவை அள்ளினார்.

> "ஒரு நாள் முன்னிரவு நேரத்தில் மலம் கழிக்கும் இடத்தில் மலத்தோடு மலமாய், மனித உருவம் ஒன்று மூட்டையாய் கிடக்க, கிட்டத்தில் போய் பார்த்தார்! என்ன கொடுமை இது, மூக்கு, கண் இருக்க வேண்டிய இடங்களில் வெறும் துவாரங்களும் அவற்றில் நெளியும் புழுக்களுமாய் நோய் முற்றிய நிலையில் ஒரு தொழு நோயாளி குடலைப் புரட்டிக்கொண்டு குமட்ட, ஓட எண்ணியவர் நிதானித்து மனிதனைக் கண்டு மனிதன் அருவருப்பது மனிதாபிமானம் அற்ற செயல் என்ற எண்ணம் தோன்ற மெள்ள அந்த மனிதனைத் தூக்கி தன் வீட்டிற்கே அழைத்து வந்தார். பொறுமையாய்ப் புண்களைச் சுத்தம் செய்தார் அவன் சாகும் வரை அக்கறையுடன் தொடர்ந்து பணிவிடை செய்து கவனித்த அந்த நாட்களில் அவர் மனம் சிந்தித்தது. தீண்டத்தகாதவர்களை விடக் கேவலமான நிலையில் தொழுநோயாளிகள் இருக்கும் அவலத்திற்குத் தாம் ஏதாவது தீர்வு காண வேண்டும் என்று தீர்மானம் செய்கின்றார்"[57]

**தொழுநோய் ஆய்வு**

தொழுநோயாளிகளுக்கு உதவி, நோயைக் குணப்படுத்த விரும்பியவர் அந்நோயை ஆராய்ந்து அதன் வீரியத்தை அறிந்து கொள்ள கல்கத்தா சென்று, (ஸ்கூல் ஆஃப் ட்ராபிகல் டிஸிஸிஸ்) நோய்கள் குறித்து ஆய்வு நடத்தும் பள்ளியில் சேர்ந்து பயிற்சி மேற்கொண்டார்.

அங்குத் தொழுநோய் கிருமிகளை, அதன் வீரியத்தைப் பரிசோதிக்கத் தமக்குத் தாமே, ஊசி மூலம் அக்கிருமிகளை ஏற்றிக்கொண்டு ஆய்ந்தார்.

**ஆனந்த வனம்**

1951 - ஆம் ஆண்டு காடுகள் சூழ்ந்த இடத்தில் 50 ஏக்கர் நிலப்பரப்பில் 'ஆனந்த வனம்' என்ற தொழுநோயாளிகளுக்கான புனர்வாழ்வு இல்லத்தை அமைத்தார். அதனை வினோபாபாவே அவர்களால் திறக்கச் செய்தார்.

ஆறு நோயாளிகளுடன் தொடங்கப்பட்ட ஆனந்த வனம் இன்று 2500க்கும் மேற்பட்ட மனிதர்களுடன் அமைதியாக இயங்கிக் கொண்டிருக்கிறது.

**ஆனந்த வனத்தின் பணி**

நோயிலிருந்து மீண்டவர்கள் உதவியுடன் கட்டப்பட்ட வீடுகள், பள்ளிகள் மருத்துவமனைகள், கடைகள், அணைக்கட்டுகள், கல்லூரிகள் என்று ஆனந்த வனம் தன்னிறைவு பெற்று ஒரு சிறு நகரமாகவே திகழ்ந்து வருகிறது. அங்கு விளையும் உற்பத்திப் பொருள்களின் மதிப்பு ஆண்டு ஒன்றுக்கு ஒரு கோடிக்கும் மேலே ஆகும் என்கிறார்.

சிவசங்கரியின் சீர்திருத்தப்பணிகளுக்கு, பாபா ஆம்தே, அன்னை தெரசா போன்றோரின் சமூக நலச் சிந்தனைகளும் செயல்பாடுகளும் தான் வழிகாட்டியுள்ளன. அவையே ராஜாஜி புனர்வாழ்வு மையம் போன்ற அமைப்புகளை உருவாக்க வித்திட்டுள்ளன எனத்தெரிகிறது.

சிவசங்கரி தன் எழுத்தாற்றலால் மக்களுக்குத் தக்க சமயத்தில் வேண்டிய கருத்துக்களை வழங்குவதுடன், பாபா ஆம்தே போன்றோரின் வாழ்க்கையைப் பாடமாக எடுத்துக் காட்டுவது, மற்றவர்களும் சமூகச் சிந்தனையை வளர்த்துக் கொள்ள வழிவகுக்கிறது.

**அலிகள்**

**மனித பிறப்பு**

மனித இனத்தின் சாபமோ, பெற்றோர் செய்த பாவமோ மக்கள் கூட்டத்தில் அலிகள் என்ற ஒரு பால் நிலை தோன்றுகிறது. அது ஒரு குறைபாடு ஆகும். இக்குறைபாடு உடைய மனிதர் பண்டுதொட்டே இருந்துள்ளனர் என்பதை இலக்கியங்களும் எடுத்துரைக்கின்றன.

> "*அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல்*
> *அரிது அதனினும்*
> *கூன் குருடு செவி பேடு நீங்கிப்*
> *பிறத்தல் அரிது*"**58**

என்று ஔவையார் குறிப்பிட்டுள்ளார்.

முழுமனிதராய் எந்தக் குறைகளும் இல்லாமல் பிறத்தலே மிக அரிது என்பதைக் குறிப்பிடுகையில், எந்த ஒரு உடல் குறைபாடும் இல்லாமல் வாழும் மக்கள் பேறு பெற்றவர்களாகிறார்கள். அந்த வாழ்க்கையைச் செம்மையுடன் வாழ முனைவதே வாழ்வின் பயனாகும்.

**தொல்காப்பியம்**

தமிழ் மொழியின் சிறப்பினைப் பறை சாற்றும் பழம்பெரும் இலக்கண நூல் தொல்காப்பியம் ஆகும். அதில் மக்கள் பெயரைச் சுட்டிவிளக்குகிறார் தொல்காப்பியர். ஆண்களை ஆடூஉ என்றும், பெண்களை மகடூஉ என்றும் குறிப்பிடுகின்றார்.

பின்னர் மற்றொரு நிலையை,

> "*பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்*
> *ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்*" **59**

என்று தொல்காப்பியர் விளக்கியுள்ளார்.

உயர்திணையில் பெண்மைத் தன்மை குறித்த ஆண்மை திரிந்த பெயர்ச்சொல் பேடு என்றழைக்கப்படும். தொல்காப்பியர் காலத்திலேயே பேடியர், பேடிமார், பேடிகள் என்ற சொல் வழக்குகள் இருந்துள்ளமையை இதன் மூலம் சுட்டிச் செல்கின்றார்.

**மணிமேகலை**

காமனின் படைத்தலைவி போல், மணிமேகலை பேரழகு கொண்டவளாக விளங்குகிறாள். அவள் அழகைக் கண்டு மயங்காத ஆடவர் 'பேடியர் அன்றோ' என்று சீத்தலைச் சாத்தனார் குறிப் பிட்டுள்ளார்.

*"பேடியர் அன்றோ பெற்றியின் நின்றிடின்"*[60]

என்றும்,

*"பேடிக் கோலத்து பேடு காண்கு நரும்"*[61]

என்றும் இந்திரவிழா நிகழும் புகார் நகரில் பேடிக் கூத்தினை மக்கள் கண்டு களித்தனர் என்பார் சாத்தனார்.

பாண்டவர்கள் விராடன் ஊரில் மறைந்து வாழ்ந்த காலத்தில் அர்ச்சுனன் (விஜயன்) பேடி வடிவில் வாழ்ந்தான் என்பதையும் மணிமேகலை கூறுகிறது.

*"விராடன் பேரூர் விசயனாம் பேடியைக்*
*காணிய சூழ்ந்த கம்பலை மக்களின்"*[62]

விசயன் அணிந்த கோலம் பேடி, அந்தச் கோலத்தில் நடந்த கூத்தினை மக்கள் கூடிக் கண்டு களித்தனர் என்பது தெரிகிறது.

கறுப்பு மலர்கள் என்ற நூலில் கவிஞர் நா.காமராசன் அலிகளைப் பற்றி,

*"சந்திப் பிழை போன்ற*
*சந்ததிப் பிழைகள் நாங்கள்"*[63]

என்றும்,

> *"விதை வளர்த்த முள்ளானோம்*
> *விளக்கின் இருளானோம்*
> *சதை வளர்க்கும் பிணம் நாங்கள்*
> *சாவின் சிரிப்புக்கள்"* [64]

என்றும் குறிப்பிட்டுள்ளார்.

அலிகளாய்ப்பிறந்தது இயற்கைக்கு எதிரானது. அனைத்து நிலையிலும் எதிர்மறையானது என்று தன் கவிதைகளில் காமராசர் அலிகளின் உணர்வுகளைப் படம்பிடித்துக் காட்டியுள்ளார்.

இன்றும் தென் (மதுரை) மாவட்டங்களில் அலிகள், பெண், ஆண் வேடமிட்டுத் திருவிழாக்களில், இறப்பு நிகழ்வுகளில் நடிப்பது வழக்கமாக உள்ளது.

**மகாபாரதத்தில் பேடி**

"மகாபாரதப் போரில் போருக்குப் புறப்பட்ட நல்லரவான் போரில் இறத்தல் உறுதியாகும். அதனால் நல்லரவானை எந்தப் பெண்ணும் திருமணம் செய்து கொள்ள, முன் வரவில்லை. மாயக் கண்ணன் பேடி உருவம் கொண்டு நல்லரவானைத் திருமணம் செய்து கொள்கிறான். நல்லரவான் போரில் மடியவும் கணவனை இழந்த பேடியான மாயக் கண்ணன் தாலி அறுத்துத் துக்கம் அனுஷ்டித்ததாகக் கதை" [65] சொல்லப்படுகிறது.

"இக்கதையின் அடிப்படையில் அலிகள் தங்களை மாயக் கண்ணனின் வாரிசுகள்" [66] என்று கூறிக்கொள்வதாகச் சிவசங்கரி எழுதியுள்ளதால் அறிய முடிகிறது.

**கூவாகம் திருவிழா**

விழுப்புரத்திற்கு அருகில் உள்ள கிராமம் கூவாகம். இங்குச் சித்திரைமாதம் அலிகளால் ஒரு திருவிழா நடத்தப்படுகிறது. இவ்வூரில்

இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் வாழும் அலிகள் ஒன்று கூடி நடத்துகிறார்கள். சித்திரை மாதம் பௌர்ணமி நாளின் இரவுப் பொழுதில் கோயில் அர்ச்சகர் கையால் தாலி வாங்கிக் கட்டிக் கொண்டு, போர் நிகழ்த்துகின்றனர். போரில் நல்லரவான் இறந்ததும் தங்கள் தாலியை அறுத்துக் கொண்டு, பிலாக்கணம் (ஒப்பாரி) பாடி துக்கம் கொண்டாடித் தத்தம் ஊர்களுக்குச் சென்று விடுகின்றனர்.

**அலிகளின் ஆதங்கம்**

நாட்டில் பல்வேறு பகுதிகளில் இருந்து வந்து ஒன்று கூடித் தங்களுக்காக ஒரு விழாவினை அமைத்து, தாங்களும் வாழுகின்றோம் என்று காட்டிக்கொள்ளுகின்றனர். சமுதாயம் தங்களை ஏற்றுக் கொள்ளவில்லை என்றாலும் நாங்களும் வாழ்ந்தாக வேண்டும். பிறந்துவிட்டோம். இருக்கும் வரை வாழ வேண்டும். அதற்குத் தங்களைப் போன்றோருடன் கூடியாவது மகிழ வேண்டும் என இவ்விழாவினை ஏற்படுத்தியுள்ளனர். ஆனால் அதை நல்ல நிலையில் அனுபவிக்க அரசு உதவி, வசதிகள் ஏதும் செய்வதில்லை என்று கூறி வருந்துகின்றனர்.

> "*ஆயிரக்கணக்கான ரூபாய்களைச் செலவு செய்து நாங்கள் விழா எடுக்கின்றோம். ஆனால், இந்த இடத்தில் உடை மாற்றிக் கொள்ள ஓர் அறை, குளிக்கும் அறை, கழிவறை வசதி என்று எதுவும் எங்களுக்குக் கிடையாது. அலிகள் தானே, நட்டநடு வெளியில் உடை மாத்திக்கட்டும், படுக்கட்டும், குளிக்கட்டும் என்ற அலட்சியம் தானே எங்களின் இந்த நிலைக்குக் காரணம் என்கிறனர். அரசாங்கத்துக்கு எழுதிட்டோம், அதிகாரிங்க கிட்ட முறையிட்டோம்! ம்ஹூம், பலன் எதுவும் இல்லை. நாங்க இரவும் இல்ல பகலும் இல்ல, ஆணும் இல்ல பெண்ணும் இல்லனு எல்லாருக்கும் இளப்பங்க... இளப்பம்! ஆனா, ஆனா நாங்க மனுஷங்க தான்....*" [67]

என்று வேதனையுடன் கூறுகிறார் மஞ்சுளா என்பவர்.

**பிரான்ஸிஸ்**

அந்த ஆண் குழந்தைக்குப் பெற்றோர் இட்டபெயர் தான் பிரான்ஸிஸ். நான்கு குழந்தைகளுடன் பிறந்தவன் பிரான்ஸிஸ். அவனுக்குப் பெண் மாதிரி நினைக்க, நடக்கப் பிடித்திருந்தது. பெண்களுடன் விளையாடினான். தன்னை ஆண் என்று சொல்லிக்கொள்ள வெறுத்தான். ஒருநாள் தன்னுடைய பதினைந்தாம் வயதில் மற்றொரு அலியின் துணையுடன் பம்பாய்க்குச் சென்று விட்டான். அங்கு அறுவைச் சிகிச்சை செய்து கொண்டு மஞ்சுளாவாக மாறிவிட்டான். மஞ்சுளாவாக மாறிய பிரான்ஸிஸ் இடம் சிவசங்கரி பேச, அவன் தான் முன்பிருந்த நிலையை இவ்வாறு விவரித்துக் கூறினான். தான் முன்பு இருந்த, தன் பழைய நிலையை விவரித்துக் கூறுகிறார் பிரான்ஸிஸாக இருந்த மஞ்சுளா.

**யார் அலிகள்**

பண்டுதொட்டுப் பேடு என்று அழைக்கப்படும் அலிகள் உருவத்தால் ஆணாகவும், உணர்வால் பெண்ணாகவும் இருப்பார்கள். சிலர் உருவத்தால் பெண்ணாக உணர்வுகளில் ஆணாக வாழ்வார்கள். இந்த உணர்வுப் போராட்டத்தில் தவித்துப் பின் அறுவைச்சிகிச்சை மூலமாக உருவத்தை மாற்றம் செய்து கொண்டு தனியாக ஒரு சமூகமாக வாழ்ந்து வருகின்றார்கள் அலிகள்.

"ராஜம்மா என்ற சாமியார் அம்மா, சென்னையில் கோவில் ஒன்றில் குறி சொல்பவராக வாழும் குருவம்மாள் போன்றோரும், பகல் பொழுதில் ஆணாக பள்ளிக் கூடத்தில் நாட்டியம், பாட்டு சொல்லிக் கொடுத்து, தனிமை கிடைக்கும் போது மட்டும் தங்கள் மனம் விரும்புமாறு புடவை உடுத்தி, பெண்ணாக வாழும் சுஜாதா, உஷா, தில்லானா, செல்வி போன்றோர்" [68] இவர்களை நேரில் சந்தித்துப் பேசி அவர்களின் உணர்வுகளைப் பகிர்ந்து கொண்டுள்ளார் எழுத்தாளர் சிவசங்கரி.

**அலிகள் மேற்கொள்ளும் பொதுவான வேலைகள்**

"பொதுவான அலிகள் கேவலமான பிழைப்பு நடத்துவதாகவும், பிள்ளை குட்டிங்களைத் தூக்கிட்டுப்போய், அவங்களையும் அலிகளாக மாற்றிவிடுவதாகவும் சொல்றது சரியா?" என்று மஞ்சுளாவிடம் கேட்கிறார் சிவசங்கரி.[69]

**மஞ்சுளா கூறுகிறார்**

*"அப்படியெல்லாம் இல்லேம்மா, சாதாரணமா சாராயம் காய்ச்சறது, ஆடிப்பாடிப் பிழைக்கறது, பிச்சை எடுக்கிறது. விபச்சாரம் பண்றதுன்னு நாலுவிதத் தொழிலையும் நாங்க பண்றது தான். ஆனா ஆடிப்பாடிப் பிழைப்பு நடத்துறவங்க தான் அதிகம். இங்க அங்க மட்டமா நடந்துக்கறவங்க இருக்காங்க, நான் இல்லைன்னு சொல்லலை. ஆனா பாருங்கம்மா, எந்தத் தொழிலையும் கௌரவமா பண்ணவிடாம சமூகத்துல ஒரு அந்தஸ்தான இடத்தையும் கொடுக்காம எங்கள ஓட ஓட விரட்டினா, நாங்கதான் என்ன பண்ணுவோம், சொல்லுங்கள்"*[70]

என்று பீறிட்டெழும் அழுகையைச் சமாளித்துக் கொண்டு பேசுகிறார்.

*"பிள்ளைங்களை நாங்க கடத்திட்டுப் போயிடறோம்னு சொல்றது மகாபாவம்மா... நாங்க அப்படிப்பட்டவங்க இல்லே. வடநாட்டுல குழந்தை ஆசீர்வாதம் பண்ண எங்களைத் தான் கூப்பிடுவாங்க. போயி ஆடிப்பாடிட்டு, கடவுளே! நாங்கதான் இப்படி ஆயிட்டோம். இந்தக் குழந்தையையாவது நல்லாவைனு மனமுருக வேண்டிக்கிட்டு ஆசீர்வாதம் பண்ணுவோம். பெண் குழந்தைகளுக்கு எங்களால எந்தவிதமான தீங்கும் உண்டாகாதுன்ற நம்பிக்கைல எங்களை ஆயாவா வெச்சிருக்கற குடும்பங்க ஏராளமா இருக்கு, தயவு செஞ்சு பிள்ளைங்களை நாங்க கடத்துறோம்னு இன்னொரு முறை சொல்லாதீங்க... மனசு வெடிச்சுப் போகுதும்மா"*[71]

என்று கூறியுள்ளதை அறிகிறோம்.

**அலிகளுக்காக வேதனைப்படும் சிவசங்கரி**

"கண்கள் கலங்கிப்போக, குரல் தழுதழுக்க, கூட்டமாய் நின்று அவர்கள், நாங்க மனுஷங்க இல்லியா? என்று கேட்டதும் மனசு திப்பிதிப்பியாய் உடைந்து போனது" என்று சிவசங்கரி குறிப்பிட்டுள்ளார்.[73]

"கடவுளே... கடவுளே!

இவர்கள் மனசில் இத்தனை வேதனையா?
இவர்கள் வாழ்க்கையில் இத்தனை அவலமா?"[74]

என இதில் மாற்றம் வர வேண்டும் என்று மனித நேயத்துடன் வேண்டுகிறார்.

**அலிகள் பற்றி மருத்துவர்கள்**

"மருத்துவர் கூறுகிறார் உடல் ஒரு பாலாகவும் மனம் ஒரு பாலாகவும் இருப்பவர்கள் ஓரிருவர் அல்லர். முப்பதாயிரம் பேருக்கு ஒருவர் இப்படிப்பட்ட பால்மாறிகளாக உள்ளனர்." என்பர்.

ஹார்மோன்ஸ் - இது இரத்தத்தில் கலந்து உடல் உறுப்புகளைச் சமச்சீராக வைத்திருக்கத் தூண்டும் உட்சுரப்பு ஆகும்.

அவர்கள் விரும்பும் பாலாக அறுவைச் சிகிச்சை செய்யப்படுகிறது. அந்த அறுவைச் சிகிச்சையைச் செய்யவேண்டுமானால், முதலில் உளவியல் பரிசோதனை செய்ய வேண்டும். பின்னர் சட்ட ஆலோசனையும், சான்றிதழும் பெற்று, அதன் பின்னர் தான் அறுவைச் சிகிச்சை பெற்றுக் கொள்ள முடியும். அவ்வாறு அறுவைச் சிகிச்சை மேற்கொண்டவர் கூறும் வழிமுறைகள் அவை வருமாறு:

**மருத்துவ ஆலோசனை**

அலிகளாக இருப்பவர்கள், பால் மாறாட்டக் குழப்பத்தில் உள்ளவர்களுக்கு முதலில் உளவியல் சோதனை நடைபெறுகிறது. இந்த மருத்துவ சோதனை உண்மையிலேயே இவர்கள் தங்கள், அடையாளம்

குறித்த குழப்பத்தில் இருக்கிறார்கள் என்பதை உறுதி செய்ய வேண்டும். அதற்காகத் தான் இச்சோதனை என்று மருத்துவர்கள் கூறுகிறார்கள்.

**சட்டத்தில் அனுமதி பெறுதல்**

மருத்துவ ஆலோசனைகளுக்குப் பிறகு, அவர்கள் அறுவைச் சிகிச்சை செய்து கொள்ள வேண்டும். அப்போதும் சட்டப்படி கோர்ட் அனுமதி பெற்று அதன் பின்னரே சிகிச்சை அளிக்கப்படுகிறது.

**முறையான மருத்துவம்**

அலிகளுக்கு உடனடியாக அறுவைச் சிகிச்சை செய்து விட முடியாது. அவர்களில் ஒரு ஆண், பெண்ணாக மாற நினைக்கின்றார் என்றால் அவருக்கு முதலில் உடல் இயக்கத்தை சமச்சீராக வைத்திருக்க உதவும் உட்சுரப்பு (ஹார்மோன்) சிகிச்சை அளிக்க வேண்டும். பின் முகத்தில் உள்ள மீசை, தாடிகளை நீக்க லேசர் சிகிச்சை கொடுக்கப்படுகிறது. அந்நிலையில் அந்த ஆண், பெண் உடைகளைத் தான் அணிய வேண்டும். அவ்வுடையுடனே பொது இடங்களுக்குச் சென்று வர வேண்டும். அங்கு மற்றவர்கள் இவர்களை வித்தியாசமாகப் பார்ப்பார்கள். அப்பார்வையை அவர்கள் தாங்கிக் கொள்ளப் பழக வேண்டும். அதன் பிறகே இவர்கள் முழுமையான ஹார்மோன் மாற்றங்களைப் பெற்றுள்ளார்கள் என உறுதிசெய்து, ஆணாகவோ, பெண்ணாகவோ மாற்றும் அறுவைச் சிகிச்சையைச் செய்வார்கள்.

**மருத்துவக் குழுவினரும் அறுவைச் சிகிச்சையும்**

அலிகளுக்குப் பால் மாற்றம் செய்ய உடல்உறுப்பு அமைப்பு மாற்று அறுவைச் சிகிச்சை நிபுணர் (பிளாஸ்டிக் சர்ஜன்) ஒருவர், உளவியல் நிபுணர் அல்லது பாலியல் நிபுணர், உடல்உட்சுரப்பு இயல் நிபுணர் (ஹார்மோன் ஸ்பெஷலிஸ்ட்), சிறுநீரகவியல் நிபுணர் ஆகிய குழுவினர் ஆலோசனையுடன் கூடி இந்த அறுவைச் சிகிச்சையைச் செய்கின்றார்கள். அதன் பின்னரும், ஆணாகவோ, பெண்ணாகவோ சிகிச்சை பெற்றவர் தொடர்ந்து ஹார்மோன் ஊசிகளைப் போட்டுக் கொள்ள வேண்டியது அவசியம் என்று மருத்துவர்கள் கூறுகிறார்கள்.

இந்த மருத்துவச் சிகிச்சை எல்லாம் சாதாரண மக்களுக்குச் செய்து கொள்ள முடிவதில்லை. சிகிச்சைக்கு ஆகும் செலவுகள் சுமார் மூன்று முதல் நான்கு லட்சங்கள் என்பதால் உயர்குடி மக்களால் மட்டுமே இந்த முறையில் சிகிச்சை பெற முடிகிறது என்று மருத்துவர்கள் தெரிவிக்கின்றனர்.

**உயர்குடியில் பிறந்த அலிகள்**

உயர்குடியில் பிறந்து, இந்த முறையில் சிகிச்சை பெற்றவர் மும்பையில் ஜவுளித் தொழில் அதிபர் மபத்லால் குடும்ப வாரிசுகளில் ஒருவரான அபர்ணா. இவர் தன்னுடைய 40 ஆவது வயதில் 2004 ஆம் ஆண்டு அறுவை சிகிச்சை செய்து கொண்டு ஆணாக வாழ்கிறார். தன்னுடைய பெயரை அஜய் என்றும் மாற்றிக் கொண்டார் அபர்ணா.

"சிறுவயது முதலே என்னை நான் ஆணாகத்தான் உணர்ந்தேன். ஆனால் என் குடும்பம் என்னைக் கட்டாயப்படுத்திப் பெண்ணாகவே வைத்திருந்தது"[74] என்கிறார்.

அவருக்கு 1979 - இல் திருமணமும் நடைபெற்றுள்ளது. கணவருடன் உறவு இல்லை. அதனால் இரண்டு வருடங்களிலேயே விவாகரத்தும் ஏற்பட்டுவிட்டது.

அவர் ஆணாக மாறியதற்குக் குடும்பச் சொத்துப் பிரச்சனை தான் காரணம் என்று கூறப்படும் செய்தியை அபர்ணா மறுத்துக் கூறுகிறார்.

"நான் விரும்பியபடி ஆணாக மாறிய பின்னர் தான் முழு சுதந்திரத்தையும் உணர்கிறேன்" என்கிறார், 'அஜய்' ஆக மாறிய அபர்ணா.

**ஆடைவடிவமைப்பாளர் (ஃபேஷன் டிசைனர்)**

ஆணாக இருந்து பெண்ணாக மாறியவர் ஆடை வடிவமைப்பாளரான சோஹினி பாக்ஸி என்பவர் கூறுகிறார்.

"சின்னவயதில் எனக்குப் பையன் டிரஸ் போட்டு விடுவார்கள். ஆனால், நான் என்னைப் பெண் குழந்தையாகவே உணர்வேன். லிப்ஸ்டிக், நகப் பாலிஷ் போட்டுக் கொண்டேன். பள்ளியில் பையன்கள் கேலி செய்ய, எனக்குப் படிப்பே வெறுத்துப் போனது" என்கிறார்.

அவருடைய பெற்றோர்கள் அவரின் நிலையை விரும்பவில்லை. அவர்கள் இறந்த பின், சொந்தக்காரர்களைப் பொருட்படுத்தாமல் அலுவலர்களின் ஆதரவுடன் அறுவைச் சிகிச்சை செய்து கொண்டார்.

இச்சிகிச்சைக்காக நான்கரை லட்சம் ரூபாய் செலவு செய்துள்ளார்.

"எல்லோருக்கும் இப்படி பொருளாதார வசதியுடன் சிகிச்சை பெற முடியாததால் பலர் தற்கொலை செய்து கொள்கின்றனர்" என்று உணர்ச்சி வசப்பட்டுச் சொல்லியதைக் குறிப்பிட்டுள்ளார் மருத்துவர்.[75]

**விளையாட்டுத்துறை மியானே பாச்சர்**

இவர் பிறக்கும் போது ஆண், பெண்மைத் தன்மை மிக்கவர். கடந்த 1995 ஆம் ஆண்டு அறுவை சிகிச்சை செய்து கொண்டு பெண்ணாக மாறியுள்ளார். ஆணாக இருந்த போதே கோல்ஃப் போட்டிகளில் பங்கேற்றவர். பின்னர் பெண்கள் பிரிவில் அவர் விளையாடச் சென்றபோது, ஆஸ்திரேலிய கோல்ஃப் சங்கம் இவரை அனுமதிக்கவில்லை. பெரிய போராட்டத்திற்குப் பின் டாக்டர்களின் விசாரணைக்குப் பிறகு இந்த 2005-ஆம் ஆண்டு தான் அவருக்குப் பெண்கள் பிரிவில் விளையாட அனுமதி கிடைத்துள்ளது.

2005 - ஆம் ஆண்டு ஆஸ்திரேலிய ஓபன் கோல்ஃப் போட்டியில் அவர் கலந்து கொண்ட போது ரசிகர்கள் ஆரவாரம் செய்து அவரை வரவேற்றுள்ளனர்.

**குட்டியம்மா என்ற பினு**

குட்டியம்மா என்பவர் 29 வயதுப் பெண். கேரளாவில் கொச்சியின் அருகில் உள்ள ஒரு கிராமத்தில் பிறந்தவர். அங்கு லாரா என்ற பெண்ணைக் காதலித்துள்ளார்.

லாரா, குட்டியம்மா தன்னைக் காதலிக்கிறார் என்று அறிந்து, 'நீ ஆணாக மாற அறுவை சிகிச்சை செய்துகொள், பிறகு உன்னைத் திருமணம் செய்து கொள்கிறேன்' என்று கூறுகிறாள்.

அதன்படி குட்டியம்மா ஆப்பரேஷன் செய்து கொண்டு, பினு என்று பெயரையும் மாற்றிக் கொண்டார். ஆனால் அதன் பின் லாரா அவரைத் திருமணம் செய்து கொள்ள மறுத்துவிட்டார். வேறு ஒருவருடன் திருமணம் செய்ய உறுதியும் செய்யப்பட்டது. அதனால் மனம் உடைந்த பினு போலீஸில் புகார் செய்து தனக்கு அறுவைச் சிகிச்சை செய்ய ஒரு லட்சம் செலவானது. அதைத் திருப்பித்தர வேண்டும் எனப் புகார் கொடுத்துள்ளார். காவல் துறை அதனைச் செய்யாததால் பினு தற்போது நீதிமன்றத்திற்குச் சென்றுள்ளார்.

மனதளவில் பாதிக்கப்பட்டுள்ள லாரா போன்றோரைச் சமுதாயத்தினரும் வேதனைப்படுத்தக் கூடாது. அது மனிதாபிமானம் அற்ற செயலாகும் என்பது தெரிகிறது.[76]

**சுடர்பவுண்டேஷன்ஸ்**

"சமுதாயத்தின் அடிமட்டத்தில் வாழ்ந்த அலிகள் தங்களின் முயற்சியால் பொருளாதாரத்திலும் இன்று முன்னேறியுள்ளனர். பெற்றவர்களாலும், சமூகத்தினராலும் ஒதுக்கப்பட்ட அலிகள் இன்று 'சுடர்பவுண்டேஷன்ஸ்' என்ற அமைப்பை உருவாக்கியுள்ளார்.

அவர்கள் தங்களைச் சமுதாயத்தில் அடையாளம் காட்டி வாழ, நிலைநிறுத்தி வாழப் பாடுபட்டும் வருகிறார்கள். தங்களாலும் மற்றவரைப்போல் ஆக்கப் பூர்வமாகச் செயல்பட முடியும் என்பதை நிரூபித்து வருகிறார்கள்.

அந்த அலிகளால் அமைக்கப்பட சுடர் பவுண்டேஷனில் 40 பேர் உறுப்பினர்கள். அவர்கள் சுய உதவிக்குழு ஒன்றும் அமைத்துள்ளனர். அதன் மூலம் நாடகக்குழு, பூக்கட்டுதல், அழகு நிலையம் நடத்துதல் (பியூட்டிபார்லர்) போன்ற செயல்பாடுகளில் இறங்கிச் செயல்பட்டு வருகிறார்கள். அதன் மூலம் அவர்கள் பொருளாதார நிலையிலும் மேம்பட்டு வருவதையும் பெருமையுடன் கூறுகிறார்கள். " **77**

**நாடகக்குழு**

கண்ணாடிக்கலைக்குழு என்ற பெயரில் ஒரு நாடகக்குழுவை அமைத்துள்ளார்கள். அதற்குப் பயிற்சியாளராக அ.மங்கை, மீனா கிருஷ்ணசாமி போன்றோர் இருக்கிறார்கள். அக்குழுவே இந்தியாவிலேயே முதன்முதல் அமைக்கப்பட்ட அலிகள் நாடகக் குழுவாகும்.

**முதல் நாடகம்**

'மனிதன் அழைப்பு' இந்த நாடகத்திலே அலிகள் என்றால் யார்? சமூகம் அவர்களை எப்படிப் பார்க்கிறது? சமூகத்தால் அவர்களுக்கு ஏற்பட்ட சிக்கல் என்ன? என்று இந்நாடகம் எடுத்துரைக்கிறது.

**இரண்டாவது நாடகம்**

'உறையாத நினைவுகள்' இந்நாடகத்தில் ஒரு சிறுவன் அலியாக மாறிய பிறகு அவனுக்கும், அவன் வீட்டிற்கும் இடையே நடக்கும் போராட்டம் பற்றியதாகும்.

அலிகள் மனவருத்தம் பற்றி,

"இச்சமூகத்தில் திருடர்கள், கொலைகாரர்கள், கொள்ளைக் காரர்கள், நல்லவர்கள் என்று எல்லோருக்கும் இடம் உண்டு. ஆனால் எங்களுக்கு மட்டும் சரியான இடம் கிடைக்கவில்லை என்ன செய்யறது... ஆனால் இன்று நாங்கள் முயன்று நல்ல இடத்தைப் பிடித்துள்ளோம். அதனால் கொஞ்சம் பரவாயில்லை"[78] என்று பிரியா பாபு என்ற அலிப் பெண் குறிப்பிட்டுள்ளார்.

**அழகுநிலையம் (பியூட்டி பார்லர்)**

அலிகளின் சுய உதவிக் குழுவால் ஏற்படுத்தப்பட்டது அழகுநிலையம். இதில் வெறும் அலங்காரம் மட்டும் செய்யப் படுவதில்லை. உடல் ஆரோக்கியத்திற்கான சிகிச்சையும் அளிக்கப்படுகிறது. அரோமோ தெரப்பி, ஆயுர்வேத மஜாஜ் போன்ற மருத்துவ அடிப்படையிலான பயிற்சிகளும் வழங்கப்படுகின்றன.

அந்தப் பயிற்சிகள் முழுக்க முழுக்க மருத்துவம் சார்ந்ததால், அப்பயிற்சி பெற்ற அலிகளுக்கு மருத்துவ மனைகளில் வேலை வாய்ப்பு கிடைக்கும் என நம்பிக்கையுடன் கூறுகிறார் பிரியா பாபு.

"எந்த விசயத்தில் பாகுபாடு பார்த்தாலும் மருத்துவத்தில் அப்படிப் பார்க்க முடியாது, 2006 ஜனவர் முதல் இரண்டு, மூன்று மருத்துவமனைகளில் வேலை தருவதாகச் சொல்லி இருக்கிறார்கள்"[79] என்கிறார்.

அவர்கள் திருமணம் செய்து குழந்தை பெற்றுக் கொள்ளும் வாய்ப்பு இல்லாததால் கல்வி கற்றுத் தொழில் துறைகளில் முன்னேறினால் நிலையான வருமானமும், சமூகத்தில் அங்கீகாரமும் கிடைக்கும் என எதிர்பார்க்கிறார்கள்.

அவர்களின் நம்பிக்கைப் பொய்த்துப் போகாமல் இருக்கவும், சிவசங்கரி இறைவனிடம் வேண்டிக் கொண்டது போலும்

"முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்"[80]

என்ற வாக்கிற்கு ஏற்பவும் அவர்கள் பலதுறைகளிலும் சிறந்து விளங்க வேண்டும். சமூதாயமும் அந்த நிலையை அவர்களுக்கு வழங்க வேண்டும் என்பதை உணர்கிறோம்.

**முடிவுரை**

கட்டுப்பாடு நிறைந்த குடும்பத்தில், அன்பும், கண்டிப்பும், சமச்சீரான அளவில் கொண்ட பெற்றோர்களால் வளர்க்கப்பட்ட சிவசங்கரி பெற்றோரின் துணையோடு, இசை நாட்டியம் போன்ற நுண்கலைகளையும், நீச்சல், சாரணர் இயக்கம், தேசிய மாணவர் படை என மன, உடல் வலிமை தரும் பயிற்சிகளையும் அதனால் அனுபவமும் பெற்றவர். பிள்ளைகளின் மேம்பாட்டிற்குப் பெற்றோரின் வழிகாட்டல் வெற்றி தரும் என்பதற்குச் சிவசங்கரியின் வாழ்க்கை ஒரு எடுத்துக் காட்டு என்பதை அறிகிறோம்.

சிவசங்கரியின் தந்தை பெரியோரை மதிக்கக் கற்றுக் கொடுத்த பாங்கும், போராட்ட உறவான மாமியார் உறவை இணக்க உறவாக அவர் அமைத்துக்கொண்டதையும் அறிகிறோம். எழுத்தாளரின் மனத்தாக்கம் படைப்பாக வெளிப்படும். அத்தாக்கம் தன் அனுபவமாக, புற அனுபவமாக அமைதல் உண்டு என்பதைச் சிவசங்கரியின் முதல் இரு சிறுகதைகளான 'அவர்கள் பேசட்டும்', 'உனக்குத் தெரியுமா?' ஆகியவை வெளிப்படுத்தியுள்ளன என்பது தெளிவாகிறது.

சிவசங்கரியின் படைப்புகளும் எழுத்துக்களும் சமுதாய மேம்பாட்டை மையமாகக் கொண்டவை என்பதை ஆய்வு எடுத்துரைக்கிறது. எழுத்துப் பணிமற்றுமன்றிச் சமுதாயக் களத்திலிருந்து தாம் எழுதியவற்றைச் செயல் வடிவமாகக் கண்டவர். பொருளாதார வறுமை மட்டுமன்றிக் கல்வி, அறிவு ஆகியவற்றின் வறுமையையும் போக்க வேண்டியது அவசியம் என்ற விழிப்புணர்வையும், ஆரோக்கியம், சுகாதாரம் ஆகியவற்றின் இன்றியமையாமையையும், இன்றைய சமுதாயத்திற்குத் தேவை என்பதைக் கண்டறிந்து செயல்படுத்தி வருபவர் சிவசங்கரி என்பது புலனாகிறது.

தனிமனிதன் தன்னை வளர்த்துக் கொள்ள முதலில் தன்னுள் உள்ள நிறை குறைகளை ஆய்ந்து தெளிதல் வேண்டும். அதனைச் சுய அலசல்

மூலம் தாம் பெற்ற அனுபவத்தாலும், தம் தோழியின் மனச் சிக்கலைப் போக்கிய நிலை தம் எழுத்துக்களில் பதிவு செய்துள்ளார்.

சூழ்நிலைகளை அறிந்து, சமூக சிந்தனையாளரின் தியாக உணர்வைப் போற்றுகின்றார். தாமும் அவ்வாறே அவ்வழியில் நடக்க விழைந்துள்ளமை வெளிப்படுகிறது.

சிவசங்கரியின் ஆன்மநேயம் போற்றுதற்குரியது. மனிதரல்லாத பிற சின்னஞ்சிறு உயிர்களின் கள்ளமில்லாச் செயலும் பண்பும் மனதை மென்மைப் படுத்துகிறது என்பதையும், இயற்கையைப் போற்றவும், பேணவும் வேண்டும் என்பதையும் அது மனதுக்கு மருந்தாகும் என்பதையும் தம் எழுத்துகளால் வெளிப்படுத்துகிறார்.

உலகில் அன்பு செலுத்துவதற்கு எந்த உயிர் என்றில்லை. உணர்வுகளைப் புரிந்துகொள்ளும் ஒவ்வொரு உயிரும் அன்பைப்பெற, வெளிக்காட்டத்தயங்குவதில்லை. அந்த உணர்வை சிவசங்கரி தாம் அனுபவித்த விதத்தில் தம் நூல்களை வாசிக்கும் வாசகர்களுடன் பகிர்ந்து மகிழ்ந்துள்ளமைத் தெரிகிறது.

விலங்குகளுக்கும் பயிற்சியளித்தால், அவை எத்தகைய பணியையும் நேர்த்தியுடன் செய்கின்றன என்பதைக் கண்தெரியாத மனிதருக்கும்; கை, கால் பயன்படாத சிறுவனுக்கும் உற்ற துணையாக இருந்த நாயின் செயல் மூலம் அறிகிறோம். இத்தகைய உயிர்களைப் பேணுவதும், பாதுகாப்பதும் மனிதனின் கடமை என்பதை 'நீலச் சிலுவை (புளூ கிராஸ்)' அமைப்பு செயல்படும் விதத்திலிருந்து புலப்படுத்துகிறார்.

இன்று ராணுவ வீரர்கள் சாதனையாகப் புரிந்து காட்டும் பாராசைலிங், ஸ்னார்கக்ளிங், ராஃப்டிங் போன்ற விளையாட்டுகளைத் துணிவுடன் செய்த அந்த திகிலான அனுபவத்தை வாசகர்களுடன் பகிர்ந்து கொண்டுள்ளார். இளைஞர்களும் இளம் பெண்களும் தெரிந்து, புரிந்து, பின்பற்ற வேண்டும் என்ற நோக்கில் எழுதப்பட்டது என்பதை உணர்கிறோம்.

சிவசங்கரியின் புதுமை நோக்கிற்கும், செயலுக்கும், பாரதியின் கவிதைகள் தூண்டுகோலாகவும், நல்ல உரமாகவும் அமைந்து அவரை அறிவியல் முறையில் சிந்திக்க வைத்து புதுமைப் பெண்ணாக மாற்றியுள்ளதை அவரின் எழுத்துகளால் அறிய முடிகிறது.

இந்திய நாட்டின் உயர்பதவிகளில் உள்ள தலைவர்களுடன், தான் ஒரு எழுத்தாளர் என்ற அணுகு முறையுடன் தொடர்பு கொண்டு தக்க தருணங்களில் மக்களுக்குக் கருத்துகளை வழங்கியதுடன் அவர்களது வாழ்க்கை மற்றவர்களுக்கு ஒரு பாடம் என்ற முறையில் புலப்படுத்தியுள்ளது தெளிவாகிறது.

சமூகச் சிந்தனையாளர், மேம்பாட்டாளராகிய பாபா ஆம்தேயின் வாழ்க்கையும் பணியும் சிவசங்கரியின் சமூகப்பணிக்கு முன்னுதாரணமாக அமைந்ததை அறிகிறோம். மற்றவர்களும் சமுகச்சிந்தனையை வளர்த்துக் கொள்ள வழி வகுக்கிறது.

அரவாணிகளான அலிகள் சமூகத்தில் வாழும் நிலையும் விளக்கியுள்ளார். அவர்கள் இன்று பெற்றுள்ள வளர்ச்சியும், மாற்றமும் மனிதன் மாற்றங்களைப் பெற்றால் தான் வளர்ச்சியடைவான் என்ற கோட்பாட்டுக்கு விளக்கமாக அமைந்துள்ளது தெளிவாகத் தெரிகிறது.

மானிடராய்ப் பிறந்தவர்கள் வாழ்க்கையைச் செம்மையுடன் வாழமுனைவதே வாழ்வின் பயனாகும் என்பதைச் சிவசங்கரியின் வாழ்வு வெளிப்படுத்துகிறது.

**சான்றெண்விளக்கம்**

1. சிவசங்கரி, என் கண்ணோட்டத்தில், ப, 53.
2. மேலது, ப, 49-50.
3. மேலது, ப, 54-55.
4. மேலது, பக். 54-55.
5. திருக்குறள், குறள் - 56.
6. சிவசங்கரி, என் கண்ணோட்டத்தில், ப, 129.
7. நாட்டுப்புறவியலில் மனித உறவுகள், ப, 78.
8. மேலது, அறிமுகவுரை, ப. X
9. சிவசங்கரி, என் கண்ணோட்டத்தில், ப, 72.
10. மேலது, ப, 70.
11. மேலது, ப, 73.
12. மேலது, ப, 131.
13. மேலது, ப, 133.
14. சிவசங்கரி, சன் தொலைக்காட்சியில் பள்ளி மாணவர்களுக்கு அளித்த பேட்டி, நாள்: 15/09/02, மாலை: 5.30-6.00.
15. சிவசங்கரி, என் கண்ணோட்டத்தில், ப, 162.
16. சிவசங்கரி, சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப, 10.
17. மேலது, ப, 10.
18. மேலது, ப, 24.
19. திருக்குறள், 666.
20. சந்திரசேகரன், முடிவெடுப்போம் சிக்கல்களை முறியடிப்போம், ப, 111.
21. மாணிக்கவாசகர், திருவாசகம், சிவபுராணம், வரிகள்.
22. சிவசங்கரி, சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப, 9.
23. மேலது, ப, 9.
24. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப, 22-23.
25. சிவசங்கரி, சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப, 9.
26. சிவசங்கரி, உரத்த சிந்தனை, பக்., 236-237.

27. மேலது, ப, 237.
28. மேலது, ப, 239.
29. மேலது, பக், 242-243.
30. மேலது, ப, 245.
31. சிவசங்கரி, புதிய கோணங்கள், ப, 136.
32. மேலது, ப, 137-138.
33. மேலது, ப, 139.
34. மேலது, ப, 139.
35. மேலது, ப, 141.
36. மேலது, ப, 142.
37. மேலது, ப, 174.
38. மேலது, ப, 175.
39. மேலது, ப, 176.
40. மேலது, ப, 178.
41. மேலது, ப, 180.
42. மேலது, ப, 174.
43. மேலது, ப, 191.
44. சிவசங்கரி, என் கண்ணோட்டத்தில், ப, 75.
45. மேலது, ப, 75.
46. மேலது, ப, 75.
47. மேலது, ப, 75.
48. மேலது, ப, 76.
49. சிவசங்கரி, புதிய கோணங்கள், ப, 01.
50. மேலது, ப, 6-7.
51. மேலது, ப, 9.
52. சிவசங்கரி, என் கண்ணோட்டம், பக்., 56-57.
53. மேலது, ப, 58.
54. மேலது, ப, 59.
55. மேலது, ப, 60-61.

56. சிவசங்கரி, புதிய கோணங்கள், ப. 12.
57. மேலது, ப, 13.
58. ஔவையார், பாடல், கலிப்பாடல் திரட்டு, ப. 50
59. தொல்காப்பியர், தொல்-களவியல், நூற்,4.
60. சீத்தலைச் சாத்தனார், மணிமேகலை, மலர்வனம்புக்ககாதை, வரி, 25.
61. மேலது, ப, 125.
62. மேலது, ப, 146.
63. காமராசன்.நா, கருப்புமலர்கள், ப,45
64. மேலது, ப,50
65. சிவசங்கரி, என் அன்னை செய்த பாவம், ப, 1.
66. மேலது, ப,
67. சிவசங்கரி, என் அன்னை செய்த பாவம், ப, 2.
68. மேலது, ப, 2.
69. மேலது, ப, 2.
70. மேலது, ப, 2.
71. மேலது, ப, 3.
72. மேலது, ப, 3.
73. மேலது, ப, 3.
74. அவள் விகடன், ஆண்களாகும் பெண்கள், பமேலது, ப, 26.
75. மேலது, ப, 25.
76. மேலது, ப, 26.
77. முத்தையா வெள்ளையன், கௌரவமான வாழ்வை நோக்கி, தினமணி கதிர், 6-11-05, ப, 26.
78. மேலது, 6-11-05, ப. 27.
79. மேலது, 6-11-05, ப. 27.

—— ∘○∘ ——

# தனிமனித மேம்பாட்டிற்குச் சிவசங்கரியின் சிந்தனைகள்

**முன்னுரை**

வாழ்க்கை என்பது இனிய கலையாகும். இக்கலையைக் கற்று வாழப்பழக வேண்டும். மனிதன் மனிதனாக வாழ சில வழிமுறைகளைப் பின்பற்ற வேண்டும். அந்த வழிமுறைகள் தன்னைச் சார்ந்த மனிதர்களிடமிருந்தும் நல்ல நூல்களின் வாயிலாகவும் கற்றுக் கொள்ள முடியும். மனிதன் சமுதாயத்திடமிருந்து பல நல்ல பழக்கங்களை மரபு வழியாகவே பின்பற்றி வருகிறான். பண்பாடு என்பது மனிதன், சமுதாயத்திடமிருந்து பெறும் செல்வமாகும். பண்பு நல்ல பழக்கவழக்கங்களால் வருவது. பழக்கவழக்கம் நல்ல எண்ணங்களால் உருவாவது. எண்ணங்கள் நல்ல நூல்களைக் கற்பதனாலும் நல்ல மனிதர்களின் உறவாலும் உண்டாக்கப்படுகிறது.

தனிமனித மேம்பாடு,

01. தனிமனிதனின் பண்புநலன் மேம்படுதல்

02. தனிமனிதனின் உடல்நலன் மேம்படுதல்

03. தனிமனிதனின் பொருளாதாரம் மேம்படுதல்

என்ற மூன்று நிலைகளில் வகைப்படுத்தப்பட்டு ஆராயப்படுகிறது.

**தனிமனிதனின் பண்புநலன் மேம்படுதல்**

சிவசங்கரியின் சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுவது என்ற நூல் மனிதப் பண்புகளை வளர்த்துக் கொள்ள உதவும் ஒரு கருவூலம் ஆகும். தனிமனிதன் தன்னிடம் உள்ள பண்புகளை ஆய்ந்தறிந்து வேண்டியவைகளைப் பேணி, வேண்டாத பண்புகளைக் குப்பைகளை நீக்குவது போல் நீக்கிக் கொள்ள வழிப்படுத்துகிறார்.

மனித வளர்ச்சிக்குத் தடையாக இருக்கும் பண்பும் அதன் வீரியம் குறித்தும், அவை மனிதனை எப்படிப் பாதிக்கின்றன என்ற வழிமுறைகளைப் பற்றியும் இந்நூலில் விளக்கிக் கூறியுள்ளார்.

**மனித வளர்ச்சிக்குத் தடையாகும் பண்புகள் :**

1. சோம்பல்
2. தாழ்வு மனப்பான்மை
3. உயர்வு மனப்பான்மை
4. எதிர்பார்ப்பு
5. தன்னிரக்கம்
6. மனச்சோர்வு
7. கோபம்
8. பொறாமை
9. சுயமதிப்பீடு
10. குழப்பம்

இவை போன்ற குணங்கள் மனிதனால் உணர்ந்து நீக்கப்பட வேண்டியவை யாகும்.

"மகாத்மா காந்தி கூறுகிறார். 'எனக்கு சமயத்தில் கோபம் வருகிறது. ஆனால் சதா என் குறைகளைக் குறைத்துக் கோபத்திலிருந்து மீறி வர முயல்கிறேன்' என்று.

வாழ்க்கை ஒரு தொடர்ந்த பரிசோதனை, போராட்டம். அதில் மனிதன் ஒவ்வொரு நிலையிலும் வெற்றி காணப் போராட வேண்டும். வெற்றி என்பது உடனேயே கிடைத்துவிடக் கூடியதல்ல. முயற்சி, பெருமுயற்சி வேண்டும். இதற்கு அடிப்படை மனப் பழக்கங்கள் ஆகும். வேண்டாத பழக்கங்களை நீக்கி, தன்னைத் தான் உணர்ந்து செயல்பட வேண்டும்.

"சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறமரிது. சத்தாகி என் சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே தேசோ

மயானந்தமே" என்று தாயுமானவர் பாடினார். அந்தச் சிந்தையை அடக்கும் திறன்தான் நம்மை நாமே அறிந்து கொள்ளல் ஆகும். இவ்வாறு நீக்க வேண்டிய குணங்களை நீக்கித் தன்னைத்தானே உணர்ந்து சுய மதிப்பீடு செய்து வாழ வேண்டும்.

சுய மதிப்பீட்டின் தேவை பற்றியும் அதனை வளர்த்துக் கொள்ளும் முறை பற்றியும் சிவசங்கரி கூறியுள்ளார்.

சுயமதிப்பீடு தன் வாழ்க்கைக்கு எப்படி உதவியது என்பதையும் விளக்குகிறார்.

சிவசங்கரி எந்த ஒரு விசயத்தையும் அணுகும் போதும் தக்க சான்றுகளை எடுத்துக் காட்டுதல் சிறப்பிற்குரியதாகும்.

அவரின் கட்டுரையைப் படிக்கின்றவர்கள் தங்களுக்காவே, இக்கருத்தை ஆசிரியர் எழுதுகிறார் என்ற உணர்வைப் பெறுகின்றனர். அத்துடன் நல்ல கருத்தானால் ஏற்றுக் கொள்ளவும், சொல்லப்பட்ட கருத்து தன்னுடைய குணத்திற்கு எதிர் மறையாக இருக்குமானால் அதற்கு மாற்று அல்லது தன்னை மாற்றிக் கொள்ளும் வழிகளைக் கேட்டு அறிந்துகொள்ளுகின்றனர்.

### 1. சோம்பல்

தனிமனித வளர்ச்சிக்குத் தடையாக முதலில் நிற்பது சோம்பல். இது குறித்து ஜானகி என்ற பெண் வருந்துதல் பற்றிச் சிவசங்கரி எழுதுகிறார்.

ஜானகி திருமணமாகி, பத்து மாதங்களே ஆன பெண். அவர் தன்னிடம் சோம்பல் தன்மை வளர்ந்துவிட்டது. அதனைப் போக்க வழிநாடுகிறார்.

வேலை செய்யாமல் சோம்பி இருத்தல், வம்பு பேசிச் சிரித்தல் போன்ற பழக்கங்கள் வளர்ந்துவிட்டது.

“தன் அம்மாவிற்கு நலம் விசாரித்துக் கடிதம் கூட எழுத முடியவில்லை. இந்தச் சோம்பல் தன்மையிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள என்ன செய்ய வேண்டும் என்று கேட்கின்றார். நான், நல்ல முறையான பழக்க வழக்கமுடைய பெண்ணாக விளங்க என்ன செய்ய வேண்டும் என்று கேட்கின்றார்.”[1]

இந்த நிலை பொதுவாகப் பெரும்பான்மையான மனிதர்களிடம் காணப்படுகிறது.

**வெளி நாட்டவரின் வியப்பு**

ஒருமுறை வெளிநாட்டவர் ஒருவர் சிவசங்கரியைப் பார்த்து வியப்போடு கேட்ட கேள்வி.

“உங்கள் நாட்டில் எந்த இடத்திலும் எந்த நேரத்திலும் கும்பல் கும்பலாய் மக்கள் நின்று வெட்டியாய் பேசிப் பொழுதைக் கழிக்கிறார்களே, இது எதற்காக? இப்படி வீணடிக்கும் நேரத்தை ஆக்கப் பூர்வமாகச் செலவழித்தால் தன்னையும், நாட்டையும் எல்லா விதங்களிலும் உயர்த்திக் கொள்ளலாம் என்பதை அவர்கள் ஏன் மறந்து போகிறார்கள்? நேரத்தின் அருமை உணராமல் உங்களில் பலர் இருக்கிறார்களே இது ஏன்?”[2]

இக்கருத்து எல்லோராலும் ஏற்றுக் கொள்ளக் கூடிய ஒன்றாகும். பொழுதை வீணடிப்பதும், சோம்பலாக இருப்பதும் ஏன்? என்பதை அறிதல் வேண்டும்.

“பசி, அயர்ச்சி, கோபம், ஏக்கம், சரி, தவறு என்று நம் இதர உணர்ச்சிகளை அடையாளம் காட்டுவது போல நேரத்தை வீணடிக்கின்றோமா! சோம்பலாக இருக்கின்றோமா என்று தம் புத்தியை உபயோகித்து உணரக் கற்றுக் கொண்டால் வாழ்க்கையில் முன்னேறுவது எளிது என்கிறார்கள் உளவியல் நிபுணர்.”[3]

**ஒரு செயலின் அவசியம்**

ஒரு காரியத்தின் தேவை அதிகமாக இருக்கும் நிலையில், ஒரு மனிதன் அதனைக் கட்டாயம் செய்தே தீருவான். அப்படி இல்லையென்றால் அந்தக் காரியம் முக்கியமானது இல்லாமல் இருக்கலாம். அல்லது அதன் தேவை குறைந்து இருக்க வேண்டும்.

ஒன்றைச் செய்ய வேண்டும் என்ற ஆர்வம் தீவிரமாக இருந்தால், தானே நேரத்தைத் தேடிப்பிடித்துக் கொண்டு செயல்பட்டுவிடுவர் என்கிறார் ஜே.கிருஷ்ணமூர்த்தி.[4]

**உணர்வுகளைக் கையாளுதல்**

மனிதன் தன் உணர்வுகளைக் கையாளும் திறனை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

தன்னால் எது முடியும் முடியாது என்பதை உணர்வதும், தடுப்பதும், அழிப்பதும் தன்னால் மட்டுமே முடியும் என்பதைப் புரிந்து செயல்பட வேண்டும்.

நாள்தோறும் நடைமுறையில் இயல்பு வாழ்க்கைப் பாதிக்கப் படாத நிலையில், புத்திக் கூர்மையுடன் செயல்பட்டு நடத்தல் வேண்டும். இவை தனிமனிதனை மேம்படுத்தும் பண்பாகும். சோம்பலைப் போக்கி, எந்த ஒரு காரியத்தையும் ஆர்வத்துடன் செய்ய வேண்டும். ஈடுபாட்டுடன் செய்யும் போது மனம் ஒன்றிச் செயல்படும், அச்செயல் முழுமை அடைவதுடன் சிறப்பாகவும் அமையும்.

“அழுக்கானதை உடனே சுத்தப்படுத்துதல், கிழிந்ததைத் தைத்தல், உடைந்ததை சீர்படுத்துதல், வாங்கினதைத் துடைத்து கோளாறு இல்லாமல் வைத்துக் கொள்ளுதல், எல்லாவற்றையும் விட முக்கியமாய் பயனற்றவைகளைச் சேர்த்து வைக்காமல் உடனுக்குடன் தூக்கி எறிதல் ஆகியன கட்டாயம் நினைவில் கொண்டு செயல்பட வேண்டிய பழக்கம்” என்கிறார் சிவசங்கரி.”[5]

**செயல் திட்டம்**

எந்த ஒரு காரியத்தையும் சிறப்பாகச் செய்ய வேண்டுமென்றால் அதற்கு முதலில் திட்டமிடல் வேண்டும்.

சின்ன காரியமோ, பெரிய செயலோ எதுவானாலும் நினைத்துப் பார்த்து தேவைப்பட்டால் குறித்து வைத்து நிறைவேற்றுதல் வேண்டும். இப்படிக் காரியத்தைச் செய்ய நிறைய நேரம், கூர்மையான மூளை என்று எதுவும் தேவையில்லை. செய்ய வேண்டும் என்ற மன உறுதி இருந்தால் போதும்.

லாவண்யா என்ற பெண்ணை முன்னுதாரணமாகக் காட்டுகிறார் சிவசங்கரி.

லாவண்யாவும், அவள் கணவரும் கூட்டாக அட்டைப் பெட்டி தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்றை நிர்வகிக்கிறார்கள். தயாரிப்பு, வியாபாரப் பிரிவுகளைக் கணவர் மேற்பார்வை பார்க்க, நிர்வாகப் பொறுப்பை லாவண்யா ஏற்றிருப்பதால், காலையில், ஆறு மணிக்கு எழுந்திருந்து வீடு, புருஷன் குழந்தைகள், தோட்டம் என்று எல்லாவற்றையும் கவனித்துவிட்டு, காலை ஒன்பதரை மணிக்கு அலுவலகத்திற்குப் புறப்பட்டு தொழிற்சாலைக்கு வருபவள் மீண்டும் வீடு திரும்ப மாலை ஐந்தரை மணி ஆகிவிடும். வீட்டுக்குவரும் விருந்தாளிகள், வெளியில் போகும் வேலை, குழந்தைகளுக்குப் பாடம் சொல்லித்தருதல் என்று ஒன்று விடாமல் அத்தனையும் செய்து முடித்து வீட்டையும் தன்னையும் எப்போதும் பளிச்சென்று வைத்துக் கொண்டிருக்கிறாள். அதற்கு லாவண்யா கூறும் திட்டமிடுதல் தான் காரணம், என்கிறார் சிவசங்கரி.[6]

**வேலைக்கான திட்டம்**

ஒவ்வொருவரும் தான் செய்யும் வேலைகளுக்கான திட்டமிடல் பற்றிக் குறிப்பிடுகிறார் லாவண்யா,

1. நாள்தோறும் செய்யும் வேலை.

2. பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை செய்யும் வேலை.
3. மாதம் ஒரு முறை செய்யும் வேலை.
4. ஆறுமாதத்திற்கு ஒரு முறை செய்யும் வேலை.

என பிரித்துக் கொள்ள வேண்டும்.

இப்படித் திட்டமிட்டுச் செயல்படுவதுடன் லாவண்யா பொதுவாக, குடும்பத்துக்குத் தேவையான செயலாகச் சிலவற்றையும் செய்கிறார்.

குடும்பத்தினருடன் கோயிலுக்குச் சென்றுவருதல், குழந்தைகளை அவர்கள் உடல் நலத்தை ஆரோக்கியத்தைக் கவனித்தல், நாவல் படித்தல், புதுப் பாடல் கற்றுக் கொள்ளல், வாரம் இரு முறை ஜெர்மன் மொழி கற்றல், நண்பர்கள் உறவினர்கள் வீடுகளுக்குச் சென்று வருதல் என்று எல்லாவற்றையும் மகிழ்வுடன் செய்து நிறைவோடு வாழ்கிறாள் என்கிறார் சிவசங்கரி.[7]

**லாவண்யா நேரத்தைக் கையாளும் முறை**

ஒரு நாளைக்கு மொத்தம் *24* மணி நேரம். இதைச் செயல் திறனுக்காக வகைப்படுத்துகிறார்.

| | |
|---|---|
| ஒரு நாளின் மொத்த நேரம் | *24* மணிநேரம் |
| தூங்க | *8* |
| அலுவலகம் சென்றுவர | *6* |
| சாப்பிட அரட்டை அடிக்க | *4* |

மீதம் உள்ள ஆறுமணி நேரத்தில் எத்தனை காரியங்களைச் சரியாகச் செய்யலாம். மனதில் உறுதியும் திட்டமும் இருந்தால் எல்லாவற்றையும் நேர்த்தியாக அழகாகச் செய்து முடிக்கலாம் என்கிறார்.

திறமைசாலியாகத் திகழத் திட்டமிடுதலுக்குப் பக்கபலமாக இருப்பதும், அதற்கு அடுத்தபடியாக இடத்தைப் பெறுவது பொறுமையும், பராமரிக்கும் குணமும் ஆகும். லாவண்யாவின் திட்டமிடல், செயல்திறன் ஆகிய இரண்டும் போற்றுதற்குரியதாகும்.

## 2. தாழ்வு மனப்பான்மை

ஒருவர் தன்னிடம் உள்ள ஒரு குறையைப் பெரிதாக நினைத்து, அந்தக் குறை காரணமாகத் தன்னை மற்றவர் ஒதுக்குவதாகவும், தன்னை மட்டமாக நடத்துவதாகவும் எண்ணி தன்னைத்தான் தாழ்த்திக் கொள்ளும் நிலையே தாழ்வு மனப்பான்மை ஆகும்.

### சுந்தர்ராஜனின் எண்ணம்

இத்தகைய எண்ணம் கொண்டவர் சுந்தர்ராஜன். இவர் ஒரு பட்டதாரி இளைஞர். ஒருமுறை இலக்கிய விழா ஒன்றில் சிவசங்கரியைச் சந்திக்கின்றார். அவரிடம் கையெழுத்து வாங்க முனைந்து தன்னுடைய நோட்டை நீட்டுகிறார். சிவசங்கரி நோட்டைப் பெற்றுக் கொண்டு அவர் முகத்தைப் பார்த்து விட்டு கையெழுத்திட்டு அவருக்குக் கொடுத்து விடுகிறார். நூற்றுக் கணக்கானோர் கூடி இருக்கும் இடத்தில் ஒவ்வொருவரிடமும் பேச முடியாத சூழ்நிலையில் இருப்பதைச் சுந்தர்ராஜன் தவறாகப் புரிந்து கொள்கிறார். சிவசங்கரி தன்னிடம் பேசாததற்குக் காரணம் தன்னுடைய அவலட்சணமான முகத்தைக் காணப் பிடிக்காமல்தான் என்று நினைக்கிறார். அதனால் இந்த மன நிலையை வெளிப்படுத்திச் சிவசங்கரிக்கு ஒரு கடிதமும் எழுதுகிறார்.

“இலக்கிய வட்டத்தில் உங்களைச் சந்தித்தேன். நீங்கள் என்னிடம் முகம் கொடுத்துப் பேசவில்லை. நீங்கள் விட்டேத்தியாக நடந்துகொண்டதன் காரணம் என் அவலட்சணமான தோற்றம்தானே? பெங்களூர் குடமிளகாயாக, முகத்துக்குச் சற்றும் பொருந்தாத என் பெரிய மூக்கைப் பார்த்து அருவருத்துத்தானே உடனே தலையைக் குனிந்து கொண்டீர்கள்? உங்களைச் சொல்லிக் குற்றம் இல்லை. ஏனென்றால், எனக்கே என்னைக் கண்டால் பிடிக்காது. அத்தனை பேரின் சீண்டல்களையும் பொறுத்துக் கொண்டு கல்லூரிப்படிப்பை முடித்து விட்டேன். இருந்தாலும் வேலைக்குப் போக வேண்டும் நாலு பேருடன் பழக வேண்டும் என்கிற நினைப்பே எனக்குப் பயத்தைத்

தருகிறது. என்னைப் போன்ற கோர சொரூபிகள் எத்தனை சீக்கிரம் மடிந்து போகிறோமோ, அவ்வளவு நல்லது...."[8] என்று தன் மனநிலையைக் குறிப்பிட்டுள்ளார்.

**மனித உடலில் உள்ள குறைபாடுகள்**

இந்த உலகில் குறை இல்லாதவர் யாரும் இல்லை. ஊனம் என்று சொல்ல முடியாவிட்டாலும் கறுப்பாக, குள்ளமாக, உதடுகள் தடிமனாக, மிகவும் பருமனாக இப்படி எத்தனையோ வகைகள் வேறுபட்டு காணப்படுகின்றன.

கண்ணாடி அணிந்து கொள்வது ஒரு நாகரிகமாக இருப்பதால் பார்வை குறை உடையவர்கள் கண்ணாடி அணிவதைக் குறையாகக் கொள்வதில்லை.

காது கேளாமல், செவிக் கருவி பொருத்தப்பட்டால் அது குறையாகப் பெரிதுபடுத்திப் பேசப்படுகிறது.

ஒரு விஷயம் இயல்பாகிப் போவதனாலேயே அது எல்லோராலும் முணுமுணுப்பில்லாமல். கண்ணாடி அணிதல் போன்று ஏற்றுக் கொள்ளல் ஆகிறது.

அதைப் போல ஒரு மனிதரிடம் உள்ள குறை சமூகத்தினரால் ஏற்றுக் கொள்ளப் பழகிவிட்டால் அது பெரிதாகப் பேசப்படுவதில்லை. மாறாக எல்லோராலும் வித்தியாசமாகப் பார்க்கப்படுகையில் அதனை ஏற்றுக் கொள்ளப்பழக வேண்டும் என்று சிவசங்கரி கூறியுள்ளார்.

**வழிகாட்டும் கடிதம்**

சுந்தர்ராஜனுக்குச் சிவசங்கரி பதில் கடிதம் எழுதுகிறார். அவருக்குள், ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்தி, அவரின் தாழ்வுமனப்பான்மையைப் போக்க ஒரு கடமை உணர்வுள்ள மனிதராக நின்று வழிப்படுத்துகிறார் சிவசங்கரி.

"விகாரமாகப் பெரிசாக இருக்கும் எந்த உறுப்பையும் சின்னதாக அழகாக அமைக்க உடல் தோற்றமாற்று அறுவைச்சிகிச்சை (பிளாஸ்டிக் சர்ஜரி) உள்ளது. ஆனால் அதற்காகும் செலவு மிக அதிகமாகும். உங்களுக்கு வசதி இருந்தால் இதைப் பற்றி சிந்தித்துப் பாருங்கள்"[9] என்று எழுதுகிறார்.

**சுந்தர்ராஜனின் மனமாற்றம்**

எட்டு மாதங்களுக்குப் பின் சுந்தர்ராஜன் தொலைபேசியில் அழைத்துப் பேசுகிறார். "நான் தோற்ற மாற்று அறுவை சிகிச்சை செய்து கொண்டேன் (பிளாஸ்டிக் சர்ஜன்). நிபுணர் ஒருவரைச் சந்தித்து, மூக்கைச் சின்னதாக்கிக் கொண்டு, தழும்பு துளி கூடத் தெரியாமல் முகம் பார்க்க லட்சணமாக இருக்கிறது. இப்போது அப்பாவின் கம்பெனியிலேயே சேர்ந்து ஒரு மாதமாக வேலை பார்க்கிறேன். தாங்கள் கூறியது போல் வாழ்க்கை ரசிக்கக் கூடியதாக இருக்கிறது என்று எழுதுகிறார்."[10]

**தாழ்வு மனப்பான்மையைப் போக்கும் வழி**

தன்னம்பிக்கை, வாழ்க்கையில் உற்சாகம், மனிதாபிமானம் ஆகிய பண்புகளை வளர்த்துக்கொள்வதன் மூலம் தாழ்வுமனப்பான்மையைப் போக்கிக் கொள்ளலாம்.

இது என் வாழ்க்கை, இதைச் சந்தோஷமாகவோ துக்கமாகவோ வைத்துக் கொள்வது என் கையில் தான், என் கையில் மட்டும் தான் இருக்கிறது. கோபம், ஆத்திரம், பொறாமை, தாழ்வுமனப்பான்மை, சுயபச்சாதாபம் போன்ற தேவையற்ற உணர்ச்சிகளுக்கு அடிமையாகிக் கண்டிப்பாய் என்னை நானே வேதனைக்குள்ளாக்கிக் கொள்ளமாட்டேன். இது உறுதி என்று சங்கல்பம் கொள்வதுடன் ஒவ்வொரு நாள் விடியும் பொழுதிலும், இரவு உறங்கும் முன்பும் மறக்காமல் சொல்லிக் கொள்ள வேண்டும் என்கிறார் சிவசங்கரி.[11]

இந்த உறுதி ஒவ்வொரு தனி மனிதனும் வாழ்வில் எடுத்துக்கொள்ளும் விழிப்புணர்வாகும் என்பது தெரிகிறது.

### 3. உயர்வு மனப்பான்மை

மனித முன்னேற்றத்திற்கு மனம் முக்கிய காரணமாகிறது. மனம் என்ன நினைக்கிறதோ அதுவே செயலாக மாறுகிறது. தாழ்வுமனப்பான்மை மனிதனை வளரவிடாமல் தடுக்கிறது என்றால். உயர்வு மனப்பான்மை பலரிடமும் வெறுப்பையும் துன்பத்தையும் சேர்த்து மேம்பாட்டினைத் தடையாக்குகிறது.

இதற்கு அடிப்படைக் காரணம் 'தான்' என்ற எண்ணம், பரம்பரைப் பெருமை, ஜாதி, படிப்பு, பணம், பதவி, அழகு, அறிவு போன்ற காரணங்கள் ஆகும். இந்தப் பண்பு கர்வம், அகங்காரம், திமிர் என்ற பெயர்களையும் பெற்றுத் தருகிறது.

லோகநாதன் பள்ளி இறுதி ஆண்டு படிக்கின்ற போது தந்தையை விபத்தில் பறிகொடுத்தவர். தந்தை பழக்கடை வைத்திருந்தார். பழங்கள் ஏற்றிச் சென்ற இடத்தில் விபத்து நடந்து அதில் இறந்துவிட்டார்.

தாய் லோகநாதனைத் தந்தை பார்த்து வந்த பழக்கடையை எடுத்து நடத்த கேட்டுக் கொண்டார். ஆனால் லோகநாதன் மறுத்துவிட்டார், காரணம் லோகநாதன் தான் பள்ளி இறுதி வகுப்புவரை பயின்றவன் என்ற உயர்வு எண்ணம்.

"பழக்கடைப் பொறுப்பை நா எடுத்துக்கறதா! அய்ய...! அப்பாரு உக்காந்தாருன்னா அவரு படிக்கல - அதான்! நம்மால முடியாதும்மா அதுக்கு வேற ஆளப்பாரு" என்று மறுத்துவிட்டான்.

மகனைக் கெஞ்சிப் பார்த்தும் பயனில்லாமல் கடையை மூத்த மருமகனுக்கு விற்று விடுகிறாள் லோகநாதனின் தாய்.

லோகநாதனின் வாழ்க்கைக்கு வருமானம் ஏதுமின்றி இறுதியில், தாயம்மாள் வீட்டு வேலைகள் செய்கிறாள். லோகநாதன் வேலை இல்லாமல் இருப்பதறிந்து தாயம்மாளின் முதலாளியம்மாள் அவனுக்குக் கார் ஓட்டக் கற்றுக் கொடுத்து ஒரு வேலையையும் வாங்கித் தருகிறார்.

கார் ஓட்டுநர் பணியை ஏற்றுச் சவாரி சென்றான் லோகநாதன். ஒரு துணிக்கடை நிறுவனத்திற்குப் பெண்களை ஏற்றிச் சென்றான். அங்கு அவர்கள் லோகநாதனைக் கொண்டு வந்த பொருள்களை இறக்கி வைக்கச் சொல்லியுள்ளனர்.

லோகநாதன் அந்த வேலையைச் செய்யாமல் நா என்ன வேலைக் காரனா? ஓட்டுநர் என்றால் ஒரு மதிப்பு வேண்டாமா? இன்னைக்கு இதச் செய்யச் சொல்றவங்க, நாளக்கி செருப்பைக் கொண்டானுச் சொல்ல மாட்டாங்கன்னு என்ன நிச்சயம்? நான் எதுக்கு இதெல்லாம் செய்யனும் தலையெழுத்தா என்று வேலையை விட்டுவிட்டு வந்துவிட்டான். இன்றும் லோகநாதன், தான் பள்ளி இறுதி வகுப்பு வரை படித்ததையே பெரிதாகக் கருதி உயர்ந்த எண்ணம் கொண்டு வேலை இல்லாமல் இருக்கிறான். பெற்றவள் வயதான காலத்தில் சம்பாதித்துச் சோறுபோட, எதைப் பற்றியும் கவலைப்படாமல் என்ன யாருனு நினைச்சிங்க என்று பெருமை பேசித் திரிகிறான்.[12]

**பரம்பரைப் பெருமை**

கண்ணன் என்பவன் மிராசுதார் குடும்பத்தில் பிறந்தவன். பரம்பரைப் பெருமையில் கர்வம் கொண்டவன் கல்லூரியில் உடன் பயிலும் மாணவர்கள் மாலை நேரத்தில் தட்டெழுத்து, சுருக்கெழுத்து போன்ற பயிற்சிகளைக் கற்றுக் கொள்ளச் செல்கின்றனர். கண்ணன் அவர்களைப் பார்த்து வெறும் பெருமை பேசுகிறான்.

நா மிராசு பரம்பரைடா... எங்க தாத்தா ராவ் பகதூராக இருந்தவர். தெரியுமா? வாசல்ல நாலு பீட்டன் சோக் வண்டி நிற்கும்.. வெள்ளைக்காரன் பார்ட்டி கொடுத்தா முதல் விருந்து அழைப்பு எங்க வீட்டுக்குத்தான் வரும். அப்படிப்பட்ட நானாவது டைப் கத்துக்கிட்டு, டைப்பிஸ்டாகவா வேலை பார்க்குறது? என்று பேசுவான்.

கண்ணனுக்கு வங்கியில் பெரிய அதிகாரி ஆக வேண்டும் என்ற கனவு. அது மனதில் எப்போதும் இருந்து கொண்டிருந்தது. ஆனால் படிப்பு சராசரிக்கும் கீழாகத்தான் இருந்தது. படிப்பு முடித்தவுடன்

ஊரில் உள்ள அத்தனை வங்கிகளுக்கும் விண்ணப்பங்கள் எழுதிப் போட்டு வேலைக்காகக் காத்திருந்தான்.

நான்கு வருடங்கள் காத்திருந்து அம்மாவின் தண்டச்சோறு என்று முணுமுணுப்பு தாங்கமாட்டாமல். ஒரு தனியார் கம்பெனியில் வேலைக்குச் சென்றான்.

சென்ற இடத்தில் பணத்தைக் கையாளுவதில் கவனக்குறைவால் மூவாயிரம் ரூபாய் குறைந்துவிட, கணக்கு சரிவராமல் போக வேலையிலிருந்து நீக்கப்பட்டான்.

மற்ற இடங்களில் சம்பளம் குறைவாகக் கொடுப்பது பற்றிக் குறைபேசி வேலையில் சேரவில்லை. அத்துடன் தனக்குப் பணம் குறைந்த காரணம் ஒரு கருப்புப் புள்ளியாக இருக்கிறது. அதை உணராமல் வேண்டாத உயர்வுமனப்பான்மை கொண்டு வீட்டில் இருக்கிறான்.

சந்தர்ப்பம், சூழ்நிலைகளுக்கு ஏற்பத் தன்னிலையை மாற்றி அமைத்து வாழத் தெரிய வேண்டும். வேண்டாத உயர்வு மனப்பான்மையால் வாழ்நாளை வீணாகக் கழித்துக் கொண்டிருக்கிறான் கண்ணன்.[13]

## பிறந்த வீட்டுப்பெருமை

ரமேஷ் என்பவர் தன் இரு தங்கைகளின் திருமணம் சீர்வரிசை இவற்றை நினைவில் கொண்டு எளிமையாக வாழ்க்கை நடத்தினார். வருமானம் மிகவும் குறைவு ரமேஷ்க்குத் திருமணம் நடந்தது. அருணா புகுந்தவீட்டிற்கு வந்தாள். வந்த இரண்டாம் நாளே அவளுக்கு வாழ்க்கை வெறுத்துவிட்டது.

எங்க வீட்டுல டைனிங் டேபில்லதான் சாப்பிடுவோம். இங்க தரைல தான் உக்காரணுமா? துணியெல்லாம் அழுக்காவுது!

ஐஸ்வாட்டர் குடிக்காம தாகமே அடங்கமாட்டேங்குது. சின்னதா ஒரு..பிரிஜ் வாங்கி வெச்சிருக்கக் கூடாதா?

ஐய! சினிமாவுக்கு நடந்தா போவாங்க? நான் வரலைப்பா! எங்கண்ணன் என்னை நடக்கவே விடாது. ஸ்கூட்டர்லேயேதான் கூட்டிட்டுப்போவும்.

ஆட்டுக் கல்லுலையா மாவு அரைப்பீங்க? ஒரே பழங்காலமா இருக்கீங்களே!

மனைவி கூறும் ஒவ்வொன்றையும் கேட்டு ரமேஷ் கூசிப்போனான்.

மனைவியை மகிழ்விக்க ரமேஷ் கடன்களை வாங்கி வீடு முழுவதும் பொருள்களை நிறைத்து வைத்தான். திருமணத்தை எதிர்ப்பார்த்து இருக்கும் தங்கைகளின் திருமணத்தை நிகழ்த்தாமல் கடனாளியாகி. தன் குழந்தைகளுக்கும் நல்ல படிப்பு, அடிப்படை வசதிகள் கூடச் செய்து கொடுக்க முடியாமல் கடனில் மூழ்கச் செய்தாள் அருணா.

அருணா ஒன்றும் பணக்காரவீட்டுப் பெண் அல்ல. நடுத்தரக்குடும்பம் தான். ஆனால் ஆடம்பரத்திற்காக அதிகம் செலவழித்து, எங்களைப் போல் உண்டா? என்று பெற்றவர்களால் வளர்க்கப்பட்ட நிலைதான் அருணாவின் உயர்வு மனப்பான்மைக்கு ஆணிவேராக அமைந்தது[14] என்கிறார் சிவசங்கரி.

உயர்வு மனப்பான்மைக்காக எடுத்துக்காட்டும் லோகநாதன், கண்ணன், அருணா போன்றோர் தங்களின் எண்ணங்களை மாற்றிக் கொள்ள வேண்டும், சூழ்நிலைக்குத் தக்க வாழப்பழகுதல் அமைதியான வாழ்க்கைக்கும் நிறைவான வாழ்க்கைக்கும் வழி வகுக்கும்.

### 4. எதிர்பார்ப்பு

வாழ்க்கையின் துன்பத்துக்குக் காரணம் ஆசை என்பார் புத்தர். எதிர்பார்ப்புகளும் அவை கிடைக்காத போது ஏமாற்றங்களும் துன்பத்தைத் தருவன.

ஆசை, நம்பிக்கை, கற்பனை போன்ற எண்ணங்கள் தனிமனிதனை, சின்ன அசைவிலும் கூட எதிர்பார்ப்புகளை ஏற்படுத்திவிடுகின்றன. அவற்றைச் சரியான பாதையில் அமைத்துப் பயன்படுத்தி வாழக் கற்றுக் கொள்ள வேண்டும். இல்லையென்றால் அவை எதிர்மறைவிளைவுகளை ஏற்படுத்தி விடும்.

இக்கருத்துக்கு அரணாகச் சிவசங்கரி சிலமனிதர்களின் வாழ்க்கையை எடுத்துக் காட்டுகின்றார்.

**ஸ்வர்ணாவின் அழகு**

ஸ்வர்ணா என்ற பெண் தங்கச் சிலை போன்ற பேரழகு கொண்டவள். அதனால் அவளைப் பெற்றவரும் மற்றவரும் பெருமை கொண்டாடினர்.

லேசாய் தொட்டாலும் சிவந்துவிடும் நிறம், வெல்வெட் கருப்பில் கண், கார் கூந்தலும், செதுக்கின மாதிரி மூக்கு, மொட்டுப் போன்ற வாய் இவற்றோடு தான் அழகு என்ற கர்வம் உடன் இருந்தவர்களும் அவள் அழகைப் பெரிதாக்கி கர்வத்தை ஆசையை, எதிர்பார்ப்பை அதிகப்படுத்திவிட்டனர்.

ஸ்வர்ணாவுக்கென்ன கிளிமாதிரி! அவனவன் க்யூவில் நின்று கொத்திக்கிட்டுப் போயிடமாட்டானா! - என்று அவள் மகிழப் பேசுவார்கள் அவளின் குடும்பத்தினர். ஸ்வர்ணாவுக்கு என்று சிறந்த கவனிப்பும் நடக்கும்.

போய்க் காற்றாடியைப் போட்டுக்கிட்டு உட்காருடித் தங்கம். நாளைக்குக் காரும், பங்களாவும், வேலைக்காரங்களுமா வாழப் போறவ, வீட்டு வேலை செஞ்சு தேயவாணாம்டியம்மா என்ற அவர்களின், இந்தப் பேச்சு போதை ஊட்ட, எதிர்பார்ப்புகளுடன் ஸ்வர்ணாவுக்குள் காலை மாலை என்று எப்போதும் கனவுகள் தான்!

இந்தப் பெண்ணால் தங்களுக்கும் விடிவு காலம் வரும் என்று பெற்றவர்கள் நம்பினர். அந்த எதிர்ப்பார்பினால் வருகின்ற வரன்களை

எல்லாம் ஏதாவது காரணம் சொல்லி விட்டுவிட்டனர். கடைசியில் ஸ்வர்ணாவின் வயது அதிகமானது தான் மிச்சம்.

ஆனால் ஸ்வர்ணா மாறவில்லை. அவளைப் பெற்றவர்கள் மாறிவிட்டார்கள். ஸ்வர்ணாவைப் பணக்காரர் யாரும் மணம் முடிக்க வரவில்லை. அதனால் பெற்றோர் ஸ்வர்ணாவின் அத்தை மகனை மணம் முடித்துக் கொள்ளும் படி வற்புறுத்த ஸ்வர்ணா அதே அகந்தையுடன் மறுத்துவிடுகிறாள்.

அவன் தெற்றுப்பல், குண்டன், தொப்பை வயிறு, இவன் வேண்டாம் என்று கூறுகிறாள்.

எப்பொழுதும் அவள் அழகைப் பற்றியே பேசி, வேறு எதிலும் மனதைச் செலுத்தவிடாமல் ஆசைகளைத் தூண்டிவிட்டவர்கள் ஸ்வர்ணாவின் பெற்றோர்கள். எதிர்பார்த்தது நடக்காத போது, அவளையே குறையும் சொல்ல ஆரம்பித்துவிட்டனர். நல்லவற்றை உண்மையை நிகழக்கூடியவற்றை எடுத்துக் கூறும் பெற்றோரே அவளைக் குற்றமும் கூறுகின்றனர்.

குழந்தைகளுக்கு நல்ல பண்புகளைப் போதிக்க வேண்டும். ஒன்று நடக்காத போது மாற்று வழியைத் தேடிக்கொள்ளுதலே சிறப்பாகும்.

"காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்"

ஆசை, சினம், கலக்கம் என்னும் இவை மூன்றின் அச்சம் நீங்குமானால் துன்பம் விலகும். சுவர்ணாவின் பெற்றோர் ஆசை கொண்டனர். தன் மகள் அழகால் தாங்களும் வசதியாக வாழலாம் என்று! ஆனால் அந்த ஆசையே அவர்களை அழித்துவிட்டது.[15]

**பாலாஜி**

பாலாஜி புகழ்பெற்ற பாடகியின் ரசிகன். பாடகியின் எந்தக் கச்சேரியையும் விட்டுவிட மாட்டார். முதல் வரிசையில் அமர்ந்து கச்சேரி கேட்டு மகிழ்வார். பத்திரிக்கைகளில் வரும் செய்திகளைச்

சேகரித்து ஆல்பம் தயாரித்தவர். அவர் பாடல் கேசட் தான் வீட்டு அலமாரி முழுவதும் நிறைந்து இருந்தன.

பலமுறை பாலாஜி பாடகிக்குப் பாராட்டிக் கடிதம் எழுதியுள்ளார். அதற்கு மரியாதை காரணமாகப் பாடகியும் ஒருமுறை பதில் எழுதினார்.

பாலாஜி மிகவும் மகிழ்ந்து பாடகியைச் சந்திக்க விரும்பினார். நல்ல ரசிகன் ஒருவனைச் சந்திக்கும் மகிழ்ச்சியில் பாடகியும் காத்திருந்து பாலாஜியுடன் பேசினார்.

பாடகியின் பேச்சு, அவள் மகிழ்வு இவற்றைக் கண்ட பாலாஜி பாடகி தன்னைக் காதலிப்பதாகவும், தன்னையே திருமணம் செய்து கொள்ளப் போவதாகவும் நம்பத் தொடங்கினார். கற்பனையை வளர்த்தார்.

இந்த நிலையில் பாடகிக்குத் திருமணம் என்று பத்திரிக்கையில் வந்த செய்தியைப் பார்த்து பாலாஜி அதிர்ந்து விட்டார்.

திருமணமா? என்னவளுக்கா? என்னைக் காதலித்தவள் இன்னொருவனை எப்படிக் கல்யாணம் செய்து கொள்வாள்? என்று கூறித் திருமண நாளன்று, அத்தனை பேர் முன்னிலையில் கத்தி ஆர்ப்பாட்டம் செய்யப் போலீஸ் வந்து பாலாஜியைக்கைது செய்தது. முதலில் சிறையிலும் பின் மூளை சரியில்லை என்று மருத்துவ மனையிலும் வாழும் நிலை ஏற்பட்டது.

தானாக ஒன்றை நினைத்து, அதை உறுதி செய்யாமல் வளர்த்துக் கொண்டார். அதில் துளியும் பொறுப்பு ஏற்காத பாடகியின் வாழ்க்கையையும் சிதைக்கப் பார்த்தார். பாலாஜியின் அளவுக்கதிகமான எதிர்பார்ப்பு, அதன் விளைவு ஏமாற்றம். அதனால் வந்தது துன்பம்.[16]

எதிர்பார்ப்புகள் நிஜத்தில் நடக்காத போது வரும் ஏமாற்றங்களுக்குத் தம்மைத் தயார் செய்து கொள்வதோடு,

உண்மையாகவே நிகழக்கூடியவை - நிகழாதவை என்று இரண்டு பிரிவுகளுக்குள்ள பேதத்தையும் உணர்ந்து, துவக்கத்திலேயே பேராசையான எதிர் பார்ப்புகளைக் கட்டுப்படுத்திக் கொள்வதுதான் எல்லாருக்கும் நல்லது என்கிறார்.[17]

**புவனா**

புவனா தன் பெற்றோரை விபத்தில் இழந்து அனாதையாய் நின்றாள். புவனாவின் அத்தை சுந்தரி. அவள் தன் பெண்களோடு புவனாவையும் பேணி வளர்த்தாள். தன் குழந்தைகள் பயிலும் பள்ளி, உணவு, உடை எல்லாம் எல்லோருக்கும் ஒரே மாதிரியாகவே அமைந்திருந்தது. ஒரே மாதிரியாகவே கவனிக்கப்பட்டாள்.

அன்பு, பாசம், வசதிகள் எதிலும் பாகுபாடு இல்லாமல் சமமாக வளர்க்கப்பட்டாள். தன் பெண்களுக்குச் செய்தது போலவே புவனாவிற்கும் இருபதாவது வயதில் திருமணம் நடத்தப்பட்டது.

ஆனால் புவனா திருமணத்திற்குப் பிறகு அத்தையைத் திரும்பிப் பார்க்கவில்லை.

பெற்ற தாய்க்கும் மேலாகப் போற்றி வளர்த்தவளை, கேட்பார் பேச்சைக் கேட்டுக் கொண்டு ஒதுக்கிவிட்டது நியாயமில்லையே? என்று சுந்தரியைச் சிவசங்கரி கேட்க, பதில் கூறுகிறார் புவனாவின் வளர்ப்புத் தாய் (அத்தை சுந்தரி).

வருத்தமாகத்தான் இருக்கு. மார்ல போட்டுண்டு வளர்த்த குழந்தையை இன்னிக்குக் கண்ணால பார்க்கக் கூட முடியலையேனு ஏக்கமாகத்தான் இருக்கு. ஆனா, அவ பேர்ல கோவம் இல்ல. எங்கயாவது நன்னா இருந்தாச் சரி.. ஏதோ தெரியாத்தனம்.. இதையெல்லாம் பெரியது பண்ணாம விட்டுடனம்.[18]

எத்தனை உண்மையான பேச்சு; பகவத் கீதையில் சொன்னது போல், ‘கடமையை மட்டும் செய்; பலனை எதிர்பார்க்காதே’ என்று வாழ்வதும் சுந்தரி மாமியின் பலங்கள், விவேகத்துக்கான காரணங்கள் ஆகும்.

இந்த அனுபவத்தை ஒவ்வொரு மனிதனும் பெற்றுக் கொள்ள வேண்டும் என்கிறார் ஆசிரியர்.

வள்ளுவன் சொல்லும் குறள் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

> "*பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்*
> *நன்மை கடலின் பெரிது.*"[19]

சுந்தரி எவ்விதப் பயனையும் எதிர்பாராமல் செய்தாள். அந்த உதவி கடலைவிடப் பெரியதாகும். சுந்தரியின் அண்ணன் மகள் அதனை உணரவில்லை.

வாழ்க்கையில் எதையும் அளவுக்கு அதிகமாக எதிர்பார்க்காமல் இருக்கப் பழக வேண்டும். குழந்தைகளையும் சின்ன வயது முதல் பழக்கப்படுத்த வேண்டும். அவ்வப்போதே நிகழும் நிகழ்வுகளை அப்படியே ஏற்றுக் கொள்ளும் விழிப்புணர்வையும் வளர்த்துக் கொள்ள வேண்டும் என்று சிவசங்கரி கூறுகிறார்.

ஒன்றைத் திட்டமிட்டு, அது நடக்காமல் போனால் அதனால் வரும் ஏமாற்றம் இயற்கையாகும். அதற்காகத் திட்டமிடுதலைக் கைவிடக் கூடாது. திட்டமிட்டுச் செய்ய வேண்டிய காரியத்தைக் கச்சிதமாகச் செய்ய வேண்டும். அதில் கிடைக்கும் பலனை ஒரே கோணத்தில் எதிர்பார்க்காமல் மாறாகவும் வரலாம் என நினைக்க வேண்டும்.

கல்லை எறிந்து பார்க்கிறோம். விழுந்தால் மாங்காய், போனால் கல்தானே என்பதோடு மட்டுமல்லாமல், உம் தலையிலும் விழுந்துவிடலாம் என்ற மூன்றாவது நிலையையும் எண்ணிப் பார்க்க வேண்டும் என்கிறார் சிவசங்கரி.

எனவே எந்தச் செயலிலும் நினைப்பது நடந்து விடுவது, நடக்காமல் போவது என்ற இரண்டு கோணங்கள் தவிர நினைக்காததும் நடக்கும் என உணர்ந்தால் சிக்கல் வராது.

ஒவ்வொரு ஏமாற்றமும் ஒரு பாடத்தைக் கற்றுத் தரும். இதில் விழிப்புணர்வுடன் செயல்பட்டு ஒரே மாதிரி, ஏமாற்றம் அடையாமல் துன்பப்படாமல் காத்துக் கொள்ளல் மனிதனின் அறிவாற்றலைப் பொருத்ததாகும்.

**பாண்டியன்**

பட்டப்படிப்பு படித்தவர் பாண்டியன். அவருக்கு வங்கியில் பணிபுரிய ஆசை. கைநிறையச் சம்பளம் பெற்று வசதிகளுடனும் வாய்ப்புகளுடனும் வாழ்க்கை வாழ வேண்டும் என்ற உயர்ந்த எண்ணம், எதிர்பார்ப்பு. ஆனால் அது கிடைக்காத போது. எதிர்பார்ப்பு நிறைவேறாத போது இடிந்து உட்கார்ந்து விடாமல் பெற்றவர்களுக்குச் சுமையாகாமல் மாற்று வழி தேடிக்கொண்ட புத்திசாலி.

அரசு வேலை கிடைக்காமல் தனியார் நிறுவனங்களில் கிளார்க், மருத்துவ விற்பனையாளர் பிரதிநிதி போன்ற தற்காலிக வேலைகள் உடனடியாகக் கிடைக்கும். ஆனால் சம்பளம் ஒரு மாதம் கிடைக்கும், மூன்று மாதங்களுக்கு கிடைக்காது. சிந்தித்துச் செயல்படுகிறார். முடிவு எடுக்கிறார். திட்டமிட்டுச் செயல்படுகிறார். வெற்றிக்கனியைப் பெறுகிறார்.

**நாஸே**

நாஸே *NAESY - (National Association Educated Employed youth) -* அமைப்பில் சேரும்படி இளைஞர்களுக்கு விளம்பரம் செய்யப் பட்டுள்ளது. அந்தச் செய்தியைப் பார்க்கிறார் பாண்டியன்.

விளம்பரச் செய்தி தொடர்பாக யாரை அணுகவேண்டும் என்று அறிந்து அந்த அமைப்பில் தன்னை உறுப்பினராகப் பதிவு செய்து கொள்கிறார்.[20]

**சிற்றுண்டிக்கடை**

அந்த அமைப்பின் உதவியுடன் ஒரு சிற்றுண்டிக்கடை வைக்க முடிவு செய்கிறார். பட்டப்படிப்பு படித்தவன் பலகாரக்கடை வைப்பதா என்று ஏளனமாகப் பார்த்துக் கேலி செய்பவர் பேச்சைக் காதில் வாங்காமல், பாண்டியன் செய்ய வேண்டிய செயல்களில் ஈடுபட்டுப் பாடுபட்டார்.

**திட்டம்**

கடை அமைக்க ஆகும் செலவு மொத்தம் ரூபாய் பத்தாயிரம். இதில் நாஸே 90% சதவீதத்தை வங்கியில் பரிந்துரை செய்து பெற்றுத் தந்தது. தன்னுடைய முன்னேற்றத்திற்காகப் பாண்டியன் சார்பில் ரூ.1,000 வங்கியில் முன்பணமாகக் கட்டுகிறார். கடையை அமைக்கின்றார். 8 x 8 கடை, மூன்று சூட்டைத் தக்கவைக்கும் (ஹாட் ஃப்ளாஸ்க்குகள்) பாத்திரங்கள், ஒரு ரேடியோ அமைப்பின் மூலமாக வழங்கப்பட்டது. மற்றும் அடுப்பு, தட்டுகள், கண்ணாடிப் பாட்டில்கள், உணவுப் பொருள்கள் ஆகியவற்றைப் பாண்டியன் வாங்கிக் கொண்டார். கடைக்குத் தேவையான பொருள்களைச் சேகரித்துவிட்டார். இதோடு நின்றுவிடாமல் மேலும் கடைக்குத் தேவையான மின்சாரத்தை மாநகராட்சியின் அனுமதியுடன் பெறுகிறார். தன் பொறுப்பில் பெறக்கூடியவை என்று எல்லாவற்றையும் திட்டமிட்டுப் பெற்றுக் கடை தொடங்கப்பட்டுவிட்டது.[21]

**கடையில் கிடைக்கும் பொருள்கள்**

கடையில் காப்பி, டீ, போர்ன்விட்டா, ஹார்லிக்ஸ், சமோசா, குளிர்பானங்கள் போன்ற உணவுப் பொருள்கள் கிடைக்கும் என எழுதி வைத்தார். இப்படி முறையாகத் திட்டமிட்டுப் பாண்டியன் செயல்பட்டதால் வருமானமும் நல்லமுறையில் கிடைத்தது. விரைவிலேயே வங்கிக் கடனை அடைத்துவிட்டார்.

**பாண்டியனின் கொள்கை**

பாண்டியன் ஒரு கொள்கையைக் கடைப்பிடித்தார். கடையில் வெற்றிலை பாக்கு, சிகரெட் போன்ற பொருள்கள் விற்கப்படுவதில்லை. காரணம் கூறுகிறார்.

இதெல்லாம் தப்பான பழக்கங்கள் என்று நான் நினைக்கிறேன். எனக்குத் தப்புன்னு படற விஷயங்களை மத்தவங்களுக்குக் காசு தான் முக்கியம்னு விக்கிறது மனுஷனுக்கு மனுஷன் செய்ற துரோகமில்லையா? என்கிறார்.

**நிரந்தர வருமானம்**

இப்படிக் கொள்கைகள் மட்டுமில்லாமல் நிரந்தரமான வாடிக்கையாளர்களும் சராசரியான மாத வருமானமும் பாண்டியனுக்குக் கிடைக்கிறது என்றால் அதற்குப் பாண்டியனின் ஒழுக்கமும் அயராத உழைப்பும் தான் காரணம். எத்தனையோ பேர் பள்ளி, கல்லூரிகளுக்கு அருகில் இப்படிக் கடைவைத்து போதைப் பொருள்களை விற்பனை செய்து இளம் பிஞ்சுகளின் வாழ்க்கையை வீணாக்குகிறார்கள். பாண்டியன் போன்ற நல்லவர்களும் இவ்வுலகில் கொள்கையோடு வாழ்கிறார்கள். இவரைப் போன்றோரால் உலகம் இயங்குகிறது. உண்டால் அம்ம இவ்வுலகம் என்ற முன்னோரின் புறப்பாடலை நினைவு கூர்கிறார்.

பாண்டியன் தன் கடையை ரூபாய் பத்தாயிரத்துக்குக் காப்பீடு செய்துள்ளார். அதற்காக ரூ.48 மாதத் தவணையாகக் (பிரிமியம்) கட்டி வருகிறார். மழை, தீ போன்ற இயற்கை சீற்றங்களிலிருந்து பாதுகாக்க விழிப்புணர்வுடன் செயல்பட்டுள்ளார்.

**செய்யும் தொழில்**

"செய்யும் தொழில் தெய்வங்க... என்னோட இன்றைய வளர்ச்சிக்குக் காரணம் அஞ்சு வருஷத்திற்கு முன்னால ஆரம்பிச்ச இந்தக் கடை தான், வசதியான வாழ்க்கை வந்திருக்கின்றதை ஓர் பக்கம்

வெச்சிக்கிட்டாலும், சாதாரண மத்த வேலைங்களைவிட இதுல சுவாரஸ்யம் அதிகம்னே எனக்குத் தோணுது. எத்தனை ஜனங்க... என்னென்ன அனுபவங்க" என்று கூறுகின்றார்.[22] இன்று வேலை இல்லை என்று கூறும் பல இளைஞர்களும் பாண்டியனைப் போல முயன்றால் நாடும் முன்னேறும் தனிமனிதரும் வறுமையின்றி வாழலாம்.

**நேர்மை**

பாண்டியன் நேர்மையானவர், நல்ல செயல்திறன் மிக்கவர். தொலைநோக்குப் பார்வையாளர். குறுக்கு வழியில் பணம் சம்பாதிக்க முனையும் மனிதர் கூட்டத்தில் பாண்டியன் போன்றோரை இன்றைய இளைஞர்கள் முன்னுதாரணமாகக் கொள்ள வேண்டும்.

வாழ்க்கையில் இது வேண்டும் என்ற ஆசைப்படுவது இயல்பு. நடந்தால் சந்தோஷம், நடக்காவிட்டால் அதற்கு மாற்று என்ன? என்று யோசிக்க வேண்டும். எனக்கு இதைச் செய்ய விருப்பம் என்பதும் என்னால் இது தான் செய்ய இயலும் என்பதும் வெவ்வேறானவை என்று கூறுகிறார் சிவசங்கரி.[23]

ஆசை, எதிர்பார்ப்பு இருக்க வேண்டும். அதோடு எதார்த்த நிலையும் வேண்டும். அதுதான் வாழ்க்கைக்கு வழியாகும். 'விரலுக்குத் தக்க வீக்கம்' என்ற பழமொழிக்கு ஏற்ப அமைத்துக் கொள்ள வேண்டும் என்பதைத் தக்கசான்றுகளுடன் எழுத்தாளர் கூறியுள்ளதை உணர்கிறோம்.

**5. தன்னிரக்கம்**

தன்னை யாரும் சரியாகப் புரிந்து கொள்வதில்லை. தன் தகுதிக்கு ஏற்ற வாழ்க்கை அமையவில்லை. தன் புத்திசாலித்தனத்துக்கு உகந்த பாராட்டுக்கிடைக்கவில்லை போன்ற ஏக்கங்கள் மனிதனை முழுதாக ஆக்கிரமித்து வருத்துவது தான் தன்னிரக்கம், இந்த எண்ணம் பலரிடம் காணப்படுவதை அவர்கள் பேச்சின் மூலம் அறியமுடியும்.

**தன்னிரக்கம் உருவாகக் காரணங்கள்.**

1. எதற்கும் அடுத்தவருடன் தன்னை ஒப்பிட்டுப்பார்த்தல்.
2. பொறுமை இன்மை.
3. எதையும் தவறாகப் புரிந்துகொண்டு வெளிப்படுத்துதல்.
4. தெளிவில்லாத சிந்தனை.
5. தன்னைத் தானே புரிந்து கொள்ளாதநிலை.
6. மற்றவருடன் சரியாகத் தொடர்பு கொள்ளத் தெரியாத நிலை.
7. அறியாமை
8. இரட்டைக் கண்ணோட்டம்.
9. உண்மையை எதிர்நோக்கத் தயக்கம்.
10. எந்த ஒரு விஷயத்தையும் அளவுக்கு மீறிப் பெரிதுபடுத்துதல்

மேற்கூறிய காரணங்கள் சேர்ந்தோ அல்லது தனித்தோ நின்று ஒரு மனிதனைத் தன்னிரக்க நிலைக்குக் கொண்டு செல்லும். இதில் எல்லா நிலைகளும் இருக்க வேண்டும் என்பதில்லை. ஏதாவது ஒன்று மட்டும் இருந்தால் போதும், அந்த மனிதர் தன்னிரக்க நிலையை அடைந்துவிடுவார் என்கிறார் சிவசங்கரி.[24]

மாதவன் பி.ஏ., பட்டதாரி தட்டச்சு, சுருக்கெழுத்துப் படித்து தனியார் நிறுவனம் ஒன்றில் பணியாற்றுபவர். விதவைத்தாயின் சம்பாத்தியத்தில் படிக்க வைத்து பணியில் சேர்ந்ததால் மாதவன் தன் தாயை தெய்வம் எனப் போற்றுகிறார்.

தன் அம்மா தேடிப் பார்த்த சாவித்திரி என்ற பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார். அவளும் நல்லவள் பி.ஏ., படித்த பெண். அரசு அலுவலகத்தில் பணியாற்றுபவள்.

மாதவன் சின்ன வயது முதல் வறுமையில் வளர்ந்தவன். ஆதலால், தன்னைப் பக்கத்து இருக்கை ஆளுடன் ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்வார். அதனால் ஏங்கும் குணத்தை வளர்த்துக் கொண்டார். அவனுக்கு ஆசைகள் அதிகம்.

அந்த ஆசையை தன் மனைவி மூலம் நிறைவேற்றிக் கொள்ள நினைத்தான். ஒருவருடத்தில் குளிர்சாதனப்பெட்டி, தொலைக்காட்சிப் பெட்டி, வெளியூர் சுற்றுப் பயணம் என்று திட்டமிட்டான்.

திருமணம் ஆகி ஒருவருடத்தில் குழந்தை பிறந்தது. குழந்தையை மாமியார் பார்த்துக் கொள்ள வேண்டிய நிலை வந்ததும் சிக்கலும் தோன்றியது.

மாதவனின் தாய் குறை கூறுகிறார். "காலை எட்டு மணிக்குப் போனால் நீ வீடு திரும்ப மாலை ஏழாகி விடுகிறது. வீட்டு வேலைகளைப் பார்த்து உன் பிள்ளைக்குப் பால், கொடுத்து, பீத்துணி கசக்கி, தூக்கி வைத்துக் கொண்டு நிற்க நான் என்ன உனக்கு வேலைக்காரியா?" என்று முணுமுணுத்தவள், பின்னர் வெளிப் படையாகப் பேசுகிறாள்.

மாதவனின் மனைவி, 'காலையில் எழுந்து அத்தனை வேலைகளையும் செய்து விட்டுத்தானே போகிறேன். உன் பிள்ளை என்று குறைகூறுகிறீர்களே. இக்குழந்தை உங்கள் பேரன், உங்கள் பிள்ளையின் மகன் தானே?' என்று பதில் பேசுகிறாள்.

சிக்கல் - மாதவனின் தாய், அக்கம் பக்கத்தவரிடம் இந்த வீட்டில் நான் சம்பளம் இல்லாத ஆயா என்று கூறி அழுகிறாள்.

மாதவனின் மனைவி சாவித்திரி, 'நான் வேலையை விட்டு விடுகிறேன்' என்று கூற அதில் மாதவனுக்கு உடன்பாடு இல்லை. மாதவனே முயன்று இருவரிடமும் பேசித் தீர்க்கக் கூடிய விசயம் தான். அதைச் செய்யாமல் மற்றவரிடம் கூறிப் புலம்பித் தீர்க்கிறான்.

சிவசங்கரி மாதவனை மனநலம் படித்த நண்பரிடம் அழைத்துச் செல்கிறார். ஆலோசனை பெற வைக்கிறார். நண்பர் மாதவனின் பிரச்சனை என்ன! அதன் அடிப்படை காரணம் என்ன! என்பதை ஆராய்ந்து விளக்குகிறார்.

தீர்வு, மாதவன் தன் மனைவி - அம்மாவிடம் மனம்விட்டுப் பேச வேண்டும். அவர்கள் இருவரும் நெருங்கிவந்து குடும்பத்தை நடத்த வேண்டும். அவர்கள் இருவரையும் இணைக்கும் வளையம் மாதவன் தான் என்பதை மருத்துவர் புரிய வைக்கிறார். அவர்கள் மூவரும் வளைந்து கொடுத்து, விட்டுக் கொடுத்துச் சென்றால் போதும் என்று விரிவாக அலசி ஆராய்ந்தவர் தெளிவுபடுத்தி அனுப்புகிறார்.[25]

மாதவன் போன்ற தன்னிரக்கம் மிக்கவர்கள் மற்றவரிடம் மனம் விட்டுப் பேசுதலே நல்ல மருந்தாகும். மற்றும் மாமியார் - மருமகள் விட்டுக்கொடுத்து அனுசரித்து நடந்தால் எல்லோரும் நலமுடன் வாழமுடியும். மருமகள் மாமியாரைத் தன் தாயைப் போலக் கருதிச் சின்னச் சின்னப் பாராட்டுரைகள் அவருக்குப் பிடித்த வகையில் ஏதாவது பொருள்கள் வாங்கித் தந்து பரிசளித்தல் சிறப்பு. குழந்தையுடன் மாமியாரையும் அன்புடன் நோக்கிச் சிறிது நேரம் அவருடன் பேசினால் மாமியார் மனம் மகிழும். தன்னை மருமகள் உயர்வாக நினைக்கிறாள் என்ற எண்ணம் அவருக்குத் தோன்றும். குற்றம் குறை அவர் மனதில் தோன்றாது.

மாதவனின் ஆசைகளும் நிறை வேறும். சிவசங்கரி மாதவனை மனநல நிபுணரிடம் அழைத்துச் சென்று, அவனுக்காக மேற்கொண்ட முயற்சிகளும் வெற்றி அடையும். கூட்டுக்குடும்பம் பிரிந்த தனிக்குடித்தன நிலையில் இருப்பவர்களுக்கு மாமியார் துணை பெரிய வரப்பிரசாதம். அதனை மாமியார் மருமகள் இருவரும் ஏற்று வாழ்தல் இருவருக்கும் நலமாகும்.

### 6. மனச்சோர்வு

மனித வாழ்க்கையில் சில நாட்கள் மனம் சோர்ந்து, எதிலும் ஈடுபாடு இல்லாமல், வெறுமையாகத் தோன்றுதல் இயல்பு. பலர் புலம்புவதும் உண்டு.

என்ன குடும்பம், என்ன உறவு மனிதர்கள் ஒன்றும் வேண்டி இருக்கவில்லை. எல்லோரும் சுயநலவாதிகள். நம்மை யார் புரிந்து

கொள்கிறார்கள்? எதற்காக இந்த வாழ்வைத் தொடர வேண்டும்? ஹூம்.... எதற்கும் அர்த்தம் இல்லை.

பட்ட காலிலே படும் என்ற நிலையில் இப்படி மேலே மேலே அடிகளாக விழுந்து கொண்டே இருந்தால் யாரால் தாங்க முடியும்? பைத்தியம் பிடிக்காத குறையாய் வாழ்வதனால் யாருக்கு என்ன லாபம்? போதும் சாமி... போதும், அனுபவித்த வரைக்கும் போதும் என்று உயிர் பிரிந்து விட்டால் நிம்மதி.....[26]

இப்படி பேசும் மக்கள் சமுதாயத்தில் இருக்கிறார்கள். இந்த நிலை பொதுவாக எல்லா மனிதர்களையும் ஒரு முறையேனும் ஆட்படுத்தி இருக்கும்.

இந்த நிலைக்கு காரணம் என்ன என்றால், இதை மருத்துவ நிலையில் மனச் சோர்வு என்பர்.

**மனச்சோர்வு என்பது**

கவலை, படபடப்புடன் கூடிய எதிர்பார்ப்பு, விரக்தி இவைகளிலிருந்து நிச்சயம் மாறுபட்டது.

சலனமே இல்லாமல் அடங்கிப்போய் சுயபச்சாதாபத்துக்கு ஆளாகி, தன் மேலும், தான் சார்ந்திருக்கும் சூழ்நிலையின் மேலும் சலிப்பு உண்டாகி, இனி யாராலும் சரி பண்ண முடியாதபடி எல்லாமே சீர்கெட்டுப் போய்விட தீவிர நம்பிக்கையுடன், தெளிவாகப் புத்தி செயல்படாமல், சுமையான ஓர் மந்த நிலைக்குத் தள்ளுவது தான் மனச் சோர்வு என்கிறார் சிவசங்கரி.[27]

இந்த மனச்சோர்வு இருவகைப்படும்.

1. நிரந்தாமானது
2. தற்காலிகம்

1. நிரந்தரமனச் சோர்வை மனோதத்துவ நிபுணர்கள் சிகிச்சையினால் தீர்த்துக் கொள்ள முடியும் என்கிறார்கள்.

2. தற்காலிக மனச்சோர்வு, ஆட்கொள்ளப்பட்ட தனிமனிதன் கையில் தான் உள்ளது.

**நிரந்தர மனச்சோர்வு**

விவேகானந்தன் என்பவர் இருபத்தெட்டு வயது இளைஞர். எந்தக் கெட்ட பழக்கமும் இல்லாதவர். மிகவும் அமைதியானவர். இவர் மனைவி, முதல் குழந்தையைப் பெற்றெடுக்க மகப் பேற்றுக்காகத் தாய்வீடு சென்றிருந்தார். விவேகானந்தன் நண்பர்களின் தூண்டுதலால் வேறு ஒரு பெண்ணிடம் பால் உறவு கொண்டார். அது அவர் மனதில் குற்ற உணர்வை ஏற்படுத்திவிட்டது.

மனைவி குழந்தையுடன் புகுந்தவீடு வந்து சேர்ந்தார். மனைவி கணவனிடம் நெருங்கும் போதெல்லாம், தொடும் போதெல்லாம் விவேகானந்தனின் குற்ற உணர்வு மேலோங்க அவர் விலகி விலகிச் சென்று மனச் சோர்வுக்கு ஆட்பட்டார்.

அவர் காதுக்குள் யாரோ நீ தப்புப் பண்ணினவன், அசிங்கமானவன் என்று சதா முணுமுணுக்கும் மாதிரியும், உடம்பில் வியாதி வந்துவிட்ட மாதிரியும் அருவருத்துப் போகச் செய்து, மனைவியை எந்த விதத்திலும் நெருங்க முடியாமல் அனைவரையும் வெறுக்க ஆரம்பித்தார். தனிமையை நாடினார், செய்த காரித்தை நினைத்து நினைத்து வெட்கி, குமைந்தார். அடிக்கடி வாய்விட்டு அழுதார். மொத்தத்தில் ரொம்ப சீக்கிரமே மனநோயாளி ஆனார். முதல் சில நாட்களில் குழந்தையைக் கவனிக்கும் மும்முரத்தில் அவர் மனைவி ஆழ்ந்திருந்தவள், பின்பு கணவனின் போக்கில் ஏதோ மாற்றம் தெரிகிறது என்பதை உணர்ந்தாள். அதிர்ந்தாள்.[28]

வீட்டில் பெரியவர்களிடம் கூற, அவர்கள் மந்திரம், தந்திரம் என்று இறங்கி அதிலும் பலன் கிடைக்காமல், இறுதியில் மன இயல் நிபுணர்களிடம் வந்தார்கள். மன இயல் நிபுணர்களிடம் செல்வதை அவர்கள் மூடி மறைக்க முயன்றார்கள். இது ஒரு வருடத்திற்கு மேலாக நோயாகி வேர்விட்டுக் கொண்டதில், எளிமையாய் குணப்படுத்தக்

கூடிய ஒன்று. மாதக் கணக்காய் இழுபட்டு விட்டது என்று விவேகானந்தன் பற்றின விவரங்களை எடுத்துச் சொன்ன மனஇயல் நிபுணர் (சைக்கியாட்ரிஸ்ட்) கூறியுள்ளார்.

சிவசங்கரி விவேகானந்தன் நிலை குறித்தும், அவர் பெற்றோர் உண்மை தெரிந்தும் அதை மூடி மறைத்ததையும் எண்ணி வருந்துகிறார். இதற்குக் காரணம் மக்கள் மனநிலை பாதிக்கப்படுவதை மருத்துவரிடம் கொண்டு செல்ல பயம், அறியாமை ஆகியவற்றால் தாமதப் படுத்துகின்றனர்.

சங்க இலக்கியத்தில் தலைவி தன் தலைவனிடம் உள்ளத்தைப் பறிகொடுத்து இருப்பதை அவள் தாய் ஏதோ தன் மகளுக்கு நேர்ந்துவிட்டது என்று மருத்துவம் பார்த்தும், மருந்து பெற்றுக் கொடுத்தும், வேலன் வெறியாடல், குறிகேட்டல் ஆகிய செயல்கள் செய்தும் பலன் இல்லாத போது. தோழி மிகவும் அறிவுத்திறத்துடனும் நயமுடனும் நற்றாயிடம் பேசுவாள், அவளுக்கு நேர்ந்துள்ளது நோய் அல்ல, அவள் மனம் அவள் விரும்பும் ஆடவனை நினைந்துள்ளது. உடனடியாக அவளுக்குத் திருமணத்தை நிகழ்த்தி வையுங்கள் என்று கூறுகிறாள். சங்க இலக்கிய தோழியைப் போல் இங்கு ஆசிரியர் சிவசங்கரியும், மருத்துவரும் சிறப்பாகப் பணியாற்றி, விவேகானந்தனின் மனநோயை ஆய்ந்துள்ளனர் என்பது நினைவு கொள்ளத்தக்கதாகும்.

பாடல் குறிஞ்சிப்பாட்டு வருமாறு:

*"................................கடுநோய்*
*யகலு ளாங்க ணறியுநர் வினாயும்*
*பரவியுந் தொழுதும் விரவுமலர் தூயும்*
*வேறுபல் லுருவிற் கடவுட் பேணி*
*நறையும் விரையு மோச்சியு மலவுற்*
*றெய்யா மையலையவு நறுந் தோணெகிழவும்*
*புட்பிற ரறியவும் புலம்புவந் தலைப்பவு*

*முட்கரந் துறையு முய்யா வரும்படர்*
*செப்பல் வன்மையிற் செறித்தியான் கடவலின்*[29]

என்று தோழி கூறுவது, தோழியின் பேச்சுத்திறனால் தலைவியின் உள்ளத்தை அறிய முடிந்தது. இங்கு மனநல நிபுணர் விவேகானந்தனின் மனதை அறிந்து நோயைத் தீர்த்துள்ளார்.

சாதாரண தலைவலிக்குக் கூட எக்ஸ்ரே எடுத்து நிபுணரிடம் போகும் மக்கள், ஏனோ மனநல மருத்துவரிடம் போவது என்றால் பயப்படுகிறார்கள் பைத்தியம் என்று பெயர் வந்துவிடும் என அஞ்சுகிறார்கள். இந்த எண்ணம் தவறானது. மனசும் உடபில் ஒரு உறுப்புதான். மற்ற உறுப்புகள் போல, மனதுக்கும் அவ்வப்போது கோளாறு வரலாம். இதைச் சரி செய்து ஆரோக்கியமாக வைத்திருப்பது அவசியம். இதை உணர்ந்து செயல்பட்டால் பல பிரச்சனைகளை முளையிலேயே கிள்ளி எறிந்துவிடலாம் என்கிறார் சிவசங்கரி.

இந்த மனச் சோர்வு பணியிலிருந்து ஓய்வு பெரும் ஆடவர்களுக்கும், மாதவிடாய் நிற்கும் நிலையில் உள்ள பெண்களுக்கும் தற்காலிகமாக ஏற்படுவது இயல்பு.

இந்நிலையை உணர்ந்து கொள்பவர்கள் தங்களை வேறு ஏதாவது பணியில் ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும். தனிமையாக இருக்காமல் பொறுப்புகளை ஏற்று செயல்படுகின்றபோது மனது சுறுசுறுப்பாக இருக்கும். இயல்பான வாழ்க்கை வாழ முடியும்.

**புவனேஸ்வரியின் மனச் சோர்வு**

புவனேஸ்வரி என்ற பெண்ணுக்கு மாதவிடாய் நிற்கும் வயது. உடலைச் சமச்சீராக்கும் உட்சுரப்புகள் (ஹார்மோன்கள்) படுத்தியபாட்டில் அவளுக்கு மனச்சோர்வு ஏற்பட்டது. அவளுக்குள் தன்னைத் தன் கணவருக்குப் பிடிக்கவில்லை என்ற எண்ணம் தோன்றிவிட்டது. அதனால் தன்னைத் தன் கணவர் கொலை செய்து விடுவார் என்றும் எண்ணினாள். பயந்தாள். இந்த எண்ணம் அவளை

பிரம்மை பிடித்த நிலைக்குக் கொண்டு சென்றது. இரண்டு வருடங்களாக கஷ்டப்பட்டு பிறகு மன இயல் மருத்துவரை அணுகி சிகிச்சை எடுத்துக் கொண்டாள். கடைசியாக மாதவிலக்கு முழுவதுமாக நின்றபின் பழைய இயல்பு நிலைக்கு வந்துவிட்டார்.[30]

விவேகானந்தன், புவனேஸ்வரி போன்றவர்கள் மருத்துவரை உடனடியாகப் பார்த்துப் பேசி தந்நிலையை விளக்கி இருந்தால் உடனடியாகவே அந்த நிலையிலிருந்து தெளிவு பெற்று இருக்கலாம். மக்கள் மத்தியில் மன நல மருத்துவரிடம் செல்லும்நிலை இயல்பாக வரவேண்டும். இக்காலச் சூழல் வாழ்க்கைச் சிக்கல்கள் நிறைந்ததாகவே உள்ளது. மக்கள் எளிதில் தங்கள் மன நிலையை மற்றவரிடமும் கூறாமல் மனதுள் வைத்து மறைப்பதால் உடல்நிலையில் பலவகையான மாற்றங்கள் தோன்றி நோயை உண்டாக்கி விடுகின்றன. மனம் ஒரு முக்கிய இடம் ஆகும். அது செம்மையாக இருக்க வேண்டும். மனம் செம்மையானால் தான் உடல் நலம் சிறப்பாகும். அவர்களின் செயல்பாடும் தெளிவாக இருக்கும்.

*"தனம்தரும் கல்விதரும் ஒருநாளும் தளர்வறியா*
*மனம்தரும் தெய்வவடிவும்தரும் நெஞ்சில் வஞ்சமில்லா*
*இனம்தரும் நல்லனஎல்லாரும் தரும் அன்பர் என்பவர்க்கே*
*கனம்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக் கண்களே "*[31]

இப்பாடலில் ஒருநாளும் தளர்வறியா மனம் தரும் என்ற அபிராமிப்பட்டர் அம்மையிடம் வேண்டியது, இம்மனச்சோர்வு இல்லாமல் தன்னை வாழ வைக்க வேண்டும் என்பதாகும். இந்த மனச்சோர்வு மனித இனத்திடம் காலங்காலமாக இருந்திருக்கின்றது என்பது இப்பாடலால் அறியமுடிகிறது.

**தற்காலிக மனச்சோர்வு**

ஒரு செயலை, அது மனிதனுக்குத் துன்பத்தைத் தருவதனால் வேண்டாம் என்று ஒதுக்குதல். அப்படி ஒதுக்கும் போது அதனால் மனதில் ஏற்படும் வெறுமை மனச்சோர்வாகிறது. இது வேண்டாம்

என்று உறுதியாகத் தீர்மானிக்கும் நிலையில் ஏற்படும் விளைவு தான். தற்காலிக மனச்சோர்வு.

### வேதகிரியின் வேண்டாத பழக்கம்

வேதகிரி என்பவர் அரசு அலுவலகத்தில் கணக்கராகப் பணியாற்றுபவர். நடுத்தரக் குடும்பத்தை நடத்துபவர். இவருக்கு வெற்றிலை, புகையிலை போடும் பழக்கம் இருபது வருடங்களாக இருந்து வந்தது. இப்பழக்கத்தை நிறுத்த முயன்றும் முடியவில்லை.

### திடீரென நடந்த நிகழ்வு

ஒருநாள் மின்சார ரயிலில் பயணம் செய்து கொண்டிருந்தார். அப்போது ரயில் நிற்கப்போவது அறியாமல் ஜன்னல் வழியே வெற்றிலை எச்சிலை வெளியில் துப்பிவிட்டார். அது பிளாட் பாரத்தில் நின்று கொண்டிருந்த ஒருவர் மீது பட்டுவிடுகிறது. அவர் உடனேயே ரயிலில் ஏறி வேதகிரியின் சட்டையைப் பிடித்து அடிக்காத நிலையில் சண்டை போட்டுவிட்டார். பக்கத்திலிருந்து நண்பர்கள் விலக்கி வேதகிரியைக் காப்பாற்றினர்.

இந்த நிகழ்வு வேதகிரியின் உள்ளத்தில் தன்மான உணர்வைத் தட்டிவிட்டது.

### தன்மானத்தால் எடுத்த முடிவு

இரயிலில் நடந்த நிகழ்வால் மன உலைச்சலுக்கு ஆட்பட்ட வேதகிரி இந்த வேண்டாத பழக்கத்திற்கு முற்றுப் புள்ளி வைத்தார். அட இனியும் இந்தப் பழக்கத்தை வைத்துக் கொண்டிருந்தால் நான் மனுஷன்தானா? என்று முருகன் படத்துக்கு முன் நின்று, இந்தப்பழக்கத்தை விட்டுவிடச் சத்தியம் பண்ணிவிட்டார்.

ஆனால் மறுநாளிலிருந்து திடீரென இருபதாண்டுப் பழக்கத்தை நிறுத்தியது, தொண்டையில் ஏதோ அரிப்பு நாக்கில் வரட்சி ஓர் இருப்புக் கொள்ளாத நிலை, நமநமவென எரிச்சல், பசியின்மை போன்ற

உடல் மாற்ற உணர்வுகள் ஏற்பட்டு அவருக்கு மனச்சோர்வை ஏற்படுத்திவிட்டது.

மனச் சோர்வு ஏற்பட வேதகிரி நான்கு நாட்களாக அலுவலகத்திற்குச் செல்லவில்லை. யாருடனும் பேசாமல் நடக்காமல் பத்து நாட்களைப் போக்கினார். பின்னர் எதிர்பாராதவிதமாக அவர் பெண்ணுக்கு பெரிய இடத்திலிருந்து திருமணம் பேச ஆட்கள் வந்து போயினர். அந்த வேலைகளில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார். அதனால் விட்டபழக்கத்தைப் பற்றி முழுமையாக மறந்தார். அவருக்கு ஏற்பட்ட தற்காலிகமான அந்த மனச்சோர்வும் நீங்கி வேதகிரி முழுமையான நிலை அடைந்தார்.[32]

**பிரச்சனையை எதிர்நோக்கத் தவறுதல்**

சில நேரங்களில் ஒரு பிரச்சனையை எதிர்நோக்குவது கூடப் பலருக்கு மனச்சோர்வை ஏற்படுத்தும்.

கிருஷ்ணன் என்பவர், தன் மனைவியை அம்மா, மாமியார் என்ற நிலையில் துன்புறுத்துகிறார் என்று அறிகிறார். ஆனால் அதைக் கண்டிக்கப் பயப்படுகிறார். இந்தப் பிரச்சனையைத் தீர்க்க முடியாமல் தவிக்கிறார். அம்மாவிடம் இது குறித்துப் பேசினால் அவர் தன்னைப் பெண்டாட்டி தாசன் என்று நினைப்பாரோ எனக் கருதுகிறார். அதனால் ஏதும் பேசாமல் அமைதியாக இருந்துவிடப் பிரச்சனைப் பெரிதாகிச் சண்டை வலுத்துவிட்டது. தன் இயலாமை குறித்து கிருஷ்ணன் மனச் சோர்வுக்கு உள்ளானார். இதை அவர் மனம் விட்டுப் பேசித் தீர்த்திருக்கலாம் ஆனால் விட்டுவிட்டார்.

**எதிர்மறை எண்ணம்**

மனச்சோர்வுகளில் இன்னும் சில வகைகள் உள்ளன. அவற்றுள் ஒன்று எதிர்மறை சிந்தனை. இது மனச் சோர்வை உண்டாக்கும்.

தாயை இழந்த ஒரு சிறுமியின் தந்தை மறுமணம் புரிந்து கொள்கிறார். அந்தச் சிறுமி, சித்தி தன்னைக் கொடுமைப் படுத்துவாள்

என்று எதிர்மறையாக எண்ணினாள். திருமணம் முடித்து வந்த சித்தி நல்லவளாக இருந்தும் சிறுமி, சித்தியை ஏற்கவில்லை. பிறகு அவளுக்கு அதனைப் புரியவைத்து அந்த மனச்சோர்வு மாற்றப்படுகிறது.

சங்கீதா என்பவள், குழந்தை பள்ளியிலிருந்து வீடுவந்து சேர காலதாமதமானால் மனச்சோர்வுக்கு ஆளாகிவிடுவாள். வரும் வழியில் குழந்தை அடிப்பட்டுப்போனதோ. யாராவது குழந்தையைக் கடத்திவிட்டாரோ என்ற எண்ணங்கள் அவளை ஆட்படுத்திவிடும்.

இத்தகைய மனச்சோர்வு உள்ளவர்களுடன் பேசி நிலையை விளக்கினால் இவர்களுக்கு ஏற்படும் மனச்சோர்வு நீங்கிவிடும்.[33]

**இந்தத் தற்காலிக மனச்சோர்வுகளை நீக்கும் வழி முறைகள்**

1. நடந்தது என்ன என்பதைத் தெளிவாகப் புரிய வைத்தல்.
2. மாற்று வழிகளை உடனேயே ஏற்றல்
3. இல்லாததை - இருப்பதாகவும் நடக்காததை - நடந்ததாகவும் எண்ணுதலை மாற்றல்.
4. நடந்து முடிந்த விஷயத்தைத் தோண்டித் துருவி கிளறுவதால் வருவது வேதனை என்பதை உணர்தல். அதனைத் தவிர்த்தல் போன்ற வழிமுறைகளைப் பின்பற்றினால் தற்காலிக மனச்சோர்வைப் போக்கிக் கொள்ள முடியும்.

மற்றும் புரிந்துகொள்ளல் தன்மையை வளர்த்தலும், தனிமையை நாடாமல் இருத்தலும் நண்பர்கள் உறவினர்களிடம் மனம் விட்டுப் பேசி, மனபாரத்தை இறக்கிக் கொள்ளுதலும் இந்த நிகழ்வால் உலகம் ஒன்றும் அழிந்து விடவில்லை, இது என்னைப் பாதிக்கவோ, என் நிம்மதியைப் பறிக்கவோ நான் இடம் தரவில்லை என்று தீர்மானித்துக் கொள்ளுதல் வேண்டும். வெறுமையாக உட்கார்ந்து இருப்பதை விடத் தன்னை ஏதாவது ஒரு காரியத்தில் முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ளுவதும், புதிய இனிய சூழ்நிலைக்கு மாறுதல், மற்றவர்க்கு உதவுதல் அதனால் ஏற்படும் மனநிறைவு - கால ஓட்டத்தில் தன்னைப் பழைய நிலைக்குக் கொண்டுவரும்.

எப்போதும் தன்னம்பிக்கையுடன் இருக்க வேண்டும் என மன இயல் மருத்துவர் அனுபவமாகக் கூறுகிறார்.

**7. கோபம்**

இது மனிதனிடம் காணப்படும் ஒரு பெரிய கொடிய குணமாகும். மனிதன் தோன்றிய காலம் முதலே இந்த உணர்வு இருந்திருக்க வேண்டும். தனக்கு ஒன்று கிடைக்காத போது அது குறித்து அழுகை, வெறுப்பு, கோபம் போன்ற உணர்வுகள் ஏற்படுகிறது. இதுபற்றி,

*"அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் நான்கும்*
*இழுக்கா இயன்ற அறம்."*[34]

என்று வள்ளுவர் கூறியுள்ளார்.

கோபம் அறமற்ற செயல் என்றே வள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

பழங்காலம் முதல் இன்று வரை அனைவரையும் ஆட்டிப் படைக்கும் உணர்வு கோபம் ஆகும். இது சிலரிடம் அடிக்கடி வரும். சிலரிடம் எப்போதாவது வரும். சிலர் காரணத்தோடு கோபப்படுவர். சிலர் காரணமில்லாமல் கோபப்படுவர். இந்த உணர்வு வரும் போது மனிதனை முழுமையாக ஆக்கிரமித்து விடுகிறது. அதனால் படபடப்பு ஏற்பட்டு என்ன செய்கிறோம் என்றே தெரியாமல் ஏதாவது காரியத்தைச் செய்துவிடுகின்றனர்.

"மனநல மருத்துவர்கள் கூறும் செய்திகளைச் சிவசங்கரி கூறுகிறார். கோபம், எரிச்சல், ஆத்திரம் போன்றவற்றிலிருந்து வேறுபடும் பண்பு. இவை எல்லாம் நீர் குமிழி போன்று தோன்றியவுடன் மறையக் கூடிய உணர்வு. ஆனால் கோபம், "ஏதோ ஓர் எதிர்பார்ப்பில் செயல்பட்டு அது நடக்காமல் போக, அதனால் வரும் ஏமாற்றம் படி நிலையாகத் தன்னால் செய்ய முடியவில்லையே, தனக்குக் கிடைக்கவில்லையே என்ற எதிர்மறைச்செயலால் ஒரு எரிச்சலை உண்டு பண்ணிவிடும். அது சிந்திக்கும் திறனை இழக்கச் செய்கிறது. நிதானம், பொறுமை, பண்பு, மனிதாபிமானம் போன்ற உயர்ந்த குணங்களையும் இழக்கச்

செய்துவிடும். அந்தப் பாதிக்கப்பட்ட மனிதரை உடம்பாலும், மனசாலும் செயலிழக்க வைக்கும். அசுரத்தனமான சக்தி கோபம் என்கிறார் டாக்டர் டயர்"[35] என்று கோபத்தின் தன்மையை வெளிப்படுத்துகிறார்.

கோபத்தால் அடிக்கடி வேதனைப்படும் மனிதர் ராமசாமி என்பவர். அவர் இயல்பாக நல்ல மனிதர். புத்திசாலி. எந்த வேலையையும் சிறப்பாகச் செய்யக் கூடிய திறமையானவர். அவருக்குச் சட்டென்று கோபம் வந்து விடும்.

**ராமசாமியின் கோபம்**

*"காரில் போய்க் கொண்டிருக்கையில் எதிர் பாராதவிதமாகப் பக்கத்துக் கார் முந்திச் சென்றுவிட்டால், சாலை நெருச்சலில் மாட்டிக் கொண்டாலும் பொறுமையை இழந்துவிடுவார். காரின் ஒலிப்பானை ஒலிக்கச் செய்து அடுத்தவர் செவிப்பறையைக் கிழித்துவிடும்படி செய்வார். ஜன்னலுக்கு வெளியில், தலையை நீட்டி, 'என்னய்யா பன்றே' என்று விரட்டுவார்; இண்டு இடுக்கில் புக முயற்சித்து அடுத்தவனின் பகையைத் தேடிக்கொள்வார். அவன் முறைத்தால் பதிலுக்கு 'ஓ' என்று கத்துவார். நிலைமை அதிகமாகிக் காரை அப்படியே விட்டுவிட்டு கீழ் இறங்கி அடுத்தவருடன் சண்டை போடச் சென்றுவிடுவார். பிறகு நாள் முழுவதும் அந்த உணர்ச்சிக் கொந்தளிப்பிலிருந்து மீள முடியாமல் நடந்ததைப் பற்றியே பேசி, மருகி, புலம்பி, கத்தி, வேறு எதையும் சிந்திக்கச் செய்யத் தெரியாமல் நேரத்தைப் போக்குவதும் உண்டு"*[36]

என்று ராமசாமியின் கோபத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

ராமாயணத்தில் ராமனுக்கு முடிசூட்டுவிழா நாளையே என அறிவித்தவுடன் மந்தரை கோபம் கொள்கிறாள். அந்தச் செய்தியைக் கைகேகியிடம் கூறி எப்படியாவது தடுக்க நினைக்கிறாள். கைகேயிடம் கூறுகிறாள். கைகேகி அது கேட்டு மகிழ்ந்து முத்துமாலையைப்

பரிசாகத் தருகிறாள். அதைக் கண்ட மந்தரை கோபம் கொண்டு செயல்படல் இங்கு நினைவுகூரத்தக்கதாகும். அப்பாடல் வருமாறு:

*"தெழித்த னரப்பினள் சிறுகண் டீபுக*
*விழித்தனள் வைதனள் வெய்து யிர்த்தனள்*
*அழித்தன ளழுதன ளம்பொன் மாலையால்*
*குழித்தன ணிலத்தையக் கொடிய கூனியே"*[37]

கோபத்தில் இரைந்தாள், அதட்டினாள், கண்கள் தீப்பொறி பறக்க விழித்தாள், வைதாள், பெருமூச்சு விட்டாள், அங்குள்ள பொருள்களை உடைத்தாள், அழுது புலம்பினாள் ரத்தினமாலையைத் தூக்கி வீசினாள் கோபத்தால். ஆகக் கோபம் கொண்டவர் அழிவான செயல்களைச் செய்வார் என்பது புலப்படுகிறது. ராமசாமியின் செயல் மந்தரையின் கோபச் செயலைப் போல் காணப்பட்டது, இவ்வாறு ராமசாமியின் கோப உணர்வின் தன்மையை சிவசங்கரி எடுத்துக் கூறுகிறார்.

வனஜா என்ற பெண் வேறு ஒரு விதத்தில் கோபத்தன்மை கொண்டவள். மிகவும் சுத்தமாக, அழகாக, நேர்த்தியாக எந்த வேலையையும் செய்யும் திறமைமிக்கவள். அமெரிக்காவிலிருந்து சென்னைக்கு வந்து தங்கிவிட்டார். இங்கு வீட்டு வேலைக்கு ஆள்வைத்தால் அவர்களின் குணத்தோடு ஒத்துப் போக முடியாமல் கோபப்படுவாள்.

ஒரு வேலைக்காரியை அமர்த்தி வேலை செய்யச் சொல்லும் முன் ஒரு மணி நேரத்திற்கு அப்படிச்செய், இப்படிச்செய் என்று கற்றுக்கொடுப்பாள். ஆனால் எதிர்பார்த்த அளவுக்கு வேலைக்காரி காரியங்களை நன்றாகச் செய்யவில்லை யென்றால் உடனேயே கோபப்பட்டுவிடுவாள். வேலைக்காரியைக் கடுஞ்சொற்களால் பேசித்தீர்த்துவிடுவாள். விளைவு-வேலைக்காரி உன்னிடம் வேலை செய்ய முடியாது என்று சென்றுவிட ஒரு வாரம் யார் துணையும் இல்லாமல் தவிப்பாள். பின் மற்றொரு வேலைக்காரியை வைக்க அவளிடமும் அதே நிலைதான்.

வனஜா போன்றவர்கள் இடத்திற்குத் தகுந்தாற்போல் தன்னை மாற்றி, வேலைக்காரர்களைத் தட்டிக் கொடுத்து வேலை வாங்குவதும், கொஞ்சம் கொஞ்சமாக அவர்களைத் தன் வழிக்குக் கொண்டு வர வேண்டும். எடுத்தவுடனேயே அவள் வேலைக்காரி, தான் எஜமானி என்ற நிலையில் பேசினால், வேலைக்காரி ஏனோதானோ என்று தான் இருப்பார்கள்.

ஆடிக் கறக்கிறமாட்டை ஆடிக் கறக்கணும் பாடிக் கறக்கிற மாட்டைப் பாடிக் கறக்கணும் என்ற நிலையில் வேலை வாங்கத் தெரிந்து கொள்ள வேண்டும். மேலை நாடுகளைப் போல் இந்தியாவில் வேலைக்காரர்களிடம் நேரந்தவறாமை, செய்நேர்த்தி போன்றவற்றை அதிகம் எதிர்பார்க்க இயலாது. அவர்களுடைய வறுமை, நான்கு வீட்டிற்கு வேலைக்குச் செல்ல வேண்டிய அவசரம் ஆகிய காரணங்களால் வந்து வேலையை முடித்துவிட்டு விரைந்து செல்ல வேண்டும் என்பதில் தான் குறிப்பாக இருப்பார்கள். அவர்களிடம் அன்பும் பரிவும் காட்டித்தான் வேலையைப் பெறுதல் வேண்டும். இந்தியாவில் வேலைக்காரர்களிடம் வேலை வாங்குவதை ஒரு கலையாக் கருதி செயல்பட வேண்டும்.

**மறதியினால் வரும் கோபம்**

சாதாரணமாக மறதி வந்து ஒரு காரியத்தைச் செய்யாமல் விட்டுவிட்டாலோ பொருள்களை எங்காவது வைத்துவிட்டுத்தேடும் வீட்டுத் தலைவர்கள் இருக்கிறார்கள்.

மகேஷ் தன் இயலாமை குறித்து கோபம் கொண்டு, கன்னாபின்னா என்று எதிரில் நிற்பவர், மற்றவர் என்று அத்தனை பேரையும் திட்டித் தீர்த்துவிடுபவர். யாராவது, என்ன? ஏது? என்று கேட்டாலும் கோபம் வரும். அது மனைவியோ, மகனோ, மகளோ யாராக இருந்தாலும் ருத்ரதாண்டவம் தான்.

'ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டம்' என்றே நடந்து கொள்வார். அதோடு கைநீட்டும் அளவுக்கு அவர் கோபம் சென்று விடும். அத்துடன்

எழவு எடுத்த வீட்டில் எவன் இருப்பான் என்று கத்தியபடி வெளியில் நடந்து போய் கோபம் தணியாமல் நேரம் காலமின்றி பார்க், பீச் என்று உட்கார்ந்து கொள்வார். இவரைப் போன்றவர்கள் உண்டு என்றார் சிவசங்கரி.[38]

**மனிதரிடம் காணப்படும் பொதுவான கோபம்**

அரசு, அரசியல், பொருளாதாரம், வெயில், மழை, வேலை செய்யாமல் போன தொலைபேசி, நின்றுபோன மின்சாரம் போன்ற தங்களால் முடியாத விசயங்களுக்காக ஆத்திரப்படுதல், கோபப்படுதல், செயலிழத்தல், காரணத்தினால் தன்னுடைய பொன்னான நேரத்தை வெற்றாகக் கழித்துவிடுவார். படபடப்பு, எரிச்சல், கத்தல் முதலிய காரணத்தினால் அயர்ச்சி, மனச்சோர்வு வயிற்றுப் புண்கள் இவைகளை வருமானமாகப் பெற்றும், மன அளவில் பந்தம், பாசம், உறவு, நட்பு இவைகளை இழந்து வாழும் மக்கள் எத்தனை எத்தனையோ பேர் சமுதாயத்தில் வாழ்ந்து வருகிறார்கள். என்பதும் சிவசங்கரியின் அனுபவம் மட்டுமல்ல அனைவரும் அறிந்த உண்மையாகும்.

**கோபத்தை மாற்றும் வழிகள்**

கோப உணர்ச்சிக்கு ஆறுதலான சொற்கள், கோபம் இருக்கும் இடத்தில்தான் குணம் இருக்கும், அடிக்கிற கைதான் அணைக்கும் போன்ற பழமொழிகள் ஆகும்.

1. மனதில் உறுதியுடன் நான் இந்த குணத்திலிருந்து மாற வேண்டும் என்ற உறுதியை எடுக்க வேண்டும்.
2. கோபம் கொண்டு ஏதேனும் பேசமுற்படும் முன் கஷ்டப்பட்டு மனதுக்குள் ஒன்று முதல் பத்து வரை எண்ணிக் கொள்ளவோ அல்லது அந்த இடத்தைவிட்டு நகர்ந்தோ செல்ல வேண்டும்.
3. கோபம் கொண்டவர் தனக்குப் பிடித்த நபர், பிடித்த பொருள், தெய்வ வழிபாடு போன்ற நம்பிக்கைகளை

நினைத்துப் பார்க்க முற்பட வேண்டும். அதில் கோபம் கொஞ்சம் குறைந்து போக வாய்ப்புள்ளது.

4. இதற்கு முன் கோபப்பட்டதால் ஏற்பட்ட விளைவு - மிகவும் வருந்து வதற்குரியதாக இருப்பின் அதனோடு ஒப்பிட்டு இதை மறக்க வேண்டும்.

5. ஒருவர் தன்னுடைய கோபதாபங்களை, நம்பிக்கைக் குரியவர், மரியாதைக்குரியவர் ஒருவரிடம் கூறி மனம் விட்டுப்பேசுவதால் குறையும். கோபத்தை அதன் காரணத்தை ஒரு தாளில் எழுதி அந்த நேரத்தை மாற்றிக் கொண்டால், பின் காலப்போக்கில் மற்றவரிடம் வெளிப்படையாகக் காட்டும் நிலை மாறிவிடும் என்பது மருத்துவ நிபுணர்களின் கருத்து.[39]

**8. பொறாமை**

பொறாமை இது மனிதனிடம் காணப்படும் ஒரு உணர்வு, குழந்தைகள் முதல் பெரியவர்வரை அனைவரிடமும் இவ்வுணர்வு உள்ளது. பொதுவாகப் பொறாமையைப் போட்டி என்றும் கருதுவர். இது ஆக்கப்பூர்வமான செயல்களைச் செய்யத் தூண்டும். பொறாமை இருவகைப் படும்.

1. பொதுவான பொறாமை

2. குறிப்பிட்ட காரணத்துக்காகக் குறிப்பிட்ட நபர்களிடம் தோன்றும் பொறாமை.

பொறாமை உணர்வைத் தடுத்து, நிதானமாக நடக்க வழிமுறைகளைக் கூறுகின்றார் சிவசங்கரி.

எதார்த்தத்தை எதிர் நோக்கப் பழகுதல், அடுத்தவரின் திறமைகளைப் புரிந்து கொள்ளுதல், பொறாமை உணர்வைத் தூண்டும் மனிதரிடமிருந்து விலகி நிற்றல், தன்னுடைய திறமைகளை வளர்க்க என்ன வழி என்று ஆய்ந்து தெளிதல், அரச மரத்தைச் சுற்றியவுடன்

அடிவயிற்றைத் தொட்டுப் பார்த்தல் தவறு என்பதால், எந்தப் பலனையும் எதிர்பார்க்கும் முன்னரும், தேவையான அவகாசத்தைத் தருதல், பொறாமை உணர்தல பலசந்தர்ப்பங்களில் வீழ்ச்சிக்கே அடிகோலுகிறது என்று உணர்வதும், வெகுவாக பொறாமை அரக்கனிடமிருந்து மனிதனை விடுவித்துக் கொள்ளும் வழிமுறைகள் ஆகும்.

பொறாமை உணர்வு அடுத்தவரைப் பார்த்து ஏற்படும் போது அந்த நிலையிலிருந்து விடுபடும் வழிமுறைகள்.

1. ஒருமனிதரைப் பார்த்துப் பொறாமைப்படுவதற்கு அவரின் வெளித்தோற்றம்,நடவடிக்கைகள் (இமேஜ்) முக்கிய காரணமாகிறது. அதனால் அவர் ஒருவித நிதானத்தைக் கடைப்பிடித்து, விவேகத்துடன் நடந்து கொள்ளல் வேண்டும். எளிமையாக இருப்பது நல்லது.

2. பொறாமை காரணத்தினால் ஒருத்தரால் தீங்கிழைக்கப்படும் போது அடிபட்டுப் போவதோ பதிலுக்கு வஞ்சம் தீர்க்க முனைவதோ தவறு. பொறாமை அடுத்தவர் தமக்குக் கொடுக்கும் மறைமுகப் பாராட்டு (*Jealousy is a form of Compliment*). அதனால் அதைப் புன்னகையுடன் அனுபவிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்."[40]

மேற்கூறிய காரணங்களை நினைவில் கொண்டு செயல்படும் போது மற்றவர் தம்மைப் பார்த்து பொறாமைப்படுவதைத் தவிர்த்துக் கொள்ள முடியும். பொதுவான பொறாமையை இவ்வாறு காத்துக் கொள்ள வேண்டும்.

குறிப்பிட்ட காரணத்திற்காகத் தோன்றும் பொறாமை 1. அழிவுக்கான எண்ணத்தை உருவாக்கிச் செயல்படுத்தும் அதன் விளைவும் வீழ்ச்சியாகவே அமையும்.

காந்தாமணி - சம்யுக்தா என்ற பெண்ணின் எளிய உடை நடையை வைத்து, அவளைச் சாதாரண குடும்பப்பெண் என்று எண்ணி இதமாகப் பழகி வந்தாள். ஒரு நாள் சம்யுக்காவின் வீட்டிற்குக் காந்தாமணி செல்ல நேர்ந்தது. அங்குச் சம்யுதாவின் நிலை பன்மடங்கு தன்னைவிட உயர்வானது என்பதை உணர்ந்தபோது காந்தாமணி தன் தோழியின் எளிமைத் தோற்றத்தை நடையைப் பாராட்டாமல் பொறாமை கொண்டாள். அதன் விளைவாகக் காந்தாமணிக்கு உள்ளத்தில் பொறாமை உணர்வு மேலோங்க சம்யுக்தாவின் உறவை முறித்துக் கொண்டாள்.

திடீரென ஒருவர் முக்கியத்துவம் பெறுவதால் அடுத்தவரிடம் தோன்றும் பொறாமைக்குச் சான்றாக ராமாயணகௌசல்யாவும், கைகேயியும் கூறலாம். ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்யப் பட்டால், கௌசல்யாவுக்குப் பெருமை, புகழ் அதிகரித்துவிடும் என்று மந்தரையால் துர்ப்போதனை செய்யப்பட்டதால் கைகேயி பொறாமைத் தீயில் விழுந்துவிட்டதால் தசரதனையும் அழித்து விட்டாள்.

*"தீய மந்தரை யிவ்வுரை செப்பலுங் தேவி*
*தூய சிந்தையுந் திரிந்தது"*[41]

என்று எல்லோரும் அறிந்த இதிகாசச் சான்றுடன், காந்தமணியின் செயல் ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

**ஆக்கப் பூர்வமான பொறாமை**

தீபா பாட்டுக் கற்றுக்கொள்வதில் அதிக ஆர்வம் கொண்டிருந்தாள். பெற்றோரும் அதற்காக ஏற்பாடு செய்து கொடுத்தனர். ஆனால் தீபாவின் பன்னிரண்டாம் வயதில் அவளுக்கு ஆஸ்த்மா நோய் ஏற்பட்டது. அடிக்கடி இழுப்பு நோய் வந்ததால் உனக்கு இனிமேல் பாட்டு வேண்டாம்மா என்று சொல்லி பாட்டு வாத்தியார் நின்றுவிட்டார். மற்றவர்களெல்லாம் பாடும் போது தன்னால் முடியவில்லையே என்ற ஏக்கம் தீபாவுக்குள் பொறாமையாகத்

தோன்றியது. அது அவளின் முயற்சியாக, அழிவை நோக்கி அல்லாமல், நல்லதாக ஆக்கப்பூர்வமாக அமைந்தது. ஏன் பாட முடியாது? இப்படிச் சொன்ன அனைவர் முகத்திலும், கரி பூசுவேன் என்கிற வைராக்கியம் பிறக்க விடேன்தொடேன் என்று தினமும் அதிகாலையில் எழுந்து அசுரப் பயிற்சி மேற்கொண்டு பாடினாள். பலன் கைமேல் கிடைத்தது. இன்று வானொலியில் பாடும் பாடகியாக இருக்கிறாள். அத்துடன் மூச்சை அடக்கிப் பயிற்சி பெற்றதால் தீபாவிற்கு ஏற்பட்ட ஆஸ்த்மா நோயும் மறைந்து விட்டது.

இப்படி ஆக்கப்பூர்வமாகத் தோன்றிய பொறாமை உணர்வு தீபாவிற்கு நன்மைகளை உண்டாக்கி விட்டது. பொறாமையைத் தவிர்த்து வாழ்தல் நலம். பொறாமையை, பொறாமையாகக் கொள்ளாமல் போட்டியாகக் கொண்டு இயல்பாக எடுத்து ஆக்கப்பூர்வமாகச் செயல்பட்டால் எல்லாம் நன்மையாக அமையும்.

**சுயமதிப்பீடு**

மனிதன் தன்னைத் தானே மேம்படுத்த உதவும் விழிப்புணர்வை சுயஅலசல் என்று கூறுவர். சுய அலசல் மூலம் மனிதன் தன்னிடம் உள்ள குறைகளை நீக்கி, நிறைகளைப் பெருக்கி உயர்ந்த பண்பாளன் ஆகிறான்.

மனித உடம்பின் வளர்ச்சிக்கு வரம்பு உண்டு ஆனால் மனதுக்கு அது இல்லை. உயரம், பருமன், அழகு, இளமை போன்றவை மனித உடம்பிற்கு மட்டும் தான். மனிதன் வளர்ச்சிக்கு உயரம் இல்லை, அழகுக்கு உச்சவரம்பில்லை. இளமைக்கு முதுமை இல்லை என்கிறார் சிவசங்கரி. மனதை வளப்படுத்தும் முயற்சியின் முதல்படி சுயஅலசல் ஆகும்.

**சுய விமர்சனம் என்பது**

இச்செயல் தனக்கு மகிழ்வைத் தருகிறது. இது என் கோபத்தைத் தூண்டும். இது அடுத்தவரை வேதனைப் படுத்துகிறது. இது என்னை நெகிழச் செய்கிறது. இது எனக்கு நிம்மதியைத் தருகிறது என்று

தன்னுடைய சிந்தனை செயல் ஆகியவற்றால் ஏற்படும் உணர்வுகளை அடையாளம் காட்ட, கட்டம் கட்டத் தெரிவது தான் சுய விமர்சனம்.

அந்தந்த நிமிஷங்களில் உணர்ச்சி வசப்பட்டு செய்துவிடும் எந்தச் செயலையும், அது யூகிக்க வைப்பதாக இருந்தாலும், கூம்பிப்போகச் செய்தாலும், அந்தச் செயலை உணர்ந்து உடனே மனசில் அழுத்தமாகக் குறித்து வைத்து, அடுத்தமுறை அப்படி நடக்கவோ, நடக்காமல் இருக்கவோ உதவும் உணர்வுதான் விழிப்புணர்வு, சுயஅலசல் சுய விமர்சனம் ஆகும்.[42]

இந்த விழிப்புணர்வு ஒரு மனிதன் வாழ்வில் ஏற்பட்டுவிட்டால் அவனுக்குத் தேக்க நிலை என்பதே கிடையாது. அவன் மனதில் அழுக்கு, ஊனம் என்பதும் இல்லை. கட்டாயம் அவன் மனதளவில் வளர்ந்து வாழ்க்கையை மேம்படுத்தி பண்பால் உயர்ந்து நிற்பான்.

**சுற்றுச்சூழலை உணர்தல்**

கண்ணைக் கட்டிவிட்ட குதிரையாக வாழ்ந்த நிலை மாறி, தன்னைச் சுற்றிலும் உள்ளவற்றைப் பார்க்க, கேட்க, பேச, உணர்ந்து கொள்ள இதயத்தால் முடியும் என்ற புதுத்துடிப்பைப் பெறுவது மனிதாபிமானம். அது தன்னைச் சுற்றியுள்ள உலகம், சமுதாயம், உயிர்களைப் பற்றிக் கவலை, அக்கறை கொள்வதும் மற்றொரு கோணம் ஆகும். இது போல் பல நூறு கண்ணோட்டங்கள் உள்ளன. அவற்றை மனிதன் உணர்ந்து கொள்ள அறிவு துணைபுரிகிறது. அந்த அறிவைப் பயன்படுத்தினால் மனிதன் உண்மையில் மனசால் வளர்ந்துள்ளான்.

சின்னநூல் கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது என்ற நூலை சிவசங்கரி 51 வாரங்கள் தொடராக எழுதியுள்ளார்.

இந்நூல் ஒவ்வொரு மனிதனும் தன்னைத் தானே மேம்படுத்திக் கொள்ள உதவும் சிந்தனைகளின் தொகுப்பாக அமைந்தது. இந்நூலை எழுதத் தொடங்கிய நிலையில் ஆசிரியர் தன்னைத் தானேயும் மேம்படுத்திக் கொண்டதாகக் கூறுகிறார்.

உங்களுக்குத் தெரிந்ததை நீங்கள் சொல்லுங்கள், நான் உணர்ந்தவற்றைக் கூறுகிறேன் என்ற ஆர்வத்துடன், ஒருவர் நலனில் வளர்ச்சியில், மற்றவர் அக்கறை கொண்டு வேண்டாத தளைகளை நூலிழைகளாக எண்ணி அறுத்து, கைகள் கோர்த்து நீங்களும் நானும் ஒன்றாக நடந்து, உரக்கச் சிந்தித்த இந்தப் பயணத்தினால் யாருக்கு என்ன ஆதாயம் இருந்ததோ தெரியாது. ஆனால் என் மனம் விசாலமாகியிருக்கிறது. வளர்ந்திருப்பதும் தன்னம்பிக்கை பெற்றிருப்பதும் நிஜம் என்கிறார்.

மேலும் கூறுகிறார் தான் தன் கணவனை இழந்த அந்த நேரத்தில் துவண்டு போன அந்தச் சூழலில் என்னதான் உறவுகள் தூண்களாக நின்றாலும். மனதில் ஏற்பட்ட வெறுமையைத் தாங்க அதனைப் போக்க உதவியது இந்த எழுத்து என்கிறார்.

மனதளவில் சாய்ந்து கொள்ள சாய்மானம் இல்லாமல், தாங்கிக் கொள்ள தூண்கள் இல்லாமல் திடுமெனத் தோன்றிவிட்ட வெறுமையில் பற்றிக் கொள்ள ஒரு பிடிமானம் இல்லாமல், இழந்து. கலங்கி, பரிதவித்து, உடைந்து, நொறுங்கி, ஏன் காலடியில் தரையே இல்லாத மாதிரியும், உடலை நிமிர்ந்து நிற்கவைக்கும் முதுகெலும்பு முறிந்துவிட்ட மாதிரியும் கூட, பிரம்மை பிடித்துப்போன நாழிகையில் இந்தக் கட்டுரைத் தொடரைத் தொடர்ந்து எழுத வேண்டிய நிர்பந்தமும், அதற்காகச் சிந்திக்கத் தூண்டிய கட்டாயமும் எனக்குள் ஒருவித தெளிவை உண்டாக்கி, புதுசாய் தைரியம், தன்னம்பிக்கையை ஊற்றெடுக்க வைத்து மீண்டும், நான் தலைநிமிர, புன்னகைக்க உதவியது உண்மை என்கிறார்.[43]

ஒரு மனிதன் நிறையப் படித்து பட்டங்கள் பெற்று உயர்ந்த பதவியில் இருந்தாலும், தனக்கு இது வேண்டும் இது வேண்டாம் என்ற தெளிவு வேண்டும். இது தன்னால் முடியும் முடியாது போன்ற உறுதி வேண்டும். இந்தச் சிந்தனை இன்றி வாழ்க்கையில் அமைதி கிடைக்காமல் வாழ்வது படித்தும் பலனில்லாததாகும்.

எவன் ஒருவன் வாழ்கையை அது வரும் வழியில் ஏற்று, நிறை குறைகளுடன் வாழக் கற்று, தன் நிம்மதியைச் சந்தோஷத்தைத் தக்க வைத்துக் கொள்கிறானோ, அவனே உண்மையான சிறந்த அறிவாளி. அதிபுத்திசாலி என்பார் டாக்டர் டயர்.[44]

தனிமனிதன் வாழ்க்கை இன்பமாகவோ துன்பமாகவோ அமைவது அவன் கையில் தான் உள்ளது. 'தீதும் நன்றும் பிறர்தர வாரா' என்ற கணியன் பூங்குன்றனாரின் பாடல் வரிபோல் தான் வாழ்க்கை அமைகிறது.

> "சத்தியமாய் வெளிச்சமும் இருளும், காற்றும் புழுக்கமும், தைரியமும் கோழைத்தன்மையும், தன்னம்பிக்கையும் மனச்சோர்வும், நிம்மதியும் உளைச்சலும் அவரவர்க் குள்ளேயே தான் இருக்கின்றன என்று சிவசங்கரி கூறியுள்ளார்."[45]

வாழ்க்கையே எதிரும் புதிருமானது தான், போராடி வெற்றி கொண்டு வாழ்வது ஒரு வகை. துன்பத்தில் ஆட்பட்டு விடாமல் விழிப்புணர்வுடன் செயல்பட்டு ஒதுங்கிச் செல்வது மற்றொரு வகை. இந்த இருவழிகளில் மனிதன் எதைப் பின்பற்றினாலும், வாழ்க்கை ஒவ்வொருவரது தனிமனிதர் கையில் தான் உள்ளது என்பது தெளிவு.

### 10. குழப்பம்

தனிமனிதன் தவிர்க்க வேண்டிய குணங்களுள் ஒன்று குழப்பம். குழப்பம் என்றால் என்ன?

பலவிதமான எண்ணங்கள், உணர்ச்சிகள், கருத்துக்கள் இவைகளின் கூட்டுக் கலவை. இது ஒரு போர்வைபோல் மூளையைப் போர்த்தி மனிதன் சிந்திக்கும், செயல்படும் திறனைப்பாதிக்கும் போது உண்டாவது குழப்பம் என்கிறார்கள் மனோ தத்துவ அறிஞர்கள்.

இக்குழப்பம் இரண்டு வகைப்படும்

1. தற்காலிகம்
2. நிரந்தரம்

சின்னச்சின்ன குழப்பங்கள் மனித வாழ்க்கையில் ஏற்படுவது இயற்கை. இதற்குக் காரணங்கள் பல உணடு. ஆனால் புத்திசாலித்தனத்துடன் செயல்படும் போது இந்தத் தற்காலிகக் குழப்பத்தைத் தவிர்த்து விடுதல் முடியும். இந்தக் குழப்பம் தனி நபருக்கு மட்டும் வருவதில்லை. கூட்டமாக மனிதர்கள் கூடிச்செய்யும் செயலிலும் குழப்பங்கள் வருவது உண்டு. பல திருமணங்களில் இந்தத் தற்காலிகக்குழப்பங்கள் வந்து போவதுண்டு. ஒருவருக்கொருவர் சரியான தொடர்பு கொள்ளாததும், ஞாபக மறதியும் இதற்குக் காரணங்களாக அமைந்து பின் தெளிந்துவிடும்.

ஆனால் இந்தக் குழப்பங்கள் தொடர்ந்து மனதில் நின்று ஒரு மனிதரை மீளவிடாமல் செய்யும் போது அது நிரந்தரமாகிச் சிக்கலை உண்டுபண்ணிவிடும்.

சின்ன ஓர் சிக்கல், குழப்பமாக மாறி, அது தீர்க்கப்படாமல், தெளிவுபெறாமல் போகும் போது நிரந்தரக்குழப்பமாக அமைந்து விடுகிறது.

**குழப்பம் உண்டாகக் காரணங்கள் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்**

1. தெளிவாகத் திட்டமிடத் தெரியாமை.
2. ஒழுங்கின்மை
3. அடுத்தவருடன் சரியாகத் தொடர்பு கொள்ளத் தெரியாமை.
4. பிறருடன் பூர்ணமாக ஒத்துழையாமை.
5. எதிர்காலத்தைப் பற்றின விழிப்பு இல்லாமை.
6. எதிலும் அகலக்கால் வைக்கும் குணம்.
7. மனச்சோர்வு.
8. ஒரு விஷயத்தைப் பற்றின முழு அறிவின்மை.

9. அக்கறையின்மை

10. எதிலும் அதீத பரபரப்பு.

11. சுயமாகச் சிந்திக்காமல் எதற்கும் பிறர் பேச்சைக் கேட்பது.

12. நினைவாற்றல் (ஞாபக சக்தி) குறைவு.

13. அளவுக்கு மீறின எதிர்பார்ப்பு.

14. சமயோசிதத் தன்மை இன்மை.[46]

**குழப்பம் உண்டான போது ஏற்படும் விளைவு**

குழப்பம் - சிந்தனைத் தேக்கம் - செயல்தடை - இன்னொரு உணர்ச்சியின் தோற்றம் - அதன் வெளிப்பாடு - மீண்டும் குழப்பம்.

இப்படி மனிதனையே விழுங்கும் நிலையில் குழப்பம் உண்டாகி, சுற்றி வளைத்து அதிலிருந்துமீளவிடாமல் மூழ்கச் செய்துவிடும்.

**குழப்பத்தைப் போக்கும் வழிமுறைகள்**

1. செய்யப்போகும் முன் எந்த ஒரு செயலையும் - முழுமையாக அலசல் வேண்டும்.

2. செய்ய வேண்டிய முறையைத் திட்டமிடல்.

3. தெரியாத விபரங்களைத் தெரிந்து கொள்ளல்.

4. கவனத்துடனும் சிரத்தையுடனும் செயல்படல்.

5. இது இல்லையென்றால் அது - என்று மாற்று தயார் செய்து கொள்ளல்.

6. எதிர்பார்ப்பது இல்லை என்று ஆனால், இடிந்து போகாமல் இருத்தல்[47]

இந்த ஆறு கருத்துக்களையும் ஆய்ந்தறிந்து கூறுகிறார் சிவசங்கரி.

அடுத்தவருடன் முழுமையாகத் தொடர்பு கொள்ளத்தெரியாமை. அன்றாட வாழ்க்கையில் மனிதன் தன்னைச் சுற்றி இருப்பவர்களுடன் பழகத்தெரிய வேண்டும்.

*"நகல்வல்லர் அல்லார்க்கு மாஇரு ஞாலம்*
*பகலும்பால் பட்டுஅன்று இருள்"*[48]

யாரோடும் சிரித்துப் பழகி வாழத் தெரியாதவர்க்கு உலகில் பகலும் கூட இருள்போல் தெரியும். ஆதலினால் மற்றவருடன் பக்குவமான உறவு வைத்துக் கொள்ள வேண்டும். இன்றைய சூழ்நிலை ஒவ்வொரு தனிமனிதனும் ஒரு தீவில் வாழ்வது போல் வாழ்ந்து வருகிறான். அதனால் மன இறுக்கத்திற்கும், மன அழுத்தத்திற்கும் உள்ளாகிறான். இந்த நிலை மாற அவன் தான் மற்றவருடன் தொடர்பு கொண்டு இணக்கமாகப் பழக வேண்டும். இந்த உறவு பல பிரச்சனைகளுக்குத் தீர்வாக அமையும்.

சரியாகத் தொடர்பு கொள்ளாமல், தெளிவாக எதையும் எடுத்துக் கூறத் தெரியாமல் கூச்சம், குழப்பம் போன்ற காரணத்தினால் பிரச்சனைகள் உருவாகிறது.

மற்றவருடன் தொடர்புகொள்ளும் போது சரியாகத் தொடர்பு கொள்ளல் வேண்டும். அதனால் குழப்பங்களைத் தவிர்க்க முடியும்.

**மனித வளர்ச்சிக்குத் துணையாகும் பண்புகள்**

தனிமனிதன் மேம்பாடு அடைகின்றபோது, அவனும் அவனைச் சார்ந்தோரும் நலம் பெறுகின்றனர். குடும்பம் வளம் பெறுகிறது. குடும்பங்களால் சமுதாயம் நலன் அடைகிறது. சமுதாயம் நாட்டை உயர்த்துகிறது. இந்தப் பரிணாம வளர்ச்சியை நோக்கத் தனிமனிதன் தன்னை மேம்படுத்திக் கொள்ளப் பாடுபட வேண்டும். முனைந்து செயல்பட வேண்டும். நெறிப்படுத்தி எந்தெந்த வகையில் தன்னை மேம்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதை சிந்திக்கச் செய்யும் நெறி முறையையும் சிவசங்கரி தமது எழுத்துகள் வாயிலாகக் காட்டியுள்ளார்.

தனிமனிதன் முதலில் தன்னைத்தான் ஆய்ந்து கொள்ள வேண்டும். அது 'சுயஅலசல்' எனப்படும். அதாவது தன்னிடம் உள்ள நிறை, குறைகள் என்ன? தன்னால் எதைச் செய்ய முடியும்? முடியாது? தன்

பலம் என்ன? பலவீனம் என்ன? என்பதை அறிந்த பின் குறைகளை நீக்கி, நிறைகளைப் பெருக்கித் தன்னை ஒரு முழுமனிதனாக உருவாக்கிக் கொள்ளச் சிவசங்கரி வழிப்படுத்துகின்றார்.

**தனிமனிதன் கடைப்பிடிக்க வேண்டிய பண்புகள்**

தனிமனிதன் பண்புகளால் மேம்படும் போது நல்ல மனிதனாகிறான்.

மனிதன் தன்னைச் சார்ந்த சூழலில், தன்னுடன் தொடர்பு கொள்ளும் மனிதர்களை உறவுகளாகக் கொள்கிறான். அந்த உறவு நட்பாகவும், சுற்றமாகவும் அமைகிறது.

வாழ்க்கை என்பது ஒரு பயணம். அதில் எங்கு யார் வருவார்கள், யார் பிரிவார்கள் என்பது தெரியாது. நேர்மையான அமைதியான பாதையில் மனிதன் செல்ல வேண்டும் என்றால், அந்தப் பயணத்தை, அவன் இசைவான நிலையில் வைத்துக் கொள்ள வேண்டும். உடன் வருபவர்களுடன் முரண்படாமல், அவர்களுடனான உறவை ஆரோக்கியமானதாக, சுமுகமானதாக அமைத்துக் கொள்ள வேண்டும். இன்றைய சூழலில் மனிதர்கள் ஒருவருக்கொருவர் போட்டி போட்டு வாழவும் வளரவும் செய்யும் நிலையில் முயன்றுதான் பொறுமையுடன் கடைப்பிடித்தல் அவசியமாகிறது. அப்படி மனிதன் எண்ணிப் பார்த்து நடந்து கொள்ளக் கூடிய சில பண்புகள் உண்டு.

உறவு என்பது பிறப்பால் வருவது மட்டுமல்ல. திருமண உறவால் வருவதும் அல்ல. அதற்கும் மேல் தன்னைச் சுற்றி இருக்கும் பலவற்றுடனான, பல விதமான மனிதர்களுடன் தொடர்பு கொள்ளும் உறவுகளும் உண்டு.

**தனிமனிதனும் தாவரமும்**

**தோட்டம்**

சிவசங்கரி தனிமனிதனை ஒரு பழத் தோட்டத்தில் உள்ள அழகிய செடியாக, மரமாக உருவகப்படுத்துவார். செடியை மனிதன் எவ்வாறு

பேணி வளர்க்கிறானோ, அதற்குத் தக்க நல்ல பலன் கிடைக்கும். அதைக் காணும் போது மனதுக்கு இன்பம் கிடைக்கும். சுவையான காய், கனிகள் கிடைக்கும். அவற்றை அனுபவிப்பது இன்பம் ஆகும்.

**நோய்**

பழச்செடியில் எங்காவது நோய் தாக்கப்படுமானால் அது எங்குத் தாக்கப்பட்டுள்ளது என்பதைக் கண்டறிந்து உடனேயே களைய வேண்டும். இல்லையென்றால் அதன் அழகு கெடுவதுடன். அந்த நோய் மற்ற செடிகளையும் அழித்துவிடும்.

**உரம்**

செடிக்கு நீரும் உரமும் தேவைப்படுவது போல எந்த உறவுக்கும் அன்பும், அரவணைப்பும், அனுசரணையும், விட்டுக் கொடுத்தல் போன்ற பலவித சத்துக்களான பண்புகள் உறவுப்பிணைப்பாகத் தேவைப்படுகிறது.

**பேணுதல்**

நாள்தோறும் தோட்டத்தை எவ்வளவு கண்ணும் கருத்துமாகப் பேணி வளர்க்கின்றோமோ, அந்தளவு செடிகள் செழித்து பூத்து காய்த்து கனிந்து விளங்கும். அதைப்போல் கவனிப்பும் கருணையும் அன்பும் மனித உறவுகளிடம் காட்டப்படும் போது அந்த உறவு பின்னிப் பிணைந்து நிற்கும்.

செடியில் 'களை' வந்தால் அதனை நீக்குகின்றோம். பூச்சிக்கு மருந்து இட்டு நோய் களைகின்றோம். அது போல் மனிதனிடையே காணப்படும் கருத்து வேறுபாடுகளையும், புரிந்து கொள்ளா நிலையையும் உடனேயே தெளிவுபடுத்திப் பேசித் தீர்த்துக் கொள்ளல் இன்றியமையாதது. எதையும் மனதுள் வைத்துப் பூட்டிக் கொள்வதால் அது புரையோடிப் போய் உறவை அழுகச் செய்து விடும். எனவே மனம்விட்டுப் பேசுதல் ஒன்றே இதற்குத் தக்க மருந்தாகும்.

சத்தான அடிஉரங்களைக் கொடுத்துச் செடிகளை வளர்த்தால் தான் அச்செடி செழிப்பாக வளர்ந்து, வளர்த்தவருக்கு இதமானதாய் வருடிக்கொடுத்து பலன்தரும், தென்றலாய், நிற்கநிழலாய் உண்ண உணவாய், பூத்து மனம் மகிழ மணம் பரப்பும். உறவுகளும் இத்தகையதே என்று சிவசங்கரி கூறியுள்ளார்.

**நோயும் செயலும்**

ஒரு மரத்தில் வேர்ப் பூச்சி வந்து, மண்ணுக்கு அடியிலிருந்து செடியை அழிப்பது, வெளியில் மரத்திலும், கிளையிலும் இலையிலும் காணமுடியும். இலை சுருங்கி, பூ பூக்காமல் கருகி, காய் அழுகி மரம் மெதுமெதுவாய்ப் பட்டுப் போகும். இலையில் அல்லது கிளையில் தீங்கு என்று பூச்சி மருந்து அடித்தும் பலனில்லாமல் போக, வேரில் பரவிய நோயைக் கண்டு, மருந்திட்டு அதற்கும் சரியாகாத போது மண்ணோடு வேரைப் பிடுங்கி எறிந்தால் தான் மற்ற மரங்கள் பூச்சி தாக்குதலில் இருந்து தப்பிக்கும். இல்லாவிட்டால், ஓரிடத்திலிருந்து மற்ற செடிக்கும் பரவி முழுத் தோட்டத்தையே அழித்துவிடும். எனவே எங்கு தீங்கு நேர்ந்துள்ளது எந்த மனத்தில் ஒட்டை அழுக்கு இருக்கிறது என்பதைக் கவனித்து அங்குச் சிகிச்சை அளிக்க வேண்டும். இல்லையென்றால் அந்தப் பழத்தோட்டம் போன்று தனிமனிதனின் தவறான நடவடிக்கையினால் விளைவுகள் இங்கும் அங்கும் பரவிச் சுற்றுச் சூழலையே மாசுபடுத்தி, உறவுகளை அழித்துவிடும். எனவே தனிமனிதப் பண்பு என்பது குடும்பம், சமுதாயம் ஆகியவற்றை மேம்படுத்துவதுடன் சீரான நிலையை உறவுச் சூழலுக்குக் கொண்டு செல்வதுமாகும். அதனால் தனிமனிதனின் உள்ளத்தில்,

*"அழுக்கும் ஆங்காரமும், அழுகலும்,*
*ஒட்டையும் நிறைந்திருந்த தென்றால்*
*அந்த மனிதரிடமிருந்து வரும் கதிர்*
*வீச்சுக்கள் சுற்றியிருப்பவர்கள் அத்தனை*
*பேரையுமே எரித்து மண்மேடாக்கிவிடும்."*

என்பது உண்மை. எனவே மனித உறவைப் 'பேணி' வளர்க்க வேண்டும் என்று சிவசங்கரி குறிப்பிட்டுள்ளார்.[49]

எண்ணம் பேச்சு நடவடிக்கை அனைத்தும் தனிமனிதனை மட்டும் அல்லாமல் அவனுடன் வாழ்க்கைப் பயணத்தில் பயணம் செய்யும் அத்தனைபேரையும் பாதிக்கும் என்பது உண்மையாகும். அதனால் தனிமனிதன் தன்னை மேம்படுத்த நல்ல பண்புகளை அவசியம் கடைப்பிடிக்க வேண்டும்.

**பண்பு உருவாதல்**

மனிதனின் எண்ணங்களால் பண்பு உருவாக்கப்படுகிறது. எண்ணம் - செயலாக - செயல் - பழக்கமாக - பழக்கம் - பண்பாகிறது.

**பண்பாடு**

பண்பாடு என்ற சொல் பண்படுதல் என்ற சொல்லிலிருந்து வருகிறது. பண்+பாடு. பண் என்பது பக்குவப்படுதலாகும். பாடு என்பது செயல்படுதல், நடத்தல் ஆகும். நிலத்தைப் பண்படுத்தினால் நல்ல பயிர் விளையும், அது போல மனித மனம் பண்பட்டால் நல்ல பண்பு உருவாகும். நல்ல பண்புடைய மனிதன் நல்லவனாகிறான். இதனை,

> "*பண்என்னாம் பாடற்கு இயைபுஇன்றேல்; கண்என்னாம்*
> *கண்ணோட்டம் இல்லாத கண்.*"[50]

என்ற குறளுடன் ஒப்புநோக்கி உணரலாம்.

பண் என்பதற்கு இசை, இசைவு என்றும் பொருள் கொள்வர். இசைந்து ஒழுகுதல், அதாவது மக்கள் ஓரிடத்தில் கூடி வாழும் போது சில முரண்பாடுகள் இருந்தாலும், பலவற்றில் அவர்களோடு ஒத்து இசைந்து வாழுதல் என்பதாகும். அது அவர்களிடையே நல்ல பயனைத் தரும்.

**இசை**

இனிமையான ஒலிக்குறிப்புகள் இசைந்து ஒலிக்கப்படுவது இசை. ஆக இதில் பண் என்பது சேர்ந்து ஒத்து ஒலிக்கப்படுதல் என்பது பொருளாகிறது. இசை என்பதற்குப் புகழ் என்று பொருளுண்டு. இதன் அடிப்படையில் பண்பாடு தோன்றியது.

பண்பாட்டின் அடித்தளமே அன்பாகும். அதனால்தான் முன்னோர் அன்பே கடவுள் என்றனர். ‘அன்பே சிவம்’ போன்ற தொடர்கள் தோன்றின. கடவுள் அடியார்களான நாயன்மார்களும், ஆழ்வார்களும் மக்களுக்குத் தொண்டு செய்வதே கடவுளுக்குச் செய்யும் தொண்டு என்று கருதிச் செயல்பட்டனர். மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்றானது. மக்களுக்குத் தொண்டு செய்வதால் புகழும் சேருகிறது.

*“நல்லிசை நிறுத்தல் வேண்டினும், மற்று அதன்*
*தகுதி கேள் இனி மிகுதியாள!*
*நீர் இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்*
*உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே!*
*உண்டி முதற்றே உணவின் பிண்டம்*
*உணவெனப் படுவது நிலத்தோடு நீரே!*
*நீரும் நிலனும் புணரியோர், ஈண்டு*
*உடம்பும் உயிரும் படைத்திசி னோரே!”*[51]

என்று எடுத்துரைக்கின்றன.

மன்னன் புகழை நிலை நிறுத்த, மக்களின் தேவையை நிறைவு செய்ய வேண்டும். அதனால்தான் புலவர் குடபுலவியனார் மன்னனுக்கு, அவன் ஆற்ற வேண்டிய கடமையை, நிலைநிறுத்த வேண்டிய புகழை இப்பாடலின் வாயிலாக திறம்பக் கூறியுள்ளார். அக்கால மன்னர்களும் மக்களைக் காப்பதையும் சமுதாயத்தை மேம்படுத்துவதையும் தலையாய கடமையாகக் கொண்டிருந்தனர் என்பதை இப்பாடல் காட்டுகின்றது.

**பண்பாட்டுக் கூறுகள்**

பண்பாடு என்பதற்கு மேனாட்டு அறிஞர்கள் பலவகையான விளக்கம் அளித்துள்ளனர்.

"பண்பாடு என்பது அறிவு, நம்பிக்கை, கலை, ஒழுக்க நெறிகள், சட்டம், வழக்கம் முதலிய வகைகளும் மனிதன் சமுதாயத்தில் ஓர் உறுப்பினராக இருந்து கற்பிக்கும் திறமைகளும் அடங்கிய ஒரு முழுமைத் தொகுதியாகும்"[52]

என்பார் மானுடவியல் அறிஞர் ஈ.பி.டெய்லர்.

பண்பாட்டின் மிகச் சிறிய அலகு பண்பாட்டுக் கூறு எனப்படும். நாகரிக நடத்தைகள், பழக்கவழக்கங்களைப் பண்பாட்டுக் கூறுகள் என்பர்.

பண்பாட்டுக் கூறுகளை அறிவியலார் மூன்று வகைகளாக வகைப்படுத்துவர்.

1. பொருள்சார் பண்பாட்டுக் கூறுகள்.
2. அறிதல்சார் கூறுகள்.
3. நெறியியல் கூறுகள்

என்பனவாகும்.

**1. பொருள்சார் பண்பாட்டுக் கூறுகள்**

பயன்பாட்டிற்காக ஏற்படுத்திக் கொள்ளும் அனைத்துப் பொருள்களும் பொருள்சார் கூறுகள் ஆகும்.

**2. அறிதல்சார் கூறுகள்**

மனிதன் பண்பு மிக்கவனாக இருந்து அறிதிறன் (cogniiton) பெற்றிருப்பது அறிதல் சார் கூறாகும்.

**3. நெறியியல் கூறுகள்**

மக்களின் வாழ்வை நெறிப்படுத்தும் கூறுகள் நெறியியல்

கூறுகள் ஆகும். இவற்றுள் தனிமனிதனை, அவன் மனம் சார்ந்து நெறிப்படுத்த உதவுவது, நெறியியல் கூறாகும். இக்கூறுகளை அவன் வளப்படுத்திக் கொண்டால் மற்ற இரண்டும் எளிதில் அடைந்து விட முடியும். அதாவது,

*"ஒரு பண்பாட்டின் நெறியியல் கூறுகள், மக்கள் வாழ்வை நெறிப்படுத்தும் கூறுகளைக் குறிக்கும். சமுதாயத்தில் ஒருவர் எவ்வாறு வாழ வேண்டும். எவற்றைச் செய்யக் கூடாது, ஏன் செய்யக் கூடாது போன்ற விதிமுறைகளோடுதொடர்புடைய கூறுகளே மனிதனை வளப்படுத்தும்"*[53] என்பார்.

சங்கப்பாடலான புறநானூறு இந்த நெறியியல் கூறுகள் கொண்ட பாடல்களை அதிகமாகப் பெற்றுள்ளது.
கணியன் பூங்குன்றனாரின்,

*"யாதும் ஊரே யாவரும் கேளிர்*
*தீதும் நன்றும் பிறர்தர வாரா,*
*நோதலும் தணிதலும் அவற்றோர் அன்ன,"*[54]

என்னும் தொடர்கள் மனித வாழ்க்கையை நெறிப்படுத்துவதாகும். மனிதன் மற்றவருக்குத் தீங்கிழைக்கின்ற போது தான், அது அவனுக்குத் திரும்பி வருகிறது. கோபப்படுதலும், பொறுத்துப் போவதும் அவரவர் கையில் தான் உண்டு என்பது பன்னூறு ஆண்டுகளுக்கு முன்பே நெறியியல் கூறாக வகுத்துத் தந்துள்ளது.

*"உண்டால் அம்ம, இவ்வுலகம், இந்திரர்*
*அமிழ்தம் இயைவது ஆயினும், இனிது எனத்*
*தமியர் உண்டலும் இலரே! முனிவிலர்,*
*துஞ்சலும் இலர், பிறர் அஞ்சுவது அஞ்சிப்*
*புகழ் எனின் உயிரும் கொடுக்குவர், பழிஎனின்*
*உலகுடன் பெறினும் கொள்ளலர் அயர்விலர்;*
*அன்ன மாட்சி அனையர் ஆகித்*

*தமக்கென முயலா நோன்தாள்*
*பிறர்க்கென முயலுநர் உண்மை யானே!*"[55]

கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி, ஒரு மன்னன் இவ்வுலகம் இயல்பாக இயங்குவதற்கான காரணத்தை விளக்குகின்றான். தன் நாட்டில் வாழ்ந்த மாந்தர் தம் பண்பை அம்மாந்தர் புகழுக்காக உயிரைத் தருவர். பழி என்றால் இவ்வுலகே கிடைத்தாலும் கொள்ள மாட்டார். சோர்வு அற்றவர். இத்தகைய அரிய குணமுடையோர் தமக்காக வாழாமல் பிறர்க்காக உழைக்கும் உண்மையான இயல்பால் தான், இவ்வுலகம் சிறப்புடன் வாழ்ந்து வருகிறது என்று அம்மனித வாழ்க்கையின் நெறியை அவர்கள் வாழ்ந்த, வாழ்க்கையின் வழியே விளக்கியுள்ளார்.

வள்ளுவரும் இதைத்தான் தன் மணிக் குறளில் கூறியுள்ளார்.

"பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்
மண்புக்கு மாய்வது மண்"

இவ்வாறு சமூக அமைப்புகள் பண்பாட்டின் அடிப்படையில் நின்று மனித வாழ்க்கையை இயக்கி வருகின்றன.

**பண்பாடும் சமுதாயமும்**

பண்பாடு என்பது நிலவியல் அமைப்பில் இடத்திற்கு இடம், காலத்திற்குக் காலம் இனத்துக்கு இனம், சூழ்நிலைக்கு ஏற்றவாறு மாறுபடும். இதனை,

"நாடா கொன்றோ! காடா கொன்றோ
அவலா கொன்றோ! மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே!"[56]

என்ற பாடல் ஒரு நிலம் மனிதனின் திறத்திற்கு ஏற்ப வளப்பட்டு விளங்கும் என்பதை விளக்குகிறது.

மனிதனின் சமுதாய வாழ்வு நிலத்துடன் பின்னிப் பிணைந்துள்ளது. அவனது வாழ்வின் வளமும் - வறட்சியும், வளர்ச்சியும் - தளர்ச்சியும், வீழ்ச்சியும், நகைப்பும், ஏக்கமும், ஒளியும்-இருளும் நிலஇயல் கூறுகளின் பின்னணியைப் பொறுத் திருக்கின்றன. அதனால் மனிதனின் வரலாற்றை 'இயங்கு இயல்' என்பார்" வி.டி செல்வம்"[57]

தமிழன் தனக்கென, வாழாது, பிறர்க்காக வாழ்ந்த வாழ்க்கையே இலக்கியங்கள் காட்டுகின்றன. அந்தப் பெருமிதத்தைத் தான் நாமக்கல் கவிஞர்,

"தமிழன் என்றொரு இன முண்டு,
தனியே அவருக்கொரு குண முண்டு"[58]

என்று பாடினார்.

தமிழன் என்றும் உழைப்பிற்கு அஞ்சாதவன் அதனால் தான் உலகளாவிய நிலையில் அவன் சென்று உழைத்துக் கொண்டிருக்கிறான்.

**மற்றவருடன் பேசிப் பழகுதல்**

மனிதன் அன்றாட வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய பழக்கங்கள் ஏராளம். அத்தனையையும் முயற்சியுடன் கடைப்பிடித்து வெற்றி அடைந்து விட்டேன் என்று கூற முடியாது. சிலவற்றில் வெற்றி, சிலதோல்விகள் வந்து போகும். இருப்பினும் விடாமுயற்சி வெற்றி பெறச் செய்யும்.

மனிதர் ஒருவருக்கொருவர் பேசிப் பழகத் தெரிய வேண்டும். மனிதனுக்குப் பேச்சு என்பது கடவுள் வழங்கிய பெரிய பரிசு. பேச்சு மனித சமுதாயத்தின், வாழ்க்கையின் அடித்தளமாகும். பேச்சு மனிதர்களை ஒற்றுமைப்படுத்துகிறது. சகோதரப் பாசத்துடன் பிணைக்கிறது. கருத்துக்களைப் பரிமாரிக்கொள்ள உதவுகிறது. பேச்சு வழக்கில் அதைப் "பேச்சுப் போனால் மூச்சுப் போகும்" என்று பழமொழியாகக் கூறுவர்.

ஆனால் அந்தப் பேச்சால் மூச்சையே போகச் செய்யவும் முடியும். பேச்சுக்கு அத்தகைய பேராற்றல் உண்டு. அந்தப் பேச்சால் இவ்வுலகையே தன்பக்கம் இழுத்துவிடவும் முடியும். பேச்சாற்றல் மிக்கவர்கள் இதனை நிரூபித்துள்ளனர். வரலாற்றிலும் வீறு உரைகள் பல இடம்பெற்றுள்ளன. வீரபாண்டிய கட்டப்பொம்மன் உரை ஆங்கிலேயரையே அதிரச் செய்தது. விவேகானந்தரின் சிகாக்கோ உரை அனைவரையும் பாசப்பிணைப்பால் கட்டிவிட்டது. இப்படி ஆக்கப்பணிக்கு ஊக்கம் அளிப்பதும் பேச்சுதான். ஆனால் அந்தப் பேச்சைப் பயன்படுத்தும் முறையும், சூழல் அறிந்து பேசும் திறனும் மனிதப் பண்பாகும்.

பேச்சு இருமுனைக் கத்தி போன்றது. அதைக்கொண்டு நல்லவற்றுக்கும் பயன்படுத்தலாம். உயிரைப் போக்குதற்கும் பயன்படுத்தலாம்.

**கூர்மையான கத்திபோன்ற பேச்சு**

மனிதர் ஒருவரை ஒருவர் வார்த்தைகளால் காயப்படுத்தாமல் இருத்தல் வேண்டும். மற்றவர் யாரும் தன்னைக் காயப்படுத்த இடமும் தருதல் கூடாது. இதன் மூலம் ஏமாற்றத்தையும் வலியையும் குறைத்துக் கொள்ள முடியும்.

சிலர் வலிய வந்து பேசி. பலர் மனதைப் புண்படுத்துவர். அது அவர்களுக்கு ஒரு பழக்கமாகவே அமைந்து இருக்கும். அப்படிப்பட்ட நிலையில் பாதிக்கப்பட்டவர் என்ன செய்ய வேண்டும் என்பதைச் சிவசங்கரி ஒரு கதை மூலம் விளக்குகிறார். வருமாறு:

> *“புத்தர் தினமும் யாசகத்தற்காகச் சென்று வீடுகளில் பிச்சை கேட்பார். அப்போது ஒருநாள் ஒருவர் “என்ன இது, ராஜ குடும்பத்தில் பிறந்து பிச்சையெடுக்கிறாயே வெட்கமாக இல்லை உனக்கு?” என்று ஆரம்பித்து கொஞ்சம் கேவலமாகப் பேசப் புத்தர் எதற்கும் பதில் கூறாமல் சிரித்துக் கொண்டே வந்துவிட்டார். புத்தரின் சீடர்கள் கோபப்பட்டார்கள். திட்டின ஆள்*

*சென்றபிறகு, சீடர்கள் புத்தரிடம் கேட்கிறார்கள் 'ஐயா, அவர் திட்டியதற்குப் பதிலுக்கு அடிக்க வேண்டாம், திட்ட வேண்டாம், ஆனால் நீங்கள் சிரிக்காமல் இருந்திருக்கலாம் இல்லையா? என்று கேட்டதற்குப் புத்தர் மேலும் சிரித்தார். பிறகு, அப்பனே நீ ஒரு பொருளைக் கொடுத்து, அதை நான் வாங்கிக் கொண்டால் தான் அது என்னுடையது. வாங்காதவரை அது அப்பொருள் உன்னுடையது தான். அதைப் போலவே தான் அந்த ஆள் சொன்ன வார்த்தைகளை நான் வாங்கவே இல்லை. அவை அனைத்தும் அவனிடத்திலேயே இருக்கின்றன."*[59]

என்று சொன்னாராம்.

இக்கதையிலிருந்து தனிமனிதன் எடுத்துக் கொள்ளும் கருத்து, "ஒருவரின் சொல்லால் மற்றவர் அடிபடுவதும், வேதனைப் படுவதும் நிம்மதியாய் இருப்பதும் அவரவர் சிந்தனையைப் பொறுத்தது" என்பதாகும். இதனையே மனோ தத்துவ நிபுணர்கள், "மனதளவில் தம்மை அடுத்தவர் காயப்படுத்த அனமதிப்பதும் அனுமதிக்காததும் அவரவர் கையில் தான் உள்ளது" என்பார் டயர் என்ற அறிஞர்.

மனிதன் உண்மையில், தவம், புலடைக்கம், மன அமைதி, இனிய சொல் ஆகியவற்றைக் கடைப்பிடிக்கவேண்டும் என்று இலக்கியங்களும், சான்றோரும் உரைக்கின்றனர். பாரதியார். "வாக்கினிலே இனிமை வேண்டும்" என்று குறிப்பிட்டுள்ளார்.

வள்ளுவர், கனியைப் போன்ற இனிய சொல்லைப் பேச வேண்டும். காயான கடுமையான வார்த்தைகளைத் தவிர்த்தல் நல்லது என்பதை,

> "இனிய உளவாக இன்னாத கூறல்
> கனிஇருப்பக் காய்கவர்ந் தற்று."[60]

என்ற குறளில் குறிப்பிட்டுள்ளார்.

இச்செய்தியிலிருந்து அறியப்படும் உண்மை, வள்ளுவர் கூறுவது போன்ற நல்லவை, நன்மை பயப்பதை மற்றும் பேசினால், மனித உறவுகள் சிறக்கும். எனவே

*பேசிய வார்த்தைக்கு, அது எஜமானாகிறது*
*பேசாத வார்த்தைக்கு நீ எஜமானனாக*
*இருந்து சொல்லைப் பேச வேண்டும் என்பர் சான்றோர்.*

**வதந்தியான பேச்சு**

ஒரு மனிதர் சாக்ரடீஸிடம் ஏதோ ஒரு செய்தியைக் கூற வருகிறார். கூற வந்த அந்த மனிதர், தான் கூறப்போகும் செய்தி ஒரு வதந்தியாகப் பேசப்பட்ட செய்தி என்றும் கூறுகிறார். உடனே சாக்ரடீஸ் அந்தச் செய்தியைக் கூறும்முன், இந்தச் சல்லடையில் அதைச் சலித்துக் கூறவும் என்கிறார். எப்படி இந்தச் செய்தியைச் சல்லடையில் சலிக்க முடியும் என்று அந்த மனிதர் நினைக்கும்போது,

சாக்ரடீஸ் கூறியவை, இந்தச் சல்லடையின் தன்மை என்னவென்றால், ஒருவர் கூறும் செய்தி உண்மை இல்லாத, பொய்யானவை என்றால் அது கெட்டவையாக மேலேயே நின்றுவிடும். பின் நல்லவற்றை மட்டும் எடுத்துக்கொள்ளப்படும். அந்த நல்ல செய்தியும் பிறருக்கு நன்மை தரக் கூடியதா என்று பார்த்து நன்மை அல்லாததையும் விட்டுவிடும். எனவே இதில் சலித்தபின் உன் கருத்தைக் கூறு என்றார். வந்த மனிதர் எதுவும் கூறாமல் சென்று விட்டார்.

**வாழ்விக்கும் பேச்சு**

ஒருவர் பேசுகின்ற பேச்சு மற்றவரை வாழ்விக்கத் தக்க உயிர்ப்பான பேச்சாக இருத்தல் வேண்டும்; நம்பிக்கையூட்டும் பேச்சாக இருத்தல் வேண்டும்; இனிமையுடைய பேச்சாக வேண்டும். பயனுடைய பேச்சாக வேண்டும். பேச்சு மனிதனின் எண்ணங்களை வெளிப்படுத்துகிறது. அந்த எண்ணமும் சொல்லும் நல்லதாக இருந்தால்

கேட்பவருக்கும் பேசுபவருக்குமிடையே இனிய உறவு ஏற்படும். அந்த உறவை வளர்த்துக் கொள்ள நல்லவற்றையே பேச வேண்டும். மற்றவர் விரும்பத்தக்க பேச்சையே பேச வேண்டும். அடக்கமான பேச்சு மற்றவரைக் கேட்கக் தூண்டும். ஆணவமான பேச்சு கேட்பவர் வெறுக்கும்படியாக அமையும்.

**ஆணவப்பேச்சு**

*"மெத்தப்படித்த பண்டிதர் ஒருவர் ஊர்ஊராகச் சென்று சொற்பொழிவு செய்து வந்தார். ஒரு நாள் ஒரு கிராமத்திலிருந்து வேறு ஒரு இடத்திற்குச் செல்லும் போது, ஆற்றில் வெள்ளம் பெருகி நுங்கும் நுரையுமாக வந்தது. அதைக் கடக்க அங்கிருந்த பரிசலில் ஏறிக் கரையைக் கடந்து கொண்டிருந்தார். சற்று தூரம் சென்ற பின் பரிசல்காரனிடம் மெல்லப் பேச்சுக்கொடுத்தார். தன்னைப் பற்றி அவர் எப்போதும் பெருமையாகவே பேசுவார். அதில் அவருக்கு விருப்பமும் அதிகம். அதனால் நான் உபநிஷத் பற்றியும் மற்ற உயர்ந்த விஷயங்கள் பற்றியும் ஊர் ஊராகப் பேசி வருகிறேன். நீ அதைக் கேட்கின்றாயா? என்றார். அதற்கு ஓடக்காரன் 'உபநிஷத்' என்றால் என்ன. ஐயா! என்றான். "ஐயோ வாழ்க்கையில் கால் பகுதியை வீணாக்கி விட்டாயே! என்று வருத்தப்பட்டார். கொஞ்ச தூரம் போனதும் மறுபடியும் கேட்டார். சரி ராமாயணம், மகாபாரதம் போன்ற சொற்பொழிவுகளையாவது கேட்டிருக்கிறாயா? அதில் வரும் நீதிகளையாவது புரிந்து கொண்டாயா? என்றார். "ஏதோ என் பாட்டி சொல்லிக்கேட்டிருக்கிறேன். ஆனால் நீங்கள் சொல்வது போல நீதி, அது, இது என்று விளக்கமாகத் தெரியாது என்றான். அடப்பாவி, வாழ்க்கையில் பாதி நாளைக் கோட்டை விட்டு விட்டாயே? என்றார் கோபமாக, நடு ஆற்றைக் கடந்து கொண்டிருக்கும் போது மீண்டும், பெரிய பெரிய விஷயங்களைப் பற்றித் தெரியவில்லை என்கிறாய், போனால் போகிறது. நம் நாட்டில் ராமானுஜர், சங்கரர், ராமகிருஷ்ணர் போன்ற பெரிய*

*மனிதர்கள் வாழ்ந்தார்களே, அவர்களைப் பற்றியாவது தெரியுமா?" என்றார், பரிசல்காரன் அப்பாவியாய்க் கேட்டான், 'சாமி, இவர்களெல்லாம் யார்? உங்கள் உறவுக்காரர்களா!' என்றான், பண்டிதருக்குக் கோபமான கோபம்! போச்சு, போச்சு! வாழ்க்கையில் முக்கால் பாகத்தை வீணாக்கி விட்டாயே?" என்று ஆத்திரத்தோடு திட்டினார். இன்னும் கொஞ்ச தூரம் சென்றதும் பரிசல்காரன் ஒருவிதத் தவிப்புடன் காணப்பட்டான். பண்டிதர் அதைக் கவனித்து ஏன் இப்படித் தவிக்கிறாய்! என்று கேட்டார். அவன் மெதுவாய், 'சாமி உங்களுக்கு நீச்சல் தெரியுமா?' என்றான். "தெரியாது. ஏன் கேட்கிறாய்? என்றார். அடடா! வாழ்க்கை முழுவதையும் நீங்கள் வீணாக்கி விட்டீர்களே! என்று கூறி, படகு ஓட்டையாகி இப்போது நீரில் மூழ்கப் போகிறதே! என்று சொல்லிவிட்டுத் தான் மட்டும் நீரில் குதித்துத் தப்பிப் போய் விட்டான்"*[61]

இக்கதை உணர்த்தும் உண்மை என்னவென்றால், மனிதன் மற்றவர்களையும், நாட்டு நடப்பையும் பற்றியும் அறிந்து வைத்திருக்கிறான். ஆனால் தன்னைப் பற்றியும் தன்பலம் பலவீனம் பற்றியும் அறிய மறுத்து விடுகிறான். அதனால் பல நேரங்களில் அவன் பேச்சு அவனையே அழித்துவிடுகிறது.

சிவசங்கரி தக்க இடங்களில் சரியான சான்றுகளுடன் மனிதத் தன்மைகளை விளக்கிக் கூறுவது மற்றவர்களுக்குக் கற்றுக் கொள்ள வேண்டிய பாடமாக அமைகிறது என்பது தெளிவாகத் தெரிகிறது.

மேற்கூறிய கதையில் பண்டிதரின் நிலையும் அவருடைய பேச்சும் அவர் வாழ்க்கையையே வீணடித்துவிட்டது. அவர் பேசாமல் இருந்திருக்கலாம். அல்லது ஓடக்காரனின் வாழ்க்கையைப் பற்றி நலம் விசாரித்திருக்கலாம். ஆனால் அவர் தற்பெருமை பேசியதுடன், அவனையும் குறை கூறியது அவன் உள்ளத்தில் அவரிடத்து ஒரு வெறுப்பை உண்டாக்கியுள்ளது. இயல்பாக உதவக் கூடிய அவன் வேறு வழியில்லாமல் அவரை விட்டுவிட்டுச் சென்று விடுகிறான்.

இதைத் தான் பாரதி,

*"தேடிச் சோறு நிதம் தின்று - பல*
*சின்னஞ் சிறுகதைகள் பேசி - மனம்*
*வாடித் துன்பம் மிகவுழன்று - பிறர்*
*வாடப் பல செயல்கள் செய்து - நரை*
*கூடிக் கிழப்பருவ மெய்திக் - கொடுங்*
*கூற்றுக் கிரையெனப் பின் மாயும் பல*
*வேடிக்கை மனிதரைப்போலே - நான்*
*வீழ்வே னென்று நினைத்தாயோ"*[62]

என்ற அடிகளால் பராசக்தியுடன் உரையாடுகிறார்.

இப்படிக் கதையில் வரும் பண்டிதரைப் போல், பிறர் வாடப் பல செயல்செய்து திரியும் மனிதரைச் சுட்டுகின்றார். வெற்றுப் பேச்சப்பேசுபவரைச் சாடுகின்றார் பாரதி.

**மௌனம் சிறந்த பேச்சு**

பேச்சைவிட, பேசப்படாத மௌனம் சிறந்தது. ரிஷிகள், ஞானிகள், யோகிகளின் பேசாத மௌனமே நூறு ஆயிரம் பொருள் கூறுவன. அதனால் தனிமனிதன் கடைப்பிடிக்க வேண்டிய பண்புகளுள் ஆன்மீகமும் ஒன்று. மனிதன் தன்னை உணர்ந்து தனக்குள் இருக்கும் ஆன்மாவை அறிதல் வேண்டும். உடலைக் கோயிலாகவும், உயிரைக் கடவுளாகவும் கண்டவர்கள் ஞானிகள். அதனால் அவர்களின் எண்ணங்கள் சிறந்து விளங்குகின்றன.

"இரண்டாவது உலக மகாயுத்தத்திற்குப் பின் நாடே கொந்தளிப்பாக இருந்த நேரத்தில் பரபரப்படைந்த ஆங்கிலேயர் ஒருவர் ரமண மகரிஷியை அறிந்து அவரிடம் வந்தார். வந்தவர், 'உலகமே குழப்பத்தில் இருக்கிறது. நீங்கள் ஏதோ ஒரு மூலையில் சும்மா உட்கார்ந்து கொண்டிருக்கலாமா?' என்பது போன்ற பல கேள்விகளை ஆங்கிலத்தில் கேட்டுவிட்டு விடைகாணும் ஆவலோடு ரமணரையே

பார்த்துக் கொண்டிருந்தார். ரமணர் ஆங்கிலேயரையே பார்த்தார். இருவரும் அமைதியாக ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டே இருந்தனர். அரைமணி நேரம் அப்படியே மௌனமாகக் கழிந்தது. கேள்வி கேட்ட அதே ஆங்கிலேயர் திடீரென்று 'எனக்குப் பதில் கிடைத்துவிட்டது' என்று முகத்தில் சந்தோஷம் பொங்க ஆங்கிலத்தில் ஆர்ப்பரித்துக் கூறினார். உடனே ரமணர் அவரைத் தான் உணர்ந்தவற்றை எழுதிக்காட்டும் படி கேட்டார். ஆங்கிலேயர், 'ஆத்திரமும் அறியாமையும் உடைய என்னால் முதலில் புரிந்து கொள்ள முடியவில்லை. தங்களின் கருணையால் எங்கும் அமைதியைப் பரப்பிக் கொண்டிருக்கிறார்கள். ஆத்திரப்படாமல் இரு அமைதி கிடைக்கும்' என்று ரமணர் உணர்த்தியது போன்ற கருத்துக்களை ஆங்கிலத்தில் சரளமாக எழுதியதை அங்கிருந்தவர்கள் கண்டு ஆச்சரியப் பட்டார்கள்."[63]

"எவ்வுயிரிடத்தும் வெறுப்புக் கொள்ளாமல் நட்பும் கருணையும் பேணி, யான் எனது என்னும் செருக்கறுத்து சுகதுக்கங்களைச் சமமாகப் பார்த்து தன்னடக்கத்துடன் உள்ளவனே கடவுளின் பக்தனாவான்" என்று பகவத்கீதை கூறுகிறது.

'நான்' என்பதை விடுதல் வேண்டும். அது தனிமனித வளர்ச்சியை மிகவும் பாதிக்கும் என்கிறார் சிவசங்கரி. 'நான் எல்லாம் அறிந்தவன்' என்ற எண்ணத்தைத் தவிர்த்து, மற்றவர் கூறும் நிறை குறைகளை ஆய்ந்து பார்த்து எடுக்க வேண்டியவற்றை எடுத்துத் தவிர்க்க வேண்டியவற்றைத் தவிர்க்க வேண்டும் என்று கூறியுள்ளார்.

**தன்னடக்கப் பேச்சு**

பலர் பேச்சில் 'தான்' என்ற எண்ணம் தலைதூக்கிக் காணப்படும். அப்படிப்பட்டவர்கள், தன்னடக்கத்துடன் இருந்த தலைவர்கள் வழியைப் பின் பற்றி மனிதப் பண்பினை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

ஆப்பிரகாம் லிங்கனைப் பற்றி நினைக்கும் போது இச் செய்தியும் எண்ணிப் பார்க்கத் தூண்டுகிறது.

"நீக்ரோ மக்களின் அடிமைத்தன்மையைப் போக்கினார் லிங்கன். மக்கள் தங்களின் நன்றியைத் தெரிவிக்கும் வகையில் லிங்கனின் காலில் வீழ்ந்து வணங்கினர். ஆனால் அவர்கள் அவ்வாறு செய்ய வேண்டாம் என்று தடுத்த லிங்கன் 'என்னை வணங்காதீர்கள் கடவுளே உங்கள் வணக்கத்திற்குரியவர் அவர்தான் நீங்கள் அனுபவிக்கின்ற சுதந்திரத்தை வாங்கிக் கொடுத்தார். அவர் சொன்னதை நான் செய்கிறேன். அவ்வளவு தான்"[64]

என்கிறார் லிங்கன். இது அவரின் தன்னடக்கத்தின் வெளிப்பாடாகும்.

**சுசித்ராவின் அனுபவம்**

பலர் கூடும் இடங்களில் பெண்கள் பொதுவான விசயங்களைப் பற்றிப் பேசுவது வழக்கம். மற்றும் ஒருவருக்கொருவர் நலன் விசாரித்தலும் உண்டு. அப்படி நலன் விசாரிக்கின்ற முறையும் அளவோடு இருக்க வேண்டும். நலன் விசாரிப்பதே அவர் மனம் பாதிக்கும் படி அமைந்துவிடக் கூடாது என்பதைச் சிவசங்கரிதன் எழுத்துகள் மூலம் கூறியுள்ளார்.

"சுசித்ரா என்ற பெண் உறவினர் ஒருவர் வீட்டுக்குத் திருமணத்திற்குச் சென்றிருந்தாள். அங்குப் பத்துப் பேர் கூடிப் பேசிக் கொண்டிருந்தனர். அதில் ஒரு பெண் சுசித்ராவிடம் பேச்சுக் கொடுக்கிறாள். அவள் சுசித்ராவிற்கு முன்பின் அறிமுக ஆகாதவர்.

'நீ யாரு? இதற்கு முன் நான் உன்னைப் பார்த்ததில்லையே', என்று கேட்கிறாள்.

சுசித்ரா, அதற்கு நாங்க இந்த ஊருக்குப் புதுசு, இத்தனை வருஷம் பம்பாயில் இருந்தோம் என்கிறாள்.

அப்படியா? புருஷன் என்ன செய்கிறார்?

'வியாபாரம்'

குழந்தைகள் எத்தனை?

இ... இன்னும் பிறக்கவில்லை!

ஆ... கல்யாணம் ஆகி எத்தனை வருஷமாச்சு?

நான்கு வருஷம்.

முருகா! நாலுவருஷம் ஆகியுமா இன்னும் ஒன்னும் இல்லை?

வேணாம்ன்னு இருக்கேளா?

அதெல்லாம் ஒன்றும் இல்லை.

பிறகு டாக்டரைப் பார்த்தீர்களா?

இவ்வளவு கேள்வியும் அடுக்கடுக்காகக் கேட்டதையும், சுற்றி இருப்பவர் Ãார்வையெல்லாம் தன்னையே பார்ப்பதாகவும் உணர்கிறாள் சுசித்ரா. அவமானமாகவும், தான் என்னவோ குற்றம் செய்து விட்டது போலவும் உணர்ந்து, நேரம் ஆகிவிட்டது. நான் வருகிறேன் என்று கூறி அந்த இடத்திலிருந்து எழுந்து வந்துவிடுகிறாள்."[65]

சுசித்ராவின் வருத்தம் பொது இடங்களில் அறிமுகம் இல்லாதவரிடம் எத்தனை கேள்விகள்? குற்றம் செய்தவரை விசாரிப்பது போலப் பண்பில்லாத செயல் என்று வருத்தப்படுகிறாள்.

பல பெண்கள் இவ்வாறு தான், மற்றவர்களிடம் வீண் பேச்சு பேசி அவர்கள் மனதைப் புண்படுத்துவதை வழக்கமாக்கிக் கொண்டுள்ளனர்.

சிவசங்கரி எடுத்துக்காட்டும் சுசித்ராவின் அனுபவம், தனிமனிதர் பொது இடங்களில் எப்படி நடந்து கொள்ள வேண்டும்? என்பதை மற்றவர் புரிந்து நடக்க வழியாகும் என்பது தெரிகிறது.

## 'பிரதாப்' அனுபவம்

'பிரதாப்' Äந்திரன் என்பவரின் நண்பர். ஒருநாள் சந்திரன் வீட்டிற்குச் சென்றார் பிரதாப். அங்குச் சந்திரனின் சகோதரர் பிரதாப்பிடம் பேசுகிறார். அவருக்கு வயது நாற்பது இருக்கும். மகப்பேறு அற்றவர். அவர் பிரதாப்பிடம் கேட்கிறார்.

"எங்கு வேலை செய்கிறீர்கள்? உங்களுக்குச் சம்பளம் எவ்வளவு? உங்கள் வீட்டிற்கு எவ்வளவு வாடகை கொடுக்கிறீர்கள்? உங்கள் மனைவி வேலை பார்க்கிறாரா? அவருக்கு எவ்வளவு சம்பளம்?"[66]

என்று கேள்விகளை அடுத்தடுத்து அடுக்கடுக்காய்க் கேட்டது,

பிரதாப்பிற்கு அவரிடத்து இருந்த மரியாதை நீங்கி விட்டது. அத்துடன் பிரதாப்பின் மனமும் வருத்தம் அடைந்தது.

என்ன மனிதர்கள் புதுமனிதரிடம் எப்படிப் பேச வேண்டும் என்ற நாகரிகம் கூடத் தெரியாமல் மனிதர் வாழ்கிறாரே என்று பிரதாப் மனம் நொந்து கூறுகிறார்.

"அன்றாட வாழ்க்கையில் ஒருவர் கடைப்பிடிக்க வேண்டிய பண்பு, அவரவர் தனித்தன்மை, விருப்பு வெறுப்பு இவைகளைப் பொறுத்தது தான் என்றாலும் பொதுவாகத் தான் சார்ந்திருக்கும் சூழ்நிலை, சமுதாயத்தின் விதிமுறைகள் இவற்றுக்கேற்ப நடந்து கொள்வது தான் நாகரிகமான செயல் ஆகும்" என்று சிவசங்கரி கூறியுள்ளார்."[67]

மேலை நாடுகளில் ஒரு பெண் அல்லது ஆண் பொது இடங்களில், அலுவலகங்களில், நண்பர்களின் இல்லங்களில் இன்னும் பல சந்தர்ப்பங்களில் சூழ்நிலைகளில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது குறித்துப் பல நூல்கள் வெளிவந்துள்ளன.

தமிழர்கள் பழம் பெரும் பண்புமிக்கவர்கள். ஆனால் அவர்கள் நடை முறையில் அவற்றைக் கடைப்பிடிப்பதில் அக்கறை செலுத்துவதில்லை. அதற்குக் காரணம், ஒன்று மற்றவரை அவர் மனம் நோகப் பேசித் தான் உள்ளுக்குள் மகிழ்தல் எனும் குணமும், அல்லது தெரிந்திருந்தும் அதனை நடைமுறையில் காட்ட மறுக்கும் குணமுமாகும்.

**இல்லங்களில் கடைப்பிடிக்கும் பண்பு**

வீட்டிற்கு யார் வந்தாலும் அவரை வரவேற்று அமரச்செய்து, அருந்த நீர் கொடுத்தல் நல்ல பழக்கம். பெரியோருக்குக் குழந்தைகளை அறிமுகம் செய்து வைக்கும் போது எழுந்து வணங்குதல் போன்றவற்றைப் பெற்றோர் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுப்பதுடன் தானும் அதைக் கடைப்பிடித்தாக வேண்டும். இவற்றைச் சரியாகச்

செய்பவர் மற்றவர் வீட்டிற்குத் தான் செல்லும் போது கடைப்பிடிக்கச் சில முறைகள் உண்டு. அம்முறைகளால் உறவுகள், நண்பர்களிடையே நன்மதிப்பும், இனிமையான சூழலும் உருவாகும்.

**விருந்தோம்பல்**

இன்றைய காலகட்டத்தில் விருந்தோம்பல் என்பது ஒரு சடங்கு போல் நிகழ்த்தப்படுகிறது. அதனைச் செய்ய வேண்டும் என்பதற்காக ஒருநாள் குறித்து நண்பர்கள், உறவினர்கள் அழைக்கப்படுகின்றனர். அவர்களுக்கு விருந்துகொடுத்து, பேசி மகிழ்ந்து பொழுது கழிக்கப்படுகிறது. சிலர் சுற்றுலா சென்று மகிழ்க்கின்றனர். இந்த முறைகள் இன்றைய சூழ்நிலையில் நடைமுறையில் உள்ளது.

இம்முறைகள் போற்றுதற்குரியனவாகின்றன. இதில் விருந்துகளில் கலந்து கொள்ளும் நட்புக்களும், உறவுகளும் தான் செல்லுகின்ற இடத்தில் நல்ல நிலையில் நடந்து கொள்ளல் இன்றியமையாதது. அங்கு எந்தச் சங்கடங்களும் நேர்ந்துவிடாதவாறு காக்கப்படவேண்டும். இது உறவு மேலும் மேம்பட உதவுவதாகும்.

**நண்பர்/உறவுகள் இடத்திற்கு செல்லும் போது கடைப்பிடிக்க வேண்டியவை**

அழைத்தவர் இல்லத்திற்கு விருந்துக்குச் செல்லும் போது கூடுமானவரையில் குறிப்பிட்ட நேரத்தில் அங்கு செல்வது தான் மரியாதை, சிறப்பும் ஆகும்.

"ஏழு மணிக்கு ஒருவரை அழைத்திருந்தால், அவர் சரியாக ஏழுமணி அல்லது சற்று முன்பின் செல்லலாம். மற்றபடி குறிப்பிட்ட நேரத்திற்குச் செல்லும் பழக்கத்தைக் கட்டாயம் வளர்த்துக் கொள்ள வேண்டும். அப்படி முன்னால் போகும் போது அழைத்தவருக்குச் சில சங்கடங்கள் ஏற்படும். குடும்பத் தலைவி அப்போது சமையலில் ஈடுபட்டிருக்கலாம். கணவர் கடையில் ஏதோ பொருள் வாங்கச் சென்றிருக்கலாம். வந்தவர்கள் இருவரும் முகத்தைப் பார்த்துக் கொண்டு, அவர்களுக்கு இடையூறாகவும் அமர்ந்திருக்கும் சூழலை ஏற்படுத்துதல் இனிமையாகாது"[68] என்பது சிவசங்கரியின் கருத்தாகும்.

**விருந்துக்குச் சென்ற இல்லங்களில் உணவு பரிமாறுதல்**

நண்பர் இல்லத்தில் உணவு பரிமாறும் போது வீட்டுத் தலைவியே அதனைச் செய்வார். அப்போது, அவர் விருப்பம் இல்லாமல் அவர் கையிலிருந்து உணவுப்பொருளை வலியப் பெற்றுப் பரிமாறுதல் நாகரிகம் ஆகாது. சிலர் உதவி செய்கிறேன் என்று இவ்விதம் நடந்து கொள்வர். அதைப் பலர் விரும்புவதில்லை.

**பந்தியில் அமர்ந்து உண்ணுதல்**

ஆண்கள் பெண்கள் இருவருக்கும் இடையே முதலுரிமை என்று வரும் போது ஆண்கள் குழந்தைகளுக்குத்தான் உணவு உண்ணும் நிலையில் முதல்பந்தி. பிறகு தான் பெண்கள் உண்பர். இது தமிழ்நாட்டுப் பண்பாகக் கருதப்படுகிறது. அதனால் அவர்கள் வாங்க சாப்பிட என்றழைத்தவுடன் கணவருடன் சேர்ந்து தானும் போய் அமர்ந்து விடுதல் அந்த இடத்தில் சிறப்பாகாது.

**மற்றவர் விசயங்களில் தலையிடுதல்**

தெரிந்தவர், தெரியாதவர் யாராக இருந்தாலும் அவர்களின் சொந்த (அந்தரங்கமான) விசயங்களை அவர்களாகச் சொல்லாமல் தாமாகச் சென்று கேட்கக் கூடாது. மூன்றாம் மனிதன் முன்பு மற்றவரின் சொந்தவிசயங்களை விமர்சித்தல் சில நேரங்களில், தேவையற்ற சிக்கல்களை உண்டாக்கிவிடுகிறது. அதனால் அடுத்தவர் மனம் அறிந்து செயல்படல் அந்த இடத்தில் தன்னுடைய மதிப்பை உயர்த்திக் கொள்ள முடியும்.

**அலுவலகங்களில் கடைப்பிடிக்க வேண்டிய பழக்கவழக்கம்**

**1. தொலைபேசியில் பேசுவது**

மக்கள் தொடர்புச் சாதனங்களில் தொலைபேசி பெரும் பங்கு வகிக்கிறது. அதன் பயன்பாடு படிக்காதபாமரர் முதல் நாட்டின் உயர்குடிமகன் வரை அனைவருக்கும் இன்று இன்றியமையாத

தேவையாகியுள்ளது. அதைப் பயன்படுத்தும் முறையைச் சிவசங்கரி சுட்டிக் காட்டியுள்ளார்.

தொலைபேசியில் பேசும் போது பேசுபவர், தான் சுழற்றின எண் சரிதானா? என்பதை உறுதி செய்தபின். அந்த மனிதரின் பெயரை அழைத்து அவர் தான் பேசுகிறாரா என்பதை அறிந்து பேச வேண்டும்.

தொலைபேசி மணி அடித்தவுடன் அதனை எடுத்து எதிர் முனையில் இருப்பவர் 'ஹலோ' என்று கூறியவுடன், தொலைபேசி அழைப்பு விடுத்தவர் தன்னை அறிமுகம் செய்து. தான் எதிர்பார்க்கும் நண்பர் அல்லது உறவினர் அவர்தானா! அல்லது அவர் இருக்கின்றாரா? என்பதை அறிந்து பேசுவது பண்பாகும். அதைவிட்டு எதிர்முனையில் இருப்பவரை 'யார்பேசுவது' என்று நாகரிகம் இல்லாமல் கேட்கக்கூடாது. இன்று பலரும் இந்த முறையில்தான் பேசுகிறார்கள். இது தவிர்க்கப் பட வேண்டிய ஒன்றாகும்.[69]

**அலுவலகத்தில் மற்றவருடன் பழகும் முறை**

இன்று பெண்கள், ஆண்களுக்குச் சமமாக எல்லாப் பணிகளிலும் ஈடுபட்டு வருகின்றனர். இப்படி இருபாலரும் இணைந்து பணியாற்றும் இடத்தில் ஒருவருக்கொருவர் மரியாதையுடன் தன் சுயமதிப்பைக் காத்து நடத்தல் பண்பாகும்.

இங்கு ஒவ்வொரு தனிமனிதனும் கவனத்துடன் பேசிப்பழகுதல் இன்றியமையாத தாகும். உயர் அதிகாரிகளும், தனக்குக் கீழ் பணியாற்றும் பணியாளர்களைப் பண்போடு தான் நடத்த வேண்டும். குறிப்பாகப் பெண் பணியாளர்களைப் பெயர்சொல்லி அழைக்கும் நிலையில் திருமதி, செல்வி என்றோ, அல்லது ஆங்கிலத்தில் மிஸ், மிஸ்ஸஸ் என்று குறித்து அவர்களின் பெயரை சுட்டி அழைத்தல் வேண்டும். இவ்வாறு அழைப்பது உயரதிகாரியாக இருப்பவரின் பண்பையும், மதிப்பையும் உயர்த்தும். அங்குப் பணிபுரிபவரும், தன்னை மரியாதையுடன் நடத்துகின்றனர் என்ற உணர்வுடன் சிறப்பாகப் பணிபுரிவர். இச்சூழலைப் பணியிடங்களில் அவசியம் உருவாக்கல் வேண்டும்.

இல்லங்களில் பெரியவர்கள் வயதில் சிறியவர்களை அழைக்கும் போது அம்மா, அம்மணி, பாப்பா, தங்கை, அக்கா என்று பொதுப் பெயரிலோ, உறவுப் பெயரிலோ அழைக்கின்றனர். இந்த முறையை வெளியிடங்களிலும், பணி இடங்களிலும் அழைத்தல் முறையல்ல என்ற போதும், மரியாதைப் பெயர்களான சார், மேடம் என்று அழைப்பது சிறப்பானதாகும். இருபால் நண்பர்கள் பொது இடத்தில் பெயர் சொல்லி அழைத்து, அதனால் நல்ல நண்பர்களிடையே ஏற்பட்ட ஒரு சிக்கலை இங்கு முன்னுதாரணமாகக் காட்டியுள்ளார் சிவசங்கரி.[70]

"உஷா என்ற பெண்ணும், பாலகோபால் என்ற ஆணும் ஒரே அலுவலகத்தில் பணிபுரிபவர்கள் நல்ல நண்பர்கள் அவர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் பெயர் சொல்லி அழைக்கும் அளவிற்கு உற்ற நண்பர்கள். ஆனால் அவர்கள் ஒரு கருத்தை அங்கே கடைப்பிடிக்க மறந்துவிட்டனர். ஒரு முறை அலுவலகக் கூட்டம் ஒன்றில் உஷா தன் நண்பரான பாலகோபாலைப் 'பாலா' என்று அழைக்க, அந்த நண்பர், "அது எப்படி நீ என்னை எல்லார் முன்னாலும் பெயரிட்டு அழைக்கலாம். அலுவலகத்தில் உனக்கு நான் மானேஜர், "மிஸ்டர் பாலகோபால் என்று அழைப்பது தானே முறை" என்று கோபமாகக் கேட்டு சூழலையே மாற்றிவிட்டார்."[71]

இத்தகைய தவறுகளைத் தவிர்க்க, எவ்வளவு தான் நெருங்கிய நண்பராயினும் தான் பழக ஆரம்பிக்கும் போதே ஒருவரது விருப்பு வெறுப்புகளைத் தெரிந்த கொள்வதும், ஒருவரை ஒருவர் மரியாதையுடன் பேசிப் பழகவும் தெரிந்து கொள்வதே சிறந்த பண்பு ஆகும்.

**மற்றவருடன் பழகும் முறை**

பொதுவாக இருபால் நண்பர்கள் அலுவலகங்களில் பேசும் போது தங்களுக்குள் ஒரு எல்லையை வகுத்துக் கொள்வது நல்லது. அதிலும் ஆண்களுடன் பழகும் போது எச்சரிக்கை உணர்வுடன் பழக வேண்டும். இந்தியப் பண்பாடு அத்தகைய கட்டுக்கோப்பு மிக்கது. இன்று

உலகலாவிய நிலையில் பண்பாட்டுப் பரிமாற்றம் ஏற்பட்டாலும் சில விதிகள் கட்டாயமாகப் பின்பற்ற வேண்டியதாகவே உள்ளது.

**நிர்மலாவின் கள்ளமற்ற நடத்தை**

நிர்மலா எல்லோரிடமும் கலகலப்பாகப் பேசிப்பழகும் பண்புடைய பெண். யாரையும் தன் பேச்சு இனிமையால் எளிதில் நண்பராக்கிக் கொள்ளும் திறமிக்கவள். கூச்சம், வெட்கம் என்பது கிடையாது. அந்தப் பெண்ணின் 43 ஆவது வயதில், அவளின் கணவரின் நண்பர் ஒருவர் நிர்மலாவிடம் தவறாக நடந்து கொள்ள முற்பட்ட போது, நிர்மலா துடிதுடித்துப் போய் "நீங்களா இப்படி?" என்று கேட்க, அவர், "நீ சகஜமாய் என்னிடம் பழகிப் பேசியது தான், என்னை இப்படி நடக்கத் தூண்டியது" என்று பழியை இவள் மீதே சுமத்தி விட்டார். நிர்மலா அதிர்ந்து போனாள். "அந்த நண்பரின் பேச்சு தனக்கு ஒரு போதிமரமாக அமைந்தது. இனியொரு தடவை இப்படி நடக்க இடம் தர மாட்டேன். அதற்கு, என் பண்பை நான் மாற்றிக் கொள்ள வேண்டும் என்று புரிந்து கொண்டு மற்றவரிடம், அளவான கட்டுப்பாடான பேச்சுடன் இருக்கிறேன். அந்த நிகழ்வு தனக்குப் பெரும் அதிர்ச்சியைத் தந்தது" என்கிறாள்."[72]

எல்லோரிடமும் இயல்பாகக் கலகலப்பாகக் கேலி பேசிப் பழகுதல் கூட, ஒருவரைத் தவறாகப் புரிந்து கொள்ளவும், நடக்கவும் வைக்கும் என்பது நிர்மலாவின் வாழ்க்கை ஒரு பாடமாகக் காட்டியுள்ளது.

வீட்டில் பெற்றோர் ஒருவருக்கொருவர் மரியாதையாக அழைத்துக் கொள்வது. அவர்தம் குழந்தைகளுக்கு நல்ல பாடமாக அமையும். குழந்தைகளையும் மரியாதையுடன் போங்க, வாங்க என்று அழைப்பது நாகரிகமான முறையாகவும், நல்ல பண்பாகவும் விளங்கும்.

**உடை உடுத்துதல்**

'ஆடையில்லா மனிதன் அரைமனிதன்' என்பது அனுபவமொழி. மனிதவாழ்க்கையில் உணவுக்கு அடுத்து உடை முக்கிய இடம்

வகிக்கிறது. உடை உடலை மறைப்பது பாதுகாப்பது என்ற நிலையிலிருந்து, 'அழகு' உணர்விற்குரியது என்றான போது, 'ஆள்பாதி ஆடைபாதி' என்ற பழமொழி தோன்றியது.

ஒரு மனிதனைக் கம்பீரமாகக் காட்டுவது ஆடையே. தன்னம்பிக்கை ஊட்டுவதும், ஆடையாகும். மனிதன் வரலாற்றில் பல வகையான ஆடை வகைகளை அணிந்து வந்துள்ளான். தமிழகம் தட்பவெப்பம் மிக்க நாடு. அதனால் அதன் நிலைக்கு ஏற்ப ஆடை அணிந்து வந்துள்ளான். கோடை காலத்திற்கு ஏற்ற பருத்திஆடை, குளிர் காலத்திற்கு ஏற்ற கம்பளி ஆடை, விழா காலத்திற்கும், வசதிக்கும் தக்கவாறு பட்டாடையும், நைலான் ஆடையும் அணிந்துள்ளனர்.

> *"புகைவிரித் தன்ன பொங்குதுகில் உடீஇ*
> *ஆவி யன்ன அவிர்நூற் கலிங்கம்"*[73]

என்று புகையைப்போலவும், நீராவியைப் போலவும் மென்மையான ஆடை அணிந்த நிலையைச் சங்க இலக்கியம் காட்டுகிறது.

> *"பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்*
> *கட்டும் நுண்வினைக் காருகர் இருக்கை"*[74]

இப்பாடலடிகள் தமிழர் பட்டு, கம்பளி, பருத்தி நூலால் ஆன உடைகளைத் தாங்களே தயாரித்துள்ளனர் என்பதை எடுத்துக் காட்டுகின்றன.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் உடல் அமைப்பிற்குத் தக்கவாறு உடை வேறுபாடு உள்ளன. ஆனால் இன்று ஆண் பெண் இருபாலரும் ஒரே மாதிரியான குழாய்ச் சட்டை அணியும் வழக்கம் பண்பாட்டுப் பரிமாற்றமாக மாறியுள்ளது.

பெண்கள் இன்று வீட்டைவிட்டு வெளியில் வந்து படித்துப் பட்டம் பெற்று, பல உயர் பதவிகளில் பணி புரிகின்றார்கள். அவர்களின் தோற்றப் பொலிவிற்கு ஆடை பெரிதும் துணை நிற்கிறது.

**மகளிர் மன்றம் செல்லும் போது**

பெண்கள் இன்று பல சமுதாய மேம்பாட்டுக் காரியங்கள், தனிமனித மேம்பாட்டுக் காரியங்களைத் திறம்பட நடத்துகின்றனர். அதில் திறமையானவர்கள், தலைமை ஏற்று நல்ல செயல்களைச் சூழல்களை வெல்லும் படியாகச் செய்து வருகின்றனர். இந்நிலையில் அவர்களின் பண்பு உயர்ந்து நிற்க, அவர்கள் ஆடை அணிவதில் சில விதிகளைக் கடைப்பிடிக்கின்றபோது மற்ற எளிய, ஏழ்மையான பெண்களின் முன் விமர்சனத்துக்கு ஆளாகாமல் இருக்க முடியும். சிவசங்கரி இது குறித்து எழுதும் போது தன் கருத்தை வெளிப்படுத்துகின்றார்.

“சாதாரணமாக மாதர் சங்கத்திற்குச் செல்லும் போது சரிகை போட்ட பட்டுப் புடவையும், கோட் ஸ்டாண்ட் மாதிரி நகைகளையும் அணிந்து வரும் பெண்மணிகள் மிகவும் நல்லவர்களாக இருந்தாலும் பார்ப்பவர்கள், இது என்ன வேஷம்! தனக்கு இருப்பதை இப்படி வெளிக்காட்டிக் கொள்ள வேண்டுமா? இது என்ன பண்பில்லாத பகட்டுச் செயல்' என்று தவறாகப் பேசியதை நான் கேட்டிருக்கிறேன்” என்று கூறுகிறார்.”[75]

பெண்கள் அதிகமான அலங்காரத்தைக் குறைத்து நேர்த்தியான ஆடையும், பளிச் சென்று முகத்தில் ஒரு புன் சிரிப்பும் காணப்படுவதே அழகு என்கிறார்.

**அலுவலகத்திற்கு உடை உடுத்தல்**

நல்ல உள்ளம் கொண்ட பல பெண்கள் தங்களின் செயல்களால் பலரின் விமர்சனத்திற்கு ஆளாகிறார்கள். மல்லிகா என்ற பெண் எப்போதும் மிகவும் மெலிதான கண்ணாடி போன்று ஊடுருவிக் காட்டும் தன்மைகொண்ட நைலான், ஷிஃபான் போன்ற ஆடைகளையே உடுத்தி வருவாள். அந்தப் பெண்ணை அலுவலகத்தின் மற்ற பெண்கள் “மேனாமினுக்கி” என்று பெயர் வைத்து மறை முகமாக அழைக்க ஆரம்பித்து விட்டனர். இப்படி மற்றவரின் வெட்டிப்பேச்சுக்கு இடம்

தராமல் பெண்கள் கவனமாக உடைஉடுத்த வேண்டும் என்பது சிவசங்கரியின் கருத்தாகும்.

### துக்கம் விசாரிக்கச் செல்லும் போது

"துக்க வீடுகளுக்குச் செல்லும் பெண்கள் கவனமாக உடை உடுத்துதல் வேண்டும். இறந்தவர்கள் வீட்டுக்குச் சர்வ அலங்கார பூஷிதையாகச் செல்வதும், சுபகாரியங்கள் நடக்கும் இடத்துக்குத் தலையை விரித்துக் கொண்டும் செல்வது கூடாது. அது இக்காலத்து நாகரிகம் என்று சொல்லுவது ஏதோ ஒரு காரணத்தை வைத்துக் கொண்டு வம்புக்கு இழுப்பதும் நிச்சயம் பண்பு குறைவான செயல்"[76] என்று சிவசங்கரி கூறியுள்ளார்.

ஆரோக்கியமான சமுதாயத்திற்குத் தனிமனிதனின் செயல்பாடுகள் இன்றியமையாததாகின்றன. அதற்காகத் தான் சில விதிமுறைகளை முன்னோர் அமைத்து வைத்துள்ளனர். அந்த விதிமுறைகளே பண்பாட்டுக் கூறுகளாக விளங்குகின்றன.

### எதிர்பார்ப்புகளைக் குறைத்துக் கொள்ளல்

இன்றைய சூழலில் தனிமனிதன் எதிபார்ப்புகளை வளர்த்து வருகிறான். அது கிடைக்காத போது ஏமாற்றம் அடைகிறான். அந்த ஏமாற்றம் வெறுப்பை, கோபத்தை, கசப்பை உண்டாக்குகிறது. அதனால் நெருங்கிய உறவு, நட்புக் கூட முறிந்து விடுகிறது. எத்தகைய உயர்ந்த மனிதர்களாய் இருந்தாலும் எப்போதும் அடுத்தவரின் எதிர்பார்ப்புகளுக்கு ஈடுகொடுத்து நடத்தல் முடியாது. அதனால் தனி மனிதன் முடித்த அளவு எதிர்பார்ப்புகளைக் குறைத்தும், முழுவதும் இல்லாமலும் வாழப் பழகிக் கொள்வதும் நலம் பயக்கும். இப்பண்பு தனிமனிதன் கடைப்பிடிக்க வேண்டிய பண்புகளுள் ஒன்றாகும்.

### நினைவுகளை அசை போடுதல்

சிங்கம் கம்பீரமாக நடைபோட்டு வரும் ஆனால் அது தான் நடந்து வந்த பாதையை மீண்டும் ஒரு முறை திரும்பிப் பார்த்து

நடக்கும். அது தான் அரிமா நடை எனப்படும். மனிதரும் தான் நடந்து வந்த பாதையைத் திரும்பிப் பார்த்து, சரி பார்த்துச் கொள்ளுதல் வேண்டும்.

"கிராமங்களில் மாடுகள் புல் வெளியில் மேய்ந்து வந்து பின் ஓரிடத்தில் அமர்ந்து அசைபோடுவது போல், மனிதர்களும் நினைவுகளை அசைபோட்டு வேண்டாதவற்றை நீக்க வேண்டும்"[77] என்பார் சிவசங்கரி.

**தனிமனித வாழ்க்கையில் ஏற்படும் மாற்றங்களை ஏற்றுக் கொள்ளுதல்**

மாற்றம் இருந்தால்தான் வளர்ச்சி ஏற்படும். வளர்ச்சி இல்லாமல் இருந்தால் எதுவும் தேங்கி நிற்கும். குட்டையாகப் பாசி படர்ந்து, கொசுக்கள் மொய்த்து வேண்டாத கழிவுகள் சேர்ந்து அசுத்தமாக மாறி விடும். வளர்ச்சி வேண்டுவோர் மாற்றத்திற்குத் தங்களைத் தயார் படுத்திக் கொள்ள வேண்டும்.

தனிமனித மேம்பாடு என்பது உறக்கம், பசிபோன்றது. ஒவ்வொரு தனிமனிதனும் தன்னுடைய வளர்ச்சிக்குத் தான்தான் முனைந்து செயலாற்ற வேண்டும். தான் செல்லுகின்ற வழி சரியானது தானா? என்று அறிந்து நடத்தல் வேண்டும். ஆங்காங்கே வழிகாட்டி மரங்களை நட்டு வைக்கலாம். ஆனால் அவை தன்னுடன் வராது என்ற எண்ணமும் உடன் இருத்தல் விழிப்புணர்வாகும்.

இத்தகைய விழிப்புணர்வு இருந்தால் அது அழுத்தமான சிந்தனைக்கு அடித்தளமாக அமைந்து தனிமனிதனைப் பல வழிகளில் மேம்படுத்திச் செல்லும் என்பது உறுதியாகும்.

**தனிமனிதனின் உடல்நலன் மேம்பாடு**

உழைப்பிற்கு அஞ்சாதவன் தமிழன். அதனால் உழைப்பையே முதன்மையாகவும், முக்கியமாகவும் கருதுகிறான். உழைப்பிற்கு அடித்தளமாக விளங்குகின்ற உடல்நலம் குறித்த விழிப்புணர்வு பெற வேண்டும். உழைப்பும் உடலும் சம நிலையில் இருக்க வேண்டும்.

அத்துடன் உணவுப் பழக்கமும் சரியான முறையில் அமைதல் மனித வாழ்வுக்கு இன்றியமையாததாகும்.

**உடல்நலம் காத்தல் அன்று**

முனிவர்களும் சித்தர்களும் உடல்நலத்தைப் பேண வழிமுறைகளைச் சொல்லிச்சென்றனர். உடம்பு ஒரு கோயில் என்றும் அதில் வாழும் உயிர் இறைவன் என்று கருதினர். அதனால் உடலைப் பேணினர்.

திருமூலர்,

*"உடம்பார் அழியின் உயிரார் அழிவார்*
*திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்*
*உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்*
*உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த்தேன்."*[78]

என்றும்,

*"உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்*
*உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்*
*உடம்புளே உத்தமன் கோயில் கொண்டானென்று*
*உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே."*[79]

என்றும் குறிப்பிட்டுள்ளதால் அறியலாம்.

ஓம்புதல், பேணுதல் என்பன நோய் நொடி இல்லாமல் காத்தல் ஆகும். உடலுக்கு உரம் ஊட்டுவன உணவும், உடற்பயிற்சியும் ஆகும். உடற்பயிற்சியில் கடின உழைப்பும் அடங்கும். முறையான உடற்பயிற்சியாக யோகாசனம், நடைப்பயிற்சி போன்றவற்றைச் செய்தல் உடலைப் பேணுதலுக்கு உரியதாகும். உடலை இயக்கும் மனதைக் கட்டுக்குள் வைக்க தியானம் செய்தல் வேண்டும் தியானத்தால் மனம் அமைதியும் ஒழுங்கும் அடைகிறது.

திரு.வி.கல்யாணசுந்தரனார் உடல் நலம் எப்படிப் பேண வேண்டும் என்பதை உரைநடையால் உரைக்கின்றார்.

உடல்நலனுக்கு ஏற்ற உடற்பயிற்சி, நீராடல் உடல்தூய்மைக்குக் காற்றில் உலாவல் தூயகாற்றைச் சுவாசித்தல், ஞாயிற்றொளியில் நிற்றல், பொருந்திய உணவருந்துதல் போகத்தில் அளவாயிருத்தல் முதலியன. ஒழுக்கமுறைகள் ஆண், பெண் இருபாலருக்கும் தேவை என்பார்.

பண்டைக்காலத்தில் மூச்சுப்பயிற்சி சிறுபருவம் முதலே கற்றுக் கொடுக்கப் பட்டுள்ளது. அதைக் கூறுகிறார் திரு.வி.க.

பண்டைக் காலத்தில் பிராணாயாமம் முதலிய பயிற்சிகள் ஐந்து வயதில் தொடங்கப்படும். பதினாறு வயதில் இப்பயிற்சிகள் முழுமை எய்தும். அவ்வயதில் திருமணத்துக்குரிய இயல், திறம், உரம் முதலிய யாவும் உடலுக்குக் கிடைத்து ஆடவன் முழுமை பெற்று விளங்கியுள்ளான். பெண்ணும் பன்னீராண்டில் திருமணத்துக்குரிய யாவும் பெறுவள் என்பார்.[80]

பிராணாயாமம் எனப்படும் மூச்சுப் பயிற்சி குறித்து, திருமூலர் கூறுவது.

*"புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை*
*நெறிப்பட வுள்ளே நின்மல மாக்கில்*
*உறுப்புச் சிவக்கும் உரோமம் கருக்கும்*
*புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே"*[81]

என்பார்.

மூச்சுப்பயிற்சி மேனி பளபளப்படையவும், கூந்தல் கருநிறம் பெறவும் உரமாக உடல்வளம் பெறவும் செய்வதனால் இறைவன் உடலில் தங்கி இருப்பான் என்கிறார்.

**புலனடக்கம்**

மனம்போனபடி மனிதன் செல்லாமல் அறிவு வழி நின்று வாழ வேண்டும். அதற்கு புலனடக்கம் என்று பெயர். இதனை,

> "உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
> வரன் என்னும் வைப்பிற்கோர் வித்து."[82]

என்ற குறளால் அறியலாம். மனவலிமையினால் புலன்களை நெறியில் கொண்டு செல்ல வேண்டும். நெறியில்லா நிலைக்குச் சென்றால் மனம் உழன்று தவிக்கும்.

**தியானம்**

தியானம் குறித்து எம்.எஸ். உதயமூர்த்தி குறிப்பது, மனதை ஒருநிலைப்படுத்துதலே தியானம் ஆகும். இதனால் உடல் ஒரு கட்டுப் பாட்டிற்கு வருகிறது. புத்துணர்ச்சி ஏற்படுகிறது. முறையான வாழ்க்கைக்கு அது துணை நிற்கிறது.

"தியானம் செய்யும் போது மனம் ஒரு கட்டுப்பாட்டில் இருக்கிறது. ஒரு நெறியில், ஓர் அமைதியில் எங்கோ ஏதோ ஒன்றுடன் ஐக்கியமாகி விடுகிறது. இதன் விளைவாக, செய்யும் காரியங்களில் ஒரு தெளிவு உண்டாகிறது. ஓர் ஆக்க சக்தி மனிதனுக்குக் கிடைக்கிறது. அது வேலைகளிலும் வெளிப்படுகிறது. ஒரு நிதானம் ஏற்படுகிறது. மனதின் சூழ்நிலையைத் தனது கட்டுக்குள் வைத்திருப்பதாக உணரமுடிகிறது. நாள்தோறும் காலையிலும், மாலையிலும் ஒரு பதினைந்து நிமிடங்கள் தியானம் செய்வது மற்ற இருபத்து மூன்றரை மணி நேரத்தையும் சிறப்பாகவும், பயனுடையதாகவும் ஆக்கிவிடுகிறது என்பார்."[83]

தியானத்தால் மனிதனின் செயல்பாடுகளில் ஒழுங்குநிலை ஏற்படுகிறது. புலன்கள் கட்டுக்குள் நிற்கின்றன. உடல் வலிமை பெற்று உரம் பெற்று ஆரோக்கியம் அடைகிறது.

இதனை,

> *"பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு*
> *மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன*
> *மேய்ப்பாடும் உண்டாய் வெறியும் அடங்கினால்*
> *பார்ப்பான் பசுஐந்தும் பாலாய்ச் சொரியுமே."*[84]

என்று திருமந்திரம் குறிப்பிடுகிறது.

மனிதன் தன்னைத்தானே ஆராய வேண்டும் என்பார் திருமூலர். மனிதனுக்குள் இருக்கும் புலன்கள் பசு எனப்படும். அவை மேய்ப்பான் இல்லாமல் வெறிபிடித்து திரிகின்ற மாடுகள். அவை மேய்ப்பவரால் காக்கப்படுகின்றன. அதனால் பசு எனும் புலன்கள் அன்பு, அருள் எனும் பாலைச் சொரிகின்றன.

**யோகம்**

இன்று யோகப் பயிற்சி சிறைக் கைதிகளுக்கும் கற்றுத் தரப் படுகிறது. அங்கு யோகப் பயிற்சி பெற்ற கைதிகள், தங்களிடம் ஏற்பட்ட மாற்றத்தைக் கூறுகிறார்கள். மருத்துவர்கள் பயிற்சிபெற்ற நோயாளிகளின் நலம்பற்றி விளக்குகிறார்கள்.

**சுதர்ஸன் கிரியா**

உடல் மற்றும் மன அழுத்தத்தை கட்டுப்படுத்துவது. உடல் நலத்தைக் கெடுக்கும் உயர் ரத்த அழுத்தம், மைக்ரேன், முதுகுவலி, மூட்டுவலி, போன்றவற்றை நீக்குகிறது என்று மருத்துவர்கள் கூறுகிறார்கள்.

சுதர்ஸன் கிரியா - செய்தபின், மத்தியில் வெப்பப்படுத்தப்பட்ட இரும்பு கம்பியின் முனைகள் எவ்வாறு வளைகின்றனவோ அவ்வாறு 'என் வாழ்க்கை மாறிவிட்டது' என்று காஷ்மீர் தீவிரவாதி ஒருவர் உதம்பூர் சிறையில் பயிற்சி பெற்றவர் கூறுகிறார்.

டாக்டர். கிரண்பேடி ஐ.பி.எஸ்.,

"மூச்சுப்பயிற்சியின் மூலம் மன அழுத்தம் குறைதல், உணர்ச்சிகளையும், மனதையும் சமமாக வைத்தல், ஒருவரிடம் உள்ள நல்லாற்றலை வெளிக் கொணர்தல் ஆகியவற்றை 'வாழும்கலை' பயிற்சி தருகிறது. இதைப் பார்க்கும் போது மகிழ்ச்சியாக இருக்கிறது. திகார் ஜெயில் ஒரு சாபம் என்று சொல்லியதெல்லாம் மாறி, இன்று நல்லதோர் இடம் என்று பாராட்டும் படியாகிவிட்டது"[85] என்கிறார்.

**மருத்துவர் கூறும் வழிமுறை**

அன்று அனுபவத்தால் சித்தர்களும் ஞானிகளும் உடல் ஓம்பலை எழுதிவைத்தனர். பயிற்சியைச் சொல்லி வைத்தனர். உணவே மருந்தாகவும் மருந்தே உணவாகவும் இயற்கையோடு இணைந்த பழக்க வழக்கங்களைக் கொண்டிருந்தனர். அதனால் அவர்கள் நோய் நொடியின்றிப் பல்லாண்டு சிறக்க வாழ்ந்தனர்.

இன்று பழக்க வழக்கத்தாலும், உணவு முறைகளாலும் மரபுகள் மீறப்பட்டுள்ளன. அதனால் மனிதன் பலவகையான உடல்நலச் சிக்கல்களைச் சந்திக்க வேண்டியுள்ளான். மருத்துவர்களும் உடல் நலம் பேண, கடைப்பிடிக்க வேண்டிய வழிமுறைகளைக் கூறுகின்றனர்.

**நூறாண்டு வாழ வாழ்த்துதல்**

வள்ளுவர், "தும்மினால் நூறு ஆண்டு வாழ்க என வாழ்த்துதல் அவசியம்" என்று கூறுவார். 'நான் அவருடன் பிணக்கம் கொண்டிருந்தேன். அப்பிணக்கத்தை மாற்றக் கருதிய தலைவர், தாம் தும்மினால் நான் பிணக்கம் மறந்து வாழ்த்துவேன் எனக் கருதித் தும்மினார்' எனத் தலைவி கூறுவதாகத் திருவள்ளுவர் கூறுகின்றார்.

> *"ஊடி இருந்தேமாத் தும்மினார் யாம்தம்மை*
> *நீடுவாழ் கென்பாக்கு அறிந்து"*[86]

குழந்தைகள் தும்மும் போது நூறு, இருநூறு என்று வாழ்த்துதல் இன்றும் வழக்கில் உள்ளது.

புலவர்கள் மன்னர்களைப் பல்லாண்டு பலகோடி ஆண்டுவாழ்க என வாழ்த்தியுள்ளனர்.

ஆனால் இன்று மனிதன் நோயாலும், நொடியாலும் அற்ப ஆயுளில் இறந்து விடுகின்றான். அதற்குக் காரணம் அவனது வாழ்வியல் முறை மாற்றம் அடைந்ததாகும்.

உலகில் நூறாண்டுக்கு மேல் வாழ்ந்தோர் எண்ணிக்கை புள்ளி விவரத்துடன்

| | | |
|---|---|---|
| இத்தாலி கார்தீனியாவில் | - | 16 |
| கவாயில் | - | 20 |
| கனடா, நோவா, ஸ்காட்டியாவில் | - | 21 |
| சீனா, பர்மாவில் | - | 24 |
| ஜப்பானில், ஒக்கினோவாவில் | - | 34 |

"ஐரோப்பிய நாடுகளில் 2002 ஆம் ஆண்டு பிறந்த குழந்தைகள் பலரும் 2072 வரை வாழ்வார்களாம். அவர்கள் தீர்க்கமான ஆயுள் ரேகையைக் கொண்டவர்கள் என்று கூறும் நெல்லை சு.முத்து அவர்கள், இந்த வரிசையில் பூரண ஆயுள் வரை படத்தில் இந்தியாவையே காணோம்"[87] என்று குறிப்பிடுகின்றார்.

**சுறுசுறுப்பான இயக்கமே மனிதனை நீண்ட நாள் வாழச் செய்கிறது**

மனிதன் அதிகபட்சம் 122 ஆண்டுகள் வாழ்கிறான் என்றால் அதற்குக் காரணம் அவன் சுறுசுறுப்பாக இயங்குவதாகும். வேகமான வளர்சிதை மாற்றத்தினால் உடலில் தனித்த அணுத்தொகுதிகள் (Free radicals) உருவாகின்றன. அவையே வயது ஆகாமல் காக்க உதவும் ஆக்கிரண சக்தியாகும். அவை உடலுக்கு எதிர்ப்புச் சக்தியைத் தந்து உடல் உழைப்பிற்கும் உதவுவனவாக உள்ளன.

**பண்டைக் காலத்தில் உடல் உழைப்பு**

ஆடவர்கள் வயல்வெளிகளில் கடுமையாக உழைத்தனர். கலப்பையால் உழுதனர். மண்வெட்டி கொண்டு நிலத்தைக் கொத்திப்பாடுபட்டனர். பாறைகளை உடைத்து வீடுகள் கட்டினர். இப்படி மூச்சை இழுத்து அடக்கி வேலை செய்யும் உத்திகளைப் பயன்படுத்தும் போதும் அவர்களுக்கு வேலை எளிதாவதுடன் மூச்சுப் பயிற்சியும் ஏற்படுகிறது.

பெண்கள் மூச்சை உள் இழுத்து அடக்கி அம்மி அரைத்தனர், உலக்கை கொண்டு இடித்தனர். இவற்றால் நல்ல மூச்சுப் பயிற்சி கிடைத்தது. அதோடு மட்டும் அல்லாமல் பல மைல் தூரம் நடந்தே சென்று வந்தனர். கிராமங்களில் நீர் எடுத்துவர ஆற்றிற்கோ, ஏரி, குளங்களுக்கோ ஊருக்குப் புறம்பாக உள்ள இடங்களுக்கு நடந்து சென்று வந்தனர். கடின உழைப்பு, சமச்சீரான ஓய்வு, உறக்கம் கொண்டனர். ஆரோக்கியமாக நீண்ட நெடிய நாள் வாழ்ந்தனர்.

இன்று அந்நிலை மாறியுள்ளது. மாறிவரும் அறிவியல், தொழில்நுட்பத்தால் வசதிகளும், வாய்ப்புகளும் பெருகிவிட்ட சூழலில் உடல் உழைப்பு குறைந்து விட்டது உட்கார்ந்த இடத்திலேயே இருந்து பணி செய்வதும், குளிர்ச்சாதன வசதிகள் கொண்ட அறைகளில் பல மணிநேரம் அமர்ந்து பணியாற்றுவதும் அவர்களிடம் ஒரு இறுக்கத்தை, சோர்வை உண்டாக்கி வருகிறது. அதனால் நோய்வாய்ப்படுகின்றனர்.

இந்த நிலையை மாற்ற நெல்லை சு.முத்து எட்டு மந்திரங்களைத் தொகுத்து வழங்குகிறார்.

**1. உடல் வெப்பநிலை**

"உடம்பைக் கதகதப்பாக வைத்துக் கொள்ளுதல் *1980-88* ஆம் ஆண்டுகளின் மத்தியில் பால்டி மோர், ஜான்ஸ்ஹாப்கின்ஸ் பல்கலைக் கழக ஆய்வில் இலகுவான கதிரியக்கம் உடம்புக்கு நல்லது என்று கண்டறிந்து கூறியுள்ளனர்.

## 2. சுற்றுச் சூழலைப் பேணுதல்

நீண்ட ஆயுளுக்கு 70% சுற்றுச் சூழல் காரணமாக அமைகிறது என்கிறார். சிக்காகோ இல்லினாய்ஸ் பல்கலைக் கழக ஆய்வாளர் எஸ்.ஜே.ஒல்ஷான்ஸ்கி என்பவர்.[88]

பண்டைக்காலத்தில் மனிதன் இயற்கையோடு இயைந்த வாழ்வு நடத்தினான். பசுமையும் குளிர்மையும் நீர்மையும் நிறைந்ததாக சுற்றுச் சூழல் அமைந்திருந்தது. மனிதன் இன்பமாக வாழ்ந்துள்ளான். இன்றுச் சுற்றுச்சூழல் மக்கள் தொகைப் பெருக்கத்தாலும், தொழில்சாலைகள், வாகனப் போக்குவரத்துக்கள் இவற்றாலும் பஞ்ச பூதங்களும் பாழ்பட்டுப் போயுள்ளன. அதனால் புதிது புதிதாக நோய்கள் தோன்றி வருகின்றன. அன்று வயிற்றுப் போக்கு, காய்ச்சல் போன்றவையே சாதாரண நோயாக இருந்தது. இன்று நோய்களின் வகைகள் எண்ண முடியாமல் பல்கிப்பெருகியுள்ளன. இந்தியாவின் மக்கள்தொகையைப் போல் டெங்கு, பிளேக்கு, சிக்குன்குனியா போன்ற நோய்கள் சுற்றுச் சூழல் மாசு அடைவதால் ஏற்படுகின்ற நோய்களாகும்.

## 3. தனிமையைத் தவிர்த்தல்/மகிழ்ச்சியாக இருத்தல்

சமுதாயத் தொடர்புகளால் மூளை சுறுசுறுப்பு அடைகிறது. நோய்தடுப்புத் திறனும் பெருகுகிறது. வாழ்வில் மன முறிவும் சோர்வும் ஏற்படாது காக்கப்படுகிறது. கூட்டுக்குடும்பம், நண்பர் கூட்டம், அண்டை வீட்டார், செல்லப் பிராணிகள் வளர்ப்பு என்று ஏதேனும் ஒரு துணையுடன் வாழும் போது வாழ்க்கை மகிழ்வாக, பாதுகாப்பு உணர்வோடு விளங்குகிறது.

குடும்பத்தில் சந்தோஷமாக வாழும் ஆண்களுக்குச் சராசரி 7 வயது கூடியுள்ளது. பெண்களுக்கும் வாழ்நாளில் 2 ஆண்டுகள் கூடியுள்ளன. இந்த உண்மையை 1858 ஆம் ஆண்டு வில்லியம்ஃபார் என்னும், உலகின் முதல் ஜனப்பெருக்கவியல் ஆய்வாளர் அறிவித்துள்ளார்.

### 4. மனதிற்கு மகிழ்ச்சி தரும் சிரிப்பு

வாய்விட்டுச் சிரித்தால் நோய்விட்டுப்போகும் என்ற பழமொழி அனுபவ மொழியாக விளங்குகிறது. அதனாலேயே இன்று மக்கள் பல கூட்டு அமைப்புகளை உருவாக்கி நகைச்சுவை உணர்வுடன் பேசிச்சிரித்து மகிழுகின்றனர்.

### 5. நேர்மறைச் சிந்தனைகள்

திருவள்ளுவர் கூறும் உள்ளுவதெல்லாலம் உயர்வுள்ளல் என்பது நேர்மறைச் சிந்தனையாகும். எதையுமே இது நன்றாக உள்ளது. நன்றாக நடக்கும் என்று நம்பவேண்டும். அதை நம்பிக்கை என்றும் கூறலாம்.

நேர்மறைச் சிந்தனை மனிதனின் மன அழுத்தத்திற்குக் காரணமான கார்டிசோல் எனும் சுரப்புநீர்ம அளவைத் தணிக்கிறது. அதனால் உடலின் நோயெதிர்ப்புத்திறன் பெருகுகிறது. கார்டிசோல் குறைவதால் இருதய நோயும், மூளைப்பாதிப்பும் கட்டுப்படுகிறது என்கிறது எடின்பர்க் பல்கலைக் கழக ஆய்வு.

### 6. நோய்க்குச் சிகிச்சைக் கொடுத்தல்

நோய் வருவது முன் காப்பது அவசியம். அப்படி வந்துவிட்டால் உடனடியாக அதற்கான காரணத்தை அறிந்து உடனேயே சிகிச்சைபெறுதல் வேண்டும்.

*"நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்*
*வாய்நாடி வாய்ப்பச் செயல்"*[89]

நோய்வராமல் காக்க மேற்கொள்ள வேண்டிய வழிமுறைகள். மனிதன் தன்னை முழுமையாக ஏதாவது ஒரு பணியில் ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும். வேலை செய்யாமல் வெறுமன அமர்ந்து தனிமையிலிருந்தால், பல வேண்டாத சிந்தனைகள் தோன்றும் அவை நோயை உண்டாக்கும். அதனால் உடலுக்கும், மனதுக்கும் பயிற்சி அளித்தல் அவசியம். தோட்டம் வளர்த்தல், புத்தகம் படித்தல்,

குறுக்கெழுத்துப் போட்டிகளில் பங்குபெறல், கவிதை எழுதுதல், வீட்டு வேலைகள் செய்தல், நடைப்பயிற்சி உரையாடல் என்று தன்னை ஏதாவது ஒருபணியில் ஈடுபடுத்திக் கொள்வது நலம். "மனதில் வேண்டாத எண்ணங்களான சிலந்தி வலையைப் படர விட்டால் பின்னர் அந்த ஒட்டடையை நீக்குவது சிரமம்" என்பார் சுடலை முத்து.

**7. பயிற்சிகள்**

நீடு வாழ தியானம், யோகா, ஏதேனும் குறிக்கோள், அதை அடைய முயற்சியுடன் கூடிய செயல் செய்தல் வேண்டும்.

**8. உணவுக் கட்டுப்பாடு**

> "*மருந்துஎன வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது*
> *அற்றது போற்றி உணின்.*"[90]

அதாவது மனிதன் முன்பு தான் உண்டதை அறிந்து உண்பான் என்றால், அவன் உடலுக்கு மருந்தே தேவையில்லை என்பார் வள்ளுவர்.

மேற்கூறிய எட்டுக் கருத்துக்களை நினைவில் கொண்டு மனிதன் வாழ்நாளை அதிகரித்து வாழ்வாங்கு வாழவேண்டும் என்பார்[91] சு.முத்து.

**நல்வாழ்வு வேண்டுதல்**

மாறிவரும் சூழலுக்கு ஏற்ப மனிதன் வாழ வேண்டும். தன் வாழ்க்கை முறையை அமைக்கவும், அக்கறை கொண்டு நல்ல பழக்கவழக்கங்களை மேற்கொள்ள வேண்டும்

தனிமனிதனின் உடல்நலக் கேட்டிற்கு உணவுப் பழக்கவழக்கமும் அவசரகதி வாழ்க்கை முறையும் காரணமாகிறது.

முதலில் மனிதன் தன்னிலை உணர்தல் வேண்டும் என்ற வேத வாக்கியத்துடன் மனம், புத்தி, ஆன்மா உடல் இவற்றைப் பேண முனைகிறான். திருமூலர் கூறிய ஊனுடம்பு ஆலயம் என்ற வாக்கியத்தை உணரத்துடிக்கிறான். அதனால் உடலைச் சீராக, சிறப்பாக வைத்துக்

கொள்ள அவன் எண்ணிய எண்ணம் ஈடேறும் நிலையையும் அடைகிறான்.

### மனநலன் பேணுதல்

உடல் நலமுடன் செயல்பட மனம் முக்கிய கருவியாகிறது. மனமும் புத்தியும் தெளிவு பெறக் கல்வியும் அனுபவங்களும் துணைநிற்கின்றன. பாரம்பரிய கல்வியான குருகுல முறை மாணவரின் உடல், மனம், புத்தி என்ற மூன்றையும் செம்மைப்படுத்த உதவுகிறது.

### இன்றைய கல்விமுறை

இன்று கல்வி முறை குழந்தைகளுக்குச் சுமையாகவே அமைந்துள்ளது. சுமையான கல்வியை எண்ணிக் குழந்தைகள் கல்வியையே வெறுக்கின்றனர். பரபரப்பான சூழலில் பெற்றோர் இருவரும் வேலைக்குச் செல்லும் நிலையில் குழந்தைகள் பணியாட்களின் கவனிப்பில் விடப்படுகிறார்கள். பணியாட்கள் குழந்தைகளைச் சரியாகப் பேணப்படாத நிலையில், பெற்றோருக்கு அது பெரும் குறையாகப் படுகிறது. குழந்தைகளிடம் அன்பைப் பொழிவதற்குப் பதில் அவர்கள் கேட்டதெல்லாம் வாங்கிக்கொடுத்து, அது கிடைக்காதபோது அழுது அடம்பண்ண வழிவகுத்தும் விடுகின்றனர். இதனால் பல பெற்றோர்கள் மனச் சிக்கல்களும், உடல்நலக்கேடும் அடைந்து வாழ்க்கையில் அமைதியை இழக்கிறார்கள்.

குழந்தைகள் வளர் இளம் பருவத்தினர். பெற்றோரின் கவனிப்பு இல்லாததால் வழி தடுமாறும் நிலைக்குத் தள்ளப்படுகிறார்கள். போதைப் பொருள், புகைபிடித்தல் போன்றவற்றிற்கு அடிமையாகி விடுகின்றனர். காலம் கடந்த நிலையில் இவற்றை உணரும் பெற்றோர் மனம் வருந்தித் தற்கொலை செய்து கொள்ளும் நிலைக்கு சென்று விடுகிறார்கள். இந்நிலைமாறப் பள்ளிகளில் கல்விமுறை விளையாட்டுடன் கூடியதாக அமைதல் நல்லது. வளர் இளம் பருவத்துப் பிள்ளைகளுக்குக் கட்டாய விளையாட்டு, யோகா, தியானம் போன்ற பயிற்சிகள் அளிக்கப்பட வேண்டும்.

**பெற்றோரும் பிள்ளைகளும் கற்கவேண்டிய அஞ்சாமை நிலை**

உடல்நலம் சீர்கெட பலகாரணங்கள் இருந்தாலும், மனதைச் செம்மையாக வைத்தால் நலம் பெறலாம். மனிதன் எதைக்கண்டும் அஞ்சும் நிலையிலிருந்து மாற வேண்டும். சிறு சிக்கலையும் பெரிதாக்கி அதன் விளைவுகளைக் கற்பனை பண்ணி அஞ்சும் நிலையிலிருந்து விடுபடல் வேண்டும்.

"சுகமாக வாழவைத்த செடியைவிடத் துன்பங்களைத் தாங்கிக் கொண்டு வாழ்ந்த செடியே செழித்து வளருவதைத் தாவரவியல் நிபுணர் விஞ்ஞானி ஜெகதீஸ் சந்திரபோசு நிரூபித்துக் காட்டியுள்ளார். ஒரு கிளையை முறித்து விட்டால் அம்மரம் சோர்ந்து விடுவதில்லை. மாறாக, முறிக்கப்பட்ட இடத்தில் ஒன்றிற்கு மேற்பட்ட கிளைகள் தோற்றுவிக்கப்படுகின்றன."[92] எனவே, மனிதன் பிரச்சனைகளைச் சந்திக்க முன்வர வேண்டும். அதற்கான தீர்வுகளைத்தானே சிந்தித்து தீர்க்க முயலவேண்டும். இறைவன் உயிர்களையும் படைத்தான். நெருஞ்சி முள்ளையும் படைத்தான். மனிதன் அதன் வகை தெரிந்து பயன்படுத்த வேண்டும்.

"நெறியைப் படைத்தான் நெறிஞ்சில் படைத்தான்
நெறியில் வழுவின் நெறிஞ்சில் முள்பாயும்
நெறியில் வழுவாது இயங்க வல்லார்க்கு
நெறியில் நெறிஞ்சிமுள் பாகி லாவே."[93]

வாழ்க்கையில் நல்வழியும், இடர்களும் உண்டு. நல்லவற்றை மனிதன் தேர்ந்தெடுக்க வேண்டும். வழியில் முள் இருந்தால் ஒன்று அதை எடுத்து ஓரமாக எறிதல் வேண்டும். அல்லது அந்த வழியை விட்டு வேறுபாதையில் செல்ல வேண்டும்.

இப்படி நெறியில் வாழ பண்டைத் தமிழர் பல வழிகளைக் கூறிச் சென்றுள்ளனர். ஆனால் இன்றுள்ள பரபரப்பான சூழலில் மனிதன் அவற்றைப் பின்பற்றாமல் இன்னல்களுக்கு ஆளாகிறான்.

உடல் நலத்தைப் பேணவும் சம நிலையில் வைத்துக் கொள்ளவும் வழிகளைக் கூறுகிறார் சிவசங்கரி. அவை வருமாறு

**உடல் நலத்தில் சமநிலை தவறுவதால் ஏற்படும் நோய்கள்**

உயர்ரத்த அழுத்தம்
குடற்புண்
சர்க்கரைநோய்
ரத்தக்கொழுப்பு மிகைப்பு
புகைபிடித்தல்
புற்றுநோய்
உடற்பருமன்[94]

இவற்றால் மாரடைப்பு போன்ற மரணத்தைத் தருவிக்கும் நோய்கள் உண்டாகின்றன. இவற்றிலிருந்து விடுபட மனிதன் பின்பற்ற வேண்டிய வழிமுறைகள் வருமாறு:

1. உடற்பருமனைத் தவிர்த்தல்.
2. கொழுப்பு குறைந்த உணவும், இயற்கையான பழங்கள், காய்கறிகளும் நிறைந்த உணவு முறையைக் கடைப்பிடித்தல்
3. நாள்தோறும் நடைப்பயிற்சி உள்ளிட்ட உடற்பயிற்சிகள் மேற்கொள்ளல்.
4. புகைப்பிடித்தலைக் கட்டாயமாகத் தவிர்த்தல்.
5. உயர் ரத்த அழுத்தம், சர்க்கரை நோய் மற்றும் ரத்தமிகைக் கொழுப்பைக் கட்டுப்படுத்துதல்.
6. மன அழுத்தத்தைத் தவிர்த்தல், மன அழுத்தத்தைத் தவிர்க்க இசை ஒரு மருந்தாகப் பயன்படுகிறது. மென்மையான ஒலியாலான இசையைக் கேட்பதும் பாடுவதும் மன அழுத்தத்தைத் தவிர்க்கிறது.

**உடல்பருமனும் பெண்களும்**

ஆண்களுக்கு நிகராக இன்று பெண்கள் பணிபுரிகின்றனர். எல்லாத் துறைகளிலும் தங்களின் திறன்களை வெளிப்படுத்தும் போது

அவர்கள் போட்டி, பொறாமைகளுக்கும் ஆட்படுகின்றனர். இதனால் பணி இடங்களில் பல இன்னல்களைச் சந்திக்க வேண்டிய கட்டாயத்திற்கும் உள்ளாகிறார்கள். அவர்கள் உடலில், மன உணர்வுகளில் பல மாறுதல்கள் ஏற்படுகின்றன. அப்போது உடல்நலத்தைச் சமச்சீராக வைக்க உதவும் நாளமில்லாச் சுரப்பிகள் ஒழுங்கான நிலையில் சுரக்காமல் உடல்நலம் பாதிக்கப்படுகிறது. தைராய்டு சுரப்பி அதிகமாகவோ, குறைவாகவோ சுரப்பதனால் உடல் பருமன் ஏற்படுகிறது. மற்றும் உணவுப்பழக்கம், சரியான உடல் பயிற்சியின்மை ஆகியவையும் உடல் பருமனுக்குக் காரணமாகின்றன. உடல் பருமன் ஆகி ஒரு தம்பதியரின் வாழ்க்கையில் ஏற்பட்ட பிரச்சனையை விளக்குகிறார் சிவசங்கரி.

**வீணா – ஈஸ்வர் வாழ்க்கை**

வீணாவும் ஈஸ்வரும் காதலித்துப்பின் பெற்றோரால் ஏற்றுக் கொள்ளப்பட்டுத் திருமணம் புரிந்து வாழும் இனிய தம்பதியர். ஈஸ்வருக்கு வீணாவின் கொடிபோன்ற இடையும் அளவான உடல்வாகும் தான் மிகவும் கவர்ந்தது. அதனால் அவளிடம் ஒரு ஈர்ப்பை ஏற்படுத்தி அது காதலாகி குடும்ப உறவு அளவிற்கு வந்தது.

**வீணா மகப்பேறு அடைதல்**

வீணா திருமணமான ஒரு ஆண்டுக்குள் ஒரு குழந்தைக்குத் தாயும் ஆகிவிட்டார். குழந்தை பிறந்த நாள் முதல் வீணாவின் கவனம் முழுவதும் குழந்தையிடம் திரும்பிவிட்டது. குழந்தை பிறந்த ஆறு மாதத்தில் வீணா நல்ல சத்தான உணவுகளை உண்டதாலும், வேறு எந்த வேலையும் செய்யாமல் குழந்தைப் பராமரிப்பிலேயே இருந்ததனாலும் வீணாவின் உடல் அளவிற்கு அதிகமாகப் பருத்துவிட்டது.

**ஈஸ்வரிடம் ஏற்பட்ட மாற்றம்**

வீணாவும் ஈஸ்வரும் குழந்தைப் பிறக்கும் வரை தங்களைவிடச் சந்தோசமாக யாரும் இருந்திருக்க முடியாது என்ற அளவில்

மகிழ்ச்சியாக இருந்தனர். ஆனால் அந்த இனிய எண்ணத்தில் வெகுவாகவே மாறுதல் ஏற்படக் கண்டாள் வீணா. கணவர் ஈஸ்வர் முன்பு போல தன்னிடம் அவ்வளவு அன்பாக நடந்து கொள்ளவில்லையே என்று உணரத் தொடங்கினாள்.

**வீணாவிற்கு ஏற்பட்ட சிக்கல்**

ஓராண்டுக்குள் கணவன் தன்னிடம் முன்பு போல் சிரித்துப் பேசுவதில்லையே என்பதை உணர்ந்து கொண்டவள். வெளியில் அழைத்துச் செல்வதும் இல்லை, எதற்கெடுத்தாலும் குற்றம் குறை கூறுவதும் என்றாகிவிட்டதே என்று சிந்திக்கத் தொடங்கினாள் அதற்கான காரணத்தையும் அறியத் தொடங்கினாள்.

வீணாவின் அண்ணன் வெளி நாட்டில் மருத்துவராகப் பணியாற்றுபவர் - வீணாவைப் பார்க்க வந்தார். அவளின் மனக் குறையை அறிந்து, ஈஸ்வரிடம் பேசிப் பார்த்து, ஈஸ்வரின் இந்த மாற்றத்திற்கான காரணம் என்ன? என்பதை அறிந்து கொண்டார்.

**ஈஸ்வரின் மாற்றத்திற்குக் காரணம்**

ஈஸ்வர் வீணாவிடம் உள்ளத்தைப் பறிகொடுத்ததற்குக் காரணமே அவளின் கொடிபோன்ற இடைதானாம். உடல் அமைப்பு இவையாவும் இன்று மாறி உடல் பருத்துக் கொடி போன்ற இடை இன்று பிடி போன்று பருத்துக் காணப்படுகிறது.. அது ஈஸ்வருக்கு வெறுப்பை உண்டாக்கிவிட்டது. வீணாவிற்குத் தன் உடல் பருத்துவிட்டது என்ற உணர்வே இல்லாமல் இருப்பதும், ஈஸ்வர், அவளை விட்டு விலகக் காரணமானது. அதை ஈஸ்வர் தன் மனைவியிடம் எடுத்துக் கூறி இருக்கலாம். ஆனால், அவன் அதைச் செய்யாமல், அவளை விட்டு விலகிச் செல்ல ஆரம்பித்தது தான் வீணாவிற்குச் சந்தேகத்தைத் தந்தது. இதை உணர்ந்து கொண்டவள் அவனிடம் வாக்குவாதம் செய்யாமல் உடனேயே செயலில் இறங்கினாள்.

**வீணாவின் உறுதி**

தன் கணவனின் போக்கிற்குக் காரணம் தன்னுடைய உடல் பருமனே என்பதை உணர்ந்து கொண்டாள். உடனடியாகச் செயலில் இறங்கி எண்ணி ஆறு மாதத்தில் தன் உடல் நிலையை மாற்றிப் பழைய வீணாவாகி அவருக்குக் காட்டுகிறேன் என்று கூறி உடற்பயிற்சிகளை மேற்கொள்ளத் தொடங்கினாள்.[95]

**உடல்பருமன் குறித்த விழிப்புணர்வு**

இன்று உலக அளவில் உடல் பருமன் பெரும் சிக்கலாகி வருகிறது. காரணம் உடல் உழைப்பு அதிகம் இல்லாமல், உணவுப் பொருள்களில் கொழுப்புச் சத்தும், மாவுச் சத்தும் அதிகமாகச் சேர்த்துக் கொள்வதும் ஆகும்.

மேலை நாடுகளில் இந்த ஆரோக்கிய விழிப்புணர்வு வளர்ந்த மக்களின் அன்றாட நடவடிக்கைகளில் பழக்க வழக்கங்களில் பெரும் மாற்றத்தைக் கொண்டு வந்துள்ளது.

**உணவுகளில் கவனம் செலுத்துதல்**

உண்ணும் உணவுகளின் அளவு, அதில் அடங்கியுள்ள சத்து, இவை உடலின் எடையை அதிகரித்து விடாமல் இருக்க விழிப்புணர்வுடன் செயல்படுகின்றனர்.

**உடல் பருமனைக் குறைக்க உடற்பயிற்சி**

இன்று வயதானவர் முதல் சிறுவர் வரை அனைத்துப் பருவத்தினரும் ஏதாவது விளையாட்டுக்களைக் கட்டாயமாக்கிக் கொண்டுள்ளனர். ஆண், பெண் இருபாலரும் பணிக்குச் செல்வதால் அதிகமாக இரு சக்கரவாகனங்களைப் பயன்படுத்துகின்றனர். அதனால் மாலை வேலைகளில் கடைகளுக்குச் செல்லச் சைக்கிளைப் பயன்படுத்துதல், காலால் நடந்து செல்லல் போன்ற பயிற்சிகளை மேற்கொள்ளுகின்றனர்.

## உண்ணும் அளவும் அதன் சக்தி அளவும்

சிவசங்கரி, உடல் பருமனுக்கு உணவு வகையில் கட்டுப் பாடுகளைக் கொண்டுவர மருத்துவர்களையும், சத்துணவுத் துறை மேலாளர்களையும் அணுகி ஆலோசித்துச் சில வழிமுறைகளைக் கூறியுள்ளார்.

## கலோரி

மனிதன் உண்ணும் உணவிலிருந்து அவன் செயலாற்ற உடலுக்குக் கிடைக்கும் சக்தியைக் கணக்கிடும் யூனிட் தான் கலோரி என்று சொல்லப்படுகிறது.

ஒருவர் செய்யும் வேலை, அவரின் உடல்வாகு இதனைப் பொருத்தே அவருக்கு உணவிலிருந்து சக்திப் பெறப்படுகிறது. செயல்திறனும் அதனை இயக்கத்தேவையான சக்தியும் கிடைக்க மனிதன் உணவு உண்ண வேண்டும். தேவைக்கு அதிகமாகின்ற போது அந்த உணவிலிருந்து பெறப்படும் கலோரி கொழுப்பாக மாறி உடலில் சேர, அதுவே வேண்டாத சதையாக உடலில் வளர்ந்து பெருத்துக் காணப்படுகிறது.[96]

## உடல் பருமன் இளைக்கத்தேவையான பயிற்சிகள்

உடம்பு இளைக்க வேண்டி உணவை அதிகமாகக் குறைப்பதும், அடியோடு சர்க்கரை, கொழுப்புப் பொருள்களை உண்ணாமல் இருப்பதும் அவசியமில்லாத செய்கை. நாள்தோறும் நாம் செய்யும் காரியங்களுக்காக எத்தனை கலோரிகளைச் செலவழிக்கின்றோம் என்பதை முதலில் கணக்கெடுத்து இதற்குக் குறைவாக, உண்ணும் உணவில் கலோரிகள் அமையும் படி பார்த்துக் கொண்டால், மிக எளிதாக வாரத்திற்கு 1/2 கிலோ வீதம் உடல் இளைக்கலாம்.

உதாரணமாக,

"ஒருவர் அன்றாடம் செய்யும் வேலைகள், உடற்பயிற்சி மூலம் 1500 கலோரிகள் செலவிடுகிறார் என்றால் 1000 கலோரி, உணவின்

மூலம் நிச்சயம் குறைக்கலாம். 1/2 கிலோ உடல் எடை என்பது 3500 கலோரிக்குச் சமம். ஒரு நாளைக்கு 500 கலோரிகளைக் குறைப்பதனால் வாரத்திற்கு 3500 கலோரிகள் தவிர்க்கப்படுகின்றன. உணவைக் குறைக்க விரும்பாதவர்கள் உடற்பயிற்சிகளைக் கூட்டி, அதிக கலோரிகளைச் செலவிடுவதாலும் இதைச் சாதிக்கலாம்"[97] என்கிறார்.

மருத்துவரின் ஆலோசனைப்படி, வீட்டில் இருந்தே உடற்பயிற்சிகள் செய்ய மருத்துவரிடம் ஆலோசனைக் கேட்டுச் சிவசங்கரி தன் வாசகர்களுக்கு வழங்குகிறார்.

**உடல் ஆரோக்கியம்**

என் கண்ணோட்டம் என்ற நூலில் ஆரோக்கிய விழிப்புணர்வை தனிமனிதரிடம் ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கில் மருத்துவரிடமிருந்து கருத்துகள் பெற்று வழங்கியுள்ளார் சிவசங்கரி.

**மருத்துவரிடம் ஆலோசனை**

"வீட்டில் இருந்த வண்ணம் தன் உடலைக் கச்சிதமாய் ஒரு பெண்மணி வைத்துக்கொள்ள என்னென்ன செய்ய வேண்டும்? சொல்லுங்கள் டாக்டர்"[98] என்று கேட்கிறார்.

டாக்டர் அதற்குக் கூறும் பதில்,

> "நல்ல உடற்பயிற்சி, சாப்பாட்டு விதிமுறைகள், அழகுக் குறிப்புகள், அலங்காரம் இத்தனையும் ஒன்றுசேரும் போது விளைவு (ரம்யமாக) அழகாக இருக்கும்" என்கிறார்.

அழகு என்பது நிறத்தோடு நின்று விடுவது அல்ல. ஒரு பெண் நிற்பது. நடப்பது. பேசுவது, சிரிப்பது, பழகுவது, அவரின் பழக்க வழக்கம் போன்ற அனைத்தும் ஒன்று சேர்ந்ததாகும்.

**உடற்பயிற்சி**

நிதானமாய் (ஜாகிங்) ஓடுவது. இது ரத்த ஓட்டத்தை அதிகரித்துச் சுத்தம் செய்து பல வகைகளில் உடம்புக்கு நல்லது செய்கிறது. இதைத்

தெருவில் ஓடித்தான் செய்ய வேண்டும் என்பதில்லை. மொட்டை மாடியில், தோட்டத்தில், ஒரு அறையில் சுற்றிச் சுற்றி ஓடலாம் என்கிறார் மருத்துவர். நாள்தோறும் குளிக்கும்முன் குளியல் அறையிலேயே நின்ற இடத்திலேயே ஓடலாம். மூன்று நிமிஷங்கள் ஆரம்பித்து மெதுவாகப் பத்து பதினைந்து என்று நேரத்தைக் கூட்டிச் செய்யலாம். இது ஒரு சிறந்த உடற்பயிற்சியாகும்.

மருத்துவர் ஒரே இடத்தில் நின்று கொண்டு செய்யும் சில உடற்பயிற்சிகள் பற்றிக் கூறுகிறார்.

1. கால்களைச் சேர்த்து வைத்துக் கொண்டு நிமிர்ந்து நிற்கவும், கைகள் பக்கவாட்டில் இருக்க வேண்டும், வலது காலை உயர்த்தி, முட்டியை மார்பு வரைக் கொண்டு சென்று, பின் மெல்ல இறக்குதல் வேண்டும். அடுத்து, இடது கால், இப்படி மாற்றி மாற்றி ஐந்து முதல் பத்து வரை செய்ய வேண்டும். இந்தப் பயிற்சி தொடைச்சதைகளைக் குறைக்க உதவும்.

2. கால்களை அகட்டி நேராக நிற்கவும், கைகள் பக்க வாட்டில் இருக்க வேண்டும், வலப்பக்கம் சரிந்து வலக்கையில் முட்டிக்குக் கீழே தொட முயற்சி செய்ய வேண்டும். பின் மெல்ல நிமிர வேண்டும். அடுத்து இடப்பக்கம் இப்படி மாற்றி மாற்றிப் பத்து முதல் இருபது வரை செய்ய வேண்டும். இவ்வாறு செய்வதால் இடுப்புச் சதை குறையும்.

3. தரையில் நேராக நிமிர்ந்து படுக்கவும், கைகளை பக்கவாட்டில் வைத்துக் கொள்ளவும், மெதுவாக வலது காலை மடக்காமல் இடுப்புக்கு நேராய் உயர்த்தவும். மனதில் நிதானமாக ஐந்துவரை எண்ணவும், பிறகு காலை மெதுவாகக் கீழே இறக்கவும். பின் இடது காலை உயர்த்தி இறக்கவும். இவ்வாறு சிலநாட்கள் மாற்றி மாற்றி தொடர்ந்து செய்து வந்தால் தொந்தி வயிறு குறையும்."[99]

**உணவு முறைகள்**

உணவின் அளவு கலோரிகள் என்ற அளவைக் கொண்டு அளக்கப்படுகிறது. ஒரு மனித உடலுக்கு இத்தனை கலோரி போதும் என்ற அளவு உண்டு.

தேவைக்கு மேல் அதிகமான கலோரி உள்ள உணவு உட்கொள்ளப்படுவதால் உடல் அதிகமாகப் பருத்துவிடுகிறது. உணவைத் திட்டமிட்டு அளவாக உண்ணும் போது கலோரி அளவு கண் காணிக்கப்பட்டு உடல் அளவு சரியான விதத்தில் பேணப்படுகிறது.

| **உணவு வகை** | **கலோரிகள்** |
|---|---|
| இட்லி - 2 | 130 |
| ரொட்டித்துண்டுகள் (2) | 85 |
| பூரி (2) | 100 |
| ரவாஉப்புமா (1 டீ கப் அளவு) | 100 |
| சப்பாத்தி (2) | 200 |
| 30 கிராம் அரிசி சோறு (1 டீ கப் அளவு) | 100 |
| மட்டன் பிரியாணி (150 கிராம்) | 375 |
| மீன் வறுவல் (25 கிராம்) | 150 |
| சாம்பார் 1 கப் | 60 |
| பருப்பு ரசம் 1 கப் | 30 |
| தயிர் 1 கப் | 160 |
| மோர் 1 கப் | 30 |
| வறுத்த கோழி - 2 துண்டுகள் | 160 |
| சுண்டல் (30 கிராம்) | 100 |
| சிப்ஸ் ( 20 துண்டுகள்) | 150 |
| அவியல் 1 கப் | 200 |
| மோர்க் குழம்பு 1 கப் | 75 |
| வத்தல் குழம்பு 1 கப் | 75 |
| பால் 100 மி.லி (ஏடு எடுத்தது) | 75 |

| | |
|---|---|
| *காபி 200 மி.லி. சர்க்கரையுடன்* | *120* |
| *போர்ன்விடா, காம்ப்ளான், ஹார்லிக்ஸ் 200 மி.லி.* | *150* |
| *பால், சர்க்கரை சேர்த்தது* | *150* |
| *டீ பால், சர்க்கரை சேர்த்தது* | *120* |
| *ஆப்பிள் - 1* | *85* |
| *திராட்சை 1 கப்* | *85* |
| *வாழைப்பழம் - 1* | *100* |
| *ஆரஞ்சு - 1* | *50* |
| *வேர்க்கடலை 60 கிராம்* | *250* |
| *100 கிராம் /கீரை வகைகள், புடலை, வாழைத்தண்டு, காலிப்ளவர், தக்காளி, சுரைக்காய், எலுமிச்சை, முட்டை கோஸ், முள்ளங்கி, பூசணி, முருங்கை, வெள்ளரி, வெண்டை, பீர்க்கு, கத்தரி, பீன்ஸ், பாகல்* | *30* |
| *சுட்ட அப்பளம்* | *20* |
| *உருளை, வாழை (1 கப் கறி)* | *150* |
| *ஐஸ்கிரீம் (100 கிராம்)* | *220* |
| *ஸ்வீட் (குலாப் ஜாமூன், மைசூர் பாகு, லட்டு-1)* | *400* |
| *சாக்லேட் (30 கிராம்)* | *140* |
| *பேரீச்சை (30 கிராம்)* | *85* |
| *முட்டை 1 (வேக வைத்தது)* | *90* |
| *கார்ன்ப் பேக்ஸ் 1 கப்* | *95* |
| *சர்க்கரை 1 டீஸ்பூன்* | *25* |
| *வெண்ணெய் 1 டேபிள் ஸ்பூன்* | *100* |

“பொதுவாக வலிமையான பெண் ஒருவருக்கு 2500 கலோரிகள் தேவைப்படும். ஆனால் உடல் மெலிந்து காணப்பட வேண்டும் என்பவருக்கு 1200 முதல் 1400 கலோரிகள் போதுமானதாகும். பால், பச்சைக் காய்கறிகளை அதிகமாகச் சேர்த்து, எண்ணெய், இனிப்பு, அரிசியை குறைத்துக் கொண்டால் 1200 - 1400 அளவான கலோரிகள் கிடைத்துவிடும்”[100] என்கிறார் டாக்டர்.

"உடம்பு இளைக்கிறேன் என்று அசுரத்தனமாகப் பட்டினி கிடப்பதும், குரு இல்லாமல் யோகாசனம் செய்வதும், கண்ட கண்ட விளம்பரங்களைப் பார்த்துவிட்டுக் கன்னா பின்னா என்று முயற்சிகளில் இறங்குவதும் கூடாது என்கிறார். ஒரு பெண் உடம்பு இளைக்க விளம்பரத்தைப் பார்த்து மாத்திரைகள் வாங்கிச் சாப்பிட்டு, பட்டினி கிடந்து ஏதோ மாத்திரைகளைச் சாப்பிட்டதில் உடம்பினுள் என்னவோ விளைவு ஏற்பட்டு இன்று அந்தப் பெண் படுத்த படுக்கை ஆகிவிட்டாள். அவள் தந்தை ஒரு கோடீஸ்வரர். என்ன பணம் இருந்து என்ன?"[101] என்கிறார் டாக்டர்.

மனோ பலத்தை வளர்த்து உறுதியுடன் உணவுக் கட்டுப்பாட்டில் இருந்து அளவான, தேவையான உணவுகளை உண்டு வந்தால் ஆரோக்கியத்துடன் வாழ முடியும்.

**தலைமுதல் பாதம் வரை உடல் பராமரிப்பு**

தலைமுடி நீளமானதோ, குட்டையானதோ அது அழுக்கு, சிக்கு இல்லாமல் பேணப்பட வேண்டும். வாரத்துக்கு 2 முறை எண்ணெய் தேய்த்துக் குளிக்க வேண்டும்.

தலையில் தோல் வறண்டு உதிருவதால் பொடுகு ஏற்படுகிறது. இதற்குத் தனி மருந்து கலந்த ஷாம்பு இருக்கிறது. ஒருநாள் விட்டு ஒருநாள் தேங்காய் எண்ணெய் மயிர்கால்களில்படும் படியாகத்தேய்த்துக் கொள்ள வேண்டும். தினமும் சீப்பு அல்லது புரஷ் கொண்டு குறைந்தது 100 முறை அழுந்த முடியை வாரிவிட வேண்டும். தலைமுடி பளபளப்பாக அடத்தியாக வளர இப்பழக்கம் உதவும் என்கிறார்.

**கண்கள், பற்களைத் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும்**

**கண்கள்**

அதிகம் படித்து, வேலை செய்து சிவந்த கண்களைச் சுத்தமான பன்னீரால் கழுவலாம். ஒரு துணியில் ஐஸ் கட்டியை வைத்து ஒத்தடம் கொடுக்கலாம். இதனால் கண்கள் சோர்வு நீங்கிப் புத்துணர்ச்சி பெறும்.

**பற்கள்**

பற்களைத் தினம் இரண்டு முறை தேய்க்க வேண்டும். முக்கியமாக இரவு படுக்குமுன் முகம் கழுவிப் பல் தேய்க்கச் சோம்பல் படக் கூடாது.

**பருக்கள்**

பரு வருவதற்குக் காரணங்கள் பல. மலச்சிக்கல், காரம், எண்ணெய் சேர்த்த ஆகாரம், அலைச்சல், ஹார்மோன்கள் சுரப்பு என்று பல காரணங்கள் உண்டு. இவை அத்தனையும் மீறிக் கொண்டு அலர்ஜியாலும் பருக்கள் வரலாம். சில சமயம் காரணம் என்ன? என்று புரியாமலும் வருகின்றன. முகத்தைச் சுத்தமாக வைத்துக் கொண்டு மலச்சிக்கல் இல்லாமல் எண்ணெய் உணவு அதிகம் சாப்பிடாமல் இருப்பதால் ஓரளவுக்குத் தடுக்கலாம். வயசுக் கோளாரால் வரும் பருக்கள், வயசு ஆக ஆக தானே மறைந்து விடும். காரணம் புரியாமல் பருக்கள் வந்தால் அதை நினைத்து வேதனைப்படுவதை, கவலைப்படுவதை முதலில் நிறுத்த வேண்டும். கவலை பல வேதனைக்குரிய விளைவுகளைத் தரும்."[102]

**முகத்தைப் பொலிவுடன் வைக்க உதவும் வழிமுறைகள்** *(Face Mask)*

பெண்கள் வீட்டிலேயே தங்கள் முகத்தைப் பொலிவுடன் வைத்துக் கொள்ள எளிமையான வழிகளைக் கூறுகிறேன் என்று மருத்துவர் கூற ஆசிரியர் அவற்றை வரிசைப்படுத்திக் கூறுகிறார்.

1. "ஒரு டேபிள் ஸ்பூன் பால் ஏட்டில் ஒரு ஸ்பூன் கடலை மாவு, கொஞ்சம் மஞ்சள் தூள் கலந்து முகத்தில் தடவி பத்து நிமிஷங்கள் கழித்து வெதுவெதுப்பான நீரால் கழுவலாம்.

2. ஓட்ஸையும், தயிரையும் கெட்டியாய் கலந்து முகத்தில் பூசி, பதினைந்து இருபது நிமிஷங்கள் கழித்துக் கழுவ வேண்டும்.

3. காரட்டைத் துருவி, பாலோடு கலந்து முகத்தில் வரட்டி தட்டுவது மாதிரித் தட்டி லேசாய் காய்ந்ததும் அலம்பவும்.

4. கிளிஸரினோடு, சம அளவு பன்னீரைக் கலந்து பூசி, ஊற வைத்துக் குளிப்பது தோல் சுருக்கங்களக்கு நல்லது.

5. ஒரு ஸ்பூன் எலுமிச்சைச் சாற்றோடு, ஒரு ஸ்பூன் தேனைக் கலந்து தடவி, பதினைந்து நிமிஷங்கள் ஊறுவது சிறப்பானது.

6. முட்டையின் மஞ்சள் கருவை அடித்து ஆலிவ் எண்ணெயுடன் கலந்து பூசி, ஊர வைத்து கழுவுதல் தோலுக்குப் பளபளப்பைக் கொடுக்கும்.

7. வெள்ளரிக்காய் சாற்றையும், பாலையும் கலந்து தடவி காய்ந்த பின் முகம் அலம்புவது நிறத்தைக் கூட்டும்.

8. தக்காளிப் பழச்சாற்றைத் தொடர்ந்து முகத்தில் ஊறவைத்துக் கழுவி வந்தால் முகம் பொலிவுடன் விளங்கும்.

9. நாலு பாதாம் பருப்புகளை ஊற வைத்து அரைத்து, அதோடு கொஞ்சம் தேன், பால் கலந்து முகத்தில் தடவி கால் மணிநேரம் ஊறவிட்டு கழுவ, மாசு இல்லாமல் பொலிவுடன் தோல் காணப்படும்.

10. மோரால் முகத்தைத் தேய்த்துக் கழுவி பின் கடலை மாவு அல்லது பயத்த மாவினால் தேய்த்துக் கழுவுவது தோல் மென்மையாகவும், பளபளப்பாகவும் காணப்படும் என்று டாக்டர் பேசப் பேச நான் பிரமித்துப் போனேன். ஒவ்வொருத்தரின் வீட்டுச் சமையல் கட்டுக்குள் இத்தகைய அழகு சாதனங்கள் ஒளிந்து கொண்டிருக்கின்றன எனவும், இவற்றை விட்டுவிட்டு எவ்வளவு பணத்தைக் கடைகளில், பல கிரீம்களுக்காகச் செலவு செய்து வருகின்றோம் என வியந்து கூறுகிறார் சிவசங்கரி."[103]

**தனிமனிதனின் பொருளாதார மேம்பாடு**

பொருளாதார மேம்பாட்டிற்குத் தனிமனிதனின் சுயமதிப்பீடு இன்றியமையாததாகும். சுயமதிப்பீடு ஒரு மனிதனின் வெற்றிக்கு உடலால் வரும் தடைகளை அகற்றுகிறது. தன்னம்பிக்கை உணர்த்தும் நாலடியார் பாடல் ஒன்று வருமாறு:

*"நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும், தன்னை*
*நிலைகலக்கிக் கீழ்இடுவானும், நிலையினும்*
*மேன்மேல் உயர்த்து நிறுப்பானும், தன்னைத்*
*தலையாகச் செய்வானும் தான்."*[104]

தான் என்ற தன்னம்பிக்கை உருவாக நல்ல உடலும் மனமும் அவசியமாகிறது. நல்ல பழக்கவழக்கம், உடற்பயிற்சிகளுடன் கூடிய ஆரோக்கிய வாழ்வு வாழும் மனிதன், தான் எடுக்கும் எந்தக் காரியத்திலும் முழு வெற்றி பெறுவான் என்பது தெளிவு.

**1. சூழ்நிலையைப் பயன்படுத்தத் தெரிந்தவன் வெற்றியாளன் ஆகிறான்**

பேருந்து நிலையம் ஒன்றில் உட்கார்ந்திருந்த பிச்சைக்காரன் ஒருவனுக்குப் போவோர் வருவோர் எல்லாம் சில்லறைகளை வீசிச் சென்றார்கள். ஒருநாள் பேருந்தில் பயணம் செய்ய வேகமாக வந்த வியாபாரி ஒருவர், பிச்சைக்காரனுக்குக் காசை வீசி விட்டு பேருந்தில் ஏறினார். பின் திடீரென்று என்ன நினைத்தாரோ, மறுபடியும் கீழே இறங்கி அவனிடமிருந்த பொருள்களில் ஒன்றை எடுத்துக் கொண்டு, "இதெல்லாம் வியாபாரத்திற்காகத்தானே!" என்று சொல்லிவிட்டுப் பேருந்தில் ஏறிப் பயணமானார்.

ஓராண்டு கழிந்தது, ஒரு வியாபாரக் கூட்டத்தில் பேருந்து நிலையத்தில் பார்த்த அதே பிச்சைக்காரர் நன்றாக உடை அணிந்து, சுத்தமாக நின்றிருந்தார். அவர் ஓராண்டுக்கு முன் பேருந்து நிலையத்தில் சில்லரையை வீசி ஒரு பொருளை எடுத்துக் கொண்ட வியாபாரியைப் பார்த்து அவர்தான் என்று உறுதி செய்து, பழைய அந்த நிகழ்வை நினைவூட்டினார். வியாபாரியும் அதை நினைவு கொண்டு, இங்கே என்ன செய்கிறீர்கள்? என்று கேட்க, அந்த மனிதர் என் வாழ்வில் முதன் முதலாக என் மதிப்பை எனக்கு உணர்த்தியவர் நீங்கள் தான். மற்றவர்கள் என்னைப் பிச்சைக்காரனாகப் பார்த்த போது நீங்கள் மட்டும் என்னை ஒரு வியாபாரியாகப் பார்த்தீர்கள். நீங்கள் சென்ற பின்பு நான், என்னைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்தேன். நான் யார்?

நான் பேருந்து நிலையத்தில் என்ன செய்கிறேன்? நான் ஏன் பிச்சை எடுக்க வேண்டும்? என்று எண்ணிப் பார்த்து, என்னைப் பற்றிய மதிப்பீட்டைச் சீர் செய்ய உதவியது உங்கள் செயல், என்றார்.

பேருந்து நிலையத்தை விட்டு வெளியேறி உழைக்க ஆரம்பித்தேன். இன்று உங்களில் ஒருவனாக உள்ளேன் என்று கூறினார்.

"சுயதரிசனமும் சுய மதிப்பீடும், அவற்றால் உண்டான குறிக்கோள்களும் அதன் பிறகு தோன்றிய தன்னம்பிக்கையும் தான் இவனது வெற்றிக்குரிய ஆதாரங்கள்"[105] என்பார் டாக்டர் நாராயணராஜா.

பொருளில்லாருக்கு இவ்வுலகில்லை என்பது அனுபவ உண்மை. மனிதன் வாழ இன்றியமையாதன உணவு, உடை, உறையுள். இவற்றை அடையப் பொருள் (பணம்) மிகவும் தேவை. பணத்தை எப்படி பெறுவது, வாழ்க்கையை நிறைவாக வாழப் பணத்தை நேர்மையாகச் சம்பாதிக்கும் முறை, உண்மை, உழைப்பு, தேடிய பொருளைச் சேமித்துச் சிக்கனமாகப் பயன்படுத்துவது இவையாவும் பொருளாதார மேம்பாட்டிற்கு வழி வகுப்பன. அந்த வகையில் சிவசங்கரி உழைப்பால், திட்டமிட்டு, முயற்சித்து, தீர்க்கமாக முடிவெடுத்து வாழ்வின் தேவைகளைப் பூர்த்தி செய்வதுடன் தான் வாழும் சமுதாயமும் பயன்பெற உழைத்தவர்கள் பற்றிய செய்திகளையும் தம்முடைய படைப்பின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். இதனைப் படித்த சிலராவது சிவசங்கரி காட்டிய முன்னோடிகளின் வழிகளைப் பன்பற்றுதல் மனித மேம்பாட்டிற்கு உதவுவதாகும்.

தனிமனிதனின் பொருளாதார முன்னேற்றத்தற்குத் திட்டமிடல் மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். தான் என்ன தொழில் செய்ய விரும்புகின்றேன். அதற்கு எவ்வளவு முதலீடு தேவை. தன்னிடமுள்ள பொருள் எவ்வளவு என்று அலசி ஆராய்ந்து அதில் வரும் சிக்கல்களை ஆய்ந்து, அப்படிச் சிக்கல் வரும் போது அதனை எதிர்கொண்டு தீர்க்கும் வழிகளை ஆய்ந்து செயல்படல் வெற்றியைத் தேடித்தரும். அப்படித்

திட்டமிட்டு செயல் புரிந்து இன்று வாழ்க்கையில் பொருளாதாரத்தின் அடிமட்டத்திலிருந்து மேம்பட்டு வந்துள்ள லட்சுமணன் குறித்து சிவசங்கரி கூறுகிறார்.

## 2. பொருளாதார முன்னேற்றத்திற்குத் தனிமனிதனின் திட்டம் வகுத்து செயலாற்றும் பண்பு

இலட்சுமணன் சிவசங்கரிக்கு அறிமுகமான இளைஞன். அவன் தான் எடுத்திருந்த முடிவையும், திட்டத்தையும், தனக்கு வழிகாட்டியாகத் திகழும் சிவசங்கரியிடம் கூறி ஆலோசனை கேட்கிறான். அவனது தொலைநோக்குத் திட்டத்தை வியந்து சிவசங்கரி இங்கு எழுதுகிறார்.

இலட்சுமணன் குடும்பத்திற்கு மூத்த பையன். படிப்பில் ஆர்வம் மிக்கவன். தான் வளர்ந்து குடும்பத்தைக் காக்க வேண்டும் என்ற பொறுப்புணர்ச்சி மிக்க இளைஞன். இலட்சுமணனின் தந்தை இறந்த பின், தம்பியும் தாயும் இவன் பொறுப்பிற்கு வந்ததனால், தன்னுடைய பட்டப்படிப்பும், படிப்பில் பெற்ற நல்ல மதிப்பெண்ணும் மேற்படிப்பிற்கு உதவவில்லை. லட்சுமணனின் குடும்பப் பொறுப்பு, உடனடியாக தொழில் செய்து குடும்பத்தைக் காக்கும் கடமையை எண்ணியது, திட்டம் வகுத்தது.

இப்போது குடும்பம் நடத்த பொருளாதாரத்தைச் சீர்படுத்த வேண்டிய சூழலில் இலட்சுமணன் சுய வேலை வாய்ப்பைப் பற்றிச் சிந்திக்கலானான். இலட்சுமணன் சிவசங்கரியிடம் தன்னுடைய திட்டத்தைப் பற்றி கூறுமுன் தொலை நோக்குப் பார்வை என்பதை விளக்க, திட்டவிளக்கத்தை ஒரு உரையைப்போல் விளக்கிக் காட்டியது, அவனது கல்வி அறிவு மேம்பாட்டைக் காட்டியது.

### இலட்சுமணனின் தொலைநோக்குப் பார்வை

தென்னம்பிள்ளை கன்றாக இருக்கும் போது அதற்கு சின்ன இடம் போதும். ஆனால் ஏழு எட்டு வருடங்கள் கழித்து அது மதமதவென்று

மட்டைகளை விரித்துக் கொண்டு பிரம்மாண்டமாக வளர்ந்து காய்க்கத் துவங்கும் போது கிட்டத்தட்ட இருபதடி சதுரம் தேவைப்படும் அல்லவா? எதிர்கால வளர்ச்சியைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாமல் இன்றைக்கு இருக்கும் இடம் போதும் என்று நட்டுவிட்டால் மரமும் வளராது. நம் முயற்சிக்கும் பலன் இருக்காது. இதைத் தானே தொலைநோக்கு இல்லாத திட்டம் என்று சொல்கிறார்கள்? இந்தத் துன்பம் எனக்கு வரக் கூடாது. அதனால் இன்று, நாளை, அடுத்த வருஷம், பத்து வருஷங்கள் என்ற நிலையில் சிந்தனை செய்து ஒரு திட்டம் தயாரித்திருக்கிறேன். இதைப் பார்த்து உங்கள் கருத்தைச் சொல்லுங்கள் என்று ஆலோசனை கேட்கிறான் இலட்சுமணன்.

**இலட்சுமணனின் தொலைநோக்குத் திட்டம்**

இப்போது வேலைக்குச் செல்லும் பெண்கள் வீட்டுக்கு வீடு அதிகரித்து வருகிறார்கள். குழந்தைகளைப் பராமரித்து, அவர்களுக்கு ஹோம் ஒர்க் சொல்லிக் கொடுத்து, வீட்டைக் கவனித்து, எல்லா வேலைகளையும் செய்து விட்டு நிமிரும்போது, ஆற அமரச் சமைப்பதற்கு நேரம் இல்லாமல் போகிறது. அதனால் வீட்டுச் சாப்பாடு போல யாராவது மலிவான விலையில் சமைத்துக் கொடுத்தால் வாங்குவதற்கு நிறைய குடும்பங்கள் தயாராக இருக்கின்றன. ஒரு மாதமாக வீடு வீடாக ஏறி விசாரித்ததில் இத்தனை பேர் வாங்கத் தயாராக இருக்கிறார்கள். இதற்கு இத்தனை மூலதனம் தேவைப்படுகிறது. எதிர் பாராத சிரமம் என்றால் என்ன செய்வது, போன்ற புள்ளி விவரங்களோடு லட்சுமணன் பேசப்பேசச் சிவசங்கரிக்குத் திகைப்பும், சந்தோஷமும் அதிகமானதாகக் குறிப்பிடுகின்றார்."[106]

**இலட்சுமணனின் வளர்ச்சி**

சிவசங்கரி அறிமுகம் செய்த வங்கி அதிகாரியைச் சந்தித்து, திட்டங்களைக் காட்டி, கடனுதவி பெற்று அம்மா, தம்பியின் உதவியுடன் சிறிய அளவில் ஆரம்பித்த சாப்பாடு சமைத்து வழங்கிய

வியாபாரம் சரியாக ஒரு வருடத்தில் வளர்ந்து இருபது ஆட்கள் பணியில் சேர்ந்து ஆயிரக்கணக்கில் வருமானம் பெற்றுத் தொழிலில் வெற்றி பெற்றுள்ளான்.

இந்த வெற்றிக்கு அடிப்படைக்காரணம் லட்சுமணனின் இலக்கும், செயல்களும் மிகச் சரியாக அமைந்து நடைபெற்றதாகும்.

சிவசங்கரி லட்சுமணனின் வெற்றியைப் பாராட்டும் போது அதில் உள்ள உண்மையை விளக்குகிறார்.

முதலில் குறிக்கோள், அதைத் தொடர்ந்து சுய அலசல். அதாவது விரலுக்குத் தக்க வீக்கமாக, ஆசை இருக்கிறதா என்று யோசித்திருக்கிறான். ஐந்து நட்சத்திர ஹோட்டல் ஆரம்பிக்க வேண்டும் என்று லட்சுமணன் நினைத்திருந்தால் அது நடந்திருக்காது. பகற்கனவாக முடிந்திருக்கும். ஆனால், என்னால் எவ்வளவு பணம் புரட்ட முடியும், எவ்வளவு உழைக்க முடியும், எவ்வளவு தாண்ட முடியும், எவ்வளவு சாதிக்க முடியும் என்று யோசித்திருக்கிறான்; வெற்றியைப் பெற்றுள்ளான். அருமையான கொள்கை. இப்படி எந்த ஒரு தனிமனிதனும் திட்டமிட்டு, இலக்கு குறி சரியாகச் செயல்புரிந்தால் வெற்றி பெறுவது நிச்சயம் என்று சிவசங்கரி குறிப்பிட்டுள்ளார்."[106]

## சிந்தனைப் பூக்கள்

ஜேம்ஸ் ஆலன் என்ற மேனாட்டு அறிஞர் சிந்தனைப் பூக்கள் எவ்வளவு ஆரோக்கியமாக இருக்கிறதோ, அவ்வளவு அற்புதமாக பலன்கள் என்ற பழங்களும் இருக்கும் என்று சொல்லுவார். சிந்தனைக்கு, உரம் இட இட, செயல்கள் வலுப்பெற்றுப் பலன்கள் சிறப்பாக இருக்கும். இது அனுபவத்தில் பலரும் கண்ட உண்மையாகும்.

## வெற்றி / தோல்வியை ஏற்கும் மனப்பாங்கு

வெற்றியைப் பற்றி அனைவரும் பேசும் போது தோல்வியைப் பற்றியும், வெற்றியைப் பற்றியும் சிந்திக்க வேண்டும். சரியான சூழ்நிலை

அமைந்து, கடுமையான உழைப்பும் இருந்தும் எதிர்பாராத விதமாக, ஏதோ ஒரு காரணத்தால், தோல்வியைச் சந்திக்க, நேரும் போது தோல்வியை ஏற்கும் மனப்பான்மை வேண்டும். திட்டம் இடும்போதே தோல்வியடைந்தால் என்ன செய்வோம் என்கிற கணக்கும் இருக்க வேண்டும்.

தோல்வியே வெற்றிக்கு அறிகுறி என்பது அனுபவ உண்மை. தோல்வி வரும் போது மனம் துவண்டு விடாமல் வெற்றியும், தோல்வியும் மாறிமாறி வருவது தான் வாழ்க்கை என்ற கருத்தை மனதில் கொண்டு முன்னேற்றப் பாதையில் அடியெடுத்து வைக்க வேண்டும்.

**3. முடிவு எடுத்தல்**

பொருளாதார முன்னேற்றத்திற்கு முடிவு எடுத்தல் இன்றியமையாத ஒன்றாகும். இன்று மனிதன் அனுபவிக்கின்ற வசதிகள் யாவும், முன்பு சிக்கலாக, கிடைக்கப் பெறாத ஒன்றாக இருந்தது. நேற்றைய சிக்கல் இன்றைய வளர்ச்சியாகும். இன்றைய சிக்கல்கள் நாளைய முன்னேற்றமாகும்.

ஒரு வெற்றியாளன் எல்லாச் சிக்கல்களிலும் வாய்ப்பைத் தேடுகின்றான். ஒரு தோல்வியாளன், எல்லா வாய்ப்புகளிலும் சிக்கலைக்காணுகிறான் என்பார் தி.க.சந்திரசேகரன்.[107]

கையெழுத்துக் கூடப் போடத் தெரியாத ஒரு சிறுவன் மாதா கோயில் ஒன்றில் வேலைக்குச் சேர்ந்தான். பல ஆண்டுகளாக எடுபிடி வேலைகளைச் செய்துவந்தான். பல பாதிரியார்களிடம், மாதா கோயில் பொறுப்பு மாறிமாறி ஒப்படைக்கப்பட்டது. புதியதாகப் பொறுப்பேற்ற ஒரு பாதிரியார் கையெழுத்துக் கூடப் போடத் தெரியாத உனக்கு இங்கு வேலையில்லை என்று கூறி அந்த இளைஞனை வேலையை விட்டுத் துரத்திவிட்டார். வேதனை, அவமானம் ஆகிய உணர்வுகளோடு, மாதா கோயிலைவிட்டு வெளியே வந்த அந்த இளைஞனைக் குளிர்வாட்டியது. புகைபிடிக்க வேண்டும் என்று தோன்றியது. சாலை நெடுகத் தேடியும் சிரெட் விற்கும் கடை எங்கும்

தென்படவில்லை. ஏன் நாம் ஒரு சிகரெட் விற்கும் கடை வைக்கக் கூடாது? என்று எண்ணி ஒரு கடைதிறந்தான். வியாபாரம் சூடு பிடித்தது. நகரின் பல பகுதிகளில் சிகரெட் கடைகளை வைத்தான். வியாபாரம் மேலும் வளர்ந்தது.

ஒரு நாள் நினைத்தான், 'நான் சிகரெட்டுக்காக அலைந்து திரிந்து அது கிடைக்காதபோது கடைதிறந்தேன்.' இப்படி இந்நகரில் மக்கள் பலவிதமான பொருள்களுக்காக எங்கெங்கோ அலைகிறார்கள். ஏன் எல்லாவிதமான பொருட்களும் ஒரே கட்டடத்தில் கிடைக்கும்படி ஒரு வணிக வளாகத்தை (சூப்பர் மார்க்கெட்) கட்டக் கூடாது? என்று எண்ணினான். கடை தோன்றிப் பல கிளைகளும் நாடெங்கும், உலகெங்கும் அமைக்கப்பட்டது. அதுதான் ஸ்பென்சர் பிளாசா. இப்படித்தான் ஸ்பென்சர் தன்னுடைய வணிகப் பேரரசை உருவாக்கியதாகச் சொல்லுவார்கள்.

ஒரு முறை வங்கி அதிகாரி ஸ்பென்சரிடம் ஒரு படிவத்தில் கையெழுத்திடச் சொன்ன போது, "எனக்கு மட்டும் கையெழுத்திடத் தெரிந்திருந்தால் இன்னும் மாதா கோயிலில் மணி அடித்துக் கொண்டிருந்திருப்பேன்" என்று கூறினாராம்.

சிக்கல்கள் அவனைச் சிதறடிக்கவில்லை. மாறாக ஒரு சீர்மிகு வாழ்க்கையை உருவாக்குவதற்கு அடிகோலின. சிக்கல் வேடமிட்டு வந்த வாய்ப்பு. அதை நம்மில் பலபேர் பார்க்கிறோமேயொழிய உற்றுக் கவனிப்பதில்லை! *(Most of us see things, but we do not look at them)* என்பார் கே.சந்திரசேகரன். [108]

கல்கத்தாவின் சாலை ஓர நடைபாதையில் ஏராளமான பிச்சைக்காரர், நோயாளிகளைக் கண்டார் தெரசா. அவர் மனம் நெகிழ்ந்தது. இங்கே ஒரு சமுதாயச் சிக்கல் இருக்கிறது என்று ஒரு அமைப்பை உருவாக்கினார். அதனைத் தனக்குத் தொண்டாற்றக் கிடைத்த வாய்ப்பாகப் பயன்படுத்தினார். அவருடைய வரலாறு மாறியது. நோபல்பரிசைப் பெற்று, உலகின் தலைசிறந்த பெண்மணி

என்ற இடத்தையும் அடைந்தார். இப்படித்தான் பலரும் சிக்கல்களை வாய்ப்பாகப் பயன்படுத்தி முன்னேறியுள்ளனர் என்கிறது வரலாறு.[109]

**தீர்க்கமான முடிவு**

பொருளாதார மேம்பாட்டிற்கு முடிவெடுத்தல் என்பது மிகவும் இன்றியமையாத ஒரு செயல் ஆகும்.

ஒரு இக்கட்டான சூழ்நிலையில் நிலைகுலைந்து போய்விடாமல், தான் எடுக்கும் முடிவினால் வரக்கூடிய நன்மை தீமைகளை ஆய்வது அறிவுடைய அனுபவமிக்கவர்களின் செயல் ஆகும். இந்த வகையில் இளைஞனான பாலு தன் தந்தை இறந்தபின், அவரால் அனுபவித்து வந்த சுகபோகங்கள், அவர் இல்லாத போதும் தான் அவற்றால் தடுமாறிவிடாமல் நிலைப்பட்டு நின்று தீர்க்கமாக முடிவு எடுத்துத் தந்தையின் நிலைக்கு உயர்ந்த இளைஞன் பாலு. இன்றைய இளைஞர்களும் இவ்வாறு வாழ வளர வேண்டும் என விரும்பும் சிவசங்கரி பாலுவின் முடிவு எடுத்த திறத்தினை வியந்து விளக்குகிறார்.

**பாலுவின் குடும்பம்**

நாகராஜன் தனியார் நிறுவனத்தில் பொது மேலாளராகப் பணியாற்றியவர். சொந்த வீடு உள்ளது. கம்பெனியின் சார்பாக அவருக்குக் கார், வேலையாட்கள் என்று வசதிகள் செய்து தரப்பட்டது. நாகராஜனுக்கு இரண்டு ஆண்பிள்ளைகள் மூத்தவன் பாலு. எம்.ஏ. முதலாண்டு படிப்பவன். இரண்டாமவன் சேகர் பி.காம். இரண்டாம் ஆண்டு படித்துக் கொண்டிருக்கிறான். அவர்கள் குடும்பம் இயல்பாக நடந்து கொண்டிருந்தது.

**நாகராஜின் திடீர் மரணம்**

ஒருநாள் காலையில் நல்ல நிலையில் அனுவலகத்திற்குச் சென்றார். மாலை நாலுமணிக்குப் பிணமாக வீட்டிற்குக் கொண்டு வரப்பட்டார். காரணம் மாஸிவ் ஹார்ட் அட்டாக் என்று டாக்டர்கள் கூறிவிட்டனர்.

இது நடந்து பதினைந்து நாட்களில் கம்பெனியிலிருந்து, கார் எடுத்துச் செல்லப்பட்டது. வேலையாட்களும் நிறுத்தப்பட்டனர்.

**பாலுவின் முடிவு**

இதுவரை பொறுப்புக்கள் அதிகமில்லாமல் வாழ்ந்த பாலு இன்று சிந்தித்து முடிவு எடுக்கும் குடும்பத் தலைவனாக ஆக்கப்பட்டான்.

வீடு கட்டக் கம்பெனியில் கடன் வாங்கியது போக, கையில் கிடைத்திருப்பது ஒரு சில ஆயிரங்கள் தான். இந்தப் பணத்தை வங்கியில் தன் அம்மாவின் பெயரில் வைப்புத் தொகையாகச் செய்துவிட்டான். அப்பாவின் கம்பெனியில் பாலுவிற்கு உதவி மேனேஜர் பதவி தர முன் வந்துள்ளனர். அதனைப் பாலு ஏற்றுக் கொண்டான். அவர்கள் வீட்டின் மாடிப் பகுதியில் அம்மா தம்பியுடன் பாலு தங்கிக் கொண்டு, கீழ்ப் பகுதியை வாடகைக்கு விட்டுவிட்டான் ரூ.1200க்கு.

மிகவும் புத்திக் கூர்மையுடன் சிந்தித்துத் திட்டமிட்டுப் பாலு செய்த செயல் இன்று, அவனை வர்த்தக மேலாளர் (பர்சேஸ் மேனஜர்) ஆகப் பதவி உயர்வு அடையச் செய்துள்ளது. தம்பி சேகரை எம்.பி.ஏ., படிக்கவைத்தான். தன் அம்மாவைக் கண்ணுக்குள் வைத்துத் தாங்குகிறான். பாலு போன்ற இளைஞர்கள், இக்கட்டான சூழலில் தடுமாறிவிடாமல் சிந்தித்துச் செயல்படப் பாலு வாழ்க்கை ஒரு முன்னுதாரணமாகும்.[110]

**4. தனிமனித முயற்சி**

முயற்சி செய்து கடுமையாக உழைத்து எப்படியும் வாழ்க்கையில் சாதிக்க வேண்டும். உலகளாவிய நிலையில் உன்னத நிலை அடைய வேண்டும் என்ற உயரிய சிந்தனையில் முயன்றவர் இளையராஜா. இவரது வாழ்க்கை இன்றைய இளைஞர்களுக்கு ஒரு முன்னுதாரணமாகும். இளையராஜாவின் முயற்சி குறித்துச் சிவசங்கரி தன்னுடைய படிப்பாளர்களுக்கு வழங்கியுள்ள செய்திகள் போற்றுதற்குரியன.

**இளையராஜா**

இவர் தமிழகத்தின் எங்கோ ஒரு சின்ன கிராமத்தில், எந்தவித வசதியும் இல்லாத சூழ்நிலையில் தன் சொந்த முயற்சியினால், கடும் உழைப்பால் இன்று இசை உலகின் சிகரத்தைத் தொட்டவராக விளங்குகிறார்.

சிவசங்கரியின் பெரும் வியப்பு என்ன? என்பதைத் தன் முதல் கேள்வியாகவே இளையராஜாவிடம் கேட்கிறார்.

"தன் முயற்சியாய் இந்திய இசைமட்டும் அல்லாமல் மேற்கத்திய இசைமேதைகளான பாக், பீதோவன் போன்றவர்களின் சங்கீதத்தையும் விரல் நுனியில் வைத்திருக்கும் அளவுக்குத் தன் இசை ஞானத்தை வளர்த்துக் கொள்வது இவருக்கு எப்படி சாத்தியமாயிற்று என்பது தான்."[111]

**இளையராஜாவின் இளமைப் பருவம்**

இளையராஜா பிறவி மேதைவகையைச் சார்ந்தவர் அல்லர். சோதிடன் இளையராஜாவிற்கு எட்டாவதோடு படிப்பு சரி அதற்கு மேல் படிக்க மாட்டார் என்று கூறியதைப் பொய்யாக்க வேண்டும் என்பதற்காக வெளியூருக்குச் சென்று வேலை பார்த்து ரூ.25 சேகரித்து, தன்னுடைய ஒன்பதாம் வகுப்பைப் படித்து முடித்தார். ஆனால் பள்ளிப் படிப்பை முடிக்கவில்லை. காரணம் தன் அண்ணனின் இசைக்குழுவில் பெண்குரலில் பாடச் சென்றுவிட்டார்.

**பெண்குரலில் பாடிய சிறுவன்**

இளையராஜாவின் அண்ணன் பாவலர் வரதராசன் கம்யூனிஸ்ட் கட்சியின் பிரச்சாரப் பாடகர். அவரின் குழுவில் பெண்குரலில் சிறுவனான இளையராஜா பாடத்துவங்கியபின் தன் பள்ளிப்படிப்பை நிறுத்திவிட்டார்.

**இளையராஜாவின் சங்கீத ஞானத்தின் தொடக்கம்**

இளையராஜா தன்னுடைய பதின்மூன்றாம் வயதில் குரல் உடைந்து பெண்குரலில் பாட முடியாத போது, அண்ணன் இல்லாத சமயங்களில் அவருடைய ஹார்மோனியத்தை வைத்துக் கொண்டு வாசித்துப் பார்த்தார். தன் மனதுக்குப் பிடித்த நிலையில் வாசித்துப் பழகியுள்ளார். முறையான பயிற்சி இல்லாததால் அவ்வாறு பழகியுள்ளார்.

சுயமாக முயன்ற போது ஸ்ருதியை மாற்றி ஸ்வரங்களை வாசித்த போதும், அதிலிருந்து விதவிதமான ஒலிகள் தோன்றின. அந்த இசையில் மயங்கி, சங்கீதத்தில் இத்தனை வகைகளா எனத் திகைத்து வியந்து நின்றது இளையராஜாவின் மனது.

பின்னர் அண்ணனின் இசைக்குழுவில் இருந்த சங்கரதாஸ் என்பவரை முன் மாதிரியாகக் கொண்டு வாசிக்க வேண்டும் என்று முனைந்து பயிற்சி எடுத்துள்ளார். அந்தப் பயிற்சியில் நல்ல தேர்ச்சியும் பெற்றுள்ளார். அதன்பின் அண்ணனின் இசைக் குழுவில் தொடர்ந்து வாசிக்க ஆரம்பித்தார்.

**இளையராஜாவின் குடும்பச்சூழல்**

இந்தப் பயிற்சியுடன் சில ஆண்டுகள் கழிந்தன. அவர் குடும்பத்தில் பணக் கஷ்டம் அதிகமான நிலையில், வருமானம் அதிகமில்லாத சூழலில் சென்னைக்கு அண்ணனுடன் வந்துள்ளார். சென்னைக்கு வந்தபின் இளையராஜாவின் சங்கீத ஆசை பெருக்கெடுக்க இன்னும் அதிகமாகவும் விரிவாகவும் அறிந்து கொள்ள வேண்டும் என்ற விருப்பத்தில் மாஸ்டர் தனராஜ் என்பவரிடம் சங்கீதம் கற்றுக் கொள்ளச் சேர்ந்தார்.

அங்கும் பாடம் கற்றுக்கொள்ளப் பணம் கொடுக்கும் அளவிற்கு வசதி இல்லாதிருந்தார். ஆனாலும் அவரின் ஆர்வம் குறையவில்லை. ஆசிரியர் வீட்டில் தஞ்சம் என்று கிடந்து (சீனியர்) முதுநிலை

மாணவர்களுக்குப் பாடம் எடுப்பதைக் கவனித்துக் கொண்டிருந்து விட்டு (ஜுனியர்களுக்கு) இளநிலை மாணவர்களுக்குத் தானே வகுப்பு எடுத்துள்ளார்.

**இசை அமைப்பாளர் என்ற வாழ்த்து**

இளையராஜா இசைமீது இருந்த இசை ஆர்வத்தினால் எப்படியாவது இசையை முழுவதுமாகக் கற்றுக்கொள்ள வேண்டும் என்ற துடிப்புடன் இருந்தவர்.

"ஒரு முறை மாஸ்டர் தனராஜ், ஜி.கே. வெங்கடேஷ் என்பவரிடம், இவர் நல்ல 'மியூஸிஷியன்' என்று அறிமுகப் படுத்துவதற்குப் பதிலாக நல்ல 'மியூசிக் டைரக்டர்' என்று வாய் தவறிச் சொல்லியுள்ளார். குருவின் வாக்குப் பலித்துள்ளது. என்பார் இளையராஜா" என்கிறார் சிவசங்கரி."[112] வாக்குப் பலிப்பதற்கு இளையராஜாவின் அயராத முயற்சியும் துடிப்பான செயல்திறனுமே காரணம் என்பதே உண்மை.

**கர்நாடக சங்கீதப் பயிற்சி**

இளையராஜா மாஸ்டர் தனராஜிடம் இசை பயின்ற அதே நேரத்தில் லட்சுமி நாராயண அய்யர், மதுரை கிருஷ்ண அய்யங்கார், தஷிணாமூர்த்தி ஸ்வாமிகள், டி.வி கோபால கிருஷ்ணன் போன்றவர்களிடம் முறையாகக் கர்நாடக சங்கீதமும் கற்றுக் கொண்டார். சாப்பிடச் சோறு கிடைக்காத நேரத்தில் கூட இசைப் பயிற்சியை முழுமையாகக் கற்றுத்தேற வேண்டும் என்ற ஆர்வத்தில் தானாகத் தியரிப் புத்தகங்களை வைத்துப் படித்துள்ளார். புரியாத வரிகளை மீண்டும் மீண்டும் படித்துப் புரிந்து கொண்டுள்ளார்.

ஜோஸப் என்பவரிடம் 5 ஆண்டுகள் பாடம் கற்றுக் கொண்டார். இசைபற்றி அதிகமாகத் தெரிந்து கொண்டதும், இசைக் குழுக்களில் வாசிக்கத் துவங்கியதும் அப்போது தான். அந்தக் காலகட்டங்களில் பாடல்களை ஸ்வரப்படுத்துவதற்கு மிகவும் திண்டாடி இருக்கிறேன். ஆனால் அதையும் விடாமல் பழகிச் சீக்கிரமே (நொடேஷன்களை) இசைக் குறிப்புகளைச் சரளமாக எழுதும் திறமையும் பெற்றேன் என்கிறார் இளையராஜா.[113]

இளையராஜா இசை அமைப்பாளராக உருவானது அன்னக்கிளி படத்தின் மூலம் தான் என்பதைப் பெருமையுடன் கூறுவார் என்று கூறும் சிவசங்கரி, இசை ஞானி இசையராஜாவின் வெற்றிக்குப் பின் கடுமையான முயற்சி இருந்துள்ளது என்பது தெளிவாகிறது என்கிறார்.

சிவசங்கரியின் கூற்றை ஏற்றுக் கொண்ட இளையராஜா கூறுகிறார்: சிரத்தையான உண்மையான உழைப்பு கண்டிப்பாய்த் தெய்வத்திடம் கொண்டு சேர்க்கும் என்பதை நான் நம்புகிறேன். இன்று இசைதான் எனக்குத் தெய்வம், தெய்வம் தான் இசை, வேறு என்ன சொல்ல, இவ்வாறு கூறும் இளையராஜாவின் அயராத உழைப்பு, இன்றைய இளைஞர்களுக்கு ஒரு நல்ல வழிகாட்டுதலாக அமையட்டும் என்கிறார் சிவசங்கரி.[114]

## 5. அயராத உழைப்பு

தனிமனிதனின் பொருளாதார முன்னேற்றத்திற்கு கடுமையான உடல் உழைப்புடன், அறிவுத்திறனும் சேர்ந்தால் வாழ்வில் உன்னத நிலை அடையலாம் என்பதற்கு ஜி.டி.நாயுடிவின் வாழ்க்கை சான்றாகும். சிவசங்கரி ஜி.டி நாயுடுவின் வாழ்க்கை வரலாற்றை ஆய்ந்தறிந்து மானுட சமுதாயத்திற்கு வழங்கியுள்ளார்.

## ஜி.டி. நாயுடு பிறப்பும் வளர்ப்பும்

ஜி.டி.நாயுடு என்று அழைக்கப்படும் ஜி.துரைசாமி கோயம்புத்தூருக்கு அருகில் உள்ள கலங்கல் என்ற ஊரில் கோபால சாமி என்னும் விவசாயியின் மகன் ஆவார். அவர் *23.3.1893* ஆம் ஆண்டு பிறந்தார். பிறந்த ஓராண்டிலேயே தன் தாயை இழந்துவிட்டார். தன் மாமாவால் பின் வளர்க்கப்பட்டார். சிறுவயதில் மிகவும் குறும்புத்தனம் மிக்கவராக இருந்துள்ளார். பள்ளிக்கு அனுப்பினால் கட்டுப்பட்டு இருப்பான் என நினைத்த மாமா அவரைத் திண்ணைப் பள்ளியில் சேர்த்தார். பள்ளியிலும் அதே நிலை நீடித்தது. அதனால் அவர் மாமா துரைசாமியை மீண்டும் தந்தையிடம் கலங்கல் ஊருக்கே திருப்பி அனுப்பிவிட்டார்.

### துரைசாமியின் கல்வி

துரைசாமி தன் தந்தையின் வீட்டில் பகல் நேரங்களில் விவசாய வேலைகளைச் செய்வதும் இரவு நேரங்களிலும், மற்ற நேரங்களிலும் தானாகவே தமிழ் நூல்களைப் படிப்பதுமாக ஆரம்பக்கல்வியைக் கட்டுப்பாடின்றிக் கற்றுக் கொண்டார்.

தொல்காப்பியம், சமயம், சித்த வைத்தியம், ஜோதிடம் போன்ற நூல்களை சுவடியிலிருந்து தானாகப் படித்து அறிந்து கொண்டதால் ஊர் மக்களால் இலக்கணத் துரைசாமி, வைத்தியத் துரை என்று பட்டப்பெயருடன் அழைக்கப்பட்டார்.

### திருமணம்

துரைசாமியின் இருபதாவது வயதில் செல்லம்மாள் என்ற பெண்மணியைத் திருமணம் செய்த வைத்தனர். அவர்களுக்குக் கிருஷ்ணம்மாள், சரோஜினி என்ற இரு பெண்குழந்தைகளும்; அடுத்து ரெங்கநாயகி என்ற பெண்ணை மணந்து கோபால் என்ற ஆண் குழந்தையும் பிறந்தது. பின்னாளில் வருமானவரி பிரிவினருடன் ஏற்பட்ட முரண்பாட்டால் தன் மூத்த மனைவியை விவாகரத்து செய்து சொத்துக்களை அவர்கள் பெயருக்கு மாற்றி மனதால் இணைந்து வாழ்ந்து காட்டிய விந்தை மனிதர் துரைசாமி.

### முதல் வியாபாரம்

துரைசாமியின் பதினெட்டாம் வயதில் தெருவில் நடந்து கொண்டிருந்த போது காலில் இடறிய ஒரு புட்டியை எடுத்துப் பார்த்தார். அது ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது. அதை அறிந்து கொள்ளக் கலங்கல் கிராமத்திற்கு வந்த வருவாய் (ரெவின்யூ இன்ஸ்பெக்டர்) அதிகாரி ஒருவர் மூலம் 'அது ஒரு வலி நிவாரணி' என்று அறிந்து கொண்டார். அவரின் மனம் அந்த மருந்தை வாங்கி ஆய்ந்து பார்க்க வேண்டும் என எண்ணியது, அதனால் அதை அமெரிக்காவிலிருந்து வரவழைத்து, அந்த மருந்தின் வீரியம் அதன்

செயல்திறனையும் பரிசோதித்துப் பார்த்தார். பின்னர் தன் ஊர் மக்களுக்காக அதிக அளவில் வரவழைத்துக் குறைந்த விலைக்கு விற்றார். அதில் லாபமாக ரூபாய் எண்ணூறு பெற்றார். இதுவே அவரின் பின்னாளைய வியாபாரத் தொழில் திறனுக்கு வித்தாக அமைந்தது.

**தொழில் நுட்பம் அறிதல்**

துரைசாமி தன் ஊருக்கு வந்த ஆங்கில அதிகாரியின் மோட்டார் சைக்கிளைக் கண்டு வியந்து நோக்கினார். அதைப் பற்றித் தெரிந்துக்கொள்ள ஆர்வம் கொண்டார். அந்த எண்ணமே அவரது வாழ்க்கையின் திருப்பு முனையாக அமைந்தது.

கலங்கலிலிருந்து கோயமுத்தூருக்குச் சென்றார் துரைசாமி. நகரின் வளர்ச்சி, தொழிற்சாலைகள், எந்திரங்கள் அவற்றின் இயக்கம் இவற்றால் அவர் மனம் ஈர்க்கப்பட்டது. எதையாவது தானும் சாதிக்க வேண்டும் என்ற துடிப்பு ஏற்பட்டது. ஆனால் பணம் இல்லை முயன்றார். பணம் சம்பாதிக்க மாதம் மூன்று ரூபாய் சம்பளத்திற்கு ஒரு உணவுவிடுதியில் சர்வராக வேலையில் சேர்ந்தார். மூன்று ஆண்டுகளில் நானூறு ரூபாய் சேர்த்துவிட்டார்.

இந்த மூலதனத்தைக் கொண்டு தன் ஊருக்கு வந்த ஆங்கில அதிகாரியைச் சந்தித்தார். தன் விருப்பமான அந்த மோட்டார் சைக்கிளைப் பெற்றுக் கொண்டார். அவரின் ஆர்வத்தைப் பாராட்டினார் அதிகாரி.

**தொழில்நுட்பச் செயல்திறன்**

மோட்டார் சைக்கிளைப் பெற்ற துரைசாமி அதை ஓட்டிப் பார்த்து மகிழவில்லை. மாறாக அதனைத் தனித்தனிப் பாகங்களாகப் பிரித்து. அதன் நுட்பங்களை ஆய்ந்து மீண்டும் மிகச் சரியாகப் பொருத்திப் பார்த்தார். வேறு ஏதாவது இதில் செய்ய வேண்டும் என சிந்தித்துப் பக்கவாட்டில் ஒரு பெட்டி செய்து இணைத்து பின் அந்த வண்டியில் தன் நண்பர்களை அமரச்செய்து ஓட்டி மகிழ்ந்தார். இந்தச் சிந்தனைவளமே அவரை ஒரு தொழில் நுட்ப வல்லுநராக ஆக்கியது.

**வாழ்க்கையின் மிகப் பெரிய திருப்பம்**

மோட்டார் சைக்கிள் பெற்ற பின்னர் ஒண்டிப்புதூர் பின்னிங் தொழிற்சாலையில் வேலைக்குச் சேர்ந்தார். பின் தானே சுயமாகச் சிங்காநல்லூரில் ஒரு தொழிற்சாலையை அமைத்தார். அதில் உலக யுத்தம் துவங்கியிருந்த நேரத்திலும் காண்போர் வியக்கும் வண்ணம் புத்திசாலித்தனத்துடன் உத்திகளைக் கையாண்டு ஒரே ஆண்டில் ஒண்ணரை லட்சம் ரூபாய் சம்பாதித்தார். எந்த வசதிகளும் இல்லாத அந்தக் காலகட்டத்தில் 1919 - ஆம் ஆண்டில் இவ்வளவு பணம் சம்பாதிப்பது அதிலும் முதலீடு எதுவுமில்லாமல் என்றால் அந்தச் சாதனை எல்லோரையும் பிரமிக்க வைக்கும் காரியமாகும் என்கிறார் சிவசங்கரி. அந்தக் காலகட்டத்தில் துரைசாமியின் உறவினர்கள் துரைசாமி செய்தது அசுர சாதனை அல்லவா? என்று பேசியது கேட்பவரைப் பெருமிதம் கொள்ளச் செய்கிறது.[115]

ஆனால் சம்பாதித்த அத்தனை பணத்தையும் அதே ஆண்டு காட்டன் வியாபாரத்தில் இழந்துவிட்டார். ஆனால் அந்தத் தோல்வி அவரை மேலும் துடிப்புடனும் வைராக்கியத்துடனும் செயல்படத் தூண்டியது. தன்னைச் சிறந்த தொழிலதிபராக நிலை நிறுத்திக் கொள்ள நல்ல அனுபவமாக மாறியது என்கிறார்.[116]

**பயணிகள் போக்கு வரத்து பஸ் ஆரம்பித்தல்**

1920 இல் காட்டன் வியாபாரத்தில் கண்ட தோல்விக்குப்பின் கோவையில், மோட்டார் வியாபாரம் செய்து வந்த ஸர் ராபர்ட் ஸ்டேன்ஸ் என்பவரிடம் பிட்டராக வேலையில் சேர விருப்பம் தெரிவித்தார். ஆனால் ஸர் ஸ்டேன்ஸ் துரைசாமியின் திறமையை எண்ணி 'உன் திறமைக்கு நீ என்னிடம் வேலை பார்ப்பது சரியல்ல சுயமாக மோட்டார் பஸ் ஒன்று வாங்கிப் பயணிகள் போக்குவரத்துக்குப் பயன்படும் வகையில் ஓட்ட முயற்சி செய்' என்றார். துரைசாமி தன் நண்பர்களிடம் கடன் வாங்கிப் பணம் கொண்டு வந்தார். கொஞ்சப்பணம் ஸ்டேன்ஸ் துரையே கொடுத்து ஒரு பஸ் வாங்கித்

தந்தார். அதில் ஓட்டுநர், நடத்துநர், கிளீனர், மெக்கானிக் என்று பன்முகத்துடன் பணிபுரிந்து பெரும் வெற்றி கண்டார் துரைசாமி. அந்தப் போக்குவரத்து பஸ் பொள்ளாச்சியிலிருந்து பழனி சென்று வந்தது.

> "ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
> ஊக்கம் உடையா னுழை "[117]

என்ற வள்ளுவரின் குறளுக்கேற்ப திருமகள் துரைசாமியின் இல்லம் நாடி ஓடினாள். துரைசாமியின் அயராத உழைப்பு, எதையும் திட்டமிட்டுச்செய்யும் பாங்கு, நேர்மை, கண்டிப்பு என்று எல்லாப் பண்புகளும் ஒரு சேரப்பெற்றவர். அதனால் 1922இல் ஒரு பஸ்ஸிற்கு உரிமையாளரானார். பின் 1924 இல் 23 பஸ்களுக்கும், 1933 இல் (280) இருநூற்று எண்பது பஸ்களுக்கு உரிமையாளராகினார். அந்தப் போக்குவரத்து நிறுவனம் இந்தியாவின் பஸ் நிர்வாகத்திற்கு ஒரு முன்னோடியாக விளங்கியது.[118]

**வெளிநாட்டுப்பயணம்**

1923 -இல் ஜெர்மனி, லண்டன், அமெரிக்கா போன்ற நாடுகளுக்குச் சென்று நிறைய தொழிற்சாலைகளைக் கண்டு பல அரிய செய்திகளை, தொழில்நுட்பங்களை அறிந்து முடிந்தவரை தன் தாய்நாட்டில் அவற்றை நடைமுறைப்படுத்த முயன்றவர்.

தன் தந்தை குறித்து அவர் மகன் கோபால் கூறுவது,

வெளிநாட்டில் உள்ள தரமான தொழிற்சாலைகளின் நுணுக்கங்களைக் கற்றறிந்து அந்த விசய ஞானத்தை இந்தியாவிற்குக் கொண்டு வந்துவிட வேண்டும் என அவர் முயற்சித்தவைதான் எத்தனை எத்தனை.

1955 இல் துரைசாமி வணிகத்துறை அமைச்சருக்கு ஒரு கடிதம் எழுதியுள்ளார். அனுமதி தந்தால், ஒரே வருஷத்தில் 14 வெவ்வேறு தொழிற் சாலைகளைத் துவங்கித் தரமான பொருட்களை மலிவான

விலையில் இந்திய மக்களுக்குத் தரத் தயாராக உள்ளதாக அவர் எழுதின கடிதத்தின் நகல் இன்றும் உள்ளது என்று குறிப்பிடுகின்றார் சிவசங்கரி.[119]

துரைசாமி போன்ற தொழில் நுட்ப வல்லுனரும் இன்றைய குடியரசு தலைவர் கலாமும் இணைந்திருந்திருப்பார்களேயானால் இந்தியா இன்று உலக நாடுகளுக்கெல்லாம் முன்னோடியாக விளங்கி இருக்கும் இந்தியாவின் துரதிஷ்டம் அன்று அத்தகைய அரசு நிர்வாகம் இல்லை. அவரின் நாட்டுப் பற்றும் ஆர்வமும் நசுக்கப்பட்டுள்ளது வெளிப்படுகிறது.

**துரைசாமியின் அரிய கண்டுபிடிப்புகள்**

உலகின் முதல் எலெக்ட்ரிக் ரேஸர் எனப்படும் ரேஸண்ட் ரேஸர் மின்சார சவரக் கருவியைக் கண்டுபிடித்துத் தன் நண்பர்களுக்கு வழங்கினார். பாராட்டைப் பெற்றார். புகைப்படக்காரர்களுக்கு உதவும் டிஸ்டன்ஸ் அட்ஜஸ், டெஸ்டிங் மெஷின், கால்குலேட்டர் மெஷின், லென்ஸ், குளிர்ச்சாதனப்பெட்டி, ரிகார்டிங் ரேடியோ கிளாக், காபி மெஷின், பழரசம் எடுக்கும் எந்திரம், காசு போட்டால் தானே பாடும் எந்திரம், இப்படி சுமார் நூற்றுக்கு மேற்பட்ட அறிய கண்டு பிடிப்புகளைப் பத்து ஆண்டு இடைவெளியில் கண்டு பிடித்த மேதையாவார்.

அவர் கண்டுபிடிப்புகள் அத்தனையும் அவர் ஆசைப்பட்ட நிலையிலேயே இந்தியாவில் உற்பத்தி செய்ய அனுமதி வழங்கப்பட்டிருக்குமாயின், தொழில் வளர்ச்சியில் இந்தியா எங்கோ உயரத்தில் இருந்திருக்கும் என்பதோடு உலகத்திலேயே பலவற்றை முதன் முதல் கண்டுபிடித்தவர் என்கிற பட்டம் அவருக்கு நோபல் பரிசையே பெற்றுத்தந்திருக்கக் கூடும் என்பது துரைசாமியின் திறமைகளை அறிந்த பலருடைய கருத்து என்பார் சிவசங்கரி.[120]

**வேளாண்மையில் ஆய்வு**

இந்தியாவின் இதயம், உயிர்நாடி கிராமங்களில் தான் உள்ளது என்ற காந்தியடிகளின் கூற்றை ஏற்று அதன் வளர்ச்சிக்குப் பாடுபட்டவர் துரைசாமி.

கிராமத்தில் வாழும் மக்கள் பொருளாதாரம் கல்வி, வாழ்க்கைத் தரத்தில் வளர்ச்சி அடைய வேண்டும். அதற்கு நூதன விவசாயமும் தொழில் வளர்ச்சியும் இருந்தால் தான் மேம்பாட்டை மக்கள் அடைய முடியும் என்பதில் அழுத்தமான நம்பிக்கை கொண்டிருந்தார்.

1950 இல் ஸ்டாக்ஹோமில் நடந்த விவசாய மாநாட்டில் கலந்துகொண்டு தன் பண்ணையில் செய்த பரிசோதனைகள் குறித்துப் பேசி நல்ல வரவேற்பைப் பெற்றார்.[121]

**மருத்துவ அறிவு**

தமிழகத்தின் பாரம்பரிய மிக்க மருத்துவ முறைகளைக் கற்றுத் தெளியவேண்டும் என, சுவடிகளில் சொல்லப்பட்ட முறைகளில் மருந்துகளைத் தயார் செய்து பரிசோதித்துத் தனக்கு வேண்டியவர் களுக்கு வழங்கினார். நீரழிவுநோய், வெட்டை எனப்படும் லூகோரியா, பைல்ஸ் எனப்படும் மூலம் போன்ற நோய்களுக்குச் சித்த வைத்திய முறைப்படி சிறப்பான மருந்துகளைக் கண்டுபிடித்துத் தமிழ்நாடு சித்த வைத்தியர்கள் மாநாட்டில் சித்த வைத்திய பேராசிரியர் என்ற பட்டத்தைப் பெற்றார்.[122]

**கல்வியாளர்**

1945 இல் ஆர்தர் ஹோப் பாலிடெக்னிக், என்ஜினியரிங் கல்லூரிகளை நிறுவினார். துரைசாமி கல்வி குறித்துக் கொண்டிருந்த கருத்து படிப்பு அறிவை வளர்க்க உதவுவதாக இருக்க வேண்டுமே தவிர அதை முடக்கி விடுவதாக இருத்தல் கூடாது. செயல்முறை (பிராக்டிக்கல்) பயிற்சியுடன் கூடிய படிப்புத் தான் இன்றைய இந்தியாவிற்குத் தேவை. எந்தத் தொழிலாக இருந்தாலும் அதைக்

கண்ணியத்துடன் ஏற்று நேர்மை, பெருமையுடன் செய்ய இளைய தலைமுறையினருக்குக் கற்றுத்தர வேண்டும் என்பதாகும்.

"மூன்று வருடங்களில் வேண்டாததைக் கற்பிப்பதைத் தவிர்த்தது ஆறே வாரங்களில் மாணவனுக்கு அவசியமானதைக் கற்பித்து அவனை முழுமையான அறிவுடையவனாக ஆக்குகிறேன் பார் என்று கல்வி நிறுவனங்களை ஆரம்பித்தார்."[123] துரைசாமி விரும்பிய தொழில் கல்வி முறைதான் இன்றைய இளைஞருக்குத் தேவை. அந்த நம்பிக்கையை மாணவர்களுக்கு வழங்குவது இன்றைய அரசின் கடமையாகும்.

ஜி.டி.நாயுடு போன்றோர் இன்று, பல்துறைச் சிந்தனையாளரும், செயல்திறன் மிக்கோரும், குடியரசு தலைவரும் இணைந்து செயல்பட்டால் இந்திய நாடு பிற நாடுகளிடம் எதிர்பார்த்து நிற்கத் தேவை இல்லை. நல்ல முன்னோடிகளும் செயல்திறன் மிக்க இளைஞர்களும் இருந்துவிட்டால் நிச்சயம் நாடு உயர்ந்து தன்னிறைவு மிக்க உன்னத நாடாகும் என்பதில் ஐயமில்லை.

**முடிவுரை**

பண்டைய இலக்கியங்கள் பண்பாட்டின் நிலைக் களங்களாயிருந்தன. அம்மக்கள் பண்பாட்டில் இமயமாய் உயர்ந்து நின்றுள்ளார்கள். அவர்களின் உயர்ந்த பண்புகளை இன்றைய இளம் தலைமுறையினருக்கு எடுத்துக் கூற வேண்டும் என்ற உணர்வு சிவசங்கரியின் எழுத்துக்களில் ஒளிர்கிறது.

மனிதன் மனிதனாக வாழச் சில வழிமுறைகளைப் பின்பற்ற வேண்டும். அந்த வழிமுறைகளைத் தன்னைச் சார்ந்த மனிதர்களிட மிருந்தும், நல்ல நூல்களின் வாயிலாகவும் கற்றுக் கொள்ள முடிகிறது.

பண்பாடு, மனிதன் சமுதாயத்திடமிருந்து பெற்றுக்கொள்ளும் பெரும் செல்வமாகும். பண்புடைய மனிதர்களால் பண்பாடு உருவாக்கப்படுகிறது. பழக்க வழக்கம் நல்ல எண்ணங்களால் உருவாக்கப்படுகிறது. எண்ணங்கள் நல்ல நூல்களைக் கற்பதனாலும்

நல்ல மனிதர்களின் உறவாலும் உண்டாக்கப்படுகிறது என்பது இவ்வியல் கூறும் ஆய்வியல் கருத்து ஆகும்.

மனித வளர்ச்சிக்குத் தடையாகும் பண்புகளாகச் சிவசங்கரி கூறுபவை சோம்பல், தாழ்வு மனப்பான்மை, உயர்வு மனப்பான்மை, எதிர்பார்ப்பு, தன்னிரக்கம், மனச்சோர்வு, கோபம், பொறாமை, குழப்பங்கள், முடிவு எடுத்தலில் தெளிவின்மை போன்றவையாகும். இப்பண்புகளைச் சரியான அணுகு முறையில் கையாண்டு தனிமனிதன், தன்னை நிலைப்படுத்திக் கொள்ள வேண்டும்.

இது என் வாழ்க்கை, இதை மகிழ்ச்சியாகவோ, துக்கமாகவோ வைத்துக் கொள்வது என் கையில் மட்டும் தான் உள்ளது என்று உணர்ந்து கொள்ள வேண்டும்.

தேவையற்ற உணர்வுகளுக்கு ஆட்பட்டு என்னை நானே, வேதனைக் குள்ளாக்கிக் கொள்ளமாட்டேன் 'இது உறுதி' என்று ஆணையிட்டுக்கொள்வதுடன், ஒவ்வொரு நாள் விடியலிலும், இரவு உறங்கப்போகும் முன்பும் மறக்காமல் உறுதியை நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும் என்பார் சிவசங்கரி.

எந்த ஒரு செயலுக்கும் இரு கோணங்கள் உண்டு. *1.* மனிதன் நினைப்பது நடந்து விடுவது. **2.** நடக்காமல் போவதும் உண்டு என்ற இரண்டு தவிர, நினைக்காததும் நடக்கும் என்ற மூன்றாவது ஒன்றும் உண்டு என்று உணர்ந்தால் வாழ்க்கைச் சிக்கலை எதிர்கொள்வது எளிதாகும்.

பள்ளி, கல்லூரிகளுக்கு அருகில் பெட்டிக்கடை வைத்து விற்பனை செய்பவர்கள், சிகரெட், போதைப் பொருள்கள் போன்றவற்றை விற்று, இளைஞர்களின் வளர்ச்சிக்கு ஊறுவிளைவிக்கும் இன்றையச் சூழலில், சுய தொழில் செய்யும் பாண்டியன், ஒரு கொள்கையுடன் செயல்படுவது போற்றுதற்குரியதாகும். பாண்டியன் போன்ற நல்லவர்களால் உலகம் இயங்குகிறது. பாண்டியனின் கொள்கை 'உண்டால் அம்ம இவ்வுலகம்' என்ற புறப்பாடலின் கருத்தை நினைவு படுத்துவதாக அமைந்துள்ளது.

மனச்சோர்வு, பணியிலிருந்து ஓய்வு பெரும் ஆடவர்கள், மாதவிடாய் நிற்கும் நிலையில் உள்ள பெண்களுக்கும் தற்காலிகமாக ஏற்படுவது இயல்பு.

இந்நிலையை உணர்ந்து கொள்பவர்கள் தங்களை வேறு பணியில் ஈடுபடுத்திக் கொள்ளுதல் வேண்டும். தனிமையை நாடாமல் பொறுப்புக்களை ஏற்றுச் செயல்படுகின்ற போது மனம் சுறுசுறுப்பாக இருக்கும் இயல்பான மன நிலையில் வாழ்க்கையை ஏற்க முடியும்.

தனிமனிதப் பண்பு என்பது குடும்பம், சமுதாயம் ஆகியவற்றை மேம்படுத்துவதுடன், உயர்ந்த சிறப்பான நிலையை உறவுச் சூழலுக்குக் கொண்டு செல்வதுமாகும்.

எண்ணம், பேச்சு, செயல் இவை அனைத்தும் தனிமனிதனை மட்டும் அல்லாமல், அவனுடன் வாழ்க்கைப் பயணத்தில் பயணிக்கும் அத்தனை பேரையும் பாதிக்கும். அதனால் தனிமனிதன் தன்னை மேம்படுத்த நல்ல பண்புகளைக் கடைப்பிடித்தல் இன்றியமை யாததாகும்.

தமிழன் தனக்கென வாழாது, பிறர்க்காக வாழ்ந்த வாழ்க்கையை இலக்கியங்கள் காட்டுகின்றன. அவன் உழைப்பிற்கு அஞ்சாதவன்.

உடல் உழைப்பிற்கு, நல்ல உடல், நல்ல மனம் இன்றியமையாதது. இவை இரண்டையும் பெற நல்ல உணவு தேவை. நல்ல சத்தான உணவை உண்டு, உடல் ஆரோக்கியத்தைப்பெறவும் உடலை நல்லநிலையில் வைத்துக் கொள்ள உடல்பயிற்சியும் தேவை என்கிறார் சிவசங்கரி.

வாழ்க்கையைத் திறம்பட நடத்த பொருள் இன்றியமையாதது. அதில் முன்னேற்றம் அடைய, மனிதன் சிந்தித்து திட்டங்கள் வகுக்க வேண்டும். திட்டம் - முயற்சி, கடின உழைப்பு - வெற்றி என்ற நிலையில் முயன்று வெற்றி பெற்றவர்களைச் சான்றுகளுடன் சிவசங்கரி எடுத்துக்காட்டியுள்ளார்.

வசதி வாய்ப்புகள் இல்லாத சூழ்நிலையில், முயற்சியுடன் கூடிய உழைப்பால் உயர்ந்த இளையராஜா போன்றோரை அவர்தம் வாழ்க்கையை உணர்ந்து கொள்ள முடிந்தது. பெட்டிக்கடைவைத்த பாண்டியன் முதல் உலகளவில் பேசப்படுகின்ற மனிதர்கள் வரை எழுத்தாளர் மற்றவர்களுக்குச் சான்று காட்டிய திறம், சாதாரண நிலையில் வாழ்பவர்களையும் ஊக்கத்துடன் உழைக்கத் தூண்டுவதாகும்.

## சான்றெண்விளக்கம்

1. சிவசங்கரி, சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப. 182.
2. மேலது, ப, 183.
3. மேலது, ப, 184.
4. மேலது, ப, 187.
5. மேலது, ப, 194.
6. மேலது, ப, 190.
7. மேலது, ப, 191.
8. மேலது, ப, 120.
9. மேலது, ப, 122.
10. மேலது, ப, 122.
11. மேலது, ப, 131.
12. மேலது, ப, 134.
13. மேலது, ப, 136.
14. மேலது, ப, 139.
15. திருக்குறள், 360.
16. சிவசங்கரி, சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப. 165.
17. மேலது, ப, 165.
18. மேலது, ப, 171.
19. திருக்குறள், 103.
20. சிவசங்கரி, சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப. 176.
21. மேலது, ப, 177.
22. மேலது, ப, 179.
23. மேலது, ப, 180.
24. மேலது, ப, 54.
25. மேலது, ப, 55.
26. மேலது, ப, 278.
27. மேலது, ப, 279.
28. மேலது, ப, 280.

29. கபிலர், குறிஞ்சிப்பாட்டு, வரிகள், 3-12.
30. சிவசங்கரி, சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப. 282.
31. அபிராமிபட்டர், அபிராமி அந்தாதி, பாடல், 65.
32. சிவசங்கரி, சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப. 285.
33. மேலது, ப, 287.
34. திருக்குறள், 43.
35. சிவசங்கரி, சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப. 329.
36. மேலது, ப, 330.
37. கம்பர், கம்பராமாயணம், மந்தரை சூழ்ச்சிப்படலம், பாடல், 146.
38. சிவசங்கரி, சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப. 332.
39. மேலது, பக், 333-334.
40. மேலது, ப, 301.
41. கம்பர், கம்பராமாயணம், மந்தரை சூழ்ச்சிப்படலம், பாடல் எண், 170.
42. சிவசங்கரி, சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப. 336.
43. மேலது, ப, 338.
44. மேலது, ப, 339.
45. மேலது, ப, 339.
46. மேலது, ப, 92.
47. மேலது, ப, 94.
48. திருக்குறள், 999.
49. சிவசங்கரி, உரத்த சிந்தனை, ப. 57.
50. திருக்குறள், 573.
51. புறநானூறு, பாடல் எண், 18.
52. டெய்லர். ஈ.பி, தமிழ்ப்பண்பாட்டு வரலாறு, ப, 1.
53. பக்தவச்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 168.
54. புறநானூறு, பாடல் எண், 102.
55. புறநானூறு, பாடல் எண், 182.
56. புறநானூறு, பாடல் எண், 187.
57. செல்வம்.வி.டி, தமிழக வரலாறும் பண்பாடும், ப, 1.
58. ராமலிங்கம், தமிழன் இதயம், ப, 7.

59. சிவசங்கரி, உரத்த சிந்தனை, ப, 231.
50. திருக்குறள், 100.
61. சிவசங்கரி, உரத்த சிந்தனை, பக், 44-45.
62. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப, 141.
63. கிருஷ்ணன்.டி.வி, தினமணி 'பேசப்படாத மௌனம்' - 27.04.06, ப. 4.
64. கிருஷ்ணன்.டி.வி, தினமணி 'பேசப்படாத மௌனம்' - 27.04.06, ப. 4.
65. சிவசங்கரி, சின்னநூல்கண்டா நம்மைச்சிறைப்படுத்துவது, ப, 106.
66. மேலது, ப, 107.
67. மேலது, ப, 108.
68. மேலது, ப, 109.
69. மேலது, ப, 111.
70. மேலது, ப, 111.
71. மேலது, ப, 112.
72. சிவசங்கரி, உரத்த சிந்தனை, ப. 234.
73. பெரும்பாணாற்றுப்படை, பாடலடி, 469.
74. இளங்கோவடிகள், இந்திரவிழாக்காதை, அடிகள், 16-17.
75. சிவசங்கரி, சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப, 111.
76. மேலது, ப, 111.
77. சிவசங்கரி, உரத்த சிந்தனை, ப, 257.
78. திருமந்திரம், பாடல் எண், 704.
79. திருமந்திரம், பாடல் எண், 705.
80. கல்யாணசுந்தரனார்.வி; பெண்ணின்பெருமை, ப, 201.
81. திருமந்திரம், பாடல் எண், 556.
82. திருக்குறள், 24.
83. உதயமூர்த்தி, எம்.எஸ், மனமும் பிரார்த்தனையும், ப, 31.
84. திருமந்திரம், பாடல் எண், 2883.
85. ரவிசங்கர், "உலகமே ஒரே குடும்பம்", தினமணி நாளிதழ், 12-02-2006, ப, 11.
86. திருக்குறள், 1312.
87. முத்து, நெல்லை, சு., 'நூறுமுறை சூரியனைச் சுற்றலாம்', தினமணி நாளிதழ், 31-10-06, ப. 8.

88. மேலது, 31-10-06, ப. 8.
89. திருக்குறள், 948.
90. திருக்குறள், 942.
91. முத்து, நெல்லை, சு., தினமணி நாளிதழ், 31-10-06, ப, 8.
92. தட்சிணாமூர்த்தி, தினமணி, 2-11-2006, ப, 4.
93. திருமந்திரம், பாடல் எண், 1617
94. முத்து, நெல்லை, சு., 'நூறுமுறை சூரியனைச் சுற்றலாம்', தினமணி நாளிதழ், 31-10-2006, ப, 8.
95. சிவசங்கரி, சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, பக், 71-72.
96. மேலது, ப, 73.
97. மேலது, ப, 73.
98. சிவசங்கரி, என் கண்ணோட்டத்தில், ப, 144.
99. மேலது, பக், 147-148.
100. மேலது, ப, 151.
101. மேலது, ப, 154.
102. மேலது, பக், 154-156.
103. மேலது, பக், 157-158.
104. ஔவையார், நாலடியார், பாடல் எண், 159.
105. நாராயணராஜா, மங்கையர் மலர், ப, 46.
106. சிவசங்கரி, உரத்த சிந்தனை, ப, 28.
107. மேலது, ப, 29.
108. சந்திரசேகர், தி.க.; முடிவெடுப்போம் சிக்கல்களை முறியடிப்போம், ப. 47.
109. மேலது, ப, 48.
110. சிவசங்கரி, சின்னநூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப.98
111. மேலது, ப. 42.
112. மேலது, ப, 45.
113. மேலது, ப, 45.
114. மேலது, ப, 46.
115. சிவசங்கரி, அப்பா, ப, 22
116. மேலது, ப, 22

117. திருக்குறள், 594.

118. சிவசங்கரி, அப்பா, ப, 24.

119. மேலது, ப, 24

120. மேலது, ப, 110.

121. மேலது, ப, 62.

122. மேலது, ப, 123.

123. மேலது, ப, 129.



இயல் - 3

# குடும்பநல மேம்பாட்டுச் சிந்தனைகள்

## முன்னுரை

மனித சமுதாயத்தின் ஆணிவேர் குடும்பம் ஆகும். இக்குடும்ப அமைப்பு மனித வாழ்வின் தொடக்க காலம் முதல் நிலவி வருகிறது. குடும்பம் என்ற அமைப்பு உலகளாவிய பண்பாகவும் விளங்குகிறது. மனிதனைச் சமுதாய விலங்கு என்பர். அவன் தனித்து வாழ விரும்புவதில்லை. விலங்குகளைப் போல் கூட்டமாக வாழ்வதையே விரும்பியுள்ளான். விலங்குகளிடமிருந்து வேறுபட்டுக் குடும்பக் கட்டமைப்பு, பண்பாடு என வகுத்துக் கொண்டு செயல்புரிவதே மனிதனை விலங்கு நிலையிலிருந்து உயர்த்தியுள்ளது.

மனிதன் இயற்கைச் சீற்றங்களை எதிர்த்து நின்று, அவற்றுடன் போராடி, அவற்றைத் தனக்கு ஏற்ற வகையில் பயன்படுத்த முனைந்தான். அதற்கு அவன் உடல், மனவலிமை துணை நின்றது. அந்த உடல் மன வலிமையைத் தனிமனிதன் கூடி வாழ்வதன் மூலம் பெற்றான். அவ்வாறு கூடி வாழ்வதற்காக அமைத்துக் கொண்ட கட்டமைப்பே குடும்பம். அதன் மூலம் உறவுகள் தோன்றின.

அவ்வகையில் சிவசங்கரியின் படைப்புகளில் குடும்ப நல மேம்பாட்டுச் சிந்தனை பற்றி இவ்வியலில் காண்போம்.

## குடும்பம் சொல்பொருள் விளக்கம்

"குடும்பம் என்ற சொல் குழு என்பதிலிருந்து உருவாகி இருக்க வேண்டும் என்பர்"[1]

ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழ்ந்து குழந்தைகளைப் பெற்று எடுத்தனர். அதுவே குடும்பம் என்று பொதுவாகக் கொள்ளப்பட்டது. குடும்பம் உள்ளம் இணைந்தவர்கள் கூடி வாழும் இடம் ஆகும்.

"குடும்பம் என்பது உள்ளம் ஒன்றிய கணவனும் மனைவியும் மக்களைப் பெற்று வாழும் அன்பு நிலையம். அன்பு வளர்வதற்கும் தன்னலம் குறைந்து, பொதுநலம் பெருகுவதற்கும் இன்றளவும் சமுதாய வாழ்வில் ஒழுங்கு, கட்டுப்பாடு போன்றவற்றைக் காப்பதற்கும் மிகப் பெரிய காரணமாக இருக்கும் அமைப்பு, குடும்பம் ஆகும்"[2]
என்று குறிப்பிடுவதால் அறியலாம்.

ஒருவருக்காக மற்றொருவர் என்று எண்ணும், கணவன் மனைவி கூடிவாழும் வாழ்க்கையே குடும்பம் என்றும் கொள்ளலாம்.

"அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியின் தாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்த லோம்புமதி பூக்கே ழூர"[3]

என்ற நற்றிணைப் பாடல், இந்த உறவு உடல்வனப்பினைத் தாண்டி உள்ளது. அது உறவின் அடிப்படையில் பின்னிப்பிணைய வேண்டும். அதுதான் குடும்ப அமைப்பின் அடித்தளத்திற்கு உறுதி சேர்ப்பதாகும் என்றியம்புகிறது. இக்கருத்தை வலியுறுத்தத் தனிநாயக அடிகள் கூறும் கருத்து வருமாறு:

"வயதானவனாக இருந்த போதிலும் எனக்கு ஆணும் பெண்ணுமாகக் குடும்பங்கள் அன்பாக வாழ வேண்டும் என்பதில் ஆசை உண்டு. ஏனென்றால் கணவனும் மனைவியுமாக அன்பாக வாழும் வாழ்க்கை இல்லையென்றால் காட்டில் உள்ளதைவிட நாட்டில் கொடுமையான விலங்குத் தன்மை இருந்திருக்கும். இன்றைய நாகரிகம் எதுவும் ஏற்பட்டிருக்காது"[4] என்பதாகும்.

குடும்பம் ஒரு தனிமனிதனை உருவாக்கப் பல்வேறு துறைகளில் செயல்படுகிறது. பண்டைக் கால மக்கள் மணம் என்னும் நிகழ்வை வலியுறுத்தவில்லை.

## குடும்பத்தின் தோற்றம்

மலை சார்ந்த காடுகளில், நிலத்தில் வாழ்ந்த மனிதன் கால் நடைகளைத் தனக்கு உடைமையாக்கிக் கொண்டு வாழ்ந்தான். பின் ஆற்றங்கரைகளில் குடியேறினான். கால் நடைகளின் துணை கொண்டு உழவுத் தொழில் செய்தான். அதன் பயனாய் ஓரிடத்தில் நிலைத்து வாழத் தொடங்கினான். அங்கு அவன் ஓய்வு கொண்ட நேரங்களில் சிந்தனை வயப்பட்டுத் தொழில் கருவிகள் போன்ற சிக்கலான தேவைகளைத் தீர்க்க வழிகண்டான் நாகரிகம் அடைந்தான். மேலும் கடல்கரை நோக்கிச்சென்றான். மீன்பிடித்தான். இப்படி நானிலத்தைத் தனக்குரியதாக்கி அவற்றைப் பேணவும் பாதுகாக்கவும் முனைந்தான். அதற்குக் குடும்பங்கள் உதவின. அவ்வாறு குடும்பங்களை வழிநடத்தத் தலைமை கொண்டு, இவ்வாறு சமுதாயத்தை அமைத்தான்.

## திருமணம் என்ற அமைப்பு

திருமணம் என்ற அமைப்பு உருவாகியது பற்றி,

> *"எந்த உடைமையும் தேவையின்றித் தன் விருப்பம் போல் அலைந்து திரிந்த நிலை மாறியது. கால் நடைகள், நிலப் பரப்பான பயிர் விளையும் வயல்கள் உடைமைப் பொருள்கள் ஆயின. அவற்றில் பாடுபட ஆண் பெண் ஒருவருக்கு ஒருவர் துணையாயினர். இக் கட்டத்தில் திருமணம் என்ற அமைப்பு உண்டாயிற்று"*[5]

என்று தாயம்மாள் அறவாணன் குறிப்பிட்டுள்ளார்.

குடும்பத்தில் இணைந்துள்ள ஆணும் பெண்ணும் திருமணத்திற்கு முன்பு இரத்த உறவுடையவர்களாகவோ, இல்லாதவர்களாகவோ இருக்கலாம்.

> *"குடும்பம் என்றாலே தங்களுக்குள் உறவுகளுடைய ஒரு நிறுவனம் அல்லது அமைப்பு என்பது தெளிவு. இன்றைய கணவனும் மனைவியும் அவர்கள் குழந்தைகளும் அடங்கிய மிகச்சிறிய*

*அமைப்பு குடும்பம். அது ஒரு ஆணும் பெண்ணும் தங்களின் காம இச்சைகளை அனுபவிப்பதும், ஒருவருக்கொருவர் துணையாக இருப்பதும், பெற்றெடுக்கும் குழந்தைகளை வளர்ப்பதுமான செயலாற்றல்களுக்கு அவசியமான கருவியாக இருக்கிறது. பண்பாட்டு வளர்ச்சியான சிகரம் ஒற்றுமையான குடும்பம்"*[6]

என்று சின்னசாமி குறிப்பிடுவதன் மூலம் அறியலாம்.

ஓர் ஆணும் பெண்ணும் ஒரே வீட்டில் சேர்ந்து தாம்பத்திய வாழ்க்கையை நடத்துகின்றனர். பின் சந்ததியினரைப் பெற்று வளர்த்து குடும்பம் என்ற சொல்லுக்கு வலுச் சேர்க்கின்றனர்.

திருமணம் குறித்துச் சிவசங்கரி கூறுகையில் ஆயுள் முழுவதும் கூடவரும் உறவு என்று குறிப்பிட்டுள்ளார்.

*"திருமணம் ஆயுள் முழுவதும் ஒருவரோடு ஒருவர் ஈருடல், ஓருயிர் என்று பிணைந்து சொல்லும் பொருளும் போல் இணை பிரியாமல், சுக துக்கங்களில் கலந்து ஒன்றாக வாழ்ந்து காட்டுவோம் என்ற உறுதி எடுக்கும் வாழ்க்கைத் திட்டம்"*[7] ஆகும்.

திருமணம், சமூகத்தில் ஆண், பெண் ஓர் உறுப்பினராக முழு வளர்ச்சிப் பெறுவதற்கு அடித்தளமாக அமைந்துள்ளது என்பதை,

*"திருமண வாழ்வு என்பது அன்பால் இருமனங்கள் ஒன்றி, அன்புப் பயிர் வளர்க்கும் இல்லறமாகும். தனிமனிதன் என்ற நிலைமாறி, குடும்பம் உருவாகி வளர்ந்து சமூகத்தின் ஓர் அங்கமாக முழு மலர்ச்சி பெறுவதற்கு ஆண், பெண் இருவரையும் உருவாக்குதல் திருமண வாழ்வின் அடிப்படையாகும்"*[8]

என்று சு.வேங்கடராமன் குறிப்பிடுவதால் உணரலாம்.

**முறையான இன்பநுகர்ச்சிக்குக் குடும்பம் அமைகிறது**

பசி, தாகம் போலப் பாலியல் உணர்வும் இயற்கையானது. பால் உணர்வுகளை நெறிப்படுத்தும் வகையில் தான் குடும்பம் என்னும்

அமைப்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது. ஒருவரின் இயல்புகள் புலப்படும் இடம் குடும்பம் ஆகும். ஆண், பெண் இருவரும் தம்மைப் பற்றி அறிந்து கொள்ளவும் காதல் தேவைப்படுகிறது. அன்பு, இரக்கம், பிறர்மீது காட்டும் அக்கறை ஆகியன வளர ஆண், பெண் உறவு தேவையாகிறது. திருமணத்திற்கு முன்னர் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளும் நோக்கில் ஆண், பெண் சந்திப்பும் பழக்கங்களும் ஏற்படுகின்றன. உண்மையான அன்பு ஏற்படுகையில் அது திருமணத்தில் முடிகிறது. வாழ்க்கையைச் செம்மைப்படுத்தும் நெறியே திருமணம். "சந்ததி விருத்திக்கே அன்றி முறையற்ற இன்ப நுகர்ச்சியைத் தடுப்பதற்கும் திருமணம் ஏற்பட்டது"[9] என்பார் பாஸ்கரதாஸ்.

**குடும்பத்தின் கடமை**

குடும்பம் தனக்கெனச் சில கொள்கைகளை அமைத்துள்ளது. அதன் வழிக் குடும்ப உறவுகளை நெறிப்படுத்திக் கொண்டுசெல்கிறது.

தெய்வ வழிபாட்டு முறை, உறவுகளைப் பேணுதல், முதியோர், நோயாளிகளைப் பாதுகாப்பது போன்ற மனிதநேய உணர்வுகளைக் குடும்பம் உணர்த்துகிறது. குடும்ப வாழ்க்கையில் தாய், தந்தை, அரசன், கொல்லன், இளைஞன் ஆகியோரின் கடமைகள் என்ன? என்பதைப் பற்றிய கருத்துகளும், அறவோர்களை வரவேற்று உதவுவதே இல்வாழ்வாரின் கடமை என்னும் கருத்தும், அரசு கடைப்பிடிக்கும் கொள்கைகள் யாவும் மனித நலனுக்கே பயன்படுகின்றன. இவ்வுலகில் எல்லோரும் இன்புற்று வாழ வேண்டும் என்பதையே அவை நோக்கமாகவும் கொண்டுள்ளது"[10] என்பார் க.த.திருநாவுக்கரசு.

"குடும்பம் ஒரு மனிதனின் குழந்தைப் பருவம், குமரப்பருவம், வாலிபப்பருவம், முதுமைப்பருவம் ஆகிய எல்லாப் பருவத்திலும் பாதுகாத்துத் துணைநின்று, அறிவு கொடுக்கிறது. சிக்கலான சமூகத்தில் ஏற்படும் பல்வேறு இன்னல்களைச் சிந்தித்துத் தீர்க்கவும், செயலாற்றவும் கற்றுக் கொடுக்கிறது, பாச உணர்வு என்னும் உரிமை குடும்பத்திற்கே உரியதாகும். குழந்தைகளைச் சமுதாய மக்களாக்குவது. குடும்பத்தின் பொறுப்பு"[11] என்பார் கல்பகம்.

**பாரதியார் விடுதலைக் கும்மியில்**

திருமணத்தின் மூலம் காதலன் ஒருவனைக் கைப்பிடித்து அவன் காரியங்களில் துணைபுரியவும், அறங்கள் செய்து சிறக்கவும் பெண்களுக்கு அறிவுரை கூறியுள்ளார். பாடல் வருமாறு:

"*காதல் ஒருவனைக் கைப்பிடித் தேயவன்*
*காரியம் யாவிலும் கை கொடுத்து*
*மாதர் அறங்கள் பழமையைக் காட்டிலும்*
\ Vâ E ØÃÅß ØÄFm kVµk \ ½"[12]

**இலக்கியங்களில் திருமணம்**

தமிழர் வாழ்க்கையை அகம், புறம் எனப் பகுத்துள்ளனர். பிறரறியா வண்ணம் தலைவனும் தலைவியும் சந்தித்துப் பழகும் நிலை களவு வாழ்க்கையாகும். பெற்றோர் இசைவுடன் தலைமகனும் தலைமகளும் மணந்து வாழும் வாழ்க்கை கற்பு வாழ்க்கை எனப்படும். பெற்றோர் விருப்பம் இல்லாமல் தன் விருப்பத்திற்குத் தலைவனுடன் தலைவி செல்வது உடன் போக்கு எனச் சுட்டப்படுகிறது. தலைவன் பொய்யுரைத்துப் பேதைப் பெண்ணை ஏமாற்றினான். இத்தகைய பொய்யும், தவறுகளும் தோன்றத் தொடங்கின. இத்தவறுகளால் சமுதாய வாழ்வில் சீர் குலைவு ஏற்பட்டது. இதை ஒழித்து நேர்மையும் ஒழுக்கமும் நிரம்பிய சமுதாய வாழ்வை நிலைநாட்டுவதற்குச் சமுதாயத் தலைவர்கள் முன் வந்தனர். பலரைச் சாட்சியாக வைத்துத் திருமணத்தை நடத்திவிட்டால் பிறகு அத்தம்பதியர் பொய் கூறவோ, தவறு செய்யவோ மாட்டார்கள் என்ற முடிவுக்கு வந்தனர். இதற்காகவே கற்பு மணத்திற்குச் சில சடங்குகளை உண்டாக்கினர். இந்தச் சடங்கை ஏற்படுத்தியவர்கள் தமிழ்ச் சமுதாயத் தலைவர்களும் அறிஞர்களும்தான்"[13] என்று உறுதிபடக் கூறுகிறார் சாமி.சிதம்பரனார்.

"*பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்*
*ஐயர் யாத்தனர் கரணம் என்ப*"[14]

தொல்காப்பியர் கற்பு வாழ்கையைக் குறிக்கும் போது,

*"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்*
*கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்*
*கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே"*[15]

என்று குறிப்பிட்டுள்ளார். பெண் கொடுப்பதற்குரிய மரபினர் கொடுக்க, பெற்றுக் கொள்ளுதற்குரிய மரபினர் பெற்றனர். தலைவன் கரணம் என்று சொல்லப்படும் திருமணச்சடங்குகளுடன் பெற்றுக்கொள்கிறான் என்று அறியப்படுகிறது.

**திருமணங்களில் சடங்குகள்**

திருமணச் சடங்குகள் பலவற்றைப் பண்டைய இலக்கியங்களில் காண முடிகிறது.

"திங்களும் உரோகிணியும் கூடிய நல்ல நாளில் திருமணம் நிகழ்ந்தது. வைகறைப் பொழுதில் மணவினை நடந்தது. பந்தலமைத்துப் புதுமணல் பரப்பினர். விளக்குகளை ஏற்றினர். மாலைகளைத் தொங்கவிட்டு இல்லத்தை அழகு படுத்தினர். உழுந்து பெய்த கொழுந்துவை அடிசில் கொடுக்கப்பட்டது. உச்சிக் குடத்தர், புதிய மட்பாண்டங்களைச் சுமந்து பெரிய ஆரவாரத்தோடு பந்தலுக்கு வந்தனர். அவர்கள் பொதுசெய் கம்பலை முது செம்பெண்டிர் வாழ்த்தியதோடு நீரில் நெல்லும் மலரும் கலந்து வதுவை நீராட்டினர். அப்போது பெண்கள் கூட்டம் புகுந்து 'பேரிற் கிழத்தி ஆக' என வாழ்த்தியது. பெற்றோர் மணமகளை மணமகனிடம் தந்தனர் என்று அகநானூறு கூறுகிறது."[16]

**திருமணச் சடங்கில் தாலி அணிதல்**

| | |
|---|---|
| இழையணிதல் | - (அகம், 196) |
| நெடு வீழ் அணிதல் | - (நெடுநல்வாடை, 136-137) |
| மங்கலவணி அணிதல் | - (சிலம்பு 2-63) |
| பொன் அணிதல் | - (பழமொழி, 381) |

அம்பொன்மணியணிதல் - ( பெரியபுராணம், 2134)

தாலி அணிதல் - ( பெரியபுராணம், 2697)

பழந்தமிழிலக்கியங்களில் பயின்று வந்துள்ள தொடர்களால் பண்டைக் காலத்திலும் தாலி அணியும் வழக்கம் இருந்துள்ளது தெரிகிறது. பின் அதன் வளர்ந்த நிலையை இன்று காணமுடிகிறது.

**திருமணங்களில் தாலி அணியும் நிலை**

மணவினைச் சடங்கின் போது வெண்ணுலில் வாகை இலையையும், அறுகம் புல்லையும் சேர்த்துக் கட்டிக் காப்பாகப் பெண்ணுக்கு அணிவித்தனர். தூய உடை அணிவித்தனர் என்ற செய்தியையும் தருகின்றது அகநானூற்றுப்பாடல்"[17]

சிலப்பதிகாரம் "கண்ணகியின் மணம் மாமுது பார்ப்பான் மறைவழி காட்ட நடந்தது. மணமக்கள் தீவலம் வந்தனர்"[18] என்று கூறுகிறது. ஆண்டாள், நாச்சியார் திருமொழியில் தன் மணம் குறித்துக் கண்ட கனவினை எடுத்துரைக்கையில் மணச் சடங்குகள் பல குறிப்பிடப்படுகின்றன.

"வாரணமாயிரம் சூழ வலஞ் செய்து
நாரணநம்பி நடக்கின் றானென்று எதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புரமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழீ! நான்

நாளை வதுவை மணமென்று நாளிட்டு
பாளை கமுகு பரிசுடைப் பந்தற்கீழ்
...... ...... ......
மந்திரக் கோடியுடுத்தி மணமாலை
சுந்தரி சூட்டக் கனாக் கண்டேன்"

மேற்கண்ட பாடல்களின் வழி புனித நீராட்டல், காப்பு நாண் கட்டுதல், கதிரொளி தீபம், கலசம் ஏந்தி வருதல், மதுரையார் மன்னன்

அடிநிலைதொட்டு, எங்கும் அதிரப்புகுதல் ஆகிய மணச்சடங்குகளை அறிகிறோம்.

*"மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத*
*முத்துடைத்தாமம் நிரை தாழ்ந்த பந்தற்கீழ்*
*மைத்துனன்நம்பி மதுசூதன் வந்து என்னைக்*
*கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழீ! நான்"*[19]

என்று ஆண்டாள் நாச்சியார் பாடுகிறார். இதில் தீவலம் வருதல், அம்மி மிதித்தல் போன்ற இன்றைய திருமணச் சடங்கு முறைகள் யாவும் இடம் பெற்றுள்ளதை அறிய முடிகிறது.

திருமணச் சடங்குகள் யாவும், அந்த உறவு எளிதில் விட்டுப்பிரிந்துவிடாமல் கட்டிக் காக்க வகுக்கப்பட்டனவாக அமைந்துள்ளன.

**சிவசங்கரி கூறும் இந்துக்களின் திருமணச் சடங்கு விளக்கம்**

'சப்தபதி' என்ற சடங்கிற்கான விளக்கத்தை,

"மணமகளின் கையைத் தன் வலக்கரத்தால் பற்றி ஏழு அடிகள் எடுத்துவைக்கும் மணமகன் கூறுகிறான். ஏழு அடிகளை என்னுடன் சேர்ந்து நடந்ததன் மூலம் நீயும் நானும் ஒன்றாகப் பிணைந்துவிட்டோம். இனி, உன்னுடைய அப்பழுக்கில்லாத அன்பை எனக்கு நீ பரிபூரணமாய் தா; பதிலுக்கு என்னுடைய முழுமையான அன்பை உனக்கு நான் தருகிறேன். இனி, எந்தக் காரியத்திலும் நாம் இணைந்தே செயல்பட்டு நம் கருத்துக்களும், ஆசைகளும், சங்கல்பங்களும் ஒரே மாதிரியாக இருக்கப்பாடுபடுவோம். உன் ஒத்துழைப்புடன் என் கடமைகள் அத்தனையும் நான் தவறாமல் செய்வேன். இனி, நீ பாடல் என்றால் நான் ராகமாவேன்; நீ பூமி என்றால் நான் உரமாவேன்; நான் விதை என்றால் அதன் ஊட்டச்சத்து நீயாவாய் நான் எண்ணம் என்றால் நீ வாக்கு ஆவாய்"[20] என்ற 'சப்தபதி' சடங்கின் விளக்கத்தை சான்றோரிடம் கேட்டு அறிந்து விளக்கியுள்ளார்.

சிவசங்கரி, தாம் கற்ற கவிதைக் கருத்துக்களை, இக்கருத்துக்கு வலுசேர்க்க இணைக்கின்றார்.

"வில்லும் நாணும் போல ஒரு ஆண், பெண் உறவு இருக்க வேண்டும். அவனை வளைப்பவளும் அவளே; அவனால் வளைக்கப் படுபவளும் அவளே; அவனை நல்வழிக்கு இழுப்பவளும் அவளே, அவனைத் தொடர்பவளும் அவளே; ஆக நாண் இல்லாத வில் எப்படி உபயோகமற்றதாகக் கருதப்படுகிறதோ, அதேபோல சரியான உறவு இல்லாத தாம்பத்தியமும் அர்த்தம் இல்லாததாகவே ஆகிறது"[21] என்று சான்று பகர்கின்றார்.

**இஸ்லாமியர் திருமணம்**

இஸ்லாமியர்கள் திருமணச் சடங்கினைக் குறிக்க 'நிகாஹ்' என்கின்றனர். 'நகஹ' என்ற அரபுச் சொல் மரங்களின் வேர்கள் ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணைந்திருப்பதைக் குறிப்பிடும். இந்தப் பொருள் அடிப்படையில் ஒரு ஆணையும் பெண்ணையும் ஒன்றாக இணைந்து வாழச் செய்கின்ற சடங்கை நிகாஹ் என்று இஸ்லாமியர் குறிக்கின்றனர்."[22]

**கிறித்துவர்கள் திருமணம்**

கிறித்துவர்கள் உறுதிமொழி எடுத்துக் கொள்வதைச் சடங்காக மேற்கொள்கின்றனர். "மரணம் நம்மைப் பிரிக்கும் வரை, உயர்விலும், தாழ்விலும், சந்தோஷத்திலும், கஷ்டத்திலும் நாம் ஒருவருக்கொருவர் உறுதுணையாக நிற்போம்" என்று தேவ ஆலயத்தில் உறவினர்கள் முன்னிலையில் உறுதி ஏற்கின்றனர்.

மனித இனம் முழுமைக்கும் பலவகையான சடங்கு முறைகள் பின்பற்றப்படுகின்றன. அதன் அடிப்படைக் காரணம் இப்படி சடங்குகளுடன் பலர் முன்னிலையில் ஏற்றுக் கொள்ளப்படும் மணங்கள் பல்லாண்டு நீடித்து நிலைக்க வேண்டும் என்பதேயாகும். இதுபற்றிச் சிவசங்கரி தம் நூலில்,

"சடங்குகளில் நம்பிக்கை இல்லாவிட்டாலும் கூடப் பத்துப் பேர்கள் ஒன்றுகூடி நடத்தி வைத்த திருமணமாயிற்றே. இதைச் சட்டென்று உடைத்துக்கொண்டு வெளியேறுவது அவ்வளவு எளிதான சமாச்சாரம் இல்லையே நாளைக்குச் சமுதாயம் பழிக்குமே என்று தயங்கினதும், அந்தத் தயக்கத்தினூடே எதிர்பாராமல் கிடைத்த அவகாசத்தில் புருஷனை மனைவியும், மனைவியைப் புருஷனும் சரியாகப் புரிந்து கொண்டுவிட, அசைக்க முடியாத இனிமையான தாம்பத்தியம் பலரிடையே ஜனித்திருப்பதும் நிஜம்"[23]

என்று கூறுகிறார். இந்தக் கூற்றுக்கு இலக்கணமாக வாழ்ந்த தம்பதியரை அவரின் வாழ்க்கையைச் சான்று காட்டுகிறார் சிவசங்கரி.

### புருஷோத்தமன் – சரஸ்வதியின் திருமண வாழ்க்கை

புருஷோத்தமன் பொருளாதாரத்தில் எம்.ஏ., படித்தவர். கல்லூரியில் விரிவுரையாளராகப் பணியாற்றுகிறார். இவர் சம்பாதிக்க வரும் வரை குடும்பம் சாப்பாட்டிற்கே வழியின்றி வாழ்க்கை நடத்தியது. அதனால் புருஷோத்தமனின் எதிர்பார்ப்பு, ஓரளவு வசதியான குடும்பத்தில் பெண் எடுத்து, நிம்மதியாக வாழவேண்டும் என்பதாகும். ஆனால் புருஷோத்தமன் ஆசைப்பட்டது நடக்கவில்லை.

### புருஷோத்தமன் – சரஸ்வதி திருமணம்

புருஷோத்தமனின் பெற்றோர், சரஸ்வதியைப் புருஷோத்தமனுக்காக மணம் பேசி முடித்தனர். சரஸ்வதி புருஷோத்தமனின் தூரத்து உறவுக்காரப்பெண். ஒரு விபத்தில் பெற்றோரை இழந்து ஆதரவு அற்று நிற்பவள். அவள் தங்கள் குடும்பத்திற்கு ஏற்றவளாக இருப்பாள் என்று நம்பினர். பெற்றவர்களை மீறத் துணிவில்லாமல் சரஸ்வதிக்குப் புருஷோத்தமன் தாலிகட்டினார்.

### புருஷோத்தமனின் பணிமாற்றம்

புருஷோத்தமனின் விருப்பத்திற்கு மாறாக நடந்த திருமணம். அதனால், அவளுடன் இணைந்து வாழவேண்டாம் என்று கருதி, தன்

வேலையைத் திருநெல்வேலிக்கு மாற்றிக் கொண்டு சென்றுவிட்டார். அங்கு இரண்டு ஆண்டுகள். பின் தஞ்சாவூர் மூன்று வருடங்கள் என்று வருடங்கள் ஓடிவிட்டன. வாழ்க்கை வெறுத்துத் தனியாய் வாழ்ந்தார். ஆனால் ஒழுக்கத்தைக் கடைப்பிடித்தார். சடங்குகளும், நம்பிக்கை களும் இந்த உறவைக் கட்டிக் காத்தன.

**புருஷோத்தமனின் மனமாற்றம்**

வீட்டில் பெற்றோருடன் வாழ்ந்த மனைவி சரஸ்வதி அவர்களுக்குப் பெரிதும் துணையாய் நின்றாள். புருஷோத்தமனின் தந்தைக்கு உடல் நலமின்றிப்போகப் படுத்தபடுக்கையானார். அம்மாவுக்கு மாதவிலக்கு நிற்கும் நிலையில் ஏற்படும் துன்பம் (மெனோபாஸ் கோளாறு), புருஷோத்தமன் அனுப்பும் பணத்தில் சிக்கனமாகக் குடும்பம் நடத்தினாள். மாமனார் மாமியாரைச் சொந்தத்தாய், தந்தையைக் கவனிப்பது போல் கண்ணுக்குள் வைத்துக் காத்தாள். அவள் படித்த படிப்பை வீணாக்காமல் பக்கத்து வீட்டுக் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தாள், தையல், கூடை பின்னல் போன்ற கைவேலைகள் செய்து விற்றாள். தன் பங்கிற்குச் சம்பாதித்ததைக் குடும்பத்திற்காகச் செலவு செய்தாள். அவர்களுடன் இணக்கமாக வாழ்ந்தும், குற்றம் குறை காணாது அன்பாகக் குடும்பம் நடத்தி வந்தாள். அதைப் பார்த்த புருஷோத்தமன் மனம் மாறியது. அவளின் அர்ப்பணிப்புக் குணத்தைப் புரிந்து கொண்டார்.

**இனிய இல்லறம்**

இன்று புருஷோத்தமன் சரஸ்வதியைப் புரிந்து கொண்டு, மனம் மாறி, அவளுடன் இணைந்து இல்லறம் நடத்துகின்றார்.

> "*மனைத்தக்க மாண்புஉடையள் ஆகித்தற் கொண்டான்*
> *வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.*"[24]

என்ற வள்ளுவரின் குறளுக்கு ஏற்பச் சரஸ்வதி குடும்பத்திற்குத் தக்க சிறப்பினைத் தந்து, கணவனின் வளத்திற்குத் தக்கவாறு வாழ்க்கை

நடத்தியது அவர் மனதைத் தொட்டது. 'இன்று எனக்குக் கிடைத்தது போல் வேறு யாருக்கு மனைவி அமைவாள்' என்று பெருமை கொள்கிறார். அவர் எதிர்பார்ப்புப்போல் நிம்மதியாய் வாழ்கிறார்.[25]

**ஆணின் வெற்றிக்கு ஒரு பெண்ணின் துணை**

நல்ல வாழ்க்கைத் துணை அமைந்தால், அந்த வாழ்க்கை இனியதாக அமையும். தன்னை மணந்துகொண்டவனின் மனம் அறிந்து அவன் காரியம் யாவிலும் துணைநிற்கும் பெண்கள் என்றும் போற்றப்படுபவர்கள். அப்படி ஒரு தம்பதியரை அறிமுகம் செய்கிறார். புத்தகப் பதிப்பகத்தார் திருநாவுக்கரசர் குடும்பம் பற்றிச் சிவசங்கரி,

> "ஆச்சி பேச்சை எடுத்துவிட்டால் திருநாவுக்கரசு அவர்களின் முகம் பெருமையால் பளபளவென்று மின்னுவதை நான் எத்தனையோ முறைகள் பார்த்து விட்டேன். அவ எனக்காக எதையும் செய்வாம்மா.... ஆரம்ப காலத்துலே கையிலே பணமில்லாதப்ப வியாபாரத்தை நடத்துறதுக்காக தன் நகைகளை அடகு வைக்கத் தானே முன் வந்திருக்கா.... அச்சடிச்சி வர்ற புத்தகங்களைத் தான் உட்கார்ந்து தைத்து கட்டி, பைண்ட் பண்ணியிருக்கா... வந்த கஷ்டங்களையெல்லாம் ஒதுக்கித் தள்ளிட்டு நானே உலகம்னு வாழ்ந்திருக்கா... இன்னிக்கி நான் சமூகத்துல அந்தஸ்தா நாலு பேர் மதிக்கிற மாதிரி வாழற இந்த வாழ்க்கைக்கு அஸ்திவாரமா, அச்சாணியா இருந்தவ. இருக்கிறவ, இவதான். சமயத்துல தேவையான ஆலோசனை சொல்ற திலேயும், ஒரு மனுஷரை அளந்து புள்ளி குத்துறதிலேயும் இவ கெட்டிக்காரி; வீட்டுலே ஒரு மனுஷனுக்கு நிம்மதி இருந்ததுன்னா, அப்புறம் அவனுக்கு எந்த வெளி வேதனையும் பெரிசில்லே... நா... முன்னுக்கு வந்தது இவ கொடுத்த அரவணைப்புலதான்.... என்று கூறும் திருநாவுக்கரசர் இன்று மிகப் பெரிய பதிப்பாளர்."[26]

என்று குறிப்பிட்டுள்ளார். வாழ்க்கைத் தரம் உயர, சமூகத்தில் மதிப்பு உயர உறுதுணையாக நிற்பவர் அவரது துணைவியார் என்பது பதிப்பகத்தார் வாழ்வின் மூலம் அறிகிறோம்.

திருநாவுக்கரசரைப் பற்றி நினைக்கும் போது தனக்கு நினைவுக்கு வரும் உலகெங்கும் பேசப்படும் ஒரு வசனம், 'ஒவ்வோர் ஆணின் வெற்றிக்குப் பின்னாலும் ஒவ்வொரு பெண் உள்ளாள்' *(Bhind every successful man there is a woman)* என்பதாகும். வெற்றிகரமான வாழ்க்கையை நடத்த ஒரு ஆணுக்கு நெம்பு கோலாக இருந்து உதவுவது ஒரு பெண்தான்[27] என்பதை வலியுறுத்திக் கூறுகிறார் சிவசங்கரி.

வள்ளுவர் கூறும் வாழ்க்கைத் துணை நலனைத் திருநாவுக்கரசர் பெற்றுள்ளார் என்பது தெரிகிறது. இதனை,

"*தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற*
*சொற்காத்துச் சோர்வுஇலாள் பெண்*"[28]

என்ற திருக்குறள் மூலம் அறிகிறோம்.

தன்னையும் தன் கணவனையும் காத்தும், அவனுக்குப் புகழைப் பெற்றுத்தந்தும் அதனைக் காத்தும் நிற்பவளே தக்க மனையாள். இன்றைய சூழலில் இத்தகைய பெண்கள் ஆண்களுக்குக் கிடைப்பது அரிதாகவே காணப்படுகிறது.

**குடும்பத்தில் உறவுகளும் உறவுநிலைப் பெயர்களும்**

மனிதன் சேர்ந்து வாழும் தன்மையினால் ஒரு சமூகத்தினை அமைக்கிறான். அந்தச் சமூகத்தின் ஆணிவேராக உறவு முறைகள் குடும்பத்தில் ஆக்கப்படுகின்றன. உறவுகள் தாய் வழியாலும், தந்தை வழியாலும், மண உறவாலும் உருவாக்கப்பட்டுள்ளன.

"குடும்ப உறவுகளை மானிடவியலார் இரத்த உறவு (CONSAGVINITY), மணஉறவு (AFFINITY), புனைவியல் உறவு (FICTIONS) எனப் பிரித்துள்ளனர். உறவுகளை மேலும் ஆராய்ந்த மர்டாக் என்ற அறிஞர் உறவுகளை, முதல் நிலை உறவுகள், இரண்டாம் நிலை உறவுகள், மூன்றாம் நிலை உறவுகள் எனப்பல படிநிலைகளில் பிரித்துச் சொல்கிறார்."[29]

### முதல்நிலை உறவுகள்

ஒருவனுக்குக் குடும்பத்தில் அமைந்த நேரடி உறவுகள் அனைத்தும் முதல்நிலை உறவுகள் ஆகின்றன. அது ஒருவனுக்குத் தந்தை, தாய், சகோதரன், சகோதரி, மகன், மகள், மனைவி ஆகிய ஏழுநிலை உறவினர்.

### இரண்டாம் நிலை உறவுகள்

முதல் நிலை உறவுகளான தாய், தந்தை, சகோதரன், சகோதரி, மகன், மகள், மனைவி மூலமாக அமையும் சொந்தம் இரண்டாம் நிலை உறவுகள். இவர்களை மணஉறவுகள் என்றும் கூறுவர்.

இந்த மணஉறவுகள், முதல் நிலை உறவுகளின் இடங்களை ஆட்கொண்டதால் குடும்பங்களில் குழப்பங்களும், விரிசல்களும் ஏற்படுகின்றன. குடும்பங்கள் சிதைந்து போவதற்கு மண உறவுகளின் இடையூறுகள் ஒரு காரணம் ஆகின்றன.

மனித உறவை மூன்று நிலைகளாக வகைப்படுத்திக் கூறுகிறார் பார்வதி.

"மனித உறவுகளை மூன்று வட்டங்களாகப் பிரிக்கலாம். நமக்குள்ளே உள்ள உறவுநிலையைக் குடும்ப உறவு என்று அழைக்கிறோம். இதனையே நேர்வழி உறவு, கிளைவழி உறவு என்று மானிடவியலார் பகுப்பர். இதுவே முதல் நிலை வட்டம். இரண்டாம் நிலை வட்டம் குடும்பத்தை விட்டு வெளியே உள்ள மனிதர்களுடன் கொள்ளும் உறவு. ஒரே ஊர், பக்கத்து ஊர் மக்களுடன் கொள்ளும் உறவு ஆகும். மூன்றாம் வட்டம் என்பது கணியன் பூங்குன்றனார் கூறும் "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற உலக மக்களோடு உலக மக்கள் கொள்ளும் உறவு. இன்று பொருளாதார நிலையில், மனித நேய அடிப்படையில் உலக நாடுகள் இணைந்து செயலாற்றுவது மூன்றாம் நிலை வட்டமாகும்"[30] என்பார்.

மனித உறவுச் சங்கிலியின் அடிப்படைக் கூறுகளாக வகைப்படுத்தப் பட்டுள்ள பண்புகள்.

"1. விருப்பம், 2. நாட்டம், 3. அன்பு, 4. விட்டுக்கொடுத்தல், 5. உதவிபுரிதல், 6. செயலூக்கம் அளித்தல், 7. வழிவழியாக வந்த கலாச்சார பண்புகள், 8. வாழ்வுமுறையில் முன் உதாரணமாகத் திகழுதல், 9. நட்பின் முக்கியத்துவம், 10. மதிப்புக்கல்வி"[31]

என்று காட்டுகிறார் செல்வநாதன்.

**குடும்பத்தின் கடமைகள்**

குடும்பம் என்ற கட்டமைப்பில் ஒவ்வொரு தனிமனிதனுக்கும் கடமைகள் பிரித்தளிக்கப்படுகின்றன. வழிவழியாக அவை பின்பற்றப்பட்டும் வருகின்றன. அன்பைப் பகிர்தல், ஒருவருக்கொருவர் உதவுதல், ஈட்டிய பொருளைப் பகிர்ந்து வாழுதல் என்றுப் பொருளியல் கொள்கை தனிமனிதனைச் சேர்ந்து வாழச் செய்கிறது.

**பொருள் நிலை மதிப்புகள்**

வாழ்க்கையின் தெளிந்த முடிவாக அறியப்படும் உண்மைகள் மதிப்புகள் என்று கருதப்படுகிறது. அத்தகைய முடிவை அறியத் துணை செய்வது பொருளும் அது சார்ந்த கருத்தும் ஆகும். இதனை டாக்டர். ஈ.கோ.பாஸ்கரதாஸ்,

> "வாழ்க்கையின் தெளிந்த முடிவாக அறியப்படும் பேருண்மை களை மதிப்புகள் என்கிறோம். அத்தகைய முடிவை அறியத் துணை செய்யும் பொருள்களையும் கருத்துக்களையும் மதிப்புகளாகக் கருதுவதும் மக்களின் பொது இயல்பாகும். நன்மையும் உண்மையும், உயர்நிலை மதிப்புகளாக எண்ணப் படுகின்றன. ஒருவன் ஈட்டிய பொருளைத் தானே துய்க்கும் போது அப்பொருள் அவனுக்குக் கருவியாகிறது. பயன்படுகிறது. சிறிய எல்லைக்குட்பட்ட மதிப்பைப் பெற்றுத் தருகிறது. ஆனால் ஒருவன் தன் பொருளைக் கொண்டு பிறர் நலத்திற்குப்

பயன்படுத்தும் போது, அப்பொருள் மிக உயர்ந்தப் பயனை விரிந்த பயனை விளைவிக்கிறது. அப்போதும் பொருள் கருவியாகத்தான் இருக்கிறது. ஆனால் உண்மையான பயனை விளைவிக்கும் கருவியாக மதிக்கப்படுகிறது. அத்தகைய மதிப்பையே சிறப்பாக பொருள்நிலை மதிப்பு என்று கருதுகிறோம்"[32]

என்று குறிப்பிட்டுள்ளார்.

இத்தகைய மதிப்புநிலையில் சங்க கால மனிதர்கள் வாழ்ந்து வந்ததை இலக்கியங்கள் உணர்த்துகின்றன. மன்னன் இரவலர்களுக்குப் பொருள்களை வாரிவழங்கியுள்ளான். நாட்டின் குடிமக்கள் தங்கள் இல்லங்களில் உள்ள உணவுப் பொருள்களை மற்றவர்க்கு வழங்கியுள்ளனர். இங்குத் தன்னலமற்ற உயர்நிலை மதிப்புகளாகப் போற்றப்பட்டுள்ள நிலை காட்டப்படுகின்றது. இரவலனும் தான் பெற்று வந்த பரிசுப் பொருள்களைத் தன்னைச் சார்ந்த சுற்றத்தினருக்கு வழங்கி வாழ்ந்துள்ளான். வறுமையுற்றிருந்த புலவன் வள்ளலை நாடிச் சென்று பொருள்பெற்று வருகிறான். அதனைக் கொண்டு சுற்றம் பேணியுள்ளான். அது வருமாறு :

தன் மனைவியிடம் கொடுத்து,

"வாழ்க்கைத்துணை நலமே! இதோகுமணன் தந்த பரிசுப்பொருள், உனக்கு வேண்டியவர்களுக்குக் கொடு, உன்னால் விரும்பப்படு பவர்களுக்குக் கொடு, உனது சுற்றத்தாருக்குக் கொடு, நமது சுற்றாத்தாருக்குக் கொடு, வேண்டியவர் வேண்டாதவர் என்ற பாகுபாடு இல்லாமல் எல்லோருக்கும் கொடு"[33]

என்று கூறுகிறான் என்பதனைக் குன்றக்குடி அடிகளார் எடுத்துக் காட்டுகின்றார்.

குடும்பம் தன்னையும் பேணிக்கொண்டு மற்றவரையும் ஆதரித்து வாழக் கற்றுக்கொடுக்கிறது என்பது தெளிவாகப் புலனாகிறது.

## குடும்ப உறவுகளைக் கையாளும் முறை

குடும்ப உறவுகள் உணர்வால் பிணைக்கப்பட்டுள்ளன. கூடி வாழ்ந்த மனிதன் தனக்கென்று ஒரு வாழ்வியல் அமைப்பை உருவாக்கிக் கொண்டான். அதை கூட்டுக் குடும்பம் என்பர். இன்று பல்வேறு காரணங்களால் இந்தக் குடும்ப அமைப்பு மாறி உள்ளது. கூட்டுக் குடும்பத்தில் மூத்தவர் இளையோருக்கு ஒற்றுமை, விட்டுக்கொடுத்தல், பகிர்ந்து கொள்ளல், சகிப்புத் தன்மை, கலந்தாலோசித்தல் போன்ற நற்குணங்களைக் கற்றுத்தந்தனர். இன்றையக் காலப்போக்கில் இந்நிலை மாறிவிட்டது. கூட்டுக் குடும்பத்தின் பங்கு மறையத் தொடங்கி விட்டது. பண்டிகைக் காலங்களில், வீட்டு விசேடங்களில் முக்கிய நிகழ்வுகளில் குடும்பங்கள் கூட்டமாகச் சேர்ந்து ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு வாழும் முறை ஓரளவு பின்பற்றப்படுகிறது.

இன்றைய உலகில் உறவுகள் பொருளாதார நிலைகளை வைத்து உரசிப் பார்ப்பக்கும் நிலை உள்ளது. அதனால் உறவுகளின் நெருக்கமும் குறைந்து வருகிறது. இந்த உறவுகளின் ஏற்றத் தாழ்வினைப் போக்கத் திட்டமிட்டுச் செயல்பட்டால் குடும்ப உறவுகளைச் செம்மைக் கொண்டு செல்லமுடியும்.

## பகிர்தல் உணர்வின் இன்றியமையாமை

உறவுகள் பொருளாதார அடிப்படையில் பரவலாகப் பார்க்கப்படுகிறது. அதனால் தன்னலம் மேலோங்கும் நிலை உள்ளது. அதனைப் போக்கப் பண்டைக் காலத்தில் சொல்லப்பட்ட ஒரு கதையை வழங்குகிறார் தென்கச்சி சுவாமிநாதன். வருமாறு:

"அரசன் ஒருவன் அதிகாலைப் பொழுதில் நகர்வலம் வருகிறான். அப்பொழுது ஊருக்குப் புறம்பாக ஒரு வயலில் உழவன் உழுது கொண்டிருக்கிறான். அவன் மிகவும் மகிழ்வுடன் தெம்மாங்குப் பாட்டுப் பாடி வேலை செய்து கொண்டிருந்தான். அரசன் அந்த உழவனைப் பார்த்து, "நீ இவ்வளவு மகிழ்வோடு வேலை செய்கிறாயே. இந்த வயல் உன்னுடையதா? என்று கேட்கிறான். உழவன் Ö_çé.

நான் கூலிக்கு வேலை பார்க்கிறேன் என்று சொல்லுகிறான். அரசன் வியப்பாக அப்படியா எவ்வளவு கூலி தருகிறார்கள் என்று கேட்கிறான். உழவன் எட்டணா என்று சொல்லி, எட்டணா உனக்கு வாழ்க்கை நடத்தப் போதுமா? மீண்டும் கேட்கிறான். உழவன் போதும் என்கிறான். எப்படி அந்தப்பணம் போதும் அதைக்கொண்டு உன்னால் எப்படி இவ்வளவு மகிழ்வுடன் இருக்க முடிகிறது? என்று வினவுகிறான். உழவன் தன் வாழ்க்கையின் பொருளாதார திட்டத்திட்டத்தைக் கூறுகிறான்."

எட்டணாவில்,

| | |
|---|---|
| எனக்கும் என்மனைவிக்கும் | 2 அணா |
| நான் வாங்கிய கடனுக்கு | 2 அணா |
| தர்மத்துக்கு | 2 அணா |
| இனிநான் வாழ சேமிப்பு வட்டிக்கு கொடுத்தல் | 2 அணா |

இது எனக்குப் போதுமானதாக உள்ளது. அதனால் நான் நிறைவோடு மகிழ்வாக இருக்கிறேன் என்று சொல்லுகிறான். அரசனுக்கு வியப்பு. நீ ஏன் கடன் வாங்கினாய் என்று கேட்கிறார். நான் பெற்ற கடன், என் பெற்றோரைக் காப்பது. அவர்களுக்குச் செலவு செய்ய 2 அணா தேவைப்படுகிறது. தர்மம் என்பது என் சகோதரி விதவையாக வந்து என்னுடன் தங்கியுள்ளாள் அவளைக் காப்பது என் கடமை. அதனால் அது தர்மம் ஆனது. நான் வட்டிக்குக் கொடுப்பது என்பது என் குழந்தைகளைப் பேண அவர்கள் என்னைக் கடைசி காலத்தில் காக்க, இன்று அவர்களை நான் காத்து வளர்க்கிறேன். நாளை அவர்கள் என்னைக் காப்பார்கள். இப்படிக் குடும்பம் என்பது கடமைகளின் தொடர் சங்கிலியாகும் என்று உழவன் சொல்ல அரசன் வாழ்க்கையின் பொருளாதார மதிப்பையும், மானுட மதிப்பையும் உணர்ந்து வியந்து உழவனின் மகிழ்ச்சிக்கு, மனநிறைவுக்கான காரணத்தை உணர்ந்து கொண்டார்.[34]

இக்கதையின் வாயிலாகத் தன்னுடைய வருவாயில் பெற்றோரையும், உடன்பிறப்பையும் பாதுகாப்பது கடமை என்பதை உணர்கிறோம்.

மானுட மதிப்பும், பொருளாதார மதிப்பும் போற்றப்பட்டுள்ளது. கூடியும், உறவுகளைப் பேணியும் வாழ்ந்தநிலை காட்டப்பட்டுள்ளது.

**கூட்டுக்குடும்பத்தின் அன்றைய நிலை**

ஐம்பது, அறுபது வருடங்களுக்கு முன்பு கூட்டுக்குடும்பம். ஒரே வீடு, அதில் தாத்தா, பாட்டி, பெரியப்பா, சித்தப்பா, அண்ணன், தம்பி அவர்களின் மனைவி மக்கள் என்று இருபது பேர்களாவது கூடிவாழ்ந்தார்கள்.

பொதுச் சமையல் அறை அங்குப் பொங்கி வடித்து, கூடி உண்டு வாழ்ந்தார்கள். பிசைந்த சோற்றைக் கையில் உருட்டி உருட்டிப் போட்டுக் கொண்டே கதை சொல்வாள் பாட்டி சுற்றி அமர்ந்து வாங்கி உண்டபடியே மகிழும் குழந்தைகள்.

**கூட்டுக்குடும்பத்தில் அன்றைய மூத்தவர்களின் தியாக உணர்வு**

அன்றைய முகம் தெரியாத முன்னோர்கள் தங்களின் வாரிசுகள் இச்சமூகத்தில் நின்று நிலைத்து வாழப் பாடுபட்டு உழைத்தனர். அவர்களின் தியாக உணர்வை இன்று மனிதன் மறக்கக் கூடாது என்பது பற்றி,

"*காதல் உணர்வால் ஈர்க்கப்பட்டு, பொறுப்பான இல்லற வாழ்வில் ஈடுபட்டு, வாரிசுகளை உருவாக்கி, அவர்களுக்குக் கல்வி, அறிவுத்திறனை வளர்த்து, நடை முறை உலகில் வாழப் பழக்குதல், வாரிசுகளுக்கு இல்லற வாழ்வை அமைத்துக்கொடுத்தல் போன்றவற்றைச் செய்த அவர்களின் கடமை உணர்வை வாரிசுகள் நினைத்துப் பார்த்து போற்ற வேண்டும், தங்கள் வாரிசுகளுக்குச் சமூகப் பாதுகாப்பை ஏற்படுத்துவது போன்ற அவர்களின் நடவடிக்கைகள் தன்னலமற்ற தன்மை உண்மைகளாகும்*"[35] என்று க.ஜீவானந்தம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

ஒரு குடும்பத்தில் நான்கு மகன்கள் இருந்து, அதில் இரண்டாமவன் வேலைக்காக வெளியில் நகருக்கு வந்து ஒரு சாதாரண வேலையில் சேர்கிறான். அடுத்தவன், உயர்கல்வி அதனால் இந்தியாவின் வடபகுதிகளில் வேலை. அதற்கும் அடுத்தவர் அப்படியே வடபகுதிகளில் பணியில் சேருகின்றான். இந்தியாவின் நான்கு பகுதிகளிலும் பரவி வாழ்ந்த போது பெற்றோரைக் காப்பது குடும்பத்தின் மூத்தவன்தான். அவன் அந்தக் குடும்பக் கப்பலை ஒரு மாலுமி போலச் செலுத்திக் கரைசேர்க்கிறான்.

சொத்துக்கள் பிரிக்கப்படுகின்றன. பாகப்பிரிவினையில் மூத்தவனுக்குச் சற்று அதிகமாக வழங்கப்பட்டது. அது நியாயதர்மத்தோடு மற்றவர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. காரணம் மூத்தவன் முதியோராகிய பெற்றோர், சில நேரங்களில் விதவையாகிவிட்ட அத்தை, சகோதரி போன்றவர்களையும் பேணும் கடமை அவனுக்குச் சேர்கிறது. சகோதரி, அவளுடைய குழந்தைகளையும பராமரிக்கும் பொறுப்பையும் அந்தக் குடும்பமே ஏற்றுக் கொண்டது. பதிலுக்கு அந்த 'அத்தை' என்பவள். சகோதரன் குடும்பத்திற்கு முழுமையாக உழைத்தாள். தன் குழந்தைகள் மட்டுமன்றி, தன் சகோதரனின் குழந்தைகளையும் அக்கறையுடன் பேணினாள். குளிக்கச்செய்து, சோறு ஊட்டி, இரவில் கதை சொல்லித் தூங்கச் செய்து, காய்கறி நறுக்குவது, துணிதுவைப்பது போன்றும் குடும்ப உழைப்பில் அத்தையின் பங்கு பெரும்பங்காக அமைந்திருந்தது.

அதற்குக் கடப்பாடு கொண்ட குடும்பத்தினர் நன்றிக் கடனாகச் சகோதரியின் பெண்ணைச் சீர்வரிசை பெறாமல் தன் மகனுக்குக் கட்டிவைப்பதும், தங்கள் பெண்ணை அவளுடைய மகனுக்குச் சீரும், சிறப்புமாகக் கட்டிக்கொடுப்பதுமாக அன்றைய குடும்ப உறவு என்றிருந்தது.[36] என்பார் முரளி.

பாசம், அன்பு இவைகளுக்குப் பரிசாகவும், அவன் உழைத்த உழைப்பிற்குப் பிரதிபலனாகச் சகோதரி. சகோதரன் மக்களை உறவுகளால் இணைப்பதும் என்று அன்றைய குடும்ப விதிகள் இருந்தன.

ஆனால், இன்று இந்த நிலை முற்றிலுமாக மாறிவிட்டது. உறவு என்கிற உணர்வுநிலைகளிலிருந்து மாறி, அறிவியல் அடிப்படையில் அணுகப்படுவதால் உறவு முறைத் திருமணங்கள் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. காரணம் ரத்த உறவு முறைத் திருமணங்களில் பிறக்கும், குழந்தைகளுக்கு உடல் ஊனம் ஏற்படும் என்று கருதப்படுகிறது. மேலும் பொருளாதார அடிப்படையில் பெரிய இடத்தில் பெண் எடுப்பதும், கொடுப்பதும் சிறப்பு என்ற நோக்கில் திருமணங்கள் அமைக்கப்படுகின்றன.

## கணவன் மனைவி உறவில் நெறிப்படுத்துதல்

கணவன் மனைவி இருவரும் இணைந்து செயல்படுவது குடும்பம். குடும்பத்தில் ஒரு சிக்கல் வரும் போது இருவரும் அதில் பாதிக்கப்படுகின்றனர். இருந்தாலும் அதில் மூழ்கிவிடாமல், அச்சிக்கல்களிலிருந்து மீண்டு எழுந்து வர ஒருவருக்கு ஒருவர் துணை நிற்கின்றனர். அப்போது தான் அந்தக் குடும்பம் என்ற நிறுவனம் நின்று இயங்கும். இங்குச் சிவசங்கரி, நோய்வாய்ப்பட்ட புருஷோத்தமன் தம்பதியினரை எடுத்துக்காட்டுகிறார். புருஷோத்தமன் யமுனாவை நெறிப்படுத்தி வழிபடுத்தச் செய்யும் முறை உயர்ந்த பண்பாகும். அவர் தானும் துன்பப்பட்டு உடன் இருப்பவரையும் துன்பத்துள் மூழ்கடிக்காமல், நிமிர்ந்து நிற்க வழி கூறுகிறார். அதுபற்றி இனிக்காண்போம்.

## யமுனா – புருஷோத்தமன் தம்பதியர்

புருஷோத்தமனும், யமுனாவும் இனிய தம்பதியர். இவர்களுக்கு இரண்டு குழந்தைகள். எதிர்பாராத விதத்தில் புருஷோத்தமனுக்குப் புற்று நோய் என்று அறியப்படுகிறது. இந்தச் செய்தியைக் கேட்டு இருவரும் இடிந்து, அரண்டு, குலைந்து போகின்றனர். சுதாரித்த புருஷோத்தமன், தன்னுடைய நிலைமை கையை மீறிச் சென்றுவிட்டது. இனி தான் தன் குடும்பத்திற்கு என்ன செய்ய வேண்டும் என எண்ணுகிறார். தெளிவடைகிறார். தான் உயிருடன் இருக்கப் போவது

இன்னும் கொஞ்ச காலம் தான். அதற்குள் மனைவியைப் படிப்படியாகத் தொழில்கற்கச் செய்து, குழந்தைகளைப் பேணும் நிலைக்குக் கொண்டு வருகிறார். யமுனாவும் தன் கடமையை உணர்ந்து திறமையை வளர்த்துக் கொள்கிறாள்.

**யமுனா நிர்வாகத்திறனைப் பெறுதல்**

யமுனாவிற்கு முதலில் மன உறுதியைப் பெறச் செய்கிறார் புருஷோத்தமன். எல்லா நிலைகளிலும் உறுதியுடன் செயல்பட ஊக்கத்தை ஏற்படுத்துகிறார். அடுத்தடுத்த மாதங்களில் தொழில் தொடர்பான அத்தனை நுணுக்கங்களையும் கற்றுத் தந்தார். எதார்த்த நிலையை ஏற்று யமுனாவும் வியாபாரம், தொழில் தொடர்பான அத்தனை நுணுக்கங்களையும் கற்றுக்கொண்டாள். இரண்டு ஆண்டுகளுக்குள் புருஷோத்தமன் இறந்து போனார். பின் யமுனா அந்த இழப்பைத் தாங்கி, குழந்தைகளை வளர்த்து, தொழிலை நிர்வகித்து வாழ்க்கையைத்திறம்பட இயக்குகிறார். குழந்தைகள் அப்பா இருந்தபோது எப்படி வளர்ந்தார்களோ அதே நிலைமாறாமல் வளர்த்து அனைவரும் பாராட்டும் நிலைக்கு உயர்ந்துள்ளார்கள். அது குடும்பம் என்ற நிறுவனம் / கணவன் வழிநடத்திய அந்த வழியைப் பின்பற்றியதால் கிடைத்த பரிசு ஆகும் என்கிறார் சிவசங்கரி.[37]

“குடும்பத்தின் கடமையாக, குடும்பத்தலைவர், குடும்பம் என்ற நிறுவனம் திறம்படச் செயல்படவும், சமுதாயத்தில் காலூன்றி வாழவும் அறிவு, தொழில்முறைப்பண்பாடு போன்றவற்றைக் கற்றுத்தருதல் வேண்டும் என்பது நியதி.

அதனைப் புருஷோத்தமன் யமுனாவிற்குக் கற்றுக்கொடுத்து, சமுதாயத்தில் நிலைத்து நிற்கச் செய்துள்ளதை அறிகிறோம்.

**குடும்பத் தலைவரின் பொறுப்பின்மை**

குடும்பத்தில் திடீரெனச் சிக்கல் ஏற்படும் காலங்களில் குடும்பத்தைத் தலைவனோ, தலைவியோ தாங்கிப்பிடிக்க வேண்டும்.

சிக்கலைத் தீர்க்கப் பாடுபடல் வேண்டும். குடும்பத்தலைவியை இழந்த கணவன், அவளின் இழப்பைத் தாங்கமுடியாது அத்துடன் வாழ்வே முடிந்துவிட்டது என்று இடிந்து விடவும் கூடாது. எல்லாம் போய்விட்டது. தனக்கு யாரும் இல்லை. தனக்குமட்டும் இந்த நிலை வந்துவிட்டது என்று கூறி அழுவதிலும் புலம்புதலினாலும் குடும்ப வாழ்க்கை சீர் படுவதில்லை. மாறாகக் குடும்பமே சிதைந்து போகும். எழுத்தாளர் சிவசங்கரி இதற்கு மூர்த்தியை உதாரணம் காட்டுகிறார். இனி அது பற்றிக் காண்போம்.

**மூர்த்தி – இலட்சுமி தம்பதியர்**

மூர்த்தி ஒரு பெரிய நிறுவனத்தில் பணியாற்றுபவர். மூர்த்தி - இலட்சுமி தம்பதியருக்குக் கண்ணன் ஒரே மகன் அவனுக்கு வயது பதினேழு. திடீரென ஒரு விபத்தில் லட்சுமி இறந்து விடுகிறார். மனைவி இறந்த துக்கத்தைத் தாங்க முடியாமல் மூர்த்தி குடிக்க ஆரம்பிக்கின்றார். தன்னிரக்கம் கொள்கின்றார். எப்போதும் 'ஐயோ, எனக்கு இப்படி ஆகிவிட்டதே, யாருக்கு நான் என்ன தீங்கு செய்தேன்?' என்று புலம்பிக் கொண்டே இருந்தார். தன் மகனைக் கவனிக்கவில்லை.

**கண்ணனின் நிலை**

குடும்பத்தில், குழந்தைகள் கவனிக்கப்படாமலும், வழிகாட்டலும் இல்லை என்றால் வீணாகிவிடுவார்கள் என்பதற்கு உதாரணமாக, தான்தோன்றியாக, படிக்காமல், யார் பேச்சையும் கேட்காமல் திரிகிறான். ஏன் இப்படி இருக்கிறாய் என்று கேட்பவருக்கு, 'யாருக்கு என்மீது அக்கறை இருக்கிறது?' என்று அலட்சியத்துடன், உருப்படாமல் இருக்கிறான். அவனிடம் இல்லாத கெட்ட பழக்கம் எதுவும் இல்லை. புத்தி சொல்லவோ, அன்பு காட்டவோ கிட்டத்தில் போனால், 'நீ யார் என்னிடம் பரிவு காட்ட? என்று அக்கறை காட்டுபவரிடமும் மரியாதை இல்லாமல் நடந்து கொள்வான்'. மொத்தத்தில் குடும்பம் என்ற நிறுவனம் சீர் குலைந்து போனது.[38]

புருஷோத்தமன் - யமுனா தம்பதியருக்கு ஏற்பட்ட சிக்கலும் இதே நிலை தான். ஆனால் முன்னரே அறியப்பட்டு, சரியான வழிகாட்டுதலினால் குடும்பம் நிமிர்ந்து இருக்கிறது.

மூர்த்தி - லட்சுமி தம்பதியருக்கு ஏற்பட்ட சிக்கலில் எதிர்பாராத இழப்பு. அதனைத் தாங்கிக் கொள்ளும் நிலையைப் பெற முடியாமல் தானும் கெட்டு, தன் குழந்தையின் வாழ்க்கையையும் வீணாக்கிவிட்டார் மூர்த்தி என்பது தெரிகிறது.

**குடும்ப வாழ்வில் தம்பதியர் ஒருவரை ஒருவர் மதித்து நடத்தல்**

அறிவியல் வளர்ந்து விட்ட சூழலில் பண்பாட்டு மரபுகள் மீறப்படுகின்றன. குடும்பக் கட்டமைப்பில் பெண் திருமணத்திற்குப் பின் புகுந்தவீடு செல்ல வேண்டும். ஆனால் செல்வச்செழிப்பில் ஒரே பெண்ணாக இருந்தால், அவளுக்கு வீட்டோடு மாப்பிள்ளை பார்ப்பது இன்றைய நிலையாக உள்ளது. மணிமொழி - ராதாகிருஷ்ணன் தம்பதியரின் வாழ்க்கையில் ராதாகிருஷ்ணனின் நிலை வருந்தத்தக்கதாக உள்ளது.

**மணிமொழி**

மணிமொழி மோட்டார் நிறுவனர், பெரிய பணக்காரரின் ஒரே பெண் அவளுக்கு அண்ணன், தம்பி நால்வர். குடும்பத்தினர் அனைவரும் மணிமொழியை மிகவும் அன்புடன் பேணி வளர்த்தனர். அதனால் அவள் புகுந்த வீட்டிற்குச் சென்று வேலைகள் செய்து கஷ்டப்படக் கூடாது என்று அவளுக்கு, தங்கள் வீட்டிலேயே தங்கும்படியான மணமகனைத் தேடி மணம் முடித்தனர். ராதாகிருஷ்ணன் என்ஜினியர், படித்தவன் நல்லவன், திறமைசாலி, ஏழை. அதனால் மணிமொழியின் குடும்பத்தினர் அவனை விலை பேசி வாங்கித் தங்களுடன் வைத்துக்கொண்டனர்.

**ராதாகிருஷ்ணன் நிலை**

ராதாகிருஷ்ணனுக்குத் தான் ஏழை அவர்கள் பணக்காரார் என்ற வேறுபாடு மனத்தில் உள்ளது. அத்துடன் தான் வீட்டோடு மாப்பிள்ளை என்ற தாழ்வு மனப்பான்மையும் இருந்தது. மணிமொழி ஒவ்வொரு நாளும் ராதாகிருஷ்ணனைப் பேசினபேச்சுக்கள் மேலும் தலைகுனியச் செய்தது. மணிமொழி தன் கணவன் ஏழை, கூச்ச சுபாவம் கொண்டவன், அவனைப் பணக்கார நிலைக்கு, பழக்க வழக்கத்திற்கு ஒத்துப் போக வைக்க வேண்டும் என்ற எண்ணத்தில், ராதாகிருஷ்ணனுக்கு எடுத்துக் கூறும் முறை அவனால் ஏற்றுக்கொள்ள முடியாததாக இருந்தது. கூனிக் குறுகச் செய்தது.

"என்னங்க. டேபில்ல அத்தனை பேரோட சாப்பிடறப்போ சத்தம் போட்டு உறிஞ்சிச் சாப்பிடாதீங்க.. மேனர்ஸ் இல்லேனு சிரிப்பாங்க.. சட்டையை நல்லா 'Ö [' பண்ணிக்கங்க.. காலைல நித்தமும் புது ஷர்ட்போட்டாலும், அரை மணியிலே கசமுசானு ஆக்கிடறீங்களே...அண்ணன்களைப் பாருங்க, எந்நேரமும் மடிப்புக் கலையாம எப்படி இருக்காங்க...நாலுபேர் நடுவுல எதையாவது உளறாதீங்க... எங்க அப்பா, அண்ணன் மாதிரி பேசத் தெரிஞ்சா பேசுங்க..... இல்லாட்டா கம்முனாவது இருங்க... வரவர உங்களோட இது பெரிய தொல்லையாப்போச்சு"

என்று பத்தாண்டுக் காலமாக நல்வழிப்படுத்துகிறேன் என்று மட்டம்தட்டிப் பேசிக்கொண்டே இருப்பாள்.

நல்ல இளைஞன் சுறுசுறுப்பானவன். தன் மனைவி தன்னைப் பேசுவதாலும், தனக்குள் இருக்கும் தாழ்வு மனப்பான்மையாலும், தன் திறமையெல்லாம், எங்கோ முடங்கிப் போக ஒரு கூட்டுப்பறவையைப் போல் அடங்கிப் போய் விட்டான் என்பது தெளிவு.

**ராதாகிருஷ்ணன் நிலையைச் சிவசங்கரி கூறும் போது**

"கெட்டிக்காரத்தனத்துடன் இருந்த ராதாகிருஷ்ணன் இன்று எதையும் தைரியமாகப்பேச, செய்யத் தெரியாதவனாகப் போய்விட்டான். மனைவி, அவள் பெற்றோர், உடன்பிறப்புகள், மட்டம் தட்டுவது போதாது என்று இன்று அவனது பிள்ளைகளும் 'நீ சும்மா இரு டாடி... உனக்கு ஒன்னும் தெரியாது' என்று சர்வ அலட்சியத்துடன் அவனை ஒதுக்குவது பரிதாபத்துக்குரியதாக உள்ளது"[39] என்கிறார்.

பெண்கள் மட்டும் அல்ல பல ஆண்களும் சில குடும்பங்களில் பெண்களை மட்டம் தட்டிப் பேசும் நிலை உள்ளது.

நல்ல திறமை வீட்டு வேலைகள் செய்வதில், குடும்ப நிர்வாகம் என்று எல்லாவற்றிலும் நேர்த்தி, அழகு இருந்தாலும் கணவன் குறைகூறுவான். அப்படிப்பட்ட குடும்பங்களில் அந்தப் பெண் மனம் உடைந்து நிற்பாள். சிவசங்கரி, அப்படிப்பட்ட ஆண்களை இங்கு எடுத்துக் காட்டுகின்றார்.

ராஜா - மீனா தம்பதியரில் ராஜா மீனாவை எப்போதும் குறை கூறிக்கொண்டே இருப்பான்.

> "மிக நேர்த்தியாகத் தன்னைத் தன் காரியங்களை வைத்துக் கொள்ளும் பெண்களும், 'எங்கம்மா மாதிரி உனக்கு குழம்பு வைக்க என்னிக்கித்தான் வருமோ' என்றும், ஆயிரம் சொல்லு உன் ஸ்நேகிதி ஷாலினிக்கு நீலக்கலர் புடவை ஒத்துக்கற மாதிரி, உனக்கு ஒத்துக்கலை என்று இன்னும் பலவற்றில் குறைகளைக் கண்டு முணுமுணுத்து, முகத்தை எப்போதும் தூக்கிவைத்துக் கொள்ளும் ராஜா போன்ற கணவன்மார்களை நாம் பார்த்துக் கொண்டுதானே இருக்கிறோம்"[40]

என்று குறிப்பிட்டுள்ளார்.

நல்ல குடும்பத்தின் திறவுகோல். அந்தந்தக் குடும்பத்தின் கணவன் - மனைவி கைகளில் தான் உள்ளது. கணவன் மனைவியைத் தூக்கி நிறுத்துவதும், அந்தப் பெண்ணின் பேச்சு, நடத்தையில் தான் உள்ளது. நன்கு சிந்தித்து ஒவ்வொருவரும் செயல்படும் போது அந்தக் குடும்பம் அமைதியாக, இன்பமாக அமையும்.

*"இல்லதுஎன் இல்லவள் மாண்பானால் உள்ளதென்*
*இல்லவள் மாணாக் கடை"*[41]

என்ற திருக்குறளால் அறியலாம்.

மனைவி சிறப்புடையவளாக இருந்தால் அந்தக் கணவனுக்கு இல்லாதது என்று எது உள்ளது. மனைவி சிறப்பில்லாதவளாக ஆகின்ற போது எல்லாம் பெற்ற கணவனுக்கு எதுவும் இல்லை என்று ஆகிவிடும்.

**கணவன் – மனைவி நினைவுகொள்ள சில கருத்துக்கள்**

தன்னைச் சார்ந்தவர்களை, நாமே அடுத்தவர்முன் விட்டுக் கொடுக்கக்கூடாது. அப்படி விட்டுக்கொடுத்து விடும் போது, மற்றவர் அவர்களை இன்னும் கீழாக மதிக்க, பழிக்கக் காத்திருக்கின்றார்கள். அதைப் புரிந்து வாழும் போது தாமும் அந்தச் சுற்றமும் நலமாக இருக்கும். இதற்கு இலக்கணமாகச் சிவசங்கரி ஏழை வீட்டு நிர்மலாவைப் பற்றிக் கூறுகிறார்.

நிர்மலாவின் கணவன், தன் மனைவி ஏழை வீட்டுப் பெண், அவளை மற்றவர் மதிக்க நாம் தான் துணை நிற்க வேண்டும் என்பதை உணர்ந்து முக்கியமான நேரங்களில் அவள் உடன் இருப்பதை வலியுறுத்துவதை எடுத்துக்காட்டுகிறார்.

"நிர்மலாவும் வரட்டும், குடும்பச் சமாச்சாரங்களைப் பேசும் போது அவளும் கூட இருப்பதுதானே நியாயம் என்றும், நீ என்ன சொல்கிறாய் நிர்மலா? என்றும் கேட்டு, அவளுடைய கருத்துக்களுக்கும் மரியாதை அளித்து ஸ்ரீதர் துவக்க காலத்திலிருந்தே, நடக்க, இன்று அந்த வீட்டில் மதிப்பு, கௌரவத்துடன் அழகாய் வளைய வருகிறாள்"[42] என்று சிவசங்கரி தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

உறவுகள் குடும்ப அமைதிக்கும், சுமுக உறவுக்கும் உரம் ஊட்டுவனவாக இருத்தல் வேண்டும்.

**திருமண முறிவுகளும் அதற்கான காரணங்களும்**

இன்றைய திருமணங்களில் ஆணும் பெண்ணும் சில எதிர்பார்ப்புகளை வைத்துக் கொண்டு திருமணம் புரிகின்றனர். தங்கள் எதிர்பார்ப்பு மணவாழ்வில் கிடைக்காத போது அவர்கள் மணவிலக்கு பெற உடனடியாக முன்வருகின்றனர்.

**திருமண உறவுகள் தேடப்படும் போது மண மகன் எதிர்பார்ப்புகள்**

ஆணுக்குப் பெண்ணைத் தேடும் போது அவன், "பெண் வேலைபார்க்க வேண்டும். லட்சணமாக அடக்கமாக இருக்க வேண்டும். அவள் நான்கு பேர்களுடன் கலகலப்பாகப் பேசிப் பழக வேண்டும்" எனப் பெண்ணின் தகுதிகளாக வரையறை கூறிப் பெண்ணைத் தேடுகிறான்.

**மணமகளின் எதிர்பார்ப்பு**

பெண் வேலை பார்ப்பவளாக இருந்தால் கணவனாக வருபவர், தான் பார்க்கும் வேலையை விட்டுவிடச் சொல்ல வேண்டும். "தன்னை வெறும் போகப் பொருளாகக் கருதக் கூடாது. தன்னுடைய சுக துக்கங்களுக்குச் சம பொறுப்பெடுக்க விரும்பும் மனிதராகக் காதல், மரியாதை, சுதந்திரம் இவற்றை மனப்பூர்வமாகத் தருபவராக ஆண் இருக்க வேண்டும்"[43] என்பதே பெரும்பான்மையான பெண்களின் எதிர்பார்ப்பபாக உள்ளது.

**எதிர்பார்ப்பில் தோல்வியுற்ற தம்பதியர்**

ரமா - பி.எஸ்சி., படித்தவள் கம்பெனி ஒன்றில் வரவேற் பாளராகப் பணியாற்றுபவர். இவள் பெற்றோருக்கு இரண்டாவது பெண். ஓரளவு வசதியான குடும்பம். ரமா தன்னம்பிக்கை நிறைந்தவள். அவளுக்கு 22 ஆம் வயதில் திருமணம் ஏற்பாடு செய்யப்பட்டு வக்கீல்

தொழில் புரிபவரைத் தேர்ந்தெடுத்து, பெற்றோர் மணம்புரிந்து வைத்தனர். அவர்கள் இருவரையும் தேனிலவிற்காகப் பத்து நாட்கள் கோவாவிற்கு அனுப்பிவைத்தார்கள் உறவினர். பத்து நாட்கள் என்று திட்டமிட்டுச் சென்றவர்கள் ஆறுநாட்களிலேயே திரும்பி வந்தனர். ரயில்வே நிலையத்திலேயே பிரிந்து அவரவர் வீடுகளுக்குச் சென்றனர். ஏன்? எதற்கு என்று கேட்டால் ஒருவர் மற்றவர் மீது ஆயிரம் குறைகளைக் கூறினர். அவர்களின் எதிர்பார்ப்பு அங்குக் கிடைக்காதபோது, உடனடியாகப் பிரிந்து விடுதல் தான் நல்லது என்ற கருத்து அவர்களிடம் காணப்பட்டது. அவர்கள் பொறுமையுடன் வாழ்க்கையை ஏற்க வேண்டும். விட்டுக்கொடுத்தல், ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளல், மனஏற்பு என்பதெல்லாம் உடனடியாக கிடைக்க வேண்டும். அது கிடைக்காத போது உடனடியாக மணமுறிவு தான் என்ற முடிவுக்கு வருகின்றனர்.

**காதலித்துப் பெற்றோரால் நடத்தப்பட்ட திருமணம்**

ரகு - விமலா இருவரும் சிறுவயது முதல் பக்கத்துப் பக்கத்து வீடுகளில் ஒன்றாகப் பழகி வளர்ந்தவர்கள் அந்தப் பழக்கம் காதலாகி, பெற்றோர் விருப்பத்துடன் திருமணம் நடந்தது. இருவரும் பண்பாய் இருப்பவர்கள்.

இருவரும் இணைந்து மும்பையில் மூன்று மாதங்கள் குடும்பம் நடத்தினர். ஒருநாள் வேலையிலிருந்து வீடு திரும்பிய விமலாவிற்கு, ரவி ஒரு கடிதம் எழுதி வைத்திருந்தான்.

"விமலா, உன்னைக் காதலிப்பதாகத்தான் எண்ணி மணந்தேன். ஆனால், சென்ற மாதம் படிப்புக்காக வெளி நாட்டுக்குச் சென்றுவிட்ட என் பழைய காதலியைத் திடீரெனச் சந்தித்தேன். அன்று முதல் அவள்மேல் உள்ளது தான் உண்மைக் காதல் என்பது புரிந்துவிட்டது. நானும் ஒருமாதமாக மனசைக் கட்டுப்படுத்த முயன்றேன் முடியவில்லை. அதனால் என் சாமான்களை எடுத்துக்கொண்டு அவளிடம் போகிறேன். நீ படித்தவள் என்னைப் புரிந்து கொள்வாய்

என்கிற நம்பிக்கை உள்ளது,. . . ."[44] என்று எழுதியிருந்ததைப் படித்துப் பார்க்கிறாள்.

அவளைக் காதலித்தவன் அவள் வரும்வரை காத்திருக்காமல் விமலாவைத் திருமணம் செய்தான். பின் பழைய காதலியைப் பார்த்தவுடன் அவள் மேல் உள்ளதுதான் காதல் என்று கூறுவது எவ்வளவு பொறுப்பு அற்ற தன்மை. பெற்றோர் பொருள் செலவு செய்து உற்றார், உறவுகளை அழைத்து தம்பதியர் சிறப்புடன் வாழ வாழ்த்தியதன் பொருள் இங்கு சிதைக்கப்படுகிறது.

**காதல் திருமணம் செய்பவர்களின் தோல்வி**

பலரின் காதல் திருமணம் பெற்றோர் எதிர்ப்புகளையும் மீறிச் செய்யப்படுகிறது. அதில் சிலர் வாழ்க்கைச் சிறப்புடன் நடத்தப்படுகிறது. பலர் தங்கள் இல்லற வாழ்வில் தோல்வி அடைந்துவிடுகின்றனர்.

கௌசல்யா என்ற பெண், பெற்றவர்கள், உற்றார்களையும் மீறி, எதிர்த்து நின்று காதலன் ராம்தாஸைத் திருமணம் செய்தாள். ராம்தாஸ் அசைவம், கௌசல்யா சைவம். அவள் தமிழ் பேசுபவள். அவன் ஹிந்திபேசுபவன். பல முரண்களுடனும் அவர்கள் மனம் இணைந்ததாக நம்பி திருமணம் புரிந்தனர்.

ஆனால் ஆறுமாதங்கள் ஆவதற்குள், 'எங்கள் காதலுக்கு வேற்றுமைகள் அத்தனையும் தூசி' என்று மணம் புரிந்தவர்கள் பிரிந்துவிட்டனர்.

ரமாவின் குற்றச்சாட்டு, "ராம்தாஸ் நல்லவன் என்று நம்பி மோசம் போய்விட்டேன் என்கிறாள். அவன் குடிகாரன், கண்டபடி பேசுகிறான். மரியாதை இல்லை. ஏன் மணந்தோம் என்று வெறுப்பாக உள்ளது. வாழவே பிடிக்கவில்லை. என்று பட்டியலிட்டுக் கூறும் ரமா போன்றவர்களுக்கு வாழ்க்கையை ஏற்று வாழப் பொறுமை இல்லை"[45] என்கிறார் சிவசங்கரி.

அவர்கள் இருவரும் காதலிக்கும் போதே அவன் குடிப்பது, அவளுக்குத் தெரியும். திருத்தி விடலாம் என்று எண்ணியவள் பொறுமையுடன் அதைச் செய்யவில்லை. காதலிக்கும் போது அவனிடம் உள்ள குற்றம் குறைகள் இவளுக்குப் பெரிதாகப் படவில்லை. அவளின் கண்ணோட்டத்தில் அவன் தோற்றம், அப்போது அவனிடம் காணப்பட்ட உயர் பண்புகள் மட்டுமே உயர்வாகத் தெரிய அதையே வாழ்க்கை முழுவதும் எதிர் பார்த்து, அது கிடைக்காதபோது அவனுடைய குற்றங்கள் மேலோங்கிக் காணப்பட்டது. அதில் வெறுப்பு கொண்டவள் பிரிந்துவிட்டாள். விடுதியில் தங்கியுள்ளாள்.[46] இந்தக் காலத்து இளைஞர்களிடையே பொறுமை இன்மையே பல துன்பங்களுக்குக் காரணமாகிறது என்று வருத்தம் தெரிவிக்கிறார் சிவசங்கரி.

**விவாகரத்திற்குப் புதுமையான தீர்ப்பு**

இங்கிலாந்தில் வாழ்ந்த தம்பதியர். இவர்களின் வாழ்க்கையில் ஏற்பட்ட சிக்கலால் மணமுறிவுக்கு விண்ணப்பிக்கின்றனர். அதற்குத் தீர்ப்பு புதுமையாக வழங்கப்பட்டது.

**காதல் தம்பதியர்**

புகழ்பெற்ற சமூக சேவகியும், புகழ் பெற்ற தொழில் அதிபரும் 'கண்டதும் காதல்' என்பதற்கு ஏற்பத் திருமணம் செய்துகொண்டனர். திருமணத்திற்குப் பின் அவரவர் தங்கள் வழியில் சென்றதனால் 2 ஆண்டுகளில் அவர்களின் இல்லற வாழ்வில் சலிப்பு வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. மேலை நாடுகளில் உடனடி மணவிலக்கு கிடைத்துவிடும் விண்ணப்பிக்கின்றனர்.

**நீதிபதியின் தீர்ப்பு**

அவர்களின் வழக்கு விசாரணைக்காக மனித நேயமிக்க ஒரு நீதிபதியிடம் வந்தது. அவர் இனிய இல்லறம் நடத்துபவர். அவர்கள் பிரிந்து செல்வதில் உடன்படாமல் அவர்கள் வழக்கறிஞர்களின் வாதங்களைப் பொறுமையுடன் உற்று நோக்கிக் கேட்டார். பின்னர்,

"விவாகரத்து வழங்குமுன் அவர்கள் இருவரையும் ஒரே அறையில் மூன்று நாட்கள் இரவு, பகல் தொடர்ந்து பூட்டி வைக்க உத்தரவு இடுகிறேன்" என்று தீர்ப்பு வழங்கினார்.

**தீர்ப்பின்படி இருவரும் ஒரே அறையில்**

மூன்று நாட்கள் ஒன்றாக ஒரே அறையில் இருந்தார்கள் வெளியில் வரும்போது தெளிவுடையவராக வந்தார்கள். காரணம், "நாங்கள் இரண்டு வருடங்கள் ஒன்றாக வாழ்ந்திருந்தாலும், அவகாசமின்மையாலும், முயற்சிக்காமையாலும், ஒருவரைஒருவர் புரிந்து கொள்ளவே இல்லை. இந்த மூன்று நாட்களிலும், மனம் விட்டுப் பேசினோம். கூடவே இருந்ததில் இதுவரைப் பார்த்திராத கோணங்களில் ஒருவரை மற்றவர் கண்டு, புதுப்புது விசயங்களை உணர்ந்ததால் மீண்டும் சேர்ந்து வாழ ஆசைப்படுகிறோம்"[47] என்று கூறியுள்ளனர். இந்நிலையில் தான் இன்று பல தம்பதியர் பொறுமையும் புரிதல் இல்லாமலும் பிரிந்து சென்றுவிடுகின்றனர்.

**இன்றைய தம்பதியருக்குச் சிவசங்கரி கூறும் அறிவுரை**

இயந்திரக் கதியில் மக்கள் வாழக் கற்றுக் கொண்டு விட்ட நிலையில், சூழ்நிலையும் சரியாகத் தொடர்பும் கொள்ள அவகாசமின்மையுமே ஒருவரை ஒருவர் தெளிவாகப் புரிந்து கொள்ளவிடாமல் தடுத்து, உறவுகளைக் கசக்கச் செய்கிறது.

பல குடும்பங்களில் பெற்றோர் குழந்தைகள், சகோதரன், சகோதரி, நண்பர்க ளிடையே சுமுகமான பிணைப்பு இல்லாமைக்கு மேற்சொன்ன காரணங்களே அடித்தளமாகின்றன என்று எழுத்தாளர் குறிப்பிட்டுள்ளார்.

**சிக்கல் உள்ள குடும்பத்தில் கணவன் / மனைவியால் பாதிக்கப்படும் குழந்தைகளின் நிலை**

பல குடும்பங்களில் சூழ்நிலைகளின் தாக்கத்தால், சோர்ந்து போகின்ற கணவன், மனைவி, தங்களின் இயலாமையை உணர்வுகளை

அந்தந்த இடங்களில் காட்ட முடியாமல், இல்லத்தில் தங்களை எதிர்க்க முடியாத குழந்தைகளிடம் காட்டி விடுகின்றனர். அதனால் குழந்தைகள் பெரும் அளவில், மனதாலும், உடலாலும் பாதிக்கப்படுகின்றனர்.

இத்தகைய தம்பதியர், குழந்தைகளின் நிலைகளையும் ஆசிரியர் விளக்குகிறார். எப்படியெல்லாம் மனிதனுக்கு மனம் பாதிக்கப்படுகிறது. அதன் விளைவு என்ன? என்பதை மனநல மருத்துவர் மூலம் அறிந்து சிவசங்கரி கூறியுள்ளார். அதனால் பெற்றோர்கள் எந்தச் சூழலிலும் அன்பு என்ற பிடிப்பை விட்டுவிடாமல் காத்துக்கொள்ளல் இன்றியமையாததாகிறது.

சூழ்நிலையால் பாதிக்கப்படும் கணவன் / மனைவிக்கு ஏற்பட்டுள்ள நிலையை, இடம்மாறிப்போன உணர்ச்சிப் பெருக்கினை ஒருசெயலின் எதிர்ச்செயல் உருவாக்கம் (Displacement of Emotion (or) Reaction Formation) என்று குறிப்பிடுவர். மன நலமருத்துவர். இவர்களின் செயல் எப்படி இருக்கும் என்று கூறுகிறார் சிவசங்கரி வருமாறு:

> "கோளாறாகிப் போன தாம்பத்தியம், விவாகரத்து, குடி, போதை மருந்துப்பழக்கம், மூளைக் கோளாறு, வேலை, பணம் இன்மை போன்ற சூழ்நிலைகளின் கனம் தாங்க மாட்டாமல் தவிக்கும் தனிமனிதன், தன்னுடைய கோப, தாப, ஏக்க, விரத்தி, பொறாமை போன்ற உணர்வுகளுக்குச் சரியான வடிகால் இன்றி, எதிர்க்க முடியாத, தன்னை விட எல்லாவற்றிலும் சிறிய, பாதுகாப்பு இல்லாத, தன்னை அண்டிய குழந்தைகளை அடித்து நொறுக்குவதன் மூலம் ஒருவித சமாதானம் அடைவதும் உண்டு. அப்போது தம்பதியர் ஒருவருக்கு ஒருவர் பழிதீர்த்துக் கொள்ளும் வடிகாலாய் குழந்தைகள் அகப்பட்டுக் கொண்டுவிடுகின்றனர்."[48]

**மோகனின் பரிதாபநிலை**

மோகன் என்ற குழந்தையின் தகப்பன் மாரிசாமி குடிகாரன். எல்லாப் பழக்கத்துக்கும் அடிமையானவன். பணத்தட்டுப்பாடு என்றால் மனைவியிடம் வந்து கேட்பான். அவள் இல்லை என்று

மறுத்தால் போட்டு அடித்து நொறுக்கிவிடுவான். இப்படி அடிக்கடி அடித்து நொறுக்கிவிட்டுச் சென்றுவிடுவான். அவன் அந்தப் பக்கம் போனதும், புருஷனைக் கண்டிக்க முடியாத இயலாமை, உடம்பின் நோவு, இரண்டும் அவளுக்கு ஆத்திரத்தை உண்டாக்க, அதைக் குறைக்க அமராவதி வடிகால் தேடினபோது கிடைத்தது அவள் பெற்ற குழந்தை. பிறந்து சில மாதங்களே ஆன பச்சைக் குழந்தை. அது பசி என்று அழுது விட்டால் போதும் அமராவதி பத்ரகாளியாக மாறி, 'அழாதே, அழாதே' என்று கத்தியபடி விறகுக் கட்டை, விசிறிக் காம்பு என்று எது கிடைத்தாலும் அதை கொண்டு குழந்தையை அடித்துவிடுவாள். ஆனால், இவையாவும் பத்து நிமிட நேரம் தான். உடனே தன்னிலையறிந்து துவண்டு கிடக்கும் குழந்தையை மார்போடு அணைத்து கதறுவாள். மருத்துவரிடம் தூக்கிக்கொண்டு ஓடுவாள். 'குழந்தை தவறி விழுந்து விட்டான்' என்று பொய்க் காரணம் சொல்லி வைத்தியம் செய்வாள். மோகன் இப்படி மருத்துவரிடம் வருவது மூன்றாம் முறை. இம்முறை இது விபத்து அல்ல என்பதை உணர்ந்து மூன்றாம்முறை அடிபலம் என்பதால் அட்மிட் செய்தபின் அமராவதியிடம் மனம்விட்டு மருத்துவர் பேசியதால் உண்மை அறியப்பட்டது. இது ஒருவித மனக்கோளாறு என்கிறார் மருத்துவர்.[49]

இதுபோன்று இன்றைய சூழலில் பல பெற்றோர் இருக்கிறார்கள். இவர்கள் ஒருவருக்கொருவர் மனம் திறந்துபேச வேண்டும். குடும்பம், குழந்தை, தன் கடமை என்ன? என்பது குறித்து உணர்ந்து தெளிய வேண்டும். அப்போது தான் ஏதும் அறியாத மோகன் போன்ற குழந்தைகள் பாதுகாக்கப்படுவர். குடும்ப வாழ்வின் அடிப்படையே தன்னலமற்று இருத்தல் ஆகும். தன்னலமிக்கவனாகவும், சோற்றுப்பிண்டமாகவும் விளங்கும், தனிமனிதனைப் பண்படுத்தி, நல்வழிப்படுத்துபவளே பெண்தான். அதனால் தான் அவள் இல்லத்தரசி, குடும்ப விளக்கு என்று போற்றப்படுகிறாள். இன்றைய பல தனிக்குடித்தனங்களில் ஆண், பெண் இருவரும் சூழ்நிலைத்தாக்கத்தால் பாதிக்கப்பட்ட மனநிலையில் விலங்குகளாக

மாறிவிடுகின்றனர். அதன் விளைவு நல்ல பெற்றோராக இல்லாமல் குழந்தைகளின் எதிரியாக, கொடியவராகக் காட்சி தருகின்றனர். அதனால் இன்றைய சூழலில் மனநல மருத்துவர்களின் தேவை அதிகரித்து வருகிறது என்பதை அறிகிறோம்.

## இல்வாழ்வின் பெரும்பயன் மக்களைப் பெறுதல்

மனித வாழ்வின் பயனே மக்கள்பேறு அடைதல் கணவனும் மனைவியும் கருத்தொருமித்து அன்புடனும் ஆசையுடனும் இணைந்து மக்களைப் பெறுகின்றனர். அன்று மக்கள் செல்வமே பெரும் செல்வமாகப் போற்றப்பட்டது.

உள்ளத்தால் கூடி உடலால் இணைந்து வாழ்வது இல்லறம். அதன் பயன் புகழ்பூத்து வாழ்தல், அறிவறிந்த மக்களைப் பெற்று மகிழ்தல். மனைமாட்சியை மங்கலம் ஆக்குவது பெண் என்றால் அந்த இல்வாழ்க்கையில் நன்கலமாக, நல்லணியாக விளங்குவது மக்கள் பேறு என்று போற்றுவார் வள்ளுவர்.

*"மங்கலம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்*
*நன்கலம் நன்மக்கள் பேறு"*[50]

இன்றளவும் மக்கட்செல்வத்திற்காக ஏங்குவோர் பலர் இருக்கின்றனர். மக்கள் பேறு கிட்டாதவர் பலர் மருத்துவ முயற்சியாலும் முயன்று பெற விழைகின்றனர். மக்களைப் பெறுதல், அவர்களோடு சேர்ந்து மகிழ்தல் எவ்வளவு இன்பம் உடையது. அவர்கள் வாழ்க்கையில் குறையே இல்லை என்று கூறுவர் பாண்டிய மன்னன். பாடல் வருமாறு:

*"படைப்புப் பல படைத்துப் பலரோடுண்ணும்*
*உடைப் பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்*
*குறுகுறு நடந்து சிறுகை நீட்டி*
*இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்*
*நெய்யுடை யடிசில் மெய்ப்பட விதிர்த்தும்*
*மயக்குறு மக்களை யில்லோர்க்குப்*
*பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே"*[51]

எத்தனையோ படைத்து, பண்பாலும், பொருளாலும் உயர்வுடைய செல்வராக இருந்தாலும் மக்கள் செல்வத்தைப் பெற்று அது தரும் இன்பத்தைப் பெறுதலே கிடைத்தற் அரிய பேறு என்கிறார்.

திருவள்ளுவர்,

*"அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்*
*சிறுகை அளவிய கூழ்"*[52]

என்றும்,

*"மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் மற்றுஅவர்*
*சொற்கேட்டல் இன்பம் செவிக்கு"*[53]

என்றும்,

*"குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்*
*மழலைச் சொல் கேளாதவர்"*[54]

என்றும் மக்கட்பேறு அதிகாரத்தில் பேசியுள்ளது மனதிற்கொள்ள வேண்டிய செய்தியாகும்.

**தகைசான்ற புதல்வர்**

மக்களைப் பெறுவதுடன் பெற்றோர் கடன் நிற்பதில்லை. அவனைப் பண்புடையவனாக உலகம் போற்றும் உத்தமனாக உருவாக்குதலும் பெற்றோருடைய கடனாகும். பிள்ளைகளுக்குச் சிறுவயது முதல் நல்ல பழக்கவழக்கம், பண்புகளைக் கற்றுத் தருதல் வேண்டும். அப்படி உருவாக்கும் மக்களால் பெற்றோர் பெருமை அடைகின்றனர். பெற்ற தாய் அவனைப் பெற்றபோதும், வளர்த்த போதும் தான் அடைந்த துன்பங்களை மறந்து, அவன் சான்றோன் என்பதைக் கேட்டுப் பூரிப்பு அடைகிறாள்.

*"ஈன்ற பொழுதின் பெரிதுஉவக்கும் தன்மகனைச்*
*சான்றோன் எனக்கேட்ட தாய்"*[55]

அக்குழந்தை பழியை உண்டாக்காதவனாக இருப்பான் என்றால், அக்குடும்பம் ஏழு தலைமுறைக்கும் தீமை உண்டாகாமலும், பழி நெருங்காமலும் விளங்கும். வள்ளுவர் இதனை,

*"எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்*
*பண்புடை மக்கள் பெறின்"*[56]

என்ற குறட்பா மூலம் குறிப்பிட்டுள்ளதால் அறியலாம்.

**குழந்தை வளர்ப்பு**

மரியாதை, வீட்டுக்குவந்தவர்களை வாங்க என்று அழைத்தல், உபசரித்தல், பெற்றோருக்கு எல்லாக் காரியங்களிலும் துணை நிற்கச் சிறுவயது முதல் பழக்கப்படுத்தினால் அவர்கள் அவ்வாறே உருவாவார்கள். சிறுகுழந்தைகள் ஈரக்களிமண் போன்றவர்கள். அவர்களை அழகுபட உருவாக்குதல் அந்தந்தப் பெற்றோர் கடமை ஆகும். இதனைச் சிவசங்கரி தான் சென்ற வீட்டின் மூத்த தாய் பெரியம்மா பேசியதைக் கூறியுள்ளார்.

"சின்ன வயசுலேயே மரியாதையைப் பிள்ளைகளுக்கு நாம தாங்கக் கத்துத்தரணும். நாம எப்படிப் பேசறோமோ, செய்கிறோமோ அப்படியே பதிலுக்கு அவர்கள் பேசச் செய்யக் கத்துக்கறாங்க... நாம குழந்தைகளைக்கூட 'வாங்க' போங்கன்னு மரியாதையா பேசினா. அவர்களுக்கும் அதுவே இயல்பா வந்திடும். வேலைக்காரர்களும் மனுஷங்கதானே.. நம்ம கிட்ட வேலை செய்பவர்களையும் மரியாதையுடன் பேச குழந்தைகளுக்குச் சொல்லித்தரனும். அது நல்ல பண்புங்க"[57] என்று அவர்கள் குழந்தை வளர்க்கும் முறையை எடுத்துரைக்கிறார். திருநெல்வேலி, கோயமுத்தூர் பகுதிகளில் 'பேசும்பாங்கினை' உயர்வாக மதித்துச் சிவசங்கரி குறிப்பிட்டுள்ளார்.

**குடும்ப வாழ்க்கையின் வெற்றி**

ஒரு நிறுவனம் சிறப்பாக இயங்க அதன் இயக்குநர் திறமையுடையவராக இருத்தல் வேண்டும். அத்துடன் அதில்

பணிபுரிபவர்களும் திறன்மிக்கவராகவும், ஒழுங்கு பெற்றவராகவும் இருத்தல் வேண்டும். நிர்வாகத்திறமையும், செயல்திறமையும் இணைந்து ஒருவரை ஒருவர் புரிந்து செயலாற்றும் போது அந்த நிறுவனம் சிறப்படையும், வெற்றிபெறும்.

அதைப்போலக் குடும்பத்தின் தலைமையை ஏற்கும் கணவன் மனைவி இருவரும் இணைந்து செயலாற்றவேண்டும். இருஉறவுகளும் பின்னிப் பிணைந்து, சுகதுக்கத்தைச் சமமாக ஏற்றுச் செயல்பட வேண்டும். ஒருவருக்கொருவர் தோள்கொடுத்துக் குடும்ப பாரத்தைச் சுமக்க வேண்டும். மரியாதையும் தன்னலமற்ற தன்மையும் கொடுத்து, வாங்கி ஆயுள் உள்ளவரை கைகோர்த்து நடைபோட்டு வாழ்க்கைக் குறிக்கோளை அடையவேண்டும். அதுவே குடும்பத்தின் வெற்றியாகும்.

குடும்பம் விட்டுக்கொடுத்தல், அன்பு, அரவணைப்பு, பொறுமை ஆகிய பண்புகள் தாங்கிய மரமாக இருக்க வேண்டும். அதில் பலன்பெறக் காத்திருத்தல் இன்றியமையாததாகும். விதை முளைவிட்டு, வளர்ந்து, பூத்து, காய்த்து, கனிந்து பின் உண்ணப்படல் போல் குடும்பமும் சிறுசிறு வளர்ச்சியாக வளர்ந்து பலன் கொடுக்கும் அதுதான் நியதி என்று எழுத்தாளர் சிவசங்கரி அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

**முடிவுரை**

மனித சமுதாயத்தின் ஆணிவேர் குடும்பம்.

குடும்பம் என்பது உள்ளம் ஒன்றிய கணவனும் மனைவியும் மக்களைப் பெற்று வாழும் வாழ்க்கையே குடும்பம் .

குடும்பம் ஒரு தனிமனிதனை உருவாக்கப் பல்வேறு நிலைகளில் செயல்படுகிறது.

திருமணம் ஆயுள் முழுவதும் ஒருவரோடு ஒருவர் ஈருடல் ஓருயிர் என்று பிணைந்து, சொல்லும் பொருளும் போல் ஒன்றாக வாழ்ந்து காட்டுவோம் என்ற உறுதி எடுக்கும் வாழ்க்கைத் திட்டம். குடும்பத்தில் தன்னுடைய வருவாயில் மனைவி,

மக்களைப் பேணுதலும், பெற்றோரையும், உடன் பிறப்பையும் பாதுகாப்பது கடமை என்பதை உணர்கிறோம்.

இன்றைய உலகில் உறவுகளைப் பொருளாதார நிலைகளை வைத்து உரசிப் பார்ப்பதால் உறவுகளின் நெருக்கமும் குறைந்து வருகிறது. இந்தக் குடும்ப உறவுகளின் ஏற்றத்தாழ்வினைப் போக்கித் திட்டமிட்டுச் செயல்பட்டால் குடும்ப உறவுகளைச் செம்மையடையச் செய்ய முடியும்.

குடும்பத்தலைவர் குடும்பம் என்ற நிறுவனம் திறம்படச் செயல்படவும் சமுதாயத்தில் காலூன்றி வாழவும் அறிவு, தொழில் முறைப் பண்பாடு போன்றவற்றைக் கற்றுத் தருதல் வேண்டும்.

நல்ல குடும்பத்தில் திறவுகோல் அந்தந்தக் குடும்பத்தின் கணவன், மனைவி கைகளில் தான் உள்ளது. கணவன் மனைவியைத் தூக்கி நிறுத்துவதும், அந்தப் பெண்ணின் பேச்சு நடத்தையில் தான் உள்ளது. நன்கு சிந்தித்து ஒவ்வொருவரும் செயல்படும் போது அந்தக் குடும்பம் அமைதியாக இன்பமாக அமையும்.

குடும்பம் சிறப்பாக அமைய விட்டுக் கொடுத்தல், அன்பு, அரவணைப்பு, பொறுமை ஆகிய பண்புகள் தாங்கிய மரமாக இருக்க வேண்டும். குடும்பத்தில் தலைமையை ஏற்கும் கணவன், மனைவி இருவரும் இணைந்து செயலாற்ற வேண்டும். இருஉறவுகளும் சுகதுக்கத்தைச் சமமா ஏற்றுச் செயல்பட வேண்டும். ஒருவருக்கொருவர் தோள் கொடுத்துக் குடும்ப பாரத்தைச் சுமக்க வேண்டும். மரியாதையும், தன்னலமற்ற தன்மையும் கொடுத்து வாங்கி ஆயுள் உள்ளவரை கைகோர்த்து நடைபோட்டு இலக்கை அடைய வேண்டும். அதுவே குடும்பத்தின் வெற்றியாகும் என்பது இவ்வாய்வின் மூலம் தெளிவாகப் புலனாகிறது.

## சான்றெண்விளக்கம்

1. இராமநாதன், ஆறு., நாட்டுப்புறப்பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்க்கை, ப. 56.
2. பிச்சமுத்து.நா., மு.வ.நாவல்களில் சமுதாய மறுமலர்ச்சியின் தாக்கம், ப. 210.
3. நற்றிணை, பாடல் எண், 10 : 1-4.
4. தனிநாயக அடிகள்., தமிழ்த்தூது, கட்டுரைக் கொத்து, ப, 5.
5. தாயம்மாள் அறவாணன்., உறவுமுறைகள், பக். 17-18.
6. சின்னசாமி., தமிழர் சமுதாய வரலாறு, ப, 12.
7. சிவசங்கரி., சின்னநூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப, 218.
8. வேங்கடராமன்.சு, தமிழ்ப்புனைக் தைகளில் திருமண வாழ்வு, ப, 40.
9. பாஸ்கரதாஸ்.ஈகோ., மானிட மதிப்புகள், ப, 83.
10. திருநாவுக்கரசு.க.த., தமிழர் வாழ்க்கை, ப, 100.
11. கல்பகம், சமூகவியல், பக், 53-54.
12. பாரதியார், பாரதியார் கவிதைகள், விடுதலைக்கும்மி, ப, 463.
13. சிதம்பரனார்.சாமி, தொல்காப்பியத் தமிழர், ப, 30.
14. தொல்காப்பியர், தொல்காப்பியம், பொருள்-கற்பு, நூற்பா, எண், 4
15. தொல்காப்பியர், தொல்காப்பியம், பொருள்-கற்பு, நூற்பா, எண், 4
16. அகநானூறு, பாடல் எண், 86
17. அகநானூறு, பாடல் எண், 136
18. இளங்கோ அடிகள், சிலப்பதிகாரம், மங்கலவாழ்த்துப் பாடல், வரிகள், 52-53.
19. நாலாயிரதிவ்ய பிரபந்தம், பாடல்கள், 556, 561.
20. சிவசங்கரி, சின்னநூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப,124
21. மேலது, ப, 214.
22. மேலது, ப, 215.
23. மேலது, ப, 215.
24. திருக்குறள், 51.
25. சிவசங்கரி, சின்னநூல் கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, பக், 216-217.
26. சிவசங்கரி, என்கண்ணோட்டத்தில், பக், 82-83.
27. மேலது, பக், 82-83.

28. திருக்குறள், 56.
29. மணிகண்டன்.துரை; நாட்டுப்புறப்பாடல்களில் குடும்ப உறவுகள், ப, 230.
30. பார்வதி.பி; கிராமங்களில் மனிதஉறவுகள், ப, 192.
31. செல்வநாதன்.வ, நாட்டுப்புறவியலில் மனித உறவுகள், ப, 129.
32. பாஸ்கரதாஸ்.ந.கோ., மானிட மதிப்புகள், ப, 82.
33. குன்றக்குடி அடிகளார்., எங்கே போகிறோம், ப, 151.
34. தென்கச்சி சாமிநாதன்., இந்தநாள் இனியநாள், சன் டி.வி. நிகழ்ச்சி, 17.2.06, காலை 8.55.
35. ஜீவானந்தம்.க; 'முகம் தெரியாத முன்னோர்கள்', தினமணி, நாள், 15.9.06.
36. முரளி, 'முதியோர் இல்ல டூப்ளிகேட் சாவி', தினமணி, 5.11.06.
37. சிவசங்கரி., உரத்த சிந்தனை, பக். 17-18.
38. மேலது, பக், 18-19.
39. சிவசங்கரி, சின்னநூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, பக். 242 - 243.
40. மேலது, ப, 246.
41. திருக்குறள், 53.
42. சிவசங்கரி, சின்னநூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, பக். 246-247.
43. மேலது, பக். 207-208.
44. மேலது, பக். 208-209.
45. மேலது, பக். 210.
46. மேலது, பக். 210.
47. மேலது, பக். 227.
48. மேலது, பக். 323-324.
49. மேலது, பக். 324.
50. திருக்குறள், 60.
51. புறநானூறு, பாடல் எண், 188.
52. திருக்குறள், 64.
53. மேலது, 65.
54. மேலது, 66.
55. மேலது, 69.
56. மேலது, 62.
57. சிவசங்கரி, என் கண்ணோட்டத்தில், ப, 25.

இயல் - 4

# தனி மனித வளர்ச்சிக்குத் துணைநிற்கும் சமுதாய மேம்பாட்டுச் சிந்தனைகள்

இயல் - 4

# தனிமனித வளர்ச்சிக்குத் துணைநிற்கும் சமுதாய மேம்பாட்டுச் சிந்தனைகள்

## முன்னுரை

குடும்ப உறவுகளைப் போன்றவையே தனிமனிதனைச் சுற்றியுள்ள சமூக உறவுகளுமாகும். தனிமனிதனது வெற்றிக்குச் சமூக உறவுகள் துணையாகின்றன. அவனது சமூக அந்தஸ்து, அவன் காத்து வைத்துள்ள சமூக உறவுகளைச் சார்ந்தே அமைகின்றது. பக்கத்து வீட்டு மனிதனிடம் உறவை வளர்த்துக்கொள்ளத் தெரியாத ஒருவனால் சமூக உறவுகளின் முக்கியத்துவத்தைப் புரிந்து கொள்ள இயலாது. தனிமனிதனின் முன்னேற்றத்துக்குச் சமூக உறவுகள் உறுதியாகவும் பக்கபலமாகவும் அமைகின்றன. சமூக உறவுகள் தனிமனிதனுக்கும் சுய அலசலை வளர்ப்பதோடு, அச்சமுதாயத்தில் தன்னுடைய நிலை என்ன? என்பதைத் தெளிவாக உணர்த்தவும் செய்கின்றன. சமூக உறவுகளில் நிகழ்கால நிலையைப் புரிந்து கொண்டு, எதிர்கால நிலையைத் தொடர்புகளால் பெருக்கிக் கொண்டும், தொண்டுகள் புரியவும் வழிவகுக்கின்றன. இது பற்றி இவ்வியலில் இனிக்காண்போம்.

## சமுதாயம் என்பதன் விளக்கம்

சமுதாயம் என்பதற்குப் பல கருத்துக்கள் நிலவினாலும், பொதுவாகக் குழு, குழுமம், கூட்டம், அமைப்பு என்னும் நிலையில் ஏற்றுக்கொள்ள முடிகிறது.

‘மெகவியர் மற்றும் போக்’ என்னும் வல்லுநர்கள், “சமுதாயம் என்பது பழக்க மரபு, செயலாற்றும் முறை, அதிகார வலிமை, ஒருவருக்கொருவர் உதவுதல் ஆகியவற்றின் ஓர் அமைப்பு முறையாகவும் பல குழுமங்கள், பிரிவுகள் ஆகியவற்றுடன் தனிமனித சுதந்திரம், நடத்தை ஆகியவற்றை நெறிப்படுத்தும் ஒழுங்கு முறைமையாகவும் இருப்பது எதுவோ, அதுவே சமுதாயம்”[1] என்ற கருத்தைக் குறிப்பிட்டுள்ளனர்.

சமுதாயத்தின் பல்வேறுபட்ட செயல், தொழில்களுடன், பொருளாதார, அரசியல் செயற்பாடுகளும் உரிமை, கடமைகளைப் பற்றியவையாகவும் அமைந்துள்ளன. மேலும், சமுதாயம் என்பது தனிமனிதனின் நடத்தை, வாழ்வின் பல்வேறு கூறுகள் பற்றியும் கொண்டு விளங்குகிறது. இதனை வலியுறுத்தி,

"Äமுதாயத்தை விளக்கும் போது அது மனித உறவுகளின் கூட்டுத்தொகுதி. மக்கள் ஒருவருக்கொருவர் இணைந்து செயலாற்றும் வாழ்க்கையின் வகைகளும் வழிமுறைகளுமே அக் கூட்டுத் தொகுதியாகும். மேலும், மனிதன் இணைந்து குழுமமாக வாழும் போது ஏதாவது ஒரு பகுதியில் ஏற்படும் பாதிப்பு, மனித சமுதாயம் முழுமையையும் பாதித்துவிடும்"[2]

என்று கோவிந்தராஜ் குறிப்பிட்டுள்ளார்.

குஜராத் பூகம்பம், ஒரிசா வெள்ளம், சுனாமி போன்ற பேரிடர்கள் ஏற்பட்ட போது வேதனையில் துடிதுடித்து உலகமே ஒன்று திரண்டது. பாதிக்கப்பட்ட மக்களுக்கு ஆறுதல் சொன்னது, கைகொடுத்தது, பொருளுதவி செய்தது. இதுதான் மனித இனத்தின் மாண்பாகப் போற்றப்படுகிறது. அந்த உணர்வு சமுதாய அமைப்புகளால் உருவாக்கப்படுகிறது.

**பண்பியலின் பிழிவு**

சமுதாயம் என்பது தனிமனித உறவுமூலம் வருவது என்பதைப் பாஸ்கரன்,

"சமூக உறவுகளில் உளஞ்சார்ந்த பண்பு இருப்பதால்தான் மற்றவற்றின் நிலையினை உணரமுடிகிறது. அதனால் தான் பொதுக்குறிக்கோள், பொதுநன்மை போன்றவற்றை உணர முடிகிறது. இவ்வுணர்வு வெளிப்பாடு இல்லையென்றால் சமூக உறவுமில்லை சமுதாயமும் இல்லை. ஒருவரை ஒருவர் உணர்ந்து நடந்து கொள்வதால்தான் சமுதாயம் நிலைத்து நிற்கிறது. சமூக

உறவுநிலையை வேறுபடுத்திக் காட்டுவது உள்ளத்தின் செயலாகும். ஏனெனில் உணர்ச்சி, கோபம், தாபம், இரக்கம் போன்ற உணர்வு நிலைகளெல்லாம் சமூக உறவிலேயே தென்படுகின்றன. இவை இல்லையெனில் கணவனுக்கும் மனைவிக்கும், தந்தைக்கும் மகனுக்கும், ஆசிரியருக்கும் மாணவனுக்கும் இடையேயான உறவை உண்டாக்க இயலாது. எனவே சமுதாயம் என்பது அமைப்புமுறை எனலாம்"[3]

என்று குறிப்பிட்டுள்ளதால் அறியலாம்.

**சார்ந்திருத்தல்**

சமுதாய அமைப்பு என்றும் ஒன்றையொன்று சார்ந்து இருக்கும் நிலையாகும். மனிதன் தனித்து வாழ்வதில் மனநிறைவோ, மகிழ்வோ கொள்ளமுடியாது. அதனால் சமுதாயம் அவனுக்குத் தேவைப்படுகிறது. அதனாலேயே அவன் சமூகத்தோடு இணைந்து வாழ்கிறான். சமுதாயத்தில் மனிதர்கள் அனைவரும் அவரவர் தேவைகளைப் பூர்த்தி செய்து மனநிறைவு கொள்ள வேண்டுமெனில் ஒருவரை ஒருவர் சார்ந்தே இருத்தல் அவசியம் ஆகும்.

உலகச் சமுதாயங்கள் அனைத்திலும் காணப்பெறும் அடிப்படையான சிக்கல்களுள் ஒன்று சமூகக் கட்டுப்பாட்டைக் காப்பதும், அதனைப் பராமரிப்பதும் ஆகும்.

**சமூகக் கட்டுப்பாடும் பராமரிப்பும்**

சமூகக் கட்டுப்பாடும் பராமரிப்பும் பற்றி ஈசுவரப்பிள்ளை குறிப்பிடுகையில்,

"ஒரு சமுதாயம் கட்டுப்பாட்டினின்றும் வழுவும் போது, அக்கட்டுப்பாட்டைநிலைநிறுத்திச் சமுதாயத்தைக் காக்க வேண்டிய கட்டாய நிலை ஏற்படுகின்றது. இந்நிலையில் சமயம் பல சடங்குகளையும், வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் தன் உறுப்பினர்களிடையே புகுத்திச் சமூக நியதிகளையும், சமூக

மதிப்புகளை மக்கள் ஏற்கவும், அங்கீகரிக்கவும் செய்கின்ற கட்டுப்பாட்டுக் கருவியாகவும் செயலாற்றுகின்றது. சமூகக் கட்டுப்பாட்டை உருவாக்குவதில் சமய ஏற்புகள் இன்றியமையாத பங்காற்றுகின்றன”[4]

என்று ‘பக்தி இலக்கியத்தில் சமுதாயப் பார்வை’ எனும் ஆய்வேட்டில் குறிப்பிட்டுள்ளதால் அறியலாம்.

**சமுதாயமும் மதிப்புகளும்**

சமுதாயம் ஒரு தொடர்ச்சியைக் கொண்டுள்ளது. தனிப்பட்ட முறையில் ஒவ்வொரு பிரிவினரையும் கற்பதன் மூலம் சமுதாயத்தின் உண்மையான அல்லது முழுமையான பண்பினை அறிய முடியும். மக்கள் சமுதாயத்தில் பிறக்கின்றனர்; வாழ்கின்றனர்; இடமாற்றம் செய்கின்றனர்; இறக்கின்றனர். ஆனால் சமுதாயம் மட்டும் தொடர்ந்து நிலைபெற்று வாழ்கின்றது.

“சமுதாயத்தில் நிலவும் பண்பாடு, பொதுவாகச் சமுதாய உறுப்பினர்களால் ஏற்றுக் கொள்ளப்பெறும், சமுதாயத்தில் வாழுகின்ற மக்கள் இப்பண்பாட்டை மதிப்புகளாகக் கொள்கின்றனர். அதனால், சமுதாயக் கடமையாக, இம் மதிப்புக்கள் இன்றியமையாதன என்றும் கருதுகின்றனர்.

சமுதாயம் முடிவான மதிப்புக்களை நிறைவேற்றும், இடைநிலையான மதிப்புகள் பலவற்றைக் கொண்டுள்ளது. சமுதாயம் வாழச் சில அடிப்படையான செயல்பாட்டுத் தேவைகள் (Basic Functional Needs) நிறைவேற்றப்பட வேண்டும். சமுதாய ஒழுக்கங்கள் காக்கப்பட வேண்டும்”[5] எனச் சுஜாதா குறிப்பிடுகின்றார்.

**சமுதாயப் பொது நலன்**

சமுதாயம் மக்கள் கூடிவாழும் இடமாகும். பண்டைய மனிதன் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை நடத்தினான். கூட்டம் கூட்டமாகப் பல இடங்களுக்கும் சென்று வாழ்ந்தான். இயற்கையான

உணவுகளை உண்டான். பல்லாண்டு உடல் நலத்துடன் வாழ்ந்தான். இன்று மனிதனின் சிந்தனை ஆழமாகவும், அகலமாகவும் உயர்ந்து அறிவியல் வளர்ச்சியில் சிகரத்தைத் தொட்டுள்ளது. ஆனால் அதன் பயனாகப் பல இடர்ப்பாடுகளையும் தேடிக்கொண்டான். மக்கள் தொகைப் பெருக்கத்தாலும், சுகாதார விழிப்புணர்வு இன்மையாலும், எதன் மீதும் அக்கறை இல்லாமையாலும், நமக்கென்ன என்ற கடமையற்ற நிலையினாலும் மனிதன் பலவகையான துன்பங்களை அனுபவிக்கின்றான். எழுத்தாளர் சிவசங்கரி அவர்கள் பல இடங்களில் மக்களின் சுகாதார விழிப்புணர்வு அற்ற நிலையைச் சுட்டிக் காட்டுகின்றார். அதற்கான விழிப்புணர்வை ஏற்படுத்தத் தம் எழுத்துகளைப் பயன்படுத்துகின்றார் என்பது தெளிவாகப் புலனாகிறது.

**சுற்றுச்சூழல்**

பொதுவாகப் பெருநகரங்கள் முதல் சிறிய கிராமங்கள் வரை, கண்ட கண்ட இடங்களில் பாமரர் முதல் படித்தவர் வரை எச்சில் துப்புதல், சிறுநீர் கழித்தல் போன்ற சுகாதாரமற்ற பழக்க வழக்கங்களைக் கொண்டுள்ளனர். இதனைச் சமுதாய அக்கறை உள்ளவரின் மனவேதனையாகச் சிவசங்கரி வெளிப்படுத்துகின்றார். தெருக்களில் ஆங்காங்கே குப்பைகள் குவிந்திருக்கின்றன. இதைக் கண்டு 'நம் நாட்டு மக்களின் சுகாதாரக் கேட்டிற்கு இந்த அக்கறை இன்மைதான் காரணம்' என்று தம் எழுத்துகளில் சுட்டிப் பேசுகிறார்.

> "நம் நாட்டில் அரசாங்கம் தொடங்கி மக்கள் வரை எதிலும் ஒரு அசட்டுத்தனம், பொறுப்பில்லாமை வேர் விட்டு விட்டது தானே காரணம்? இங்கு, இப்போது எதுவுமே ஒழுங்காக நடப்பதில்லை என்பதை நீங்கள் உணருகிறீர்கள் அல்லவா? எந்த அரசாங்க அலுவலகத்துக்குச் சென்றாலும், பாதிப்பேர்கள் சிற்றுண்டிக் கூடத்தில் இருக்கிறார்கள். மீதிப்பேர்களும் விரலை அசைத்து ஒரு சின்ன வேலை செய்வதற்குக் கூட கூசாமல் லஞ்சம் கேட்கிறார்கள் மனச்சாட்சியை ஒட்டு மொத்தமாக அடகு வைத்துவிட்டு

வேலைக்கு வரும் இவர்கள் இப்படி என்றால், இளையதலை முறையினருள் பலர் கட்டுப்பாடே இல்லாமல் வளர்ந்து வருகிறார்கள். நேற்று சில இளைஞர்கள் என்ன காரணத்தினாலோ பஸ் ஒன்றை அடித்து நொறுக்கிக் கொண்டிருந்ததை நானே பார்த்தேன்! பொதுச் சொத்துக்களை இங்கே யார் மதிக்கிறார்கள், சாலைகளை எடுத்துக் கொள்ளுங்கள். வரி செலுத்துவோரின் பணம் எப்படியெல்லாம் சீரழிக்கப்படுகிறது! சீரான ஒரு சாலையைச் சென்னையில் உங்களால் காட்ட முடியுமா? எத்தனை குண்டு குழிகள் பற்றாக் குறைக்குச் சரியாகத் திட்ட மிடாமல் சாலைகள் செப்பனிடுவதனால், அத்தனையும் அரை அடி கீழே போய்விட்ட பைத்தியக் காரத்தனம் தெரிகிறது. அரசாங்கம் தான் இப்படி என்றால், தனியார் நிறுவனங்களோ இன்னும் மோசம். போனவாரம் ஒரு திரையரங்கிற்குச் சென்றிருந்தேன். அங்கு பாதி இருக்கைகள் காணவே இல்லை. மீதி இருக்கைகளில் ரப்பரும் பஞ்சும் வெளியில் நீட்டிக் கொண்டு. இதற்குக் கட்டணம் அதிகமாக எப்படி வாங்குகிறார்கள்? அடுத்து உணவு விஷயத்துக்கு வாருங்கள். எதிலும் கலப்படம் இருப்பதால் வந்து இறங்கின மறுநாள் வயிற்றுப் போக்கு தொடங்கி விடுகிறது! எந்த அக்கிரமத்தையும் எதிர்க்காததோடு எவர் எக்கேடு கெட்டால் என்ன என்று ஒதுங்கிப் போகும் மக்கள், பொறுப்பில்லாத அரசாங்கம்! தேசப்பற்று, மொழிப்பற்று என்றால் கிலோ என்ன விலை என்று கேட்கும் இளைய தலைமுறையினர். இத்தனைக்கும் மேலாக, இந்தக் கோளாறுகளை எப்படி நிவர்த்தி செய்வோம் என்று முனையாமல் சப்பைக்கட்டு கட்டும், நொண்டிச் சாக்குகளைத் தேடும் மனோபாவம் பெருகியுள்ளது"[6]

என வெளிநாட்டில் பணியாற்றி இந்தியாவிற்கு வந்த தம் உறவினர் எடுத்துக் காட்டிய அவலங்களை நினைவு கூர்கிறார் சிவசங்கரி.

உறவினரின் கருத்துகளில் சிந்தனை வயப்பட்ட தன்மனநிலையை வெளிப்படுத்தும் சிவசங்கரி, "நான் இந்த இரண்டு நாளாய் நிம்மதியாய்ச் சாப்பிட உறங்க, அமரக்கூட முடியாமல் அவர் பேசின பேச்சுகள் வலிக்க வலிக்கக் குடைந்ததில், ஒருவித இருப்புக் கொள்ளாமை என்னை ஆக்கிரமித்து இருக்கிறது"[7] என்கிறார். அத்துடன் நிற்காமல், இந்நிலை மாற நான் இச்சமூகத்திற்கு என்ன செய்ய முடியும்? என்ற கேள்வியை எழுப்பி, தான் என்ன செய்ய வேண்டும் என்பதை ஆராய்ந்து பார்க்கிறார். தம் எழுத்துக்களைப் படிக்கும் மக்கள் நிச்சயம் விழிப்புணர்வு பெறுவார்கள் என்ற நம்பிக்கையில் அவர்களுக்கு அறிவுறுத்தும் வகையில் கட்டுரையை எழுதுகிறார்.

### அடிப்படைச் சுகாதாரம்

அடிப்படைச் சுகாதாரம் பற்றிய உணர்வு நம் நாட்டு மக்களிடம் சுத்தமாக இல்லை என்பது உண்மை. காரணம் அந்த விழிப்புணர்வு இல்லாததனால் தான் புதிது புதிதாக நோய்கள் தோன்றுகின்றன. மலேரியா, டெங்கு காலரா, சிக்குன்குனியா போன்ற நோய்கள் கொசுக்களாலும், சுற்றுப்புறச் சுகாதாரமின்மையினாலும் உண்டாகின்றன. அவரவர் தங்கள் வீட்டுக் கழிவு நீரைத் தெருச் சாக்கடையில் கலந்துவிட்டு, அது அங்கு தேங்கினாலும் அது குறித்துச் சிறிதும் அக்கறை கொள்ளாமல் இருப்பது, வசதிபடைத்த மக்கள் மத்தியில் இன்றும் இருக்கிறது. கல்வி அறிவு அற்ற ஏழை, எளியோரின் சுகாதாரத்தின் அவசியத்தை உணராதவர்கள் பற்றிக் கூற என்ன இருக்கிறது? என்ற கேள்வியையும் கேட்கின்றார் சிவசங்கரி.[8]

### இளைய தலைமுறையும் தேசியமும்

இன்றைய இளைய தலைமுறையினர். சுதந்திரதினத்தைக் கொண்டாடுவதை ஒரு சடங்காகக் கருதுகின்றனர். சுதந்திரம் என்பது சுதந்திர வேட்கைகொண்ட பலரின் உயிர், உடல், பொருள் அனைத்தையும் கொடுத்துப் பெறப்பட்டது. அதன் உன்னதத்தைப் பெற்றோர்களும், ஆசிரியர்களும், பிள்ளைகளுக்கு உணர்த்தத்

தவறிவிட்டனர். அதனால் சுதந்திரம் பெறப்பட்டதன் நோக்கம் புரியாமல் அதற்குரிய மரியாதை, புனிதம் வழங்கப்படாத நிலை வருத்தத்தை உண்டுபண்ணுகிறது. சிவசங்கரி நம் இளைஞர்களின் தேசிய உணர்வு குறித்து வருந்தி எழுதுகிறார்.

சிவசங்கரியும், சமூகச் சிந்தனையுடைய நண்பரும் கடற்கரையில் சந்தித்த போது நிகழ்ந்த நிகழ்வு, சில இளைஞர்கள் சுண்டல் வாங்கிச் சாப்பிட்டு முடித்தவுடன் கையை அதில் துடைத்து அந்த காகிதத்தாளை வீசி எறிந்துவிட, அது வயதான தன் நண்பர் பாதங்களுக்கடியில் வந்து வீழ்ந்தது. அதில் இந்தியத் தேசியக் கொடி அச்சிடப்பட்டுள்ளதை அந்த இளைஞர்கள் உணரவில்லை. ஆனால் அதன் மதிப்பை உணர்ந்து, நண்பர் அந்தத் தாளை எடுத்துச் சென்று அவ்விளைஞர்களிடம் காட்டி, அதன் முக்கியத்துவத்தை விளக்குகின்றார். ஆனால் இளைஞர்கள் அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. பெரியவர் மிகவும் மனம் வருந்தி அதைச் சுட்டிக் காட்டுகின்றார். "சுண்டல் விற்றவர்தான் படிக்காதவர், அதை உணரவில்லை, படித்த இளைஞர் நிலையும் இப்படி உள்ளதே! என்பதே அவரின் வருத்தமாக உள்ளது."[9]

**கற்றுத்தரல் வேண்டும்**

தேசப்பற்று, மொழிப் பற்று, சுத்தம், சுகாதாரம் இவைகள் தனிமனிதனின் மேம்பட்ட வாழ்க்கைக்கு இன்றியமையாதவை. அதனால் இந்த விதைகள் இளம் குழந்தைகளின் உள்ளத்தில் விதைக்க வேண்டும். அப்போது தான் அது வளர்ந்த நிலையில் தனிமனிதனுக்கும் நாட்டிற்கும் பயன்தரும்.

அதற்குப் பெற்றோர் முயற்சியுடன் செயலாற்றக் குழந்தைப்பருவம் முதல் நாட்டுணர்வைக் கற்றுத்தரல் வேண்டும் என்பார் சிவசங்கரி,

"குழந்தைகளை மூன்று, மூன்றரை வயசில் எல்.கே.ஜி, யூ.கே.ஜி சென்று பாபா... பிளாக் ஷீப் என்று அர்த்தம் புரியாமல் நம் இளசுகள் பாடுவதை உடனடியாக நிறுத்த வேண்டும். தமிழ் அ.ஆ/ ஹிந்தி

அ.ஆவுக்கே, இப்போது அவசரம் இல்லை என்பதால் அத்தனையும் மூட்டை கட்டி ஒரு பக்கமாக வைத்துவிட்டு, தாய்மொழி, தாய்நாடு பற்றின விழிப்புணர்வை வீர, தீர, தியாக, மனிதாபிமானம் மிக்க உண்மையைக் கற்பனைக் கதைகள் மூலமாக, இளநெஞ்சங்களில் பசுமரத்தாணியாகப் பதிக்கலாம். சுத்தம் சோறுபோடும் என்கிற விழிப்புணர்வை உண்டாக்க வேண்டும்"[10] என்கிறார்.

கிரண்பேடி, ஐ.பி.எஸ்; நடித்த 'தேசியக்கொடி' சின்னத்திரை நிகழ்வைப் பள்ளிகளில் குழந்தைகளுக்குத் திரையிட்டுக் காட்ட வேண்டும். சுகாதார விழிப்புணர்வை உண்டாக்கும் காட்சிகளை நாடகங்களாக நடித்துக் காட்ட வேண்டும். தேசியத் தலைவர்கள் பற்றிய கருத்துப் படங்கள், சுதந்திர உணர்வை ஊட்டும் வகையில் எல்.கே.ஜி., யூ.கே.ஜி. நிலையிலேயே ஊட்டப்படுகின்ற போது அது மிகுந்த பலன்களைத் தரும் என்பது உண்மை.

இன்று மாணவர்களுக்குச் சுற்றுச்சூழல் அறிவியல், சுற்றுச்சூழல் நிர்வாகம் பற்றிய விழிப்புணர்வும் பள்ளி, கல்லூரிகளில் கட்டாயப் பாடமாக அமைக்கப்பட்டுச் செயல் படுவது போல், தேசப் பற்று, மொழிப் பற்றையும் உண்டாக்க நடவடிக்கை மேற்கொள்ளல் நல்லது.

எந்த இடத்தில் சிக்கல்கள் தீவிரமாகின்றனவோ அந்த இடத்தில் அப்போதைய நிலைக்குத் தக்கவாறு, போர்க்கால அடிப்படையில் சிக்கல்கள் தீர்க்கப்படுதல் இன்றியமையாததாகும்.

**சுற்றுச் சூழலும் அதன் பாதுகாப்பும்**

இன்று மனிதன் பல்வேறு துறைகளில் தன்னை நிலைநிறுத்திக் கொள்ள வேண்டும் என முனைந்து வருகிறான். புதிய கண்டுபிடிப்புகள், மறுபுறம் புதிய புதிய சிக்கல்கள் தோன்றி வருகின்றன. சுகாதார அடிப்படையில் நோக்கினால் மக்களிடம் அந்த விழிப்புணர்வு இன்மையே தெரிகிறது. இதனை மாற்ற அரசு முனைந்தும் வருகிறது. அரசு மட்டுமோ, தனிமனிதனோ இதனை முழுமையாகச் செய்துவிட முடியாது. அது மக்கள் விழிப்புணர்வுடன் கூடிச் செய்ய வேண்டிய

பணியாகும். அரசு மக்கள் தொடர்பு சாதனங்கள் வாயிலாகத் தனிமனிதக் கடமைகளை உணர்த்திக் கொண்டேதான் இருக்கின்றன. ஆனால் தனிமனிதன் அதனைச் செம்மையாகச் செய்கிறானா? என்பது கேள்விக்குறியே. இதனைத் திறம்படச் செய்யக் கூட்டு முயற்சி தேவைப்படுகிறது.

அரசின் விளம்பரங்கள்,

"சுற்றுப்புறத்தைச் சுத்தமாக வைத்திருங்கள், தண்ணீர்த் தொட்டி, கிணறுகளை மூடிவையுங்கள், வீட்டுக் குப்பைகளைத் தெருவில் போடாதீர்கள். அனுமதி வாங்கியுள்ளபடி கட்டடங்களைக் கட்டுங்கள், சொத்துவரி, வருமானவரிகளை முறையாகச் செலுத்துங்கள் என்று மாநகராட்சி விளம்பரப்படுத்துவது நியாயமான கோரிக்கையாகும். இவற்றோடு இது உங்கள் நாடு, உங்கள் ஊர், உங்கள் தெரு இவற்றை நேசிக்கக் கற்றுக் கொள்ளுங்கள்"[11]

என்று குறிப்பிட்டுள்ளார். உணர்ச்சிப் பூர்வமான வாசகங்களையும் சேர்த்திருந்தால், பொருத்தமாக இருக்கும் என்று எழுத்தாளராகிய சிவசங்கரி, தனக்கே உரிய அழகியல் உணர்வுடன் வெளிப் படுத்துகின்றார்.

**வெளிமாநிலங்களில் முக்கியசாலை பராமரிக்கப்படும் நிலை**

சிவசங்கரியின் நண்பர் ஒருவர், தம் அனுபவத்தை விளக்குகின்றார். அவர் பெங்களூர் சென்றிருந்த போது, அங்கு முக்கிய சாலைகள் குப்பை, கூலம் இல்லாமல் தூய்மையுடன் காணப்பட்டதையும், அதற்கான காரணத்தையும் விளக்குகின்றார். அது வருமாறு:

"சென்ற வாரம் பெங்களூருக்குப் போயிருந்தேன். நகரின் முக்கிய சாலை ஒன்றில் பயணித்த போது முன்பு குப்பையும் கூலமுமாக இருந்த வீதி தற்சமயம் பளிச்சென்று நடைபாதை வர்ணம் பூசப்பட்ட இரும்புக் கம்பிகள், மேடுபள்ளமில்லாமல் வழவழத்த

தார்ரோடு, பாதுகாப்புக் கூண்டுகளோடு நடப்பட்டிருந்த மரக்கன்றுகள் என்று அலாதி அழகுடன் மிளிர, எந்த 'ஜீபூம்பா பூதத்தின் வேலை இது!' என்று அதிசயித்துப் போனேன். விசாரித்தபோது அரசாங்கத்திற்குப் பல லட்சம் ரூபாய்களைச் செலுத்தியதோடு நிற்காமல் பராமரிப்புக்காகவும் செலவு செய்ய ஒரு தனியார் நிறுவனம் முன் வந்திருக்கிறது என்றும், அதற்கு ஈடாகச் சாலைக்கு அவர்கள் பெயரை வைப்பதற்கும், ஆங்காங்கே கம்பெனியை விளம்பரப்படுத்திக் கொள்ளவும் அனுமதி வழங்கப் பட்டிருக்கிறது என்றும் தெரிய வந்தது. பல லட்சங்கள் செலவழித்துச் சமுதாயத்துக்கு நன்மை செய்ய விரும்புகிற வர்களுக்குக் கொஞ்சம் விளம்பரம் கிடைப்பதில் தவறு என்ன? சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பேர்களை, உடையவைகளை மட்டும் மாற்ற அனுமதிக்காமல், இதே வழக்கத்தை மற்ற நகரங்களும் ஏன் பின்பற்றக் கூடாது?"[12]

என்று நண்பர் கூறியதைச் சிவசங்கரி மனதார ஏற்றுக் கொண்டார்.

**சிவசங்கரி கூறும் சில வழிமுறைகள்**

கடற்கரைகளில் வியாபாரம் என்பது தவிர்க்க முடியாததாக உள்ளது. அதனை முறைப்படுத்தி, ஒழுங்காகவும் தூய்மையாகவும், சுகாதார முறையிலும் செயல்பட அரசு சில நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம் எனக் கூறுகிறார்.

"எலியட்ஸ் கடற்கரையைச் சில பகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொரு பகுதியையும் ஒரு பிரபல கம்பெனி சீர்படுத்தி, அலங்கரித்து, காவலாளி, தோட்டக்காரர் என்று அமைத்துப் பராமரிக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்த பிறகு, தினமும் காலையிலும், மாலையிலும் குறைந்தபட்சம் நாலு போலீஸ்காரர்களாவது சாலை, மணல், கடல் என்று ரோந்துப்பணியில் ஈடுபட்டு, அசுத்தம் செய்து, குப்பைகள் போட்டுப் பொறுப்பில்லாமல் நடந்து கொள்ளும் பொதுமக்களைக் கண்டித்துத் தேவையானால்,

தண்டித்தால் பலன் இல்லாமலா போகும்? முறையான சட்டத்துக்கு மக்களைப் பணிய வைக்கப் பழகுவதன் மூலம்தான் எதிர்கால சமுதாயத்தில் மாற்றங்களும், ஒழுங்கு கட்டுப்பாடும் கொண்டு வர முடியும் என்பதால் முதல் நடவடிக்கையாகக் காவல்துறை விழித்துக் கொண்டு சரியான கோணத்திலிருந்து செயல்படுவது அவசியம். கடற்கரைகளில் துவங்கி, முக்கிய சாலைகள், இதர இடங்கள் என்ற தனியார் நிறுவனங்களிடம் பராமரிப்புப் பொறுப்புகளை ஒப்படைக்கத் துவங்கினால் பெரும்பாலான இடங்களும் தூய்மையாக இருக்கும், அரசும் தன் பணம், கவனத்தை, ஆக்கப் பூர்வமாக வேறு காரியங்களில் செலுத்தலாம்"[13] என்று கூறியுள்ளார்.

பல இடங்களில் இன்று, இத்தகைய தனியார் நிறுவனங்கள் செயல்பட்டு வருகின்றன. நாடுமுழுமையும் தூய்மை அடைய ஒவ்வொரு தனிமனிதனும் இணைந்து, தான் சார்ந்திருக்கும் இடத்தைத் தூய்மைப்படுத்தப் பாடுபடல் இன்றியமையாததாகும்.

**எக்ஸ்னோரா**

இன்று தமிழகத்தில் தூய்மைப்புரட்சி செய்துவரும் அமைப்பு 'எக்ஸ்னோரா' என்பதாகும். இந்த அமைப்பு உலக அளவில் செயல்படுகிறது. தமிழகத்தில் பெரிய நகரங்களில் இதன் பணி செம்மையாக நடைபெறுகிறது. சேலம் மாநகராட்சியில் டாக்டர்.ராதாகிருஷ்ணன், ஐ.ஏ.எஸ்., மாவட்ட ஆட்சியராக இருந்தபொழுது சுற்றுப்புறத்தூய்மையை வலியுறுத்தி மாநகராட்சியின் சார்பாக வீட்டிற்கு இரண்டு குப்பைக் கூடைகள் வழங்கப்பட்டன. அவற்றில் மண்ணோடு மக்கும் குப்பை, மக்காத குப்பை எனப் பிரித்துக் கொட்டி வைத்து மாநகராட்சி குப்பை வண்டியிடம் அவற்றை ஒப்படைக்கச் செய்தார். மக்கும் குப்பை மண்ணுக்கு இயற்கைஉரம் தயாரிப்பதற்கும், மக்காத குப்பையின் மூலம் மாற்றுப்பயன்பாட்டுப் பொருள் தயாரிக்கவும் பெறப்பட்டது.

**மக்கா குப்பையின் பயன்பாடு**

மண்ணில் மக்காத பாலிதீன் பை, பிளாஸ்டிக் பொருள்கள் இவற்றை மறுசுழற்சி வகையில் பயன்படுத்தும் முறையை இன்றைய இளைஞர்கள் கண்டறிந்தனர். நெய்வேலி, ஜவஹர் அறிவியல் கல்லூரியில் நடைபெற்ற அறிவியல் கண்காட்சியில், செய்முறை விளக்கத்துடன் காட்டப்பட்ட பரிசோதனை, "பாலிதீன்பை, உருகும் பிளாஸ்டிக் பொருள்களை உடைத்து ஒரு வாணலில் போட்டு அதனைச் சூடுபடுத்தி உருகச்செய்து, அதில் மணல் கலக்கப்படுகிறது. அந்தக் கலவை செங்கல் அச்சுக்களில் வார்க்கப்பட்டு ஒருவித கல் உருவாக்கப் படுகிறது. இதனைச் செங்கல் போன்று பயன்படுத்தலாம்" என்று மாணவர்கள் கூறினார்கள்.

புதுக்கோட்டை, நாகப்பட்டினம், தஞ்சாவூர் போன்ற பகுதிகளில் இவ்வாறு குப்பைக் கூடைகள் வழங்கப்பட்டு, குப்பைகள் பெறப்பட்டன. இதனை எக்ஸ்னோராவோ, நகராட்சியோ செய்ய வேண்டும் என்பதல்லாமல், ஒவ்வொரு குடும்பமும் அக்கறையுடன் செயல்பட்டால், தங்கள் வீட்டுக்குப்பைகளைத் தங்கள் இல்லங்களில் உள்ள தாவரங்களுக்கு இயற்கை உரமாகப் பயன்படுத்தமுடியும். சுற்றுப்புறமும் தூய்மையாக்கப்படும்.

**சுற்றுப்புறச் சுகாதாரத்தில் எக்ஸ்னோராவின் பணி**

புதியதாக உருவாக்கப்படும் நகரங்களில் 'எக்ஸ்னோரா' என்ற அமைப்பு திறம்படச் செயல்பட்டு வருகிறது. குப்பைகளைப் பெற்றுச்செல்லுதல், தோட்டம் அமைத்து அதனைப் பராமரித்தல், பகலிலும், இரவு நேரங்களிலும் நகரப்பகுதிகளில் அமைக்கப்பட்ட "அடுக்குமாடி (அப்பாட்மெண்ட்ஸ்)" வீடுகளுக்குப் பாதுகாவலாகக் காவல் பணி - மாலையில் 6 மணிக்குத் தெரு விளக்குகளை ஏற்றிக் காலையில் 6 மணிக்கு முறையாக நிறுத்தும்பணி போன்று பல பணிகளைப் பொறுப்பாகச் செய்து வருகிறது.

இப்பணி செய்பவர்களுக்குச் சம்பளம் வழங்கப்படுகிறது. இவ்வாறு அனைவரின் கூட்டு முயற்சியினால், ஒரு சில தனியார் நிறுவனங்கள் இன்று இப்பொறுப்புக்களை ஏற்றுச் செயல்படுவது அரசுக்கும், சமுதாயத்திற்கும் நலன் உண்டாக்குவதாக அமைந்துள்ளது. இந்தக் கூட்டு முயற்சியால் பல நல்ல காரியங்களைச் செய்ய அரசு அல்லது தனியார் நிறுவனங்கள் முன்வந்திருப்பது நகரம், கிராமம் என்று எல்லாம் சிறப்பாகத் தூய்மையாக இருக்க வழியாகும். மக்களும் பொறுப்புணர்ந்து செயல்படுவர். தொடர்ந்து அக்கறையுடன் நடந்துகொள்வர். சமுதாயமும் நோய்நொடிகளில் இருந்து காக்கப்படும்.

**அரசியல் தலைவர்களும் பொதுமக்களும்**

அரசின் முக்கிய மனிதர், சிறப்பு நிகழ்ச்சியில் கலந்து கொள்வதற்காகச் செல்கிறார் என்றால், அவருக்கு முக்கியத்துவம் அளித்து, முக்கிய சாலைகளில் போக்குவரத்து நிறுத்தப்படுகிறது. அந்த நேரங்களில் வேறு பல முக்கிய காரியங்களுக்காகச் செல்லும் பலரின் வேலைகள் பாதிக்கப்படுகின்றன. அரசாங்க அதிகாரிகளும், அமைச்சர்களும் பொதுமக்களின் நலனில் அக்கறை கொண்டுதான் பொறுப்பேற்கின்றார்கள். ஆனால் பொறுப்பு ஏற்றபின் அவர்களின் செயல்பாடுகள் 'நாடு தனக்கு மட்டும் உரியதாகவும், தாங்கள் ஆளப்பிறந்தவர்கள்' என்ற எண்ணப்போக்குடனும் நடந்து கொள்வது, ஜனநாயக ஆட்சிமுறைக்கு ஏற்றதல்ல. அவர்களின் வருகையால், போக்குவரத்துப் பாதிப்பு ஏற்படுத்தி, பொதுமக்களுக்குத் துன்பங்களைக் காவல்துறையினர் தந்துவிடுகின்றனர். இத்தகைய போக்கை மக்கள் விழிப்புணர்வுடன் எதிர்க்க வேண்டும்.

போக்குவரத்து தேக்கப்படுகின்ற போது அவசரச் சிகிச்சைக்காகக் கொண்டு செல்லப்படும், மகப்பேறு காலப் பெண்மணி பாதிப்புக்கு உள்ளாகிறாள். மாரடைப்பு வந்தமனிதர் இறந்துவிடுகிறார். எழுத்து, நேர்முகத்தேர்வுக்காகவோ செல்லும் பட்டதாரி இளைஞர் பாதிக்கப்படுகிறார். பல்லாயிரம் ரூபாய் கொடுத்து டிக்கெட் வாங்கி வெளிநாடு செல்ல இருக்கும் பயணி, தான் செல்ல வேண்டிய

விமானத்தைத் தவற விடுகின்றார். இப்படி எத்தனையோ இடையூறுகள் போக்குவரத்து நிறுத்தத்தால் ஏற்படுகிறது. இந்நேரங்களில் காவல்துறையினர் எல்லோரையும் ஒரே நிலையில் வைத்து நடத்தாமல். தேவையையும், அவர்களின் சூழலையும் அறிந்து செயல்பட்டால் பல உயிர்கள் காக்கப்படும். மனிதாபிமான நிலையில் நடக்க வேண்டிய செயல்பாடுகள் அவரவருக்குச் சரியான முறையில் நடைபெறும். ஆனால் 'யாரோ எக்கேடு கெட்டால் எனக்கென்ன என் கடமை நான் சரியாகச் செய்வேன்' என்று காவல்துறையினர் செயல்படும் போது, "நெஞ்சு பொறுக்குதில்லையே இந்த நிலைகெட்ட மனிதரை நினைத்து விட்டால் என்ற பாரதியின் பாடல் வரிகள் தான் நினைவுக்கு வருகின்றன. சமுதாயக் காவலர்கள் கடமையை உணர்ந்து செயல்பட வேண்டும்.

### சிவசங்கரியின் சிந்தனைக் கருவி

போக்குவரத்துப் பாதிப்பு முக்கிய மனிதர் வருகையால் பாதிக்கப்படுகிறது. அதனால் பல சிக்கல்கள் உருவாகின்றன. இச்சிக்கலைத் தீர்க்க மக்கள் என்ன செய்ய வேண்டும் என்று எண்ணிப் பார்க்கின்ற சிவசங்கரி பொதுமக்கள் விழிப்புணர்வு பெறுவது தான் பல சிக்கல்கள் தீர வழியாகும் என்று தம் எழுத்துகளில் குறிப்பிட்டுள்ளார்.

### பொறுப்பிலிருந்து நழுவும் மக்கள்

"நின்று நிதானித்து யோசித்தால் இப்போதெல்லாம் பல சந்தர்ப்பங்களில், பிரச்சனைகளுக்குக் காரணங்களை விளக்கிப்பதில்கூறவேண்டியவர்கள்கூட, பொறுப்பை உதறிவிட்டு வாயைத் திறக்காமல் இருக்கப் பழகிவிட்டனர் என்பது புரிகிறது.

"தட்டிக் கேட்க ஆள் இல்லை என்பதா? நியாயமாகக் கிடைக்க வேண்டிய உரிமைகளை நிலை நிறுத்திக் கொள்ள நம்மில் பெரும்பாலோருக்குத் தைரியம் இல்லை என்பதா? சமுதாயம் எக்கேடு கெட்டால் எனக்கென்ன, நானும் என்னைச் சார்ந்தவர்களும் நன்றாக இருந்தால் போதும் என்கிற சுய நலமா? அதிகாரத்தில் இருப்பவர்

என்ன சொன்னாலும் எது செய்தாலும் கைகட்டி வாய்பொத்தி ஏற்கப் பழகிவிட்ட அடிமைப் புத்தியா? நாடும் அடுத்தவரும் எப்படிச் சீரழிந்தாலும் நான் கவலைப்பட மாட்டேன். என் சுகம் தான் எனக்குப் பிரதானம் என்கிற போக்கில் நம் முன்னோர்கள் இருந்திருந்தால் இன்றைக்குச் சுதந்திர இந்தியாவில் நீங்களும் நானும் தலை நிமிர்ந்து வாழ்வது பலித்திருக்குமா? சிந்திக்க வேண்டும்"[14] என்று எழுத்தாளர் சிவசங்கரி கூறியுள்ளார்.

**தியாகிகளின் தியாக உணர்வு**

அன்று சுதந்திரத்திற்காகப் போராடியவர்களின் எண்ணங்களை எண்ணிப் பார்க்க வேண்டும். அவர்கள் அன்று நாட்டிற்காகத் தன் உடல், உயிர், உடைமைகள் அனைத்தையும் தந்தார்கள்.

"அடிமை வாழ்வு இல்லாமல் எதிர்காலத்தில் யாரோ நன்றாக வாழ நான், ஏன், சொத்து, சுற்றம், பதவி வசதியான வாழ்க்கை - இவற்றையெல்லாம் தியாகம் பண்ணிச் சுதந்திரப் போராட்டத்தில் இறங்க வேண்டும் என்று இந்திய, தமிழகப் பெரியவர்கள், அன்று சுயநலத்துடன் எண்ணியிருந்தால் உலகின் மிகப்பெரிய ஜனநாயக நாட்டின் குடிமக்களாக இன்று வாழும் மக்கள் பெருமை கொள்வது நடந்திருக்காது. இது குறித்து இன்றைய மக்கள் நிறையச் சிந்திக்க வேண்டும்"[15] என்பார் சிவசங்கரி.

**அநீதிகளைத் தட்டிக்கேட்டல்**

அநீதி, அக்கிரமம், தவறு எங்கு நடந்தாலும் யார் செய்தாலும் மக்கள் அனைவரும் ஒன்று திரண்டு மாபெரும் சக்தியாக உருவெடுத்து அந்தத் தவறைத் தட்டிக் கேட்கும் போது எந்தப் பிரச்சனைக்கும் தீர்வு பிறக்கும் என்பது வரலாற்று உண்மையாகும்.

மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவருக்கும் சமுதாய உணர்வு அவசியம். சமுதாய அக்கறை பற்றிய விழிப்புணர்வை ஆழமாக விதைத்துக் கொண்டால் தான் உரிமைகள் மறுக்கப்படும் போது குரல் கொடுத்து அவைகளை நிலைநாட்டிக் கொள்வது சாத்தியமாகும்.

அமெரிக்க ஜனாதிபதி புஷ், போதை மருந்து பிரச்சனை பற்றிக் குறிப்பிட்ட போது சொன்ன வார்த்தைகளை எழுத்தாளர் சிவசங்கரி நினைவு கூர்கின்றார்.

"*போதை மருந்துப் பிரச்சனை உலகளவில் வளர்ந்து விட்டதற்கு யார் காரணம்? அதை உற்பத்தி செய்பவன், கடத்துபவன், விற்பவன், பயன்படுத்துபவன் - இவர்களோடு பிரச்சனையை எதிர்நோக்க மறுத்து முகத்தைத் திருப்பிக் கொண்டு போகும் நீங்களும் நானும் கூட முக்கிய காரணம்*"[16] என்பார்.

அமெரிக்க அதிபர் கூறியது போல் ஆறறிவு படைத்த மனிதர்கள். மனிதநேயங்கள் நிறைந்த அர்த்தமுள்ள வாழ்க்கை வாழப் பிறந்த மனிதர்கள் இதை மறுக்கக் கூடாது என்பார் சிவசங்கரி.

**கண்மருத்துவமனையும் அதன் தொண்டும்**

சிவசங்கரி தம் எழுத்துக்களின் மூலம் பல சமுதாய விழிப்புணர்வுகளை ஏற்படுத்தி வருபவர். கோயமுத்தூரில் அமைந்துள்ள 'ஸ்ரீ காஞ்சி காமகோடி மெடிகல் ட்ரஸ்' நடராஜா மருத்துவமனையின் தொண்டு பற்றி எழுதியதை இங்குக் குறிப்பிடுவது மக்களுக்குக் 'கண் தானம்' குறித்த விழிப்புணர்வை உண்டாக்கும்.

**நடராஜா மருத்துவமனை**

கோயமுத்தூரின் பரபரப்பான சூழலிலிருந்து விலகி, ஊருக்குப் புறம்பாக, மரங்கள் சூழ்ந்திருக்க அமைதியான இடத்தில் ஆக்கப்பட்டிருந்தது மருத்துவமனை. அதன் நுழைவாயிலில் சுதர்ஸன விநாயகர் கையில் கொழுக்கட்டைக்குப் பதிலாக ஒரு கண்ணை ஏந்திருப்பது ஒரு குறியீடாக அமைக்கப்பட்டுள்ளது.

**பணிகள்**

1977 - ஆம் ஆண்டு காஞ்சி பெரியவர்களின் விருப்பம், ஆசீர்வாதங்களுடன் இம்மருத்துவமனை தொடங்கப்பட்டது.

75 மருத்துவ நிபுணர்களின் துணையுடன், 15 லட்சத்துக்கும் மேற்பட்டவர்களுக்கு இலவச சிகிச்சை, 60,000 குழந்தைகளுக்குத் தடுப்பூசிகள், 2,000க்கும் மேற்பட்ட அறுவை சிகிச்சைகள், 40,000 பள்ளிக் குழந்தைகளுக்குக் கண் பரிசோதனை, கண்கள் தானமாகப் பெற்றுப் பார்வை மீட்கப்பட்டவர்கள் 610, கிராமங்களில் விழிப்புணர்வு முகாம்கள் 400க்கும் மேல், இப்படி இந்த நிறுவனம் ஆற்றிவரும் பணிகள் சிறப்பானவையாகும்.[17]

## 1987–ஆம் ஆண்டு சுதந்திர தினவிழா

1987 -ஆம் ஆண்டு சுதந்திரத்தினத்தை இந்த மருத்துவமனை சுதந்திரப் போராட்ட வீரர்களுக்கும் அவர்களின் குடும்பத்தாருக்கும் நன்றி தெரிவிக்கும் வகையில் ஏற்பாடு செய்தது. நிறுவனத்தார் தியாகிகளின் முகவரிகளைப் பெற்று அவர்களுக்கு அழைப்பிதழ் அனுப்பினர்.

"அன்புடையீர், சுதந்திர இந்தியாவுக்காகப் போராடியதன் மூலம் நீங்களும் இந்திய வரலாற்றில் இடம் பெற்று விட்டீர்கள். உங்களை, உங்கள் சேவையை இந்த நாடும், மக்களும் மறக்கவில்லை என்பதை அன்போடு உங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம். தேசத்திற்காக உழைத்த உங்களுக்கு "இலவச வைத்திய சிகிச்சை அளிப்பதன் மூலம் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறோம். உங்களுக்குத் தொண்டாற்ற எங்களுக்கு ஒரு சந்தர்ப்பம் தாருங்கள்"[18]

என்று எழுதி அச்சிட்ட கடிதத்தைப் பார்த்து, அந்த தியாகிகள் கண்களில் நீர்மல்க, நெகிழ்ந்து போய், தள்ளாமையுடன் சிகிச்சைக்கு வந்தவர்கள் ஏராளம்பேர் என்கிறார் சிவசங்கரி.

## பார்வை இழந்தவர்களுக்கு ஒளியூட்டிய நிறுவனம்

நடராஜா மருத்துவமனை கிராமம் கிராமமாகச் சென்று முகாம்கள் நடத்தியது. அப்போது பார்வை இழந்து தவிப்பவர்களின் அவலம் நெஞ்சைத்தொடச் சங்கரா ஐ சொஸைடி என்ற கண்சிகிச்சைப் பிரிவு ஏற்படுத்தப்பட்டது.

இதில் 'காட்ராக்ட்' எனப்படும் கண்புரை நோய் முதல், பல கண் நோய்களுக்கும் சிகிச்சை அளித்துக் குணப்படுத்தியது. பெரிய நகரங்களில் உள்ள "கண் வங்கி" களால் சாதிக்க முடியாத அளவில் '(கார்னியல் ட்ரான்ஸ்பிளாண்ட்)' கண் மாற்று அறுவைச் சிகிச்சை செய்து பார்வை இழந்த 600-க்கும் மேற்பட்ட மனிதர்களுக்கு கண்ஒளியூட்டி இருப்பது ஒரு பெரும் சாதனை என்று சிவசங்கரி குறிப்பிட்டுள்ளார்.

**கார்னியா பாதிப்பும் பாதிக்கப்பட்டவர் எண்ணிக்கையும்**

இன்று இந்தியாவில் பார்வை குறைந்தவரின் எண்ணிக்கை ஒரு கோடியே இருபது லட்சத்திற்கும் மேல் இருப்பார்கள் என குறிப்பிடும் சிவசங்கரி இவர்களுக்குச் சிறு அறுவை சிகிச்சை மூலம் பார்வையை மீட்டுத் தரமுடியும் என்பார்.

> 'கார்னியல் மாற்று அறுவை சிகிச்சை' என்றால் என்ன? கார்னியா என்பது கண்ணில் உள்ள பாப்பாவுக்கு மேல் பளபள என்று இருக்கும் வட்டமான தெளிந்த பகுதியாகும். கைக்கடிகாரத்தை மேல் கண்ணாடி எப்படி கௌவிக் கொண்டிருக்கிறதோ, அப்படியே இந்த கார்னியாவும் பாப்பாவுக்கு மேல் படர்ந்திருக்கிறது. ட்ரகோமா, பெரியம்மை, விளையாட்டு அம்மை, கண்வலி போன்ற நோய்களால் இந்த கார்னியா பாதிக்கப்படும் நிலை உள்ளது. கார்னியா தன் பளபளப்பையும் தெளிந்த தன்மையையும் இழந்து பூத்துப் போவதினால் பார்வையை இழந்துவிடுகிறது. இந்தியக் குருடர்களில் பதினெட்டிலிருந்து இருபது லட்சம் வரை இந்த கார்னியா பாதிப்பால் பார்வை இழந்தவர்கள்தான் அதிகம் இருக்கின்றார்கள். இவர்களுக்கு மற்றவர்கள் செய்யும் உதவி 'கண்தானம்' செய்வதாகும். இதைப் பழக்கமாகக் கொண்டால் இத்தனை குருடர்களுக்கும் புதுவாழ்வு அளிக்க முடியும் என்கிறார் சிவசங்கரி. எப்படி வாழ்வு அளிக்கமுடியும் என்றால், 'தங்கள் உறவினர் யாராவது இறந்த பின் சடலத்தை புதைத்தோ,

எறிக்கவோ செய்வதற்கு முன் கண்களைத் தானமாகத் தருவதனால் அவர்களுக்குக் கண் ஒளியூட்ட முடியும்."[19]

கண்தானம் செய்வது, "ஒருவர் இறந்து ஆறு மணி நேரத்திற்குள் எங்களுக்குத் தகவல் சொல்லிவிட்டால் உடனே நாங்கள் அங்குச் சென்று பத்து நிமிடங்களில் இறந்தவரது கண்களை எடுத்து விடுவோம். இமைகளுக்கு அடியில் பஞ்சு வைத்து மூடி சன்னமாகத் தையல் போட்டுவிடுவதால் இறந்தவர் தூங்குகின்ற மாதிரிதான் தோன்றும். சடலம் பின்னப்பட்டுவிடும், கண் குழியாய்ப் பார்க்கப்பயமாக இருக்கும் என்பதெல்லாம் தவறான அபிப்பிராயங்கள்.."[20] என்று மருத்துவர் விளக்குகின்றார்.

**சங்கரா கண்வங்கி**

சமுதாயத்திற்குத் தேவையான அனைத்துப் பணிகளையும் அரசே செய்ய வேண்டும் எனக் காத்திருக்காமல், மருத்துவமனை ஆற்றும்பணி அளப்பரியது. 'சங்கரா கண்வங்கி' கிராமம், சிற்றூர், நகரம் என்று ஓர் இடம் விடாமல் சென்று கண்தானத்தின் முக்கியத்துவத்தை எடுத்துச் சொல்லியது. அத்துடன் நிற்காமல் அம்மக்களைக் கண்தானம் செய்யச் சம்மதிக்கச் செய்துள்ளது. அதற்கு அடையாளமாகப் பதிவு அட்டையை வழங்கியுள்ளது. அதில் நான் கண்களைத் தானமாகக் கொடுக்க விரும்புகிறேன்' என்று அழகான அட்டையை வழங்கி, இதைச் சட்டமிட்டு உங்கள் வீடு அல்லது அலுவலகத்தில் கண்ணில் படும்படியாக மாட்டிக் கொள்ளுங்கள் என்று வேண்டிக்கொண்டுள்ளது.

வெளியில் செல்லும் போது பயன்படும் வகையில் அடையாள அட்டையைப் போன்று தயாரித்தும் வழங்கியுள்ளது. எங்காவது சென்ற இடத்தில் மரணம் நேர்ந்தால் கண்களைத்தருவதில் தடை வராமல் இருக்க அடையாள அட்டை உதவும். அதில் 'நான் கண்களைத் தானம் செய்ய விரும்புகிறேன், தாமதம் செய்யாமல் அருகில் உள்ள கண் வங்கிக்குத் தெரிவிக்கவும்' என்ற வாசகங்களையும் வழங்கியுள்ளது .[21]

**கண்தானம் பற்றிய சிலசெய்திகள்**

1. கண்தானம் கொடுப்பதற்கு வயதோ, ஆண், பெண் பாகுபாடோ எதுவும் இல்லை.

2. கண்தானம் கொடுக்க மதம் தடையில்லை. மதத் தலைவர்களின் பூரண ஒத்துழைப்பும், ஒப்புதலும் உண்டு.

3. கண்நோயால் அவதிப்பட்டவரின் கண்களையும் பயன்படுத்த முடியும். அதனால் எந்தத் தொல்லையும் இல்லை. கண்ணாடி அணிந்தவர்கள். காட்ராக்ட் புரை உள்ளவர்கள் போன்ற எல்லோரும் கண்தானம் செய்யலாம்.

4. தானமாகப் பெறப்படும் கண்கள் அவர்களின் வாழ்நாளுக்குப் பின்னர்தான் எடுத்துக்கொள்ளப்படும்.

5. கண்தானம் கொடுப்பவரின் ஆயுள் முடிந்து 6 மணி நேரத்திற்குள் கண்கள் எடுக்கப்பட வேண்டியுள்ளதால் உடனே டாக்டரிடம் தெரியப்படுத்த வேண்டும்.

6. கண்களை எடுக்க எந்தவிதமான தனி அறையோ தனி இடமோ தேவையில்லை.

7. மருத்துவர் வரும் வரையில் கண்கள் தூசியற்றதாகவும், தூய்மையாகவும் இருக்கக் கண்களை மூடி ஈரப்பஞ்சு வைத்துக் கட்டி வைப்பது அவசியம்.

8. கண்கள் எடுக்கும் பணிக்கு 10 நிமிட நேரமே போதுமானது.

9. கண் தானம் கொடுப்பவர்களின் நெருங்கிய உறவினர் அவரின் இறுதிக் காலத்தில் டாக்டருக்குத் தெரிவிக்க வேண்டும். இதன் மூலம் தான் வாழ்ந்தவரின் விழி வாழ்பவருக்கு ஒளிகாட்ட உதவ முடியும்.

10. முடிந்த வரையில் நம் உறவினர் மற்றும் சுற்றுப்புறத்தில் வாழ்கின்ற வயதில் முதிர்ந்த நிலையில் உள்ள

பெரியவர்களுக்குக் கண்தானத்தின் மேன்மையை எடுத்துக் கூறி, அவர்கள் கண்தானம் செய்ய பூரண சம்மதம் அளிக்கும்படி செய்யவேண்டும்.

கண்தானம் கொடுக்க விரும்பியவர் இறந்தபின், துக்கத்தில் இருக்கும் உறவினர்களிடம் கண்தானத்தை விளக்கி அவர்களைச் சம்மதிக்கச் செய்தல் வேண்டும். இக்காரியம் அக்குடும்பத்தினர் இறந்த ஆத்மாவிற்குச் செய்யும் மிகப் பெரிய தொண்டு ஆகும்.

சிவசங்கரி கண்மருத்துவ மனையைப் பார்வையிட்டதுடன் நிற்காமல், தன்னுடைய எழுத்தின் மூலம் தமிழகமக்கள் மட்டுமன்றி இந்தியமக்களின் வாழ்விற்கே அறிவொளி ஊட்டிய பணியைச் செய்துள்ளார் என மனம் வாழ்த்துகிறது.

பெரியபுராணத்தில் சேக்கிழார் கண்ணப்ப நாயனார் மூலம் கண்தானம் பற்றி அறிமுகம் செய்கின்றார். கண்ணப்ப நாயனார் அன்று இறைவனுக்குத் தன் கண்ணைப் பறித்து வைத்தார். ஆன்மீகம் தான் மனிதனுக்குத் தொண்டுள்ளத்தை வழங்குகிறது என்பதற்குச் சமய இலக்கியங்கள் துணைநிற்கின்றன.

இன்று தமிழகத்தில் அரவிந்தர் கண் மருத்துவமனை நான்கு நகரங்களில் சிறப்பாகப் பணிசெய்துவருகிறது. சென்னையில் சங்கர நேத்ராலயா என்ற கண் மருத்துவமனையும் சேவைமனப் பான்மையுடன் செயல்புரிந்து வருகிறது. பல தனியார் நிறுவனங்கள், தொண்டு நிறுவனங்கள், அமைப்புகள், கண் சிகிச்சை முகாம்கள் நடத்தி வருகின்றன. பார்வையற்றவர்களுக்கு ஒளிகொடுப்பது, அவர்கள் வாழ்க்கைக்கே ஒளிகொடுப்பதாகும். தமிழகமக்கள் பல வகைகளில் மனித நேயத்தோடு நடந்து கொள்வது இந்த மண்ணின் மாண்பு ஆகும்.

### 'அக்னி' யும் அதன் செயல்பாடும்

'அக்னி' - *(Agni Awakened Group for National Integration)* ஆக்கவும் சக்தி படைத்தது. தீயவற்றை அழிக்கவும் வல்லமை கொண்டது. சமுதாய

மேம்பாடு குறித்து மக்களிடையே விழிப்புணர்வை உண்டாக்கப் பாடுபட்டுவருபவர் சிவசங்கரி. அவர் சமுதாயத்திற்கு ஏதாவது செய்து கொண்டே இருக்க வேண்டும் என்ற ஆவல் கொண்டவர். அதற்குத் தம்முடைய எழுத்தை ஒரு பெரிய கருவியாகப் பயன்படுத்துபவர். முடிந்த இடங்களில் பணியில் இறங்கி செயல்படவும் துணிந்தவர். அவ்வாறு துணிந்து செயல்புரியும் ஒரு அமைப்புதான் 'அக்னி.'

**'அக்னி' உருவாக்கம்**

1986 - ஆம் ஆண்டு சென்னையில், எழுத்தாளர் சிவசங்கரியும், எழுத்தாளர் மாலனும் நிர்வாக இயக்குநர்களாகப் பொறுப்பேற்று, மத்திய அமைச்சர் திரு. ப.சிதம்பரம் அவர்கள் குத்துவிளக்கு ஏற்றி வைக்க சிவசங்கரியின் பெருங்குறிக்கோளான 'அக்னி உருவாக்கப் பட்டது.' இன்றும் அக்னி தனிமனித மேம்பாட்டுக்குத் துணைபுரிகிறது. இன்றியமையாத கருத்துக்கள் குறித்து விழிப்புணர்வு உண்டாக்கும் வகையில் பெரும் முயற்சியுடன் இன்றளவும் செயல்பட்டும் வருகிறது.[22]

**'அக்னி' - ஏற்படுத்தும் தனிமனித விழிப்புணர்வு**

ஒவ்வொரு மனிதனும் தன் மனதை ஆராய்ந்து பார்த்தல் இன்றியமையாததாகும். மனதை அதன் செயல்பாட்டை உற்றுநோக்கி அறிந்து நன்மை பயக்கும் நல்ல பண்புகளை வைத்துக் கொண்டு, வேண்டாத தீய, கெட்ட செயல் போன்ற எண்ணங்களை நீக்கி, தூக்கி எறிந்து மனத் தெளிவை உண்டாக்குதல் வேண்டும். இதுவே சுய அலசல் அல்லது தனி மனித விழிப்புணர்வு ஆகும். அதாவது "அந்தந்த நிமிடங்களில் உணர்ச்சி வசப்பட்டுச் செய்து விடும் எந்தச் செயலையும் அது நல்லதாயினும் கெட்டதாயினும், அந்தச் செய்கையை உணர்ந்து உடனேயே மனதில் உறுதி கொண்டு அது நடக்கவோ, நடக்காமல் இருக்கவோ உதவும் மனநிலைதான் விழிப்புணர்வு.

தனிமனிதரிடம் விழிப்புணர்வு ஏற்பட்டுவிட்டால் அது குடும்பம் - அடுத்த வீடு - தெரு - வட்டாரம் - ஊர் - நாடு என்று விரிந்து கொண்டேபோவது இயல்பு[23] என்பார் சிவசங்கரி.

**'அக்னி' யில் உறுதி எடுத்தல்**

'அக்னி' தன் முதலாண்டு பிறந்த தினத்தில், இளைஞர்களிடையே சமூக ஈடுபாட்டை ஏற்படுத்தும் வகையில், பள்ளி மாணவர்கள் சிலரைத் தேர்ந்தெடுத்து, 'பாரத தரிசனம்' செய்ய, அழைத்துச் சென்றது. அங்கு ராஜ்காட்டில் காந்தி சமாதியின் முன் 'இன்று முதல் சிறந்த குடிமகனாகவும், நல்ல மனிதனாகவும் வாழ, வளர முயற்சி எடுப்போம்' என்று சத்தியம் செய்து உறுதிகொள்ளச் செய்தது. இவர்கள் மூலம் இந்தக் கருத்து பள்ளி மாணவர்களிடையேயும் ஓர் ஈடுபாட்டை, ஒரு தாகத்தை ஏற்படுத்தும் முன் மாதிரிகளாக இவர்கள் விளங்குவார்கள். அந்த நோக்கில் இந்நிகழ்ச்சி ஏற்பாடு செய்யப்பட்டது. தனி மனிதர்களிடையே, இலக்கியங்கள் மூலம் விழிப்புணர்வை உண்டாக்க வேண்டும் என்பதற்காகக் கவிராத்திரி என்ற நிகழ்ச்சிக்குத் தென்மண்டல கலாச்சார அமைப்பின் ஒரு நிகழ்வு ஏற்படுத்தப்பட்டதற்கு மாநில முக்கிய எழுத்தாளர்களையும், கவிஞர்களையும் வரவழைத்து அவரவர் மொழியிலும், பின்னர் ஆங்கிலத்திலும், கவிதை, கதைகள் படிக்கச் செய்து 'அக்னி' சிறப்படைந்தது. இந்நிகழ்ச்சியில் ஆயிரக் கணக்கான பொதுமக்கள் கலந்து கொண்டனர்.

இவ்வாறு இந்நிகழ்ச்சியின் நோக்கம் நிறைவேற்றப்பட்டது, 'அக்னி' யின் வெற்றியாகும்.

**தனிமனிதப் பங்கேற்பு – பாலங்கள்**

'அக்னி' Ãாலங்கள் என்ற ஏற்பாட்டைச் செய்தது. அதன் மூலம் ஒருவரின் கஷ்டத்தை மற்றவர் புரிந்து கொள்ள வழி செய்தது. அதன் மூலம் பிரச்சனைகள் சுமுகமாகத் தீர்க்கப்படும் என்ற நம்பிக்கையிலும், காவல்துறைக் கண்காணிப்பாளர், தொலைபேசித்துறைப் பொதுமேலாளர், மாநகராட்சி ஆணையர் போன்றோரைப் பொதுமக்கள் நேருக்கு நேர் சந்தித்துக் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ள வழி செய்தது. இதனால் பொதுமக்களுக்கும் உயர் அதிகாரிகளுக்கும் இடையே உள்ள இடைவெளி குறைந்து அவர்களை எளிதில் அணுகும் நிலைக்குக்

கொண்டுவந்தது. பள்ளி முதல்வர் - பெற்றோர்களைச் சந்திக்கச் செய்து அவர்கள் இளம் தலை முறையினருக்கு முன் உதாரணங்களாக விளங்கச் செய்ய வேண்டும் என வலியுறுத்தியது. இப்பாலங்கள் தொடர்ந்து பல இடங்களில் நடந்து மக்களின் நன்மதிப்பைப் பெற்றது.

**இளைஞர்களிடம் (நேர்மறைச்) சிந்தனையைச் சரியான வழியில் உருவாக்கல்**

ஒரு வெள்ளைத்தாளில் சிறு கரும்புள்ளி வைத்து இளைஞர்களிடையே, அத்தாளைக் காட்டி, அவர்களின் சிந்தனையைச் சரியான விதத்திலேயே நேர்மறையாக்கிச் செயல்படச் செய்தல். சான்றாக, இளைஞர்களிடம் இத்தாளில் உள்ளது என்ன? என்ற கேள்வியைக் கேட்டு, அதனை எப்படிப் பயன்படுத்துதல் என்ற வினாவினை எழுப்பி, அதற்கான பதிலைப் பெற்றுக் கொள்ளுதல். பின்னர் அந்த வெள்ளைத் தாளில் உள்ள புள்ளியைக் கருவாகக் கொண்டு ஓவியம் தீட்டவும், கதை, கவிதை எழுதவும் முடியும். அவரவர் கற்பனைக்கேற்ப உத்தியைக் கொடுத்துச் செயல்படச் செய்து வெற்றி பெறச்செய்தல், நல்லவிதமான இவைபோன்ற (அக்னி) நேர்மறைச் சிந்தனை நிகழ்ச்சிகளை முகாம்களிலும், 'அக்னி' முடிந்த போதெல்லாம் பள்ளி / கல்லூரிகளிலும் நிகழ்த்தியது. காரணம் எதிர்காலத்தில் இந்நாட்டை ஆளப்போகிறவர்கள் இன்றைய இளம் தலைமுறையினர்தான். அவர்கள் தன்னம்பிக்கையுடன், நேர்மை, கட்டுப்பாடு ஆகியன நிறைந்தவர்களாக உருவாக்க வேண்டும் என்ற உயர்ந்த நோக்கில் செயலாற்றியது.

**போதைத் தடுப்பு**

போதை மருந்துப் பழக்கம் காட்டுத் தீயைவிடப் பயங்கரமாய்ப் பரவி வரும் கொடிய செயல். அது ஒரு சமுதாயத்தையே நாட்டையே பூண்டோடு அழித்துவிடும் வல்லமை கொண்டது. இதைத் தடுக்க 'அக்னி' , 'ஒரே ஒரு தரம்' என்ற 22 நிமிட வீடியோ படத்தைத் தமிழில் தயாரித்து, புறநகர் பள்ளிகளில் குழந்தைகளுக்குப் போட்டுக் காட்டியுள்ளது.

"வேண்டாம் என்று சொல்லு" என்ற துண்டு பிரசுரத்தை வெளியிட்டு விழிப்புணர்வை உண்டாக்கியது. போதை மருந்தின் தீமையை விளக்கும் வகையில் மாணவர்களிடையே ஒரு ஓவியப் போட்டியை நடத்திப் பரிசு வழங்கியது. அந்த ஓவியங்களைச் சென்னை நகர் பள்ளிகளில் கண்காட்சிகளாக வைத்து அனைவரையும் பார்வையிடச் செய்து, அது குறித்த அபாய நிலைமையை உணரச் செய்தது."[24]

தமிழகம் மட்டும் அல்லாமல் அண்டை மாநிலங்களிலும் சென்று பள்ளி கல்லூரிகளிலும் உணர்வுப் பூர்வமாக, உண்மை உதாரணங்களுடன் (ஸ்லைடு) படங்களோடு 'போதை மருந்து ஒரு ஆலகால விஷம்' என்பதை எடுத்துக் காட்டி, வருமுன் காக்கப் பாடுபட்டது 'அக்னி'.

**ராஜாஜி புனர் வாழ்வு மையம்**

அக்னி இவற்றுக்கெல்லாம் சிகரம் வைத்தாற் போல் ஒரு மாபெரும் பணியையும் அமைதியுடன் செய்து வருகிறது. ராஜாஜி புனர் வாழ்வுமையம். இது தான் இந்தியன் வங்கி உதவியுடன், அடையாற்றில் ரூபாய் ஆறு லட்சம் செலவில் 10 படுக்கைகளைக் கொண்ட இல்லத்தை வி.எச்.எஸ் ஆஸ்பத்திரியில் கட்டியுள்ளது.

1992 நவம்பர் 14 ஆம் நாள் திருமதி எம். எஸ். சுப்புலட்சுமி குத்துவிளக்கு ஏற்றி, மேதகு.ஆளுநர் பீஷ்ம நாராயண சிங் திறந்து வைத்தார். இன்றும் சிறப்புடன் செயல்பட்டு வருகிறது. ஆனால் ஆரவாரமின்றி அமைதியாக நடைபோடுகிறது.

குடி போதைக்கு அடிமையான புறநகர் மக்களை - உள் - நோயாளியாகச் சேர்த்து சிகிச்சை அளித்து இதயம், ஈரல், மனநலம் போன்றவற்றை ஆராய்ந்து, அதன் நிலை உணர்ந்து, மருத்துவம் செய்து குடிப்பழக்கத்திலிருந்து மனிதனை முற்றிலுமாக மாற்றியுள்ளது. மன, உடல் வலிமை பெற யோகாசனமும் கற்றுக்கொடுக்கப்படுகிறது. ராஜாஜி புனர் வாழ்வுமையம் குடிபோதையால் பாதிக்கப்பட்டவருக்கு

ஒரு தாய் வீடு போல அமைந்து தாயன்புடன் பேணப்படும் நிலை போற்றக் கூடியதாகும்.[25]

இந்த இடத்தில் தமிழர்களின் ஆன்மீக உணர்வை எண்ணிப் பார்ப்பது அவசியமாகிறது. இந்தியாவில், குறிப்பாகத் தமிழகத்தில் பக்தியின் வாயிலாக மக்கள் ஆற்றும்பணி அளப்பரியதாகும். அப்பணி காலங்காலமாக நடைபெற்று வருகிறது. 'மக்கள் தொண்டே மகேசன் தொண்டு' என்று கருதி பணி செய்து வாழ்ந்த அடியார்கள் வாழ்ந்த பூமி இது. திருமூலர் அருளிய பாடல் வருமாறு:

*"படமாடக் கோயில் பகவர்க்கொன் றீயின்*
*நடமாடுங் கோயில் நம்பர்க்கங் காகா*
*நடமாடுங் கோயில் நம்பர்க்கொன் றீயில்*
*படமாடக் கோயில் பகவர்க்க தாமே"*[26]

என்ற அடிப்படையில், உலகியல் வாழ்க்கையின் தளத்தில் நின்று நம்பிக்கை, அறம், ஒழுக்கம், அன்பு ஆகியவற்றைச் சிவசங்கரி சமுதாயத்திற்கு வழங்கி வருகின்றார்.

'அக்னி' யின் செயல் அத்துடன் நின்று விடுவதில்லை. நோயாளி சிகிச்சைப்பெற்று வீடு சென்ற பின்பும் தொடர்ந்து அவரைக் கண்காணித்து வருகிறது. இச்செயல் சிவசங்கரி கொண்டுள்ள மனித நேயத்தை வெளிப்படுத்துவதாகும்.

**சகதமிழர்களும் அவர்களின் சிக்கல்களும்**

சிவசங்கரி குடிகாரர்கள், போதை மருந்து அடிமைகள் குறித்து எழுதியுள்ளார். அது போலச் சூதாடிகள் பற்றியும் அவர்கள் நடவடிக்கை குறித்தும் விளக்குகிறார்.

**'கட்டாயச் சூதாடிகள்' யார்?**

மானம், மரியாதை, நிம்மதி, பணம் என்று பலவற்றையும் இழந்தும், மீண்டும் மீண்டும் கட்டாயமாய்ச் சூதாடத்தூண்டும் உணர்வு பெற்றவர்கள் கட்டாயச் சூதாடிகள் ஆவர். அது ஒரு நோயாகக்

காணப்படும். தென் ஆப்பிரிக்காவில் பிறந்த ஜிம் என்பவர் இந்நோயால் தாக்கப்பட்டு மறுவாழ்வு பெற்றவர். அவர் தன்னைப் போன்றோருக்காக 1957 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 13 ஆம் நாள் கட்டாயச் சூதாடிகள் சங்கம் ஒன்றை நிறுவினார். அது பல நாடுகளில், கிளைகளுடன் வளர்ந்திருக்கிறது. ஜி.ஏ என்ற அமைப்பில் இணைத்துக் கொண்டு, கட்டாயச் சூதாட்டம் என்கிற நோயிலிருந்து தங்களை மீட்டுக் கொண்டவர்கள் பல பேர் என்கிறார் சிவசங்கரி.[27]

ஒருவர் சூதாட்டத்தில் பங்கு பெற்று அப்பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டார் என்றால், அச்செயல் சுற்றி இருக்கும் குடும்பத்தையே பாதிக்கிறது. அதனால் நிபுணர்கள் இச்சூதாட்டத்தைக் குடும்பநோய் என்கின்றனர். இந்நோயால் தாக்கப்பட்டுப் பின் திருந்திக் 'கட்டாயச் சூதாடிகள் சங்கம்' (காம்ப்ளர்ஸ் அனானிமஸ்) என்பதில் இணைந்து புனர் வாழ்வு பெற்றவர் பலர்.

**திருமலை**

திருமலை நல்லவசதியான கூட்டுக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவர். இவருக்குச் சின்ன வயதிலிருந்து 'தான் சொல்வது தான் சரி' என்று வாதாடும் பழக்கம் உண்டு. அதற்காகப் பந்தயம் கட்டுவார். அந்தப் பந்தயம் வைக்கும் பழக்கம் தான் பின்னாளில் அவரைக் கட்டாயச் சூதாட்ட நிலைக்குத் தள்ளியது.

**கல்லூரிக்காலத்தில்**

கல்லூரியில் சேர்ந்த போது, இருபத்துநாலு மணிநேரமும் திறந்திருக்கும் சீட்டாட்ட கிளப்புகள் திருமலைக்கு அறிமுகம் ஆயின. அதில் விளையாட வீட்டில் பொய் சொல்லிப் பணம் வாங்கினார். கல்லூரிப் படிப்பு முடிவதற்குள் கட்டாயச் சூதாடியாக மாறிவிட்டார். பொய் சொல்லுதல், திருடுதல், பிறரை ஏமாற்றுதல் என்று பல தீய பழக்கங்களையும் வளர்த்துக் கொண்டார். அதனால் பல சிக்கல்கள் உருவாகிக் காவல் துறையினரால் தேடப்பட்டு, பிடிபட்டுப் பெற்றோர் வந்து மீட்டல் என்ற நிலை தொடர்ந்தது. அப்போதெல்லாம் அவர்

அப்பா 'இனிமேல் இப்படிச் செய்யமாட்டேன்' என்று சத்தியம் வாங்கிக் கொள்வார். ஆனால் அவற்றைக் காற்றோடு விட்டுவிடுவார் திருமலை.

**இறந்த குழந்தையின் மீது சத்தியம்**

மனம் திருந்திய திருமலை தன் தவறைத்தானே கூறுகிறார்.

"என் மனைவிக்குப் பிரசவகாலம். நிறைமாதக் கர்ப்பிணியைக் கூடக் கவனிக்காமல் நான் என்போக்குக்குக் கிளப்பில் உட்கார்ந்து சீட்டாடிக் கொண்டிருந்தேன். குழந்தை இறந்து பிறந்தது. அதைப் புதைக்கத் தகப்பனார் வர வேண்டும் என்று என்னை வலுக்கட்டாயமாக அழைத்துப் போனார்கள். உயிரற்ற குழந்தையை என் முன்னே நீட்டி, 'இந்தச் சடலத்தின் சாட்சியாய் இனிச் சூதாட மாட்டேன் என்று சத்தியம் பண்ணு' என்றார்கள். கொஞ்சமும் யோசிக்காமல் சத்தியம் செய்தேன். ஆனால் காரியங்கள் முடிந்த பிறகு செய்த சத்தியத்தை மறந்து விட்டு அன்று மதியமே மீண்டும் கிளப்புக்குச் சீட்டாட வந்துவிட்டேன்" என்று திருந்திய பிறகு தன்னிலை குறித்து வருந்திச் சிவசங்கரியிடம் கூறுகிறார். "மனுஷனாம்மா நான்? செத்த குழந்தைமேல் சத்தியம் பண்ணியதை மீறிய எனக்கு விமோசனம் உண்டா? மிருகத்தைவிடக் கேவலமாய் நடந்து கொண்டுவிட்டேன். சூதாட்டம் எந்த அளவுக்கு மனிதனைச் சீரழிக்கும் என்பதற்கு என்னை விட வேறு உதாரணம் இருக்க முடியுமா?"[28] என்று கேட்கிறார் திருமலை.

மனம் திருந்திய திருமலை இன்று, தன்னைப் போல, 'கட்டாயச் சூதாடிகளாக' இருந்து மானம், மரியாதை, நிம்மதி, பணம் என்று பலவற்றையும் இழந்து தவிக்கும் மனிதர்களுக்குப் புனர் வாழ்வு அளிக்கும் பணியில் ஈடுபட்டு வருகிறார்.

**கட்டாயச் சூதாடிகளாகப் பலர்**

திருமலை போன்ற பலரைச் சிவசங்கரி இங்கு அறிமுகம் செய்கின்றார். இப்படியும் மனிதர்கள் வாழ்ந்து வந்துள்ளனர் என்பது மனிதர்களுக்குள் எப்படி எல்லாம் உணர்வு தூண்டப்படுகிறது என்றும்,

அது எப்படி மனிதனைத்தன்னிலை இழக்கச் செய்கிறது என்பதும் வேதனைக்குரியதாகும்.

"1. குதிரைப் பந்தய மோகத்தில் வீடு, வாசல் நிலம் அத்தனையும் வாரிவிட்டுவிட்டு இன்று நடுத்தெருவில் நிற்கும் சாமிநாதன்.

2. சூதாடப்பணம் தேவைப்படும் போதெல்லாம் தாலிகட்டின மனைவியையே விபச்சாரத்தில் ஈடுபடச்செய்து சம்பாதிக்கும் பீட்டர்.

3. தம்பிகளுக்குக் கல்லூரிக் கட்டணம் கட்டவென அம்மா தந்த, தாலிச்சரட்டை விற்று, ஆறு நாட்கள் தொடர்ந்து வெறும் டீயைக் குடித்து, புகைப் பிடித்துக் கொண்டு கண் விழித்துச் சீட்டாடி அத்தனையும் தொலைத்துத் தம்பிகளின் எதிர்காலத்தை நாசம் செய்த குமரேசன்.

4. தினமும் வீட்டில் கைக் குழந்தையைப் பூட்டி வைத்து விட்டு லேடீஸ் கிளப்பிற்கு 'தம் போலா' எனப்படும் நம்பர் சூதாட்டம் ஆடுவது கணவனுக்குத் தெரிய, இன்று விவாகரத்தாகிய நிலையிலும் சூதாட்டத்தை விட முடியாது தவிக்கும் மகேஸ்வரி.

5. சூதாடத் தேவையான பணத்திற்காகக் குழந்தைப் பேறு இல்லாதபோதும், மனைவிக்குத் தெரியாமல் குடும்பக் கட்டுப்பாடு ஆப்பரேஷன் செய்து அந்தப் பணத்தில் சூதாடிய செந்தில்."[29]

இவர்கள் எல்லாம் 'கட்டாயச் சூதாட்ட நோயாளிகள்' இந்த உண்மையை உணர்ந்து உதவி செய்கிறேன் என்று, இவர்களைச் சார்ந்தவர்கள் உதவிக்கரம் நீட்டி மீட்க வேண்டும்.

விளையாட்டு வேறு, சூதாட்டம் வேறு. அது எங்கே முடிகிறது. எங்கே ஆரம்பிக்கிறது என்கிற விழிப்புணர்வு இல்லாவிட்டால் வாழ்க்கையே நரகமாகிவிடும். [30]

இன்று தமிழகத்தில் இது போன்ற சூதாட்டங்களுக்கும், லாட்டரிச்சீட்டு போன்றவற்றுக்கும் தடை விதித்திருப்பது மேலும் பல கட்டாய சூதாட்டக்காரர்கள் உருவாவது தடுக்கப்பட்ட நடவடிக்கையாகும். அரசும் இதில் சமுதாய அக்கறை கொண்டு செயல்படுவது, சீர்கேடுகள் பெருகும் போது, சமூகத்தைக் கட்டிக் காக்கும் கடமையை செய்து நிரூபித்துள்ளது.

**எய்ட்ஸ்**

'எய்ட்ஸ்' என்று அழைக்கப்படும் உயிர்க் கொல்லி நோய் இன்று சமுதாயத்தையே உலுக்கிக் கொண்டிருக்கிறது. உலக அளவில் இந்தியாவிலும் குறிப்பாகத் தமிழகத்தில், அதிலும் நாமக்கல் பகுதியில் அதிக அளவில் எய்ட்ஸ் நோயாளிகள் காணப்படுகிறார்கள். இவர்களுக்குச் சமுதாய மக்கள் என்ன செய்கிறார்கள்? இதற்கு மருந்து என்ன? இந்நோய் தோன்றக் காரணம் என்ன? என்று பல கேள்விகளுக்கு விடையாகச் சிவசங்கரி தம் உரத்த சிந்தனை என்ற நூலில் விளக்கம் அளிக்கின்றார். அவர் எழுத்தாளர் என்பதால் கருத்துக்களை மட்டும் கொடுக்காமல். அதனால் பாதிக்கப்பட்ட மனிதர்களின் மன உணர்வுகளையுளம் பெற்றுச் சமுதாயத்தினரிடம் பகிர்ந்து கொள்கின்றார். அவர் அறிந்து கொண்டது வெளிநாடுகளில். ஆனால் அந்தப் பயங்கர நோய் இன்று இந்தியாவையும் ஆட்டிக் கொண்டுள்ளது.

வேண்டாத போதைப் பழக்கத்திற்கு அடிமையான ஓர் இளைஞன் எவ்வாறு எய்ட்ஸ் நோய்க்கு ஆளாகிறான் என்பதை அவன் வாயிலாகவே விளக்குகின்றார்.

**மைக்கேல்**

1986 ஆம் ஆண்டு சிவசங்கரி சந்தித்த இளைஞன் மைக்கேல். இன்று மைக்கேல் போல் ஆயிரக்கணக்கான மைக்கேல்கள் இந்தியா முழுவதும் பரவி இருக்கின்றார்கள். இது வேதனைக்குரிய செய்தியாகும் என்று வருத்தம் தெரிவிக்கின்றார்.

**போதை மருந்துப் பழக்கம்**

மைக்கேலுக்கு அப்போது வயது 27. அவன் தன்னுடைய இருபதாம் வயதில் 'கொக்கெய்ன்' என்ற கொடிய போதை மருந்துக்கு அடிமையானான். மூக்குப் பொடி போடுவது போல ஆரம்பித்து, பின் நண்பன் ஒருவனின் உற்சாகத் தூண்டுதலால் ஊசி மூலம் மருந்தை உள்ளே செலுத்திக் கொள்ளும் நிலைக்குத் தள்ளப்பட்டான். அவன் ஒவ்வொரு நாளும் உபயோகித்த ஊசிகளின் எண்ணிக்கை அதிகமானது. பணத் தேவையும் அதிகரிக்க மைக்கேல் வேறு எதையும் எண்ணிப் பார்க்காமல் செயல்பட ஆரம்பித்தான். வசதியான பெற்றோர், அளவுக்கு மீறிய சுதந்திரம். அதனை, அவன் தவறாகப் பயன்படுத்திக் கொண்டான். விளைவு கல்லூரிப் படிப்பைப் பாதியில் நிறுத்திவிட்டு, போதைக்கு அடிமையானான். இரண்டு நண்பர்களுடன் சேர்ந்து ஊர் சுற்றித் திரியத் தொடங்கினான்.

**பாதிக்கப்பட்ட மைக்கேல் தன்னைப் பற்றிக் கூறுதல்**

அந்த ஒன்னரை ஆண்டுகளும், நான் செய்யாத காரியங்கள் இல்லை பன்றியை விடக் கேவலமாக அசுத்த வாழ்க்கை வாழ்ந்தேன். "ஊசிகளைப் புதுசாய் வாங்கப் பணம் செலவழிக்க மனசு வராது. அந்தக் காசு இருந்தால் இன்னும் கொஞ்சம் மருந்து வாங்கலாம். வெந்நீரில் கொதிக்க வைத்துப் பயன்படுத்தப் பொறுமை இல்லை. மருந்து ஏற்றிக் கொள்ளும் நேரம் வந்தால், சுற்றம், சூழல் எல்லாம் மறந்துவிடும். சுத்தம், அசுத்தம் எதுவும் தோன்றாது. ஒரே ஊசியை யார் யாரோ உபயோகித்தோம். கழுவுதல் கூடக் கிடையாது. இப்படி அசுத்தமாக வாழ்ந்ததால் வியாதியும் வந்து தொற்றிக் கொண்டது. எய்ட்ஸ் நோய் என்னைப் பீடித்து விட்டது என்பதை அறிந்த போது மிகவும் அடிபட்டுப் போனேன். அதற்குச் சிகிச்சையே கிடையாது, மருந்தும் இல்லை என்று டாக்டர் கூறியபோது கோழையைப் போல் நான்கு நாட்கள் தொடர்ந்து அழுதேன். பின், மனத்தைத் தேற்றி, சரி வந்தது வந்துவிட்டது. இனி இருக்கப் போகும் நாட்களையாவது

அர்த்தமுள்ளதாகச் செலவழிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் ஒரு புனர் வாழ்வு மையத்தில் (*'Bridge over trabled waters'*) சேர்ந்தேன். நிர்வாகிகளின் ஒத்துழைப்புடன் சிகிச்சைக்கு வருகின்ற போதை மருந்து அடிமைகளிடம் என் கதையை மனம் திறந்து கூறி 'என்நிலை உங்களுக்கு வருவதற்குள் மீண்டு விடுங்கள்"[31] என்று வழிகாட்டிவிட்டு ஒருநாள் மடிந்து போனான்.

மைக்கேலின் கதை பலருக்கு விழிப்புணர்வைத் தர உதவுகிறது என்ற நிர்வாகியின் கூற்றை ஏற்றுக் கொண்ட சிவசங்கரி சொல்லுகின்றார். 'கண் கெட்டபின் சூர்ய நமஸ்காரம்' செய்வது முறையாகுமா? என்று. அதனால் இந்திய மக்களுக்கு, குறிப்பாகத் தமிழக மக்களுக்கு வருமுன் காக்க வேண்டிய கட்டாயத்தை வலியுறுத்துகிறார். உரத்த சிந்தனையில், எய்ட்ஸ் பற்றிய செய்திகளைப் புள்ளி விவரத்துடன் வழங்கியுள்ளார்.

**எய்ட்ஸ் நோயாளியும் அவரது குடும்பமும்**

கரோல்-ஜெரால்ட் இருவரும் காதலித்துத் திருமணம் செய்து கொண்டவர்கள். அவர்களுக்கு நான்கு குழந்தைகள். ஜெரால்ட் பிறவிக் குறைபாடு உடையவனாக, ஓரினச் சேர்க்கைக் குணம் கொண்டிருந்தான். ஆனால் கரோல் திருமணம் செய்து ஆறு ஆண்டுகள் வரை இந்த உண்மை தெரியாது இருந்துள்ளாள். தெரிந்தபோது அவனைவிட்டுப் பிரியமனமில்லாமல், அவன் மீது கொண்ட காதலினாலும், குழந்தைகள் நலன் கருதியும் அவனோடு தொடர்ந்து வாழ்ந்து வந்தாள்.

**உற்றாரும், ஊராரும் விலகுதல்**

ஜெரால்ட்க்கு எய்ட்ஸ் நோய் என்பதை அறிந்த நண்பர்கள் உறவினர்கள் அனைவரும் ஒதுங்கிக் கொண்டனர். ஜெரால்டு குடும்பத்தினரிடம் கொண்ட உறவை நீக்கிக் கொண்டனர். அதனைக் கரோல், "அந்த நாட்கள் மிகவும் சிரமமாகவும், வேதனையாகவும் இருந்தன" என்றாள். ஆனால் அத்தனை எதிர்ப்பையும் ஏற்றுக் கொண்டு

என் கணவரோடு நான் வாழ்ந்ததை நினைத்துப் பார்த்தால் இப்போது எனக்கு நிறைவாக இருக்கிறது"[32] என்றார்.

**குழந்தைகள்**

அவனை வெறுத்து ஒதுக்காமல் அவன் மீது அன்பும் மரியாதையும் கொண்டு கடைசி வரை காத்தனர். ஆனால் ஜெரால்டு இறந்து விட்டான்.

**கரோலின் வேண்டுகோள்**

இந்நோய் தொற்றியவர்களை மக்கள் வெறுத்து ஒதுக்காமல் மனிதாபிமானத்துடன் நடந்து கொள்ள வேண்டும் என்கிறாள். நோயாளிகள், தனக்கு நோய் வந்திருப்பதை அறிந்த பின் கவனமாக, அது மற்றவர்களுக்குப் பரவிவிடாத வகையில் நடந்து சமுதாயத்தைக் காக்க உறுதி கொள்ள வேண்டும் என்கிறாள் கரோல்.

**'உலக சுகாதார அமைப்பு' – தெரிவிக்கும் செய்தி**

எய்ட்ஸ் ஒரு ஆட்கொல்லி நோய் (Killer disease) இந்நோயால் ஆப்பிரிக்காவில் ஒரு முழு கிராமமே அழிக்கப்பட்டிருக்கிறது. இந்தியா உள்பட 162 நாடுகளில் சுமார் எட்டுக் கோடிக்கும் அதிகமான மக்கள் இந்தக் கொடிய நோய் தாக்குதலுக்கு ஆட்பட்டுள்ளனர் என்று உலக சுகாதார அமைப்புத் தெரிவிக்கிறது.[33]

இந்நோய்க்கு இன்று வரை சரியான மருந்து கண்டு பிடிக்கப்படவில்லை. அரசோடு இணைந்து தனிநபர்களும் முழுமூச்சுடன் செயல்பட்டு வருமுன் காக்கப்பாடுபடவேண்டியது அவசியம்.

**எய்ட்ஸ் – ஹெச்ஐவி கிருமியும் அதன் செயலும்**

அக்வயர்ட் இம்யுனோ டிஃபிஷியன்ஸி ஸிண்ட்ரோம் (Acquirred Immuno Deficiency Syndrome) என்பதன் சுருக்கம் AIDS என்பதாகும். இதனைச் சிவசங்கரி மொழி பெயர்க்கையில் 'வாங்கிக் கொள்ளப்பட்ட தற்காப்புக் குறை' என்பார்.

'வாங்கிக் கொள்ளப்பட்ட தற்காப்புக் குறை' என்பது, மனித உடம்பில் உள்ள ரத்தத்தில் சிவப்பு அணுக்கள், வெள்ளை அணுக்கள் என்று இரண்டு வகை செல்கள் உள்ளன. அவற்றில் வெள்ளை அணுக்களில் *(T4, Killer cells)* டீஃபோர், கில்லர் (கொலையாளி) செல்கள் என இரண்டு பிரிவு உண்டு. இந்த இரண்டும் மனித உடலை ஒரு உளவுத்துறையாகவும், பாதுகாப்புத்துறையாகவும் இருந்து கவனித்துக் கொள்கிறது.

**செயல்பாடு**

உடலுக்கு வெளியிலிருந்து ரத்தத்தின் வாயிலாகக் கிருமிகள் உள்ளே நுழையும் போது டீஃபோர் *($T_4$)* செல்கள் அதனை உணர்ந்து, உடனடியாய் ஒரு ஒலியை (அலாரத்தை) ஒலித்து, கிருமிகளை அழிக்கும் *(Killer Cell)* கொலையாளி செல்களுக்கு எச்சரிக்கை அனுப்புகிறது. உடனே கொலையாளி செல்கள் ஆன்டிபாடீஸ் என்று சொல்லப்படும் கிருமிகளை எதிர்க்கும் செல்களை (சிப்பாய்களை) உற்பத்தி செய்கிறது, அவை உடனே இரத்தத்தில் புகுந்துள்ள கிருமிகளுடன் போரிட்டு அவற்றை அழித்துவிடும். இதற்குத் தற்காப்புச் சக்தி என்று பெயர். இந்தச் சக்தி மனிதனுக்கு இயற்கையாகவே இருப்பதால் தான் மனிதன் ஆரோக்கியமாக வாழ்ந்து வருகிறான்.

**ஹெச்.ஐ.வி என்பது**

*HIV - (Human Immuno Deficiency Virus)* மனிதனின் எதிர்ப்பு சக்தியைக் குறைக்கும் ஹெச்.ஐ.வி கிருமியைச் சுற்றி ஒருவித சர்க்கரை போன்ற பூச்சு இருப்பதால் இரத்தத்துடன் அவை கலந்தவுடன் சாதுரியமாக டீஃபோர் செல்களுக்குள் புகுந்து உறுதியாக உட்கார்ந்து கொண்டு $T_4$ செல்களின் வேலையான எச்சரிக்கை மணி ஒலிப்பதைச் செய்யவிடாமல் தடுத்துவிடுகின்றன. அதனால் சக்தி இழந்துவிடுகிறது $T_4$ செல் இதனால் கொலையாளி செல்கள் ஆன்டிபாடீஸ் எனப்படும் சிப்பாய்களை உற்பத்தி செய்ய இயலாமல் போய்விடுகின்றது. அதனால் உடலில் பலவகையான தொற்றுக்கள் கிருமிகள், மனித உடலில் நுழைய எதிர்ப்பு

இல்லாமல் கிருமிகளின் ஆதிக்கம் மனிதனைக் கடுமையாகத் தாக்கி பலம் இழக்கச் செய்துவிடுகிறது. அதனால் மனிதன் பல நோய்களால் தாக்கப்படுகிறான். எய்ட்ஸ் அதனால் இறப்பு என்று இல்லாமல் ஹெச்.ஐ.வி கிருமி பாதிக்கப்பட்ட மனிதன், தன்னுடைய எதிர்ப்புச் சக்தியை இழந்துவிடுகிறான், அதனால் பலவகையான நோய்கள் தோன்றி அந்நோய்களால் இறந்துவிடுகிறான்.

**ஹெச்.ஐ.வி.யின் செயல்**

ஹெச்.ஐ.வி. கிருமிகள் உடலில் புகுந்து 6 மாதத்திலிருந்து 10 ஆண்டுகள் வரை எப்போது வேண்டுமானாலும் எய்ட்ஸ் நோயாக மாறலாம். சிலருக்கு அறிகுறிகள் தோன்றலாம். சிலருக்கு அறிகுறிகள் வெளிப்படையாகத் தெரியாமலேயே இருக்கலாம். பலர் எய்ட்ஸ் நிலையை அடையாவிடினும் ஹெச்.ஐ.வி. கிருமிகளை அமைதியாக உடலில் தாங்கி, அடுத்தவர்களுக்குக் கடத்துபவர்களாகவும் வாழ்வர். ரத்தத்தைப் பரிசோதிப்பது ஒன்றுதான் ஹெச்ஐவி எய்ட்ஸ் ஒருவருக்கு இருப்பதை உறுதிபடுத்தும்.

**எய்ட்ஸ் வரலாறு**

1981-இல் ஓரினச் சேர்க்கைப் பழக்கம் கொண்டவர்களிடம், தற்காப்பு குறைவு என்று அமெரிக்காவில் மருத்துவர்களின் கவனத்திற்கு வந்தது.

1984-இல் ஹெச்ஐவி கிருமிகளும், எய்ட்ஸ் நோயும் முதன் முதலாய்க் கண்டுபிடிக்கப்பட்டன.

1986-இல் இந்தியாவில் முதல் நோயாளி சென்னையில் ஒரு விலைமாது.

1987-இல் முதல் எய்ட்ஸ் நோயால் இறப்பு பம்பாயில் ஒரு விலைமாது மட்டும்.

1990-இல் எய்ட்ஸ் நோயால் இறந்தவர் எண்ணிக்கை மொத்தம் 44 கணக்கில் வராதவையும் உண்டு.

**எய்ட்ஸ் பற்றிய செய்திகள்**

உலக சுகாதார நிறுவனம் 1991-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் எடுத்த கணக்கின்படி தற்போது 162 நாடுகளில் 8 முதல் 10 கோடி மனிதர்கள் ஹெச்ஐவி என்கிற கொடிய கிருமிகளால் தாக்கப்பட்டுள்ளனர்.

நோய் முற்றிய நிலையில் - 15 இலட்சம் பேர்

2000-ஆம் ஆண்டில் ஹெச்ஐவி தாக்குதல் 40 கோடி

| | |
|---|---|
| எய்ட்ஸ் நோயாளி | - 1 கோடி |
| இந்தியாவில் | - 1,24,995 பேர் |
| தமிழகத்தில் | - 57,000 பேருக்கு எய்ட்ஸ் நோய் தாக்கியுள்ளது. |

நோய்பாதிக்கப்பட்டவர்களில் 15-24 வயது வாலிபர்கள் 50% பேர் ஆவர்.

**ஜம்மு–காஷ்மீரில்**

காஷ்மீர் மாநிலத்தில் எய்ட்ஸ் நோயால் பாதிக்கப்படுவோரின் எண்ணிக்கை கடந்த ஆண்டைவிட 3 மடங்கு அதிகரித்துள்ளது. ஜம்மு-வில் இதுவரை 931பேர் எய்ட்ஸ் நோயால் பாதிக்கப்பட்டுள்ளனர் என்று நல்வாழ்வுத்துறை அமைச்ச வட்டாரங்கள் தெரிவித்துள்ளனர்.

| | |
|---|---|
| 2004 ஆம் ஆண்டில் | - 550 |
| 2005 ஆம் ஆண்டில் | - 832 |
| 2006 ஆம் ஆண்டில் | - 931 |

931 பேரில் 65% நோய் முற்றிய நிலையில் உள்ளனர். இதுவரை 38 பேர் நோயால் இறந்துள்ளனர். ஜம்மு-காஷ்மீர் எய்ட்ஸ் நோய் தடுப்பு மற்றும் கட்டுப்பாட்டு நிறுவனம் நடத்திய ஆய்வில் எய்ட்ஸ் நோயாளிகள் 80% பேர் 25லிருந்து40 வயதினர்.

## எய்ட்ஸ் எவ்வாறு பரவுகிறது?

1. ஒருவர், விலைமாது போன்றவருடன் உறவு கொள்ளுதல், பல பெண்களுடன் ஒருவர்கொள்ளும் தொடர்பால் ஏற்படுவது. ஓரினச்சேர்க்கையினாலும் இந்நோய் ஏற்பட வாய்ப்புள்ளது.
2. ஹெச்ஐவி கிருமி இருக்கும் இரத்தம் அறியப்படாமல் சாதாரண நோய் உடையவருக்கு, ரத்தத்தின் தேவை காரணமாக ஏற்றப்படுவது.
3. ஒருவருக்கு செலுத்திய ஊசி மற்றவருக்கு, சுத்தம் செய்யப்படாமல் பயன்படுத்தப்படுதல்
4. கருவுற்றதாய் ஹெச்ஐவி நோயால் தாக்கப்பட்டால் குழந்தைக்கும் அது பரவிவிடும் நிலை.

## எவற்றால் எய்ட்ஸ் பரவுவதில்லை

1. தொடுதலினால் எய்ட்ஸ் வராது.
2. ஒன்றாகச் சேர்ந்து விளையாடும் போது குழந்தைகளுக்கோ, பெரியவருக்கோ வராது.
3. குடும்பத்தாருடன் சேர்ந்து வாழும் நிலையிலும் நோய் பரவாது.
4. காற்றின் மூலம் பரவாது.
5. தண்ணீரினாலும் பரவமுடியாது.
6. குளியல்அறை, கழிவறைகள் மூலமும் பரவ முடியாது.
7. சாப்பாட்டின் மூலமும் பரவாது.

## ஹெச்.ஐ.வி–எய்ட்ஸ் யாரைத் தாக்கும்?

பாதுகாப்பு இல்லாத அனைவரையும் தாக்கும், விலைமாது, போதை மருந்து ஊசியின் மூலம் பயன்படுத்துபவர், பணத்திற்கு இரத்ததானம் செய்பவர், தவறான உடல்உறவில் நாட்டம் கொண்டவர் போன்றோரின் தீய வழிகளால் தான் அவை தாக்கும். அரசு அதனால்தான் பொது மக்களின் எச்சரிக்கைக்காகப் ‘புள்ளி ராஜாவுக்கு’

எய்ட்ஸ் வருமா? என்ற கேள்வியைத் தொலைக்காட்சியில், சுவர் ஒட்டிகள் மூலமாக விளம்பரம் செய்தார்கள். யாருக்கு வேண்டுமானாலும் எய்ட்ஸ் வரலாம். பாதுகாப்புநிலை இல்லாதவரையில் என்ற விழிப்புணர்வை உண்டாக்கினார்கள்.

**எய்ட்ஸ்க்கு மருந்து**

இன்றுவரை உறுதியாகக் கண்டுபிடிக்கவில்லை. ஹெச்ஐவி கிருமி தொற்றிக் கொண்டவர் தற்காப்புச் சக்தியை முழுமையாக இழந்துவிடுகிறார். உடம்பின் உறுப்புகள் பலவிதமான நோய்க் கிருமிகள் தாக்கப்பட்டு இறப்பது உறுதியாகிறது. இதற்கு வருமுன் காப்பது ஒன்றே மருந்தாகும். மனிதன் எச்சரிக்கை உணர்வுடன் இருப்பது நல்லது.

**எய்ட்ஸ் பரவாமல் இருக்கத் தனிமனிதனின் தற்காப்பு**

எய்ட்ஸ் பற்றிப் பொது மக்களுக்குத் தொலைக்காட்சி, சினிமா, பத்திரிக்கை, கூட்டங்கள் அமைத்து கூறுவது. பள்ளிப் பாடங்கள் மூலம் விழிப்புணர்வை ஏற்படுத்துதல் முறையான செயல் ஆகும்.

1. ஒருவனுக்கு ஒருத்தி என்கின்ற இந்தியப் பண்பாட்டைக் கடைப்பிடித்தல்.
2. உடலுறவில் ஆண்உறை அணிதல்
3. ஹெச்ஐவி கிருமிதாக்கப்பட்ட பெண் கருத்தரித்தல் கூடாது
4. ஊசிமூலம் ஏற்றப்படும் மருந்து ஒருமுறை உபயோகித்து எறியப்படும் ஊசியையே பயன்படுத்துதல் நல்லது.

இக்கிருமி தாக்கப்பட்டவர் உடனடியாகச் சிகிச்சைக்குச் செல்லுதல் இன்றியமையாததாகும்.

இந்நோய் எச்சில் மூலம் பரவாது என்றாலும் வாயில்புண் இருந்தால் அதன் மூலம் கிருமி வெளிப்படும். பிறப்பு உறுப்புகளில் புண் இருந்து அதன் வழியாக, விந்து, இதர சுரப்பு இரத்தத்துடன் கலப்பதாலும் எய்ட்ஸ் நோய் வரவாய்ப்புண்டு.[34]

**அரசு நடவடிக்கைகள் – எய்ட்ஸ் நோயாளிகள் மீது பாரபட்சம் தடுக்கச் சட்டம்**

எய்ட்ஸ் நோயாளிகளிடத்து, பாரபட்சம் காட்டுவதைத் தடுக்கச் சட்டம் கொண்டுவரும்படி நாடாளுமன்ற உறுப்பினர்களைக் (எம்.பி.க்கள்) குடியரசுத் தலைவர் அப்துல் கலாம் கேட்டுக்கொண்டார்.

உலக எய்ட்ஸ் தினத்தை முன்னிட்டுக் குடியரசுத் தலைவர் கலாம் நாடாளுமன்ற உறுப்பினர்கள் கூட்டத்தில் பேசியவை:

"அன்றாட வாழ்க்கையில் எய்ட்ஸ் நோயாளிகள் மீது பாரபட்சம் காட்டப்படுகிறது. இது குறித்து நாடாளுமன்ற உறுப்பினர்கள் கூடிச் சட்டம் இயற்றுதல் பற்றி விவாதிக்க வேண்டும். இதுதொடர்பான சட்ட முன் வடிவை மத்திய சுகாதாரம் மற்றும் குடும்பநல அமைச்சகம் தயாரித்து வருகிறது. ஆறு மாதத்தில் இந்தச் சட்டம் அமலுக்கு வரும் வகையில் எம்.பிக்கள் உரிய நடவடிக்கை எடுக்கவேண்டும்"[35] என்றார்.

எய்ட்ஸ் என்றாலே முகம் சுளித்து அந்த நோயாளிகள் மீது காட்டப்படும் பாரபட்சப் போக்கைக் குறிப்பிட்ட காலவரம்புக்குள் அகற்றத் தன்னார்வ அமைப்புகள், உள்ளாட்சி அமைப்புகள், பஞ்சாயத்து உறுப்பினர்களுடன் இணைந்து எம்பிக்கள் இயக்கம் ஒன்றையும் தொடங்க வேண்டும் என்றார் குடியரசுத் தலைவர் அப்துல் கலாம்.

**சேவைபுரிபவர்களுக்கு விருது வழங்குதல்**

**எச்ஐவி கர்ப்பிணிப் பெண்களுக்குச் சேவை செய்த கோவைப் பெண்ணுக்கு விருது**

எய்ட்ஸ் தாக்கிய கர்ப்பிணிப் பெண்களுக்கு, 4 ஆண்டுகளாக விழிப்புணர்வை ஏற்படுத்தி வரும் கோவையைச் சேர்ந்த ஆர்.மீனாட்சி(31) தமிழக அரசு விருதுக்குத் தேர்வு செய்யப் பட்டுள்ளார்.

உலக எய்ட்ஸ் தினத்தை (1-12-06) முன்னிட்டு மீனாட்சி என்பவர் இந்நோய்க்கு எதிராக மக்கள் தொடர்புச் சாதனங்களைப் பயன்படுத்தி விழிப்புணர்வை உண்டாக்கி வருகிறார்.

கோவை அரசு மருத்துவக் கல்லூரி மருத்துவமனை மகப்பேறு பிரிவில், எய்ட்ஸ் தாக்கிய பெற்றோரிடம் இருந்து குழந்தைகளுக்கு நோய் பரவாமல் தடுக்கும் திட்டம் இயங்குகிறது. இத்திட்டத்தின் கீழ் ஆற்றுனராக (கவுன்சிலர்) மீனாட்சி பணியாற்றி வருகிறார்.

இதுவரை 20 ஆயிரம் பேருக்கு ஆலோசனை வழங்கியுள்ளார். எய்ட்ஸ் தாக்கிய தாய்மார்கள் மேம்பாடு என்ற தன்னார்வ அமைப்பின் தலைவராக உள்ள மீனாட்சி, அதன் மூலம் எய்ட்ஸ் தாக்கிய 220 பெண்களுக்கு ஆதரவளித்து வருகிறார்.

இவர் தம் கணவர் மூலமாக எய்ட்ஸ் தாக்குதலுக்கு ஆளானவர். அதனால் கடந்த 4 ஆண்டுகளாக இத்துறையில் தீவிரமாகப் பணியாற்றி வருகிறார். கணவரை இழந்த இவர் தம் தாய் இரு அண்ணன், அண்ணிகள் மற்றும் 7 வயது மகளுடன் வாழ்ந்து வருகிறார். "தன் குடும்பத்தார் கொடுத்து வரும் ஆதரவால் இது போன்ற சேவையைச் செய்ய முடிந்தது. எய்ட்ஸ்தாக்கியோரை ஒதுக்கி விடாமல், உறவினர்களும் சமுதாயமும் காக்க வேண்டும் என்றார் மீனாட்சி.[36]

**போதை ஊசிப் பழக்கத்துக்கு அடிமையாகும் சென்னை இளைஞர்கள்**

வடக்கு மற்றும் வடகிழக்கு மாநிலங்களுக்கு அடுத்தபடியாக, சென்னையில் உள்ள இளைஞர்களிடையே போதை ஊசி பயன்படுத்தும் பழக்கம் அதிகரித்துள்ளது.

இந்தியாவில் 60 கோடி இளைஞர்கள் உள்ளனர். இவர்களில் மணிப்பூர், மிசோரம் போன்ற வடகிழக்கு மாநிலங்களைச் சேர்ந்த இளைஞர்களிடம் போதை ஊசி பயன்படுத்தும் பழக்கம் அதிகமாக உள்ளது.

சென்னையின் வடகிழக்குப் பகுதியில் உள்ள படித்த இளைஞர்கள் இந்தப் பழக்கத்துக்கு அடிமையாகி வருகின்றனர்.

அத்தகைய இளைஞர்களிடையே விழிப்புணர்வை இயக்கமாக நடத்த மத்திய மாநில அரசுகள் முயற்சிகள் மேற்கொண்டு வருகின்றன.

புதிய சட்டம் கொண்டுவருதல், செக்ஸ் பற்றிப் பேசுதல் வேண்டும் என்றார். காசுபோட்டால் ஆணுறை கிடைக்கும் இயந்திரங்கள் இந்தியாவில் *11,000* இடங்களில் அடுத்த ஆண்டு இறுதிக்கு நிறுவப்படும். ஏற்கனவே *12,000* இடங்களில் இந்த இயந்திரம் அமைக்கப்பட்டுள்ளது.

**ரெட் ரிப்பன் குழுக்கள்**

"எச்.ஐ.வி மற்றும் எய்ட்ஸ் குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்தக் கல்வி நிலையங்களில் ரெட்ரிப்பன் குழுக்கள் அமைக்கப்பட்டன. இவைகளுக்கு நல்ல வரவேற்பு கிடைத்து வருகிறது. உடல் கட்டுப்பாடு, யோகா, எச்ஐவி குறித்த விழிப்புணர்வுக் கல்வியைப் பள்ளிகளில் பரப்புவதே ரெட் ரிப்பன் குழுக்களின் பணியாகும். அதனைச் செய்ய வேண்டும் என்றார் அன்புமணி."[37]

**'பாலியல்' கல்வியின் தேவை**

மனிதன் தோன்றிய நாள் முதலே பலவகையான ஆய்வுகளை மேற்கொண்டே வளர்ந்து வந்துள்ளான். மனிதனின் அனுபவ நிலையில் வளர்க்கப்பட்ட முதல் 'அறிவியல் துறை பாலியல் துறை' என்பார் டாக்டர் டி.காமராஜ். காமம் ஓர் உணர்வு ஆகும். அதை முறையாகப் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகள் அந்தக் காலத்திலேயே விளக்கப்பட்டுள்ளன.

**பாலியல் – வாழ்க்கைக்கலையே**

பாலியல் என்பது வாழ்க்கைக் கலையே. அது ஆபாசமன்று. அதை முறையாக அறிந்து நீண்ட இன்பத்துடன் வாழ வேண்டும் என்பதை உலகிற்கு உணர்த்தியவர்கள் இந்தியர்கள் அவர்களுள்ளும் தமிழர்கள். அதனால்தான் தமிழகக் கோயில்களில் சிற்பங்கள், சித்திரங்களில் பாலுணர்வுக் காட்சிகளை வரைந்தும், செதுக்கியும் வைத்தனர்.

**சின்னமாக**

ஆண், பெண் பாலுறவு இணைப்பைத் தெய்வச் சின்னமாகவும் அமைத்து வழிபட்டனர். 'சிவலிங்கம்' வடிவம் ஆண், பெண் குறி இணைப்பு என்று கருதப்படுகிறது.

**சிற்பங்கள்**

பாலியல் அறிவுக்காக கஜுராகோ சிற்பங்கள் உருவாக்கப்பட்டன.

**நூல்கள்**

"கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றுஅறியும் ஐம்புலனும்
ஒண்தொடி கண்ணே உள."[38]

எனத் திருவள்ளுவர் திருக்குறளின் காமத்துப்பாலில் பார்த்தல், கேட்டல், உணர்தல், நுகர்தல், முகர்தல் என்ற ஐம்புலன்களால் அறியப்படும் தன்மை பெண்ணிடத்து உள்ளது என்பார். முனிவர்களும், ரிஷிகளும் காமம் என்பது உள்ளுணர்விலிருந்து எழுவது, அதை அடக்க முடியாது, அதனால் காமத்தை முறையாகப் பயிற்சி செய்வதன் மூலம் ஆணுக்கும் பெண்ணுக்கும் உரிய அளவிலான இன்பம் கிட்டும் என்பர்.

**வாத்சாயனர் (கி.பி 300 முதல் 400)**

வாத்சாயனர் காமசூத்ரா என்ற நூலை எழுதியவர். இதில் அறிவியல் பூர்வமாகவும், தைரியமாகவும் பாலியல் சார்ந்த தகவல்கள் விவரிக்கப்பட்டுள்ளதாகக் குறிப்பார் டாக்டர் டி.காமராஜ். காமம் என்பது கேட்டல், பார்த்தல், உணர்தல், நுகர்தல், முகர்தல் என்ற ஐம்புலன்களால் மட்டுமன்றி மனமும் ஆத்மாவும் சேர்ந்து தோன்றுவது என வாத்சாயனர் குறிக்கின்றார் என்று கூறியுள்ளார்.

**பிறநூல்கள்**

கொக்கோகர் - ரதி ரஷ்யா என்ற நூலைத் தொகுத்துள்ளார். இவர்காலம் (கி.பி 1000 முதல் 1200). இந்நூலில் பாலியல் செய்திகள்

பல நிலைகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. பத்மஸ்ரீ (கி.பி 1000) இவர் ஒரு பௌத்தத் துறவி. "நகர சர்வஸ்வம்" என்ற நூலில் பாலுறவு குறிப்புச் செய்கைகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

**ஜ்யோத்ரீஷா அல்லது கவிசேகரா (கி.பி. 1300)**

இவர் பஞ்சயாகா என்ற நூலை எழுதியுள்ளார். பாலுணர்வைத் தூண்டும் அழகு சாதனப் பொருள்கள், வாசனைப் பொருள்களைப் பற்றி நிறைய எழுதியிருக்கிறார். மாதவிலக்கு, கருத்தரிப்பு மற்றும் மலட்டுத் தன்மை பற்றியும் குறிப்பிட்டுள்ளார்.

**கல்யாணமல்லா (கி.பி. 1600)**

இவர் தம்முடைய அரசரை மகிழ்விப்பதற்காக அனங்கரங்கா என்ற நூலை எழுதினார். இதில் தாம்பத்ய உறவை வெற்றிகரமாக நடத்துவது பற்றி இந்நூலில் அவர் எழுதியிருக்கிறார். [36]

**பாலியல் கல்வியின் அவசியம்**

மனித வாழ்வின் மைய உணர்வான பாலுணர்வால் ஆண், பெண் இருவரும் பிணைக்கப்பட்டால் குடும்பத்தில் விவாகரத்து, முறையற்ற உறவுகள் மற்றும் சமூகச் சீர்கேடுகள் தோன்றாமல் தடுக்க முடியும். அதற்குப் பாலியல் கல்வி தேவையாகிறது.

**எய்ட்ஸ் – முக்கூட்டு மருந்தின் மகத்துவம்**

2000 - ஆம் ஆண்டு தென்னாப்பிரிக்கா டர்பனில் நடைபெற்ற உலக எய்ட்ஸ் மாநாட்டில் எய்ட்ஸ் நோயைக் கட்டுப்படுத்துவதில் ரசகந்தி மெழுகு, அமுக்கரா, நெல்லிக்காய் லேகியம் ஆகிய முக்கூட்டு மருந்தின் ஆற்றல் ஆய்வறிக்கையாகச் சமர்ப்பிக்கப்பட்டது. இந்த ஆய்வறிக்கையைத் தாம்பரம் அரசு நெஞ்சக நோய் மருந்துவமனையின் அப்போதைய கண்காணிப்பாளர் டாக்டர் செ.நெ.தெய்வநாயகம் சமர்ப்பித்தார்.

### முக்கூட்டு மருந்து

ரசகந்தி மெழுகு (கேப்ஸ்யூல்), அமுக்கரா சூரணம் (தூள்), நெல்லிக்காய் லேகியம் ஆகிய எய்ட்ஸ் நோய்க்கான முக்கூட்டு மருந்தில் 40க்கும் மேற்பட்ட மூலிகைகள் அடங்கியுள்ளன. ரசகந்தி மெழுகு கேப்ஸ்யூலில் மட்டும் சேராங்கொட்டை, பரங்கிப்பட்டை உள்ளிட்ட 38 மூலிகைகளும் தாதுப் பொருள்களும் உள்ளன. அமுக்கரா சூரணத்தில் சுக்கு, மிளகு, திப்பிலி, ஏலம், கிராம்பு, சிறுநாசப்பூ உள்ளிட்ட மூலிகைகள் உள்ளன. ஔவைக்கு அதியமான் கொடுத்த நெல்லிக் கனியின் மருத்துவக் குணம் உயிர்காக்கும் தன்மை யுடையதாகும்.

### எய்ட்ஸ் நோயாளிகளுக்கு உதவும் அமுக்கரா

எய்ட்ஸ் நோய்க்கான எச்ஐவி வைரஸ் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் சித்த மருந்தான அமுக்கராவுக்கு (அஸ்வகந்தா) உள்ளது என்பது ஆந்திர விஜயவாடா அரசு ஆயுர்வேத மருத்துவக் கல்லூரியில் மீண்டும் நிரூபணமாகியுள்ளது.

அஸ்வகந்தா என்பது செடி. அதில் விளையும் மருத்துவப் பொருள்தான் அமுக்கரா கிழங்கு, அஸ்வகந்தாவுடன் சீந்தில் உள்ளிட்ட சித்த மருந்துகளைச் சேர்த்து எய்ட்ஸ் நோயால் பாதிக்கப்பட்டோருக்குக் கொடுத்து ஆய்வு செய்துள்ளார் விஜயவாடா நோரி ராம சாஸ்திரி அரசு ஆயுர்வேத மருத்துவக் கல்லூரி பேராசிரியர் திரவியகுணா.

இம்மருந்துகளில் எய்ட்ஸ் நோயால் பாதிக்கப்பட்டோருக்கு டீ4 ($T_4$) அணுக்களின் (நோய் எதிர்ப்பு தரும் ரத்த வெள்ளை அணுக்களின் உட் பிரிவு) எண்ணிக்கை அதிகரித்தது. ரத்தத்தில் எச்ஐவி நோய்க் கிருமிகளின் எண்ணிக்கையும் குறைவது நிரூபணமாகியுள்ளது. அதனால் எய்ட்ஸ் நோயாளிகளின் வாழ்நாள் நீட்டிக்க சித்த மருத்துவம் உதவுகிறது.

**வருமுன் காப்பதே சிறந்தது**

எய்ட்ஸ் நோயைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் சித்த மருந்துகளுக்கு உள்ளது. எனினும் எய்ட்ஸ் நோயை முற்றிலும் குணப்படுத்த முடியாத நிலை நீடிக்கிறது. எனவே எய்ட்ஸ் நோய் வராமல் தடுத்துக் கொள்வதே சிறந்தது. [40]

மனக்கட்டுப்பாடும், ஒருவனுக்கு ஒருத்தி என்ற பாரம்பரியக் கட்டுப்பாடும் மனிதனை இந்நோயிலிருந்து காக்கும் நெறியாகும்.

**பெண்களும் இன்றைய சமுதாயமும்**

உலக வரலாற்றில் தொடக்க காலங்களில் பெண்கள் ஆண்களுக்கு நிகராகவே வாழ்ந்து வந்துள்ளனர். வேத, இதிகாச இலக்கியங்களிலும் பெண்கள் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கியுள்ளனர். இடைக்காலத்தில் தமிழகச் சூழல் அரசியலினால் பல மாற்றங்களைப் பெற்றது. பெண்கள் தனித்து இயங்க இயலாமல் ஆண்களைச் சார்ந்து வாழவேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டனர். பெண், தான் பிறந்தது முதல் தந்தையையும், திருமணத்திற்குப் பின் கணவனையும், கணவனுக்குப் பின் மகனையும் சார்ந்து வாழ வேண்டிய நிலையில் வைக்கப்பட்டாள். அக்காலச் சமுதாயக் கட்டமைப்பில் பெண்களுக்குக் கல்வி மறுக்கப்பட்டது. கணவன் இறந்தவுடன், பெண்ணும் உடன் கட்டை ஏறும் நிலை காணப்பட்டது. கைம்பெண்நிலை கடைப்பிடித்தல் வழக்கில் இருந்தது.

சுதந்திர காலகட்டங்களில் பெண்களும் போராட்டங்களில் களம் இறங்கினர். தங்கள் உரிமைகளை நிலைநாட்டப் பாடுபட்டனர். அச்சூழலில் பாரதியார் பெண்கள் சமுதாயத்தில் மதிக்கப்பட வேண்டும் எனத் தம் எழுத்துக்களில் பதித்துவைத்தார்.

பாரதியார் பெண்களை ஆண்களுக்கு நிகராகப் போற்றினார். புதுமைப் பெண்கள் எனப்பாடினார். பெண்விடுதலை குறித்துக் கவிதைகளும், கட்டுரைகளும் எழுதினார். கற்பு ஆண், பெண்

இருபாலருக்கும் உரியது என வலிந்து கூறினார். பெண்களைச் சக்தியாகப் போற்றி அவர்கள் வாழ வளர வழிசெய்தார்.

"சமூகம் என்பது இயற்கையில் ஒழுங்கின்றித் தோன்றி வளர்ந்த காடன்று; வரம்பு கோலியும் வரிசையமையத் திருத்தியும், ஒழுங்கு சமைய உருப்படுத்தியும், கால முறைப்படி கண்காணித்தும் பேணப்படுமோர் நன்னிலமாகும்"[41] என்பார் ஔவை நடராசன். அதனால் தனிமனிதன் ஒழுங்கு கட்டுப்பாட்டுடன் வாழ வழி செய்கிறது சமுதாயம்.

**இன்றைய சமுதாயநிலை**

கு.வெ.பாலசுப்பிரமணியன் இன்றைய சமுதாயத்தில் தனிமனிதனின் செயல்களில் நிலைதாழ்ந்துள்ளது என்பதை விளக்கும் போது,

"அறம் என்ற தகவை முதலாக வைத்து அதனடிப்படையில் ஏனைய எல்லாவற்றையும் இயக்கிக் கணித்த பண்டைத் தமிழ் மன்பதை தன் வண்ணத்தையும் வடிவத்தையும் இழந்து நிற்கிறது. கொடை, புகழ் என்ற பெயரில் விளம்பரத்தையும், நீதி என்ற பெயரில் சட்டத்தைத் தன் மனப் போக்கிற்கு வளைத்துக் கொள்ளும் தீய அறிவையும், இன்பம் என்ற பெயரில் புலன்களை மயக்குறுத்தும் நச்சுத் துறைகளை நாடும் மனப்பண்பையும், விருந்து என்ற பெயரில் கேளிக்கைக் களியாட்டங்களையும் தழுவிக்கிடக்கிறது இன்றைய சமுதாயம். இந்நிலையில் கொடைமடத்தையும் தொலை நோக்கையும், ஈத்துவக்கும் இன்பத்தையும், பசிப்பிணி மருத்துவத்தையும் தமக்கென முயலா நோன்தாளையும் பெயர் வேண்டாப் பெற்றிமையையும் எங்கு காண்பது? சமூகத்தில் அறத்தகவு புத்துயிர்ப்புப் பெறுதல் வேண்டும்"[42] என்று வருத்தத்துடன் தெரிவிக்கின்றார்.

மேற்கூறிய சமுதாய அறங்களை இழந்துள்ள தமிழகத்தில் பெண்கள் வரதட்சணை, சிசுக்கொலை, வறுமை என்று பல இன்னல்களைச் சந்தித்து வருகின்றனர். மேலும் தம்மையே

குடும்பத்திற்காக அர்ப்பணித்தும் வாழ்கின்றனர். அரசும் பெண்களைக் காக்கச் சட்டத்திட்டங்களை வகுத்தும், நடை முறைப்படுத்தியும் வருகிறது. ஆனால் மக்கள் தங்களின் வழக்கங்களை மாற்றிக் கொள்ளாத நிலையில், பெண்கள் தங்களின் துன்பங்களில் இருந்தும் விடுதலை அடைய முடியாத சூழலே நிலவி வருகிறது. மாற்றங்கள் வேண்டும்.

**பெண்களின் உடல்நலனில் சமுதாயக் கடமை**

அப்போலோ மருத்துவமனை பெண்களின் ஆரோக்கியத்தில் அக்கறை கொண்டு, அவர்களிடம் விழிப்புணர்வை உண்டாக்க ஒரு விளம்பரத்தைச் செய்தது.

**விளம்பரம்**

நாற்பது வயது நிரம்பிய பெண்களின் புகைப்படத்தோடு, 'அதிகச் செலவில்லாத பரிசோதனை' என்று (அப்போலோ வெல்வுமன் செக்அப்) நல்ல நிலையில் உள்ள பெண்களின் ஆரோக்கியம் கருதிப் பொதுப் பரிசோதனை செய்து கொள்ள வாருங்கள் என்று அறிவித்து அழைத்தது.

**அதன்நோக்கம்**

இன்று பலவிதமான நோய்கள் வெளியில் தெரியாமல் இருந்து பின் திடீரென வெளிப்பட்டுப் பாதிக்கப்பட்ட பெண்ணையும், அவரைச் சார்ந்த குடும்பத்தையும் அதிர்ச்சிக்கு உள்ளாக்குகிறது. அதனால் வருமுன் காத்தல் என்ற நோக்கில் விளம்பரம் செய்யப்பட்டது. இதில் இரத்தம், சிறுநீர், மார்பு, கர்ப்பப்பை போன்றவற்றை எக்ஸ்ரே எடுத்தும், சாப்பாடு குறித்த விழிப்புணர்வும், உடற்பயிற்சி குறித்த ஆலோசனைகளும் வழங்குவதாகத் திட்டம். பெண்களைச் சுலபமாகத் தாக்கக் கூடிய நோய்களை விவரித்தும் முக்கிய நாளிதழ்களில் வெளியிட்ட போதும் அதற்குப் பலன் குறைவாக இருந்தது.

**பரிசோதனைக்கு வந்தவர்கள்**

இந்த விளம்பரத்தைக் கண்டு எந்தப் பெண்ணும் அஞ்சி ஓடி வரவில்லை. அப்போது வந்தவர்கள் நாள் ஒன்றுக்கு அதிகபட்சம் 2 பெண்கள்.

**இரண்டாவது விளம்பரம்**

இதில் "நாற்பது வயது ஆண்களின்படம் அச்சிட்டு, உங்கள் கணவரின் இதயம் சரியாக இயங்குகிறதா? தேகப் பயிற்சி இல்லாமல் உணவு பழக்கவழக்கம் முறையின்றி, வேலைப்பளு அதிகரிக்கும் போது அது நேரடியாய் உங்கள் கணவரின் இதயத்தைத் தாக்கக் கூடும் என்பதை உணர்ந்திருக்கிறீர்களா? எங்களிடம் வாருங்கள் எளிமையான பரிசோதனை மூலம் உங்கள் கணவரின் உடல்நிலை என்ன என்பதைத் தெரிவிக்கின்றோம்" என்று எழுதி வெளியிட்டனர். அப்போது நாள் ஒன்றிற்குச் சுமார். 50க்கும் மேற்பட்ட பெண்கள் அவரவர் கணவர்களைப் பரிசோதனைக்கு அழைத்து வந்தனர். இதைக்கண்ட மருத்துவமனை எப்படியாவது பெண்களுக்கு இப்பரிசோதனை செய்விக்கப்பட வேண்டும் என்று மீண்டும் விளம்பர உத்தியை மாற்றி வெளியிட்டது.

**மூன்றாவது விளம்பரம்**

"தமிழ்நாட்டுப் பெண்களுக்கு இயற்கையாகத் தம்மைக் கவனித்துக் கொள்ளும் வழக்கம் இல்லை. புருஷன், குழந்தை, குட்டிகளைப் பராமரிக்க அவள் எடுத்துக் கொள்ளும் முயற்சிகளைத் தனக்கென்று வரும்போது மேற்கொள்வது இல்லை. அதனால் விளம்பரத்தையும் அதன் உத்திகளையும் மாற்றினார்கள்" என்பார். அப்போலோ மருத்துவமனைகளின் உதவி தலைவர் திருமதி. ரேகாஷெட்டி.

"கண்ணீர் கன்னத்தில் கோடுபோட்டுக் கொண்டு இறங்க, பரிதாபமாய்க் காட்சி அளிக்கும் ஒரு குழந்தையின் படத்தைப் போட்டு,

அம்மா எப்போது உடல்நலம் சரியாகி வருவாள்? என்று கேட்பது போன்ற விளம்பரம் செய்தோம். அத்துடன் உடல்நலம் குன்றினால் அதனால் பாதிக்கப்பட்டுத் திண்டாடும் போது நீங்கள் மட்டும் அல்ல. உங்கள் வீடு, குடும்பம், முக்கியமாய்க் குழந்தைகள், அதைநினைவில் வைத்துக் கொண்டு, உடனடியாய்ப் பரிசோதனைக்கு வாருங்கள் என்று விளம்பரம் செய்யப்பட்டபோது, ஐயோ நாம் படுத்துக் கொண்டால் குழந்தைகள் துன்பப்படுவார்களே என்கிற பயம் முதன்முதலாய்த் தோன்ற நாளொன்றுக்கு 20-25 பெண்கள் பரிசோதனைக்கு வந்தனர். இன்றும் வருகிறார்கள். அது நாங்கள் கொடுத்த விழிப்புணர்ச்சியால் தானே"[43] என்கிறார் துணைத்தலைவர் ரேகாஷெட்பி.

**கண் தானம் செய்த தாய்**

தமிழகத்தில் வாழும் கணவன், குழந்தைகள் நல்ல தாய்மார்களைப் பெற்றவர்கள். அவர்கள் தங்களின் தன்னலம் கருதாத் தாய்மையினால் தம்மையே தரவும் முன் வருகிறார்கள். தமிழகத்தில் ஒரு தாய்க்கு அடுத்தடுத்துப் பிறந்த ஆண் குழந்தைகளுக்கும் கண் பார்வை இல்லை என்பதற்காகத் தான் 'தற்கொலை' செய்துகொண்டு தன் கண்களைத் தன் மகன்களுக்குக் கொடுக்க எழுதி வைத்தாள். ஆனால் அதை முறையாகச் செய்யாததால் பலனின்றிப் போய்விட்டது. அந்த அளவிற்கு அவர்களின் தாய்மை நிலை மேலோங்கி நிற்கிறது. குடித்துவிட்டு வந்து அடிக்கும் கணவனைப் போலீஸ் பிடித்துவிட்டது என்றாலும் துடித்துப்போய், அவனை மீட்டுவருவாள் அந்தப் பெண். அதுதான் தமிழகப் பெண்களின் நிலை.

**கணவனைக் காத்த மனைவி**

கேசவன்-கஸ்தூரி தம்பதிகளுக்கு இரண்டு குழந்தைகள் அளவான நல்ல குடும்பம். இதில் கேசவனுக்கு வயிற்று வலி ஏற்பட்டு, அதனால் சாப்பிட முடியாமல் துன்பப்பட்டார். கஸ்தூரி உடனேயே அவரை மருத்துவரிடம் அழைத்துச் சென்று, 'எண்டோஸ்கோப்பி' மூலம் வயிற்றில் புண் இருக்கிறது என்ற கண்டறிந்தாள். பின்னர்க் கடன்

பெற்றுவந்து அறுவைச் சிகிச்சையையும் உடனே செய்ய வைத்தாள். அதனால் அவள் கணவன் உடல்நலம் பெற்றார்.

**கஸ்தூரி நிலை**

கஸ்தூரிக்கு ஆறுமாதமாக மாதவிடாய்க் கோளாறு உதிரப்போக்கு அதிகரித்து ஆள் இளைத்துவிட்டாள். ரத்தசோகையும் சேர்ந்தது. வீட்டு வேலை ஏதும் செய்ய முடியாத நிலை. கஸ்தூரியைப் பார்த்து அதிர்ந்த சிவசங்கரி தன் நண்பனான கேசவனைச் சந்தித்து கோபமாகக் கேட்கிறார்.

"உனக்கு ஒன்று வந்தபோது அவள் துடித்துப்போய், உடனடியாக வைத்தியம் செய்தாள். அந்த அக்கறை உனக்கு இருக்க வேண்டாமா? என்று. கேசவன் அதற்கு 'நான் வா டாக்டரிடம் போகலாம்' என்று இரண்டு முறை அழைத்தும் அவள் நாளைக் கடத்திக்கொண்டே வருகிறாள். இன்னும் கொஞ்சநாள் போகட்டும் என்று கஸ்தூரிதான் மறுத்துவிட்டாள். வேண்டுமானால் அவளிடம் நீங்கள் கேட்டுப் பாருங்கள் அவள் என்ன குழந்தையா? நான் வலுக்கட்டாயமாகத் தூக்கிச் செல்ல முடியுமா? என்று வருத்தத்துடன் தெரிவித்த சேகவனை ஆறுதல் படுத்தினார் சிவசங்கரி."[44]

**பரம்பரைத் தன்மை**

முதலில் பெண்களின் எண்ணத்தை மாற்ற வேண்டும். பரம்பரையாக நல்ல பெண்கள் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று சிந்தனைப் பதப்படுத்தப்பட்ட நிலையில், பெண்கள் தமக்கு என்று எதையும் எண்ணுவதே இல்லை. அது சுயநலமாகிவிடும் என்கிற தயக்கம் இதனை மாற்ற வேண்டும்.

**குடும்பத்தினர் செய்ய வேண்டியவை**

ஒவ்வொரு தனி மனிதனும், தங்கள் குடும்பத்தில், குழந்தைகள், தான், சாப்பிடும் போது அம்மா சாப்பிட்டார்களா? என்று கேட்பதும், கணவன் மனைவியையும் உடன் சாப்பிடச் சொல்லுவதும் ஆரோக்கிய

குடும்பநிலையாகும். பெண்ணிடம் காட்டும் அக்கறை ஒருவருக்கொருவர் அன்பால், அரவணைப்பால் பிணைக்கப்படும் வார்த்தைகள் நலன் விசாரிப்பு ஆகும்.

பெண்கள் தங்களுக்கென்று சொந்த விருப்பு, வெறுப்பு, தனிப்பட்ட ரசனை கொண்டவள் என்று பார்க்க, பழக, ஏற்க முக்கியமாய் மரியாதை கொடுக்க சமுதாயம் முன்வர வேண்டும் என்கிறார் சிவசங்கரி.

"குழந்தைகள் நலனுக்காகவாவது நான் ஆரோக்கியமாக இருக்க வேண்டும் என்கிற நூற்றுக்கு 80 பேர்களிடம் இன்று ரத்த அழுத்தம், சர்க்கரை நோய், ரத்த சோகை, கர்ப்பப்பை, மார்பகப் புற்று நோய் போன்ற வியாதிகள் கண்டுபிடிக்கப்பட்டன. ஆரம்ப நிலையில் இருந்தவர்கள் சரியான கவனிப்பின் காரணமாய்ச் சிகிச்சை எடுத்துக்கொண்டதில் நோயிலிருந்து விடுதலை பெற்றனர். பல அறிகுறிகள் தெரிந்தும் கவனிக்கப்படாமல், நோய் முற்றிப்போய் விஷயத்தைப் புரிந்து கொண்டவர்கள் பலரும் உண்டு. சரியான விழிப்புணர்வு இருந்தால் வலி, நோய் போன்றவற்றிலிருந்து மீண்டு வரலாம். கண் கெட்டபின் சூரிய நமஸ்காரம் பண்ணுவதால் யாருக்கும் எந்தப் பலனும் இல்லை. 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' இது ஆண்களுக்கு மட்டுமல்ல, பெண்களுக்கும் தான். சமுதாயத்தில் குடும்பத்தில் பெண்கள் காக்கப்பட வேண்டியவர்கள்"[45] என்பதைச் சிவசங்கரி ஒரு சமுதாய மருத்துவராக இருந்து விளக்குகிறார்.

**பெண்களும் சமுதாயப் பழக்கங்களும்**

சமுதாயத்தில் பெண்களுக்குத் திருமணத்தின் போது அதிக சீர்வரிசை வழங்கும் நிலை உள்ளது. சங்க காலத்தில் ஆடவர் மணமகளுக்குப் பரிசுப்பணம் என்று ஒரு குறிப்பிட்ட தொகையை வழங்கிய பின்னரே அவளைத் திருமணம் செய்து கொண்டனர். ஆனால், அதன்பின் இடைக்காலங்களில் கட்டாயமாக மணப் பெண்ணிடமிருந்து பொன்னும், பொருளும் கேட்கப்பட்டதால் பல

பெண்கள் திருமணம் ஆகாமல் இருக்கக் கூடிய சூழல் ஏற்பட்டது. கல்வி, பெண் வாழ்வில் ஒளி ஊட்டியது. பெண்கள் படித்து ஆண்களுக்கு நிகராக அனைத்துத் துறைகளிலும் இன்று பணிபுரிகின்றனர். இன்று பெண்களை மதிக்கும் நிலை ஏற்பட்டுள்ளது. இருப்பினும் இவர்கள் திருமணம் சரியான பருவங்களில் நடைபெறாமல் பருவம் தவறி நடப்பதால் உடல் நிலைகளில் மாற்றம், மகப்பேறு நிலைகளில் போராட்டம் என்று சிக்கல் உருவாகி உள்ளது. எனவே பெண்கள் சமுதாயத்தில் ஏதாவது சிக்கல்களில் தவிப்பவர்களாகவே வாழ்கிறார்கள்.

**கணவனை இழந்த பெண்கள்**

இந்தியா பாரம்பரியம் மிக்க நாடு என்று ஒருபுறம் போற்றப்பட்டாலும், மறுபுறம் கடுமையான பழக்கவழக்கங்களால் பெண்களைத் துன்பத்திற்குக் கொண்டு செல்கின்றது.

பசி, தூக்கம், வலி, வருத்தம் போன்ற அனைத்து உணர்வுகளும் ஆண், பெண் இருவருக்கும் பொதுவாக இருக்கப் பெண்மையை மட்டும் சமுதாயம் வேறுபடுத்தி நோக்குகிறது.

கணவனை இழந்த பெண்கள் மட்டும் பூ, பொட்டு, அணிகலன்கள் அணிதல் கூடாது. ஆண் மனைவியை இழந்துவிட்டால் உடனேயே மறுமணம் செய்துகொள்வது என்ற நியதி ஒருதலைப் பட்சமானதாகும்.

கணவனை இழந்த முப்பத்தாறு வயது பெண்ணுக்கு செய்த சடங்கினைத் தவறு என்று வாதாடும் பெண்ணின் உணர்வு ஏற்றுக்கொள்ளக்கூடியதே.

இன்று பெரும்பாலும் இந்தச் சடங்கு முறைகள் மாற்றப்பட்டுவிட்டன. இருந்தாலும் சடங்கு என்று செய்துவிட்டு, பின் அந்தப் பெண்ணின் விருப்பத்திற்கு ஏற்ப விட்டுவிடுகின்றனர்.

பிரேமாவின் தங்கை கிராமத்தில் வாழ்ந்தாலும், பணம், வேலை, ஆள், வசதி வாய்ப்புகளுடன் வாழ்கிறாள். குழந்தைகள் ஏர்க்காடு

ஆங்கில வழி கல்வி நிறுவனத்தில் (கான்வென்டில்) படிக்கின்றார்கள் என்று பெருமையுடன் இருந்தபோது, அவர்கள் குடும்பத்தினர் மாறவில்லை என்பதைத் தங்கையின் கணவன் இறந்தபோது நடத்தப்பட்ட சடங்குகள் மூலம் உணர்ந்து வருந்திக் கூறுகிறாள்.

"பரம்பரையாய்ச் செய்யும் காரியங்களை ஒன்றுவிடாமல் 16 ஆம் நாள் செய்து என் தங்கை அணிந்திருந்த அத்தனை நகைகளையும் கழட்டி வெள்ளைப் புடவையை உடுத்தச் செய்து, அவளை அலங்கோலமாக்கி, ஒரு வருடத்திற்கு வீட்டைவிட்டு வெளியே போகக் கூடாது என்று சொல்லி... ச்சீ... மனிதர்களா அவர்கள்? பங்காளிகள், சொந்தக்காரர்கள் என்று நூற்றுக்கணக்கில் வந்தவர்களில் ஒருவர்கூட வாயைத் திறந்து 'இந்தக் காலத்தில் என்ன அக்கிரமம் இது' என்று கேட்கவில்லை தெரியுமா ! 'இது கூடாது' என்று நான் குரல் கொடுத்ததையும் அதிக பிரசங்கித்தனமாய்ப் பேசாதே - இது எங்கள் குடும்ப விஷயம் என்று கோபப்பட்டனர். என் தங்கையை அலங்கோலப் படுத்துவதா? அவர்களின் விருப்பம். பிள்ளைகளைக் கான்வென்டில் படிக்க வைத்தால் போதுமா? ஒரு பெண்ணின் உணர்வுகளுக்கு மரியாதை கொடுத்து நடத்த வேண்டாமா? இவர்கள் மனிதர்களா? சாட்டையால் அடிக்கிற மாதிரி இதைப் பற்றி விளாவாரியாக எழுதிப் படிக்கிறவர்களிடையே ஒரு விழிப்புணர்வை உண்டாக்குங்கள் சிவசங்கரி - ப்ளீஸ்"[46] என்று சிவசங்கரியின் தோழி பிரேமா வேண்டிக் கொண்டார்.

கணவனை இழந்து தவிக்கும் பெண், பாதுகாப்பும் இன்றிப் பிரிவில் துடிப்பவள். அவளை ஆதரவுடன் அணுகி இதமாக நடந்து கொள்ள வேண்டிய நேரத்தில், இதை இப்படிச் செய்யாதே, அப்படி உடுக்காதே, இங்கே வராதே என்று கூறி மேலும் மேலும் அவளை வருத்துவதில் இந்தச் சமுதாயம் எதைச் சாதித்தது. ஒன்றும் இல்லை.

துணையை இழந்து தவிப்பவர் ஆணோ, பெண்ணோ யாராக இருந்தாலும் அவர்களுக்கு அந்த நேரத்தில் அன்பு, அனுசரணை, புரிந்து கொள்ளல் தான் தேவை. அவற்றை வழங்காது விட்டாலும், அவர்கள்

விருப்பதிற்காக விட்டுவிடுதல் நல்லது. அதுதான் மனிதநேயம் மிக்க செயல் ஆகும்.

ஒருவர் ஆடைகளை வெள்ளையாகவோ, வண்ணமாகவோ உடுத்திக் கொள்வதும், மீண்டும் திருமணம் செய்து கொள்வதும் தனிநபரின் விருப்பத்தைச் சார்ந்தது.

**கணவனை இழந்த பெண்கள் அலங்கரித்துக் கொள்வதன் நோக்கம்**

இன்று சமுதாயத்தில் நல்ல மாற்றம் ஏற்பட்டுத்தான் இருக்கிறது. அதற்குக் காரணம் பெண்கள் தங்கள் உரிமைகளை அவர்களே வலியப் பெற்றுக் கொண்டதுதான். இச்சமுதாயத்தில் தன்னை நிலைப்படுத்திக் கொள்ள, அவர்கள் துணிந்து செயல்பட்டாக வேண்டும். இது பற்றி,

"பல பெண்கள் (என்னையும் சேர்த்துதான்) கணவரை இழந்த பின்பும் பழைய தோற்றத்துடனே இருப்பதற்குக் காரணங்கள் இல்லாமல் இல்லை. இது என் வாழ்க்கை, என் தோற்றம், அதை எப்படி வேண்டுமானாலும் வெளிப்படுத்துவேன். அது என் இஷ்டம். தாலி, பூ, மெட்டி, பொட்டு போன்ற அலங்காரங்கள் கணவருடன் வாழ்ந்த வாழ்க்கை தொடருவது போல எனக்குக் கொஞ்சம் நிம்மதியாய் இருந்தது. பொது வேலை பார்க்கும் இடங்களில் 'ஓ' இவள் மணமானவள், கணவன் இருக்கிறான் என்ற எண்ணத்தில் சிலரையாவது என்னிடம் இருந்து ஒதுங்க வைத்து, பாதுகாப்புத் தருகிறது. தோற்றத்தின் மூலம் என் இழப்பை மற்றவர் அறியச் செய்து, அவர்களின் அனுதாபத்தைப் பெற நான் விரும்பவில்லை"[47] என்று பலருக்கும் புரியும்படி எழுத்தாளர் சிவசங்கரி எடுத்துரைக்கின்றார்.

**சமுதாயம் செய்ய வேண்டியது**

அரசின் மூலமோ, தொண்டு நிறுவனங்கள் மூலமோ சமுதாயப் பிரச்சனைகளுக்குத் தீர்வு காண விரும்புபவர் முதலில் தம் வீட்டிலிருந்து அவற்றைத் தொடங்க வேண்டும். தன்னைச் சார்ந்தவர் கணவனை இழந்த அம்மா, அக்கா, அத்தை, சித்தி போன்ற பெண்கள் இருந்தால் அவர்கள் விருப்பத்திற்கு ஏற்ப நடந்து கொள்ளுங்கள். *(Charity begins at*

*home)* தொண்டு தங்கள் இல்லங்களிலிருந்து தொடங்கட்டும் என்ற தொடரின் பொருள்புரிந்து நடந்து கொள்ள வேண்டும்.

**மக்கள் செல்வம்**

மகப்பேறு வீடுபேற்றைத் தரும் என்று வேத நூல்கள் குறிப்பிடுகின்றன. குழந்தை இல்லாத பெண்கள் இன்று விதவையாக இருந்தாலும் பெரியோரின் அனுமதியுடன் தத்து எடுத்துக் கொள்கின்றனர். ஆணுக்கு "மனைவியும் மகனும் தனதுடலே; மகள் அன்பின் குறியீடு"[48] என்று அறம் உரைக்கப்படுகிறது. பிள்ளை இல்லாவிடல் புத்ர என்னும் நரகம் வாய்க்கும் என்றும் அச்சுறுத்துகிறது.

"குழந்தைகள் நாம் வாழும் இடத்தைப் புனிதப்படுத்துகின்றன" என்பார் சான்றோர். திருவள்ளுவர் மக்கள் பேறு என்று ஒரு அதிகாரத்தையே படைத்துள்ளார். சங்க இலக்கியம் மக்கள் பேற்றின் இன்பத்தை எடுத்துரைக்கிறது.

பெண்கள் மக்கள் பேற்றுக்கு ஏங்குவதும் இயற்கை. சாரதா தேவி தனக்குக் குழந்தை இல்லையே என்று ஏங்கிய போது, ஒரு தேவர் கனவில் தோன்றி, உலகில் உனக்கு எத்தனையோ குழந்தைகள் உள்ளனரே, என்று ஆறுதல் கூறியதாகக் குறிப்புகள் உள்ளன. மக்கள்பேறுக்காகப் பெண்கள் தவம் செய்கின்றனர், வரம் வேண்டுகின்றனர். பெற்றபின் நேர்த்திக் கடன் செலுத்துகின்றனர். இப்படி மக்கள் இல்லையே என ஏங்குவோர் பலர் இருக்க, சில இடங்களில் பிறந்த குழந்தை பெண் என்று அறிந்தவுடன் அக்குழந்தையைக் கொன்றுவிடும் அவலமும் காணப்படுகிறது.

**பெண் சிசுக் கொலை**

சிவசங்கரி தன் எழுத்துக்களில் சமுதாயத்தின் அவலநிலையை எடுத்துக்காட்டி மாற்றம் ஏற்பட வழிகாட்டுபவர். குடி, போதை, எய்ட்ஸ் என்று பல சிக்கல்களை ஆய்ந்து அறிந்து அதிலிருந்து விடுதலை பெற வழிமுறைகள் கூறிவருகின்றார். சிசுக்கொலை என்பதைக்

கேள்விப்பட்டு அதிர்ந்து ஏன்? எதற்கு? என்ற வினாக்கள் அவர் மனதை வருத்த சிசுக்கொலை நடக்கும் பகுதிக்கு நேரடியாகச் சென்று பெண்ணிடம் அக்கொடுமையைக் கேட்டு அறிகிறார்.

**சிசுக்கொலை நிகழ்வு**

சிசுக்கொலை செய்த அந்தப் பெண்ணிற்கு வயது இருபத்திரண்டு. இரண்டு வயதுடைய ஆண் குழந்தையைக் கையில் வைத்திருந்தாள். அவளைப் பார்த்துப் போன மாசம் உனக்கு மூணாவதா ஒரு பொம்பளைக் குழந்தை பிறந்து, செத்துச்சுனு கேள்விப்பட்டேன் அது எப்படி செத்தது? என்று கேட்கிறார்.

'நானும், என் மாமியார் கிழவியும் சேர்ந்து கொதிக்கிற கோழிக் கொழம்ப வாயில ஊத்தி கொன்னுட்டோம்' என்று குப்பையைப் பெருக்கி, அள்ளிக் கொட்டினேன் என்கிற மாதிரி அவள் கூறிய பதில் சிவசங்கரியைத் துடிதுடிக்கச் செய்தது. மீண்டும் கேட்கிறார், "பத்து மாதம் சுமந்து பெத்த குழந்தையை உன் கையாலேயே கொல்ல உனக்கு எப்படி மனசு வந்தது? அந்த பச்சை மண் சாகறத்துக்குள்ள என்னமா துடிச்சிருக்கும் ! அது உன்ன பதற வைக்கல?"[49] என்று கேட்கிறார். அதற்கு அந்தப் பெண் கூறிய காரணம்,

"அது ஆளாகி வளர்ந்தப்புறம் அப்பால் புருஷன் வீட்டுலயும், படப்போற கஷ்டத்த நினைச்சு பாக்குறப்போ, இப்ப அனுபவிச்ச வேதனை ஒண்ணும் பெரிசா தெரியல"[50] என்று கூறினாள்.

**தனிமனிதனை உறுத்தும் குற்ற உணர்வு**

ஆப்பிரகாம் லிங்கன் ஒரு முறை தன் நண்பர்களுடன் தெருவில் சென்ற போது, ஒரு பன்றிக்குட்டி கிணற்றில் விழுந்து கத்திக் கொண்டிருந்தது. அதனை அவர் தூக்கி எடுத்து வெளியில் இட்டார். நண்பர்கள் ஏன் அதனைக் காப்பாற்றினாய் எனக் கேட்டதற்கு, ஒரு சுயநலம் தான் என்றார். இதில் என்ன சுயநலம் இருக்கிறது என்று நண்பர் கேட்க, அந்தப் பன்றிக்குட்டியின் அழுகுரல் என் உள்ளத்தில்

ஒலித்துக்கொண்டே இருக்கும், நான் அதைக் காப்பாற்றவில்லையே என என் குற்ற உணர்வு என் உள்ளத்தில் உறுத்திக் கொண்டே இருக்கும். இந்த மனப்போராட்டத்திலிருந்து தப்பவே அதைக் காப்பாற்றினேன் என்று கூறினார் என்பது செய்தி. மனிதர்கள் தாம் செய்யும் எந்தத் தப்பையும் உணராமல் அது அவர்களை உறுத்தாமல் இருக்க மீண்டும் மீண்டும் தப்புச் செய்துகொண்டிருக்கும் நிலையே இன்று காணப்படுகிறது. தனி மனிதனைத் தான் செய்யும் குற்றம் உறுத்துமானால் அவன் தப்பு செய்வதிலிருந்து விடுபடுவான். ஆனால் இன்று யாரும் தான் செய்யும் கொடிய செயலையுமே தப்பாகக் கருதுவது இல்லை.

**குப்பைத் தொட்டிக் குழந்தை**

மனைவியை இழந்த ஒரு மனிதன் தன் இரு குழந்தைகளுடன் வாழ்ந்து கொண்டிருந்தார். அவர் ‘குப்பைத் தொட்டியில் கிடந்த ஒரு குழந்தையையும் எடுத்துச் சென்றார்’ என்ற செய்தியைப் படித்து அவரை நேரில் சந்திக்கச் சென்ற எழுத்தாளர் கூறியது வருமாறு:

“அந்த மனிதர் வேலை முடிந்து வீடு திரும்பிக் கொண்டிருந்த நேரத்தில், அக்குழந்தையின் அழுகுரல் அவர்மனதை உருக்கிவிட்டதாகச் சொன்னார். அக்கணமே அக்குழந்தையை எடுத்துக்கொள்ளும்படி அவர் உள்மனம் கட்டளையிட்டது. அக்கட்டளையைச் செவிமடுக்காமல் ஒரு வேளை வீட்டிற்கு நான் திரும்பி வந்திருந்தால் அக்குரல் நொடிதோறும் பல மடங்காகப் பெருகி ஒலிக்கத் தொடங்கியிருக்கும். அந்த உறுத்தலும் குற்ற உணர்வும் எழுப்பும் ஆயிரமாயிரம் கேள்விகளுக்குப் பதில் சொல்லி மீள முடியாது என்று அத்தவிப்புகளின் உச்சத்தில் பைத்தியம் பிடித்திருந்தாலும்ஆச்சரியப்படுவதற்கில்லை என்றும் கூறினார்.”[51]

குற்ற உணர்வு என்பது பலவகைகளில் ஆதார அறத்தை நோக்கி மனிதர்களைச் செலுத்திய படி உள்ளது என்பதை இந்நிகழ்வுகள் உணர்த்துகின்றன. வாழ்க்கை என்னும் ஒற்றையடிப் பாதையின் மீது

வெளிச்சத்தைப் பொழிகிறது அந்த உணர்வு. அன்பற்றவனை அன்புள்ளவனாக்கவும், அன்புள்ளவர்களை மேலும் மேலும் அன்புடையாராக்கவும் தூண்டுவதும் இந்த குற்ற உணர்வே ஆகும்.

இந்தக் குற்ற உணர்வையும் வெளிக்காட்டத் தெரியாத அறியாமை, சமுதாயச் சூழல், வறுமை, பொருளாதாரத்தின் அடிமட்டத்தில் வாழும் நிலை இவையாவும் பத்து மாதம் பெற்ற, உணர்வையே மறைத்துவிட்டு கொடிய நிலையில் அந்தச் சிசுவைக் கொல்லச் செய்தது என்றால் சமுதாயம் சீர்கெட்டதின் உச்சம் அதுதான் என்று கூற வேண்டும்.

### பெண் என்றால் செலவு

இன்று பெண்கள் தங்கள் வாழ்க்கையை நல்ல நிலையில் அமைத்துக்கொள்ளக் கல்வி கற்றுப் பணிக்குச் செல்கிறார்கள். ஆனாலும் அவர்கள் திருமணத்தில் சிக்கல் உண்டாகிறது. பெண் என்றாலே செலவு என்ற நிலை சமூகத்தில் நிலவுகிறது. பெண் பிள்ளைகளைப் பெற்றவர்கள் அதற்காகவே அஞ்சுகின்றனர்.

"திருமணமா - பெண் வீட்டார் செலவு, பிள்ளைப்பேறா - பெண்வீட்டார் செலவு என்று பெண் என்றாலே செலவு என்று ஆணித்தரமாக அடித்துக் காட்டப்படுகிறது. பெண் என்றால் செலவு என்ற எண்ணத்தை அழித்தால் மட்டுமே பெண் சிசுக்கொலையை முற்றிலும் நிறுத்த முடியும்"[52] என்று எஸ்.மாலதி குறிப்பிட்டுள்ளதால் அறியலாம்.

### மக்கள் தொகையில் பெண்களின் எண்ணிக்கை

"மக்கள் தொகையில் பெண்களின் பிறப்பு விகிதம் குறைந்து வருவது குறித்து இந்திய நாடு கவலை தெரிவித்துள்ளது. 1000 ஆண்களுக்கு 933 பெண்கள் என்பது இந்தியச் சராசரியாக இருக்கிறது. பிறந்தது முதல் 6 வயது வரையிலான குழந்தைகளுக்கு இந்த விகிதம் 1000 ஆண் குழந்தைகளுக்கு 927 பெண் குழந்தைகள் எந்ற நிலை

காணப்படுகிறது. 1991-இல் 945 ஆக இருந்தது. இதற்குக் காரணம் கரு பரிசோதனையில் பெண் குழந்தை என்று தெரிந்தால் கருவைக் கலைத்துவிடுதல் அல்லது சிசுவைக் கொன்றுவிடுதல் எனத் தெரிகிறது"[53] என்ற செய்திக் குறிப்பு தெரிவிக்கிறது.

**பெண் கல்வி**

கேரளம், தமிழகம் போன்ற இடங்களில் பெண்கள் கல்வி வளர்ந்துள்ளது. அரசு அதற்காகப் பல வழி முறைகளைச் செய்துள்ளது. வட மாநிலங்களிலும் படிப்பு நிலை பெண் கல்வி அதிகரித்து வருகிறது. ஆனால் தாழ்த்தப்பட்ட பழங்குடி சமூக மக்களிடையே கல்வி வளர்ச்சி மிகவும் குறைவாகவே உள்ளது.

**தாழ்த்தப்பட்ட பழங்குடியினர் கல்வி**

"தாழ்த்தப்பட்ட பழங்குடி சமூகங்களைச் சேர்ந்த 6 கோடி சிறுமிகள் எழுத்தறிவே இல்லாமல் இருக்கிறார்கள். இந்த எண்ணிக்கை மத்தியப்பிரதேசத்தின் மொத்த மக்கள் தொகைக்குச் சமம்"[54] என்பார் நீரஜாசௌத்ரி.

பெண்களின் எழுத்தறிவு தாழ்த்தப்பட்ட சமூகத்தில் 42% ஆகவும், பழங்குடி சமூகத்தில் 35% ஆகவும், முஸ்லிம்களில் 50% ஆகவும் இருக்கிறது. ஆண்களில் 66.6%, 59.2%, 67.6% ஆக உள்ளது.

**பெண் சிறுமியர் கல்வி கற்காததற்குக் காரணங்கள் !**

தனக்குப்பின் பிறந்த தம்பி தங்கைகளை வீட்டில் பார்த்துக்கொள்ள வேண்டும். அம்மா வெளியில் வேலைக்குச் செல்வதால் வீட்டு வேலைகள் செய்தல், வீட்டைப் பார்த்துக் கொள்ளுதல் போன்ற கராணத்திற்காகவும் சிறுமியருக்குக் கல்வி கற்கும் வாய்ப்பு குறைந்து விடுகிறது.

**பசிப்பிணி போக்குவோம்**

ஒரு புறம் மனித சமுதாயம் எத்தனையோ அறிவியல் வளர்ச்சி கண்டு வளர்ந்து. வந்துள்ளது. மறுபுறம் உலக அளவில் வறுமையினாலும், பசி

பட்டினியாலும் இறக்கும் நிலைதொடர்கிறது. இவ்வாறு இருவேறு துருவங்களாக மனித இனம் இருத்தல் கூடாது, உலக அளவில் இந்நிலை மாறப் பணம், சிந்தனை, உழைப்பு இவைகளை முடிந்த வரையில் தருவேன் என்று உறுதி கொண்டு சுமார் 152 நாடுகளில் வாழும் 62 லட்சம் மக்கள் ஒன்றிணைந்து ஓர் இயக்கத்தைத் தோற்றுவித்தனர்.

**இந்தியாவில் உலக பசி இயக்கத்தின் கிளை**

பாரதி பாடினார், "தனி ஒருவனுக்கு உணவு இல்லையெனில் சகத்தினை அழித்திடுவோம்" என்று, ஆனால் "இந்தியாவில் மட்டும் நாள் ஒன்றுக்கு 11000 ஆயிரம் குழந்தைகள், பெண்கள், ஆண்கள் நிரந்தரப் பட்டினியால் பாதிக்கப்பட்டுச் சாகிறார்கள்"[55] இதனைத் தடுக்க 1984-ஆம் ஆண்டு 'உலக பசி இயக்கத்தின் கிளை - பம்பாயில் துவக்கப்பட்டது.' இந்த இயக்கத்தின் இயக்குநர்களில் ஒருவர் 'விவசாய விஞ்ஞானி டாக்டர்.எம்.எஸ்.சுவாமிநாதன்' ஆவார்.

**பசி, பட்டினி நீங்க நிரந்தர தீர்வு**

வளரும் எந்த நாட்டிலும் நிரந்தரப் பட்டினி என்பது இருக்கக் கூடாது. அதற்கு முதல் நடவடிக்கை பெண்களுக்கு ஆரோக்கியம், படிப்பு, வேலை, குடும்பக் கட்டுப்பாடு, சுற்றுப்புறச் சூழல், தன்னம்பிக்கை ஆகிய விஷயங்கள் குறித்த சரியான விழிப்புணர்வை உண்டாக்குவது அவசியம் என்பது இந்த இயக்கத்தின் அழுத்தமான நம்பிக்கை. ஓர் ஆணிடம் ரூ.100 தந்தால், அது எந்த அளவுக்கு அவனுடைய குடும்பத்தைச் சென்று அடையும் என்பதைக் கூற முடியாது. ஆனால் ஒரு பெண்ணுக்கு அளிக்கப்படும் பணம் கிட்டத்தட்ட முழுவதுமே அவள் குடும்பத்துக்காகச் செலவிடுவாள் என்பதை உறுதியாகச் சொல்லலாம். அதனால் பெண்களின் கல்வித் தரத்தையும் சம்பாதிக்கும் திறனையும் உயர்த்துவது மிகமிக இன்றியமையாதது. "சமுதாயம் மேம்பட வேண்டும் என்றால், குடும்பம் தன்னிறைவு பெற வேண்டும். அப்படியானால் பெண் முழுமையாக வளர்ச்சி பெற வேண்டும்"[56] என்று சிவசங்கரி கூறியுள்ளார்.

**'அன்பு'** *(ANBU - Awareness Needed for Betterment of unpriviledged)* என்ற விழிப்புணர்வு இயக்கத்திற்குத் தலைவர் சிவசங்கரி. 'பெண் குழந்தைகள் மேம்பாடு' குறித்த விழிப்புணர்வு மக்களிடையே தோன்ற என்னென்ன செய்யலாம் என்று ஆய்ந்தறிந்து முடிவெடுத்தார் சிவசங்கரி.

"தொலைக்காட்சி, திரைப்படங்கள், வானொலி மூலம் ஆண், பெண் என்ற பேதம் தேவை இல்லை. எந்தச் சூழ்நிலையிலும் குடும்பத்தையும், சமுதாயத்தையும் காக்கும், வளர்க்கும் மனிதராகப் பெண்ணால் இயங்க முடியும்"[57] என்ற விழிப்புணர்வைத் தோற்றுவிக்கத் திட்டம் அமைக்கப்பட்டது.

"எத்தனை யுகங்கள், எத்தனை யுகங்கள்
எங்கே போயின எங்கள் முகங்கள்
... ... ... ... ...
நாணம் சுமந்த பெண்கள் எழுந்து
வானம் சுமக்கும் காலமிது
ஆடை நகைகள் அணிந்தது போக
ஆயுதம் அணியும் காலமிது
சிவனும் பாதி பார்வதி பாதி
கற்பனை பாடிய கானம் அது
ஆணும் பெண்ணும் எதிலும் பாதி
அறிவியல் சொல்லிய வேதமிது
பெண்களின் சிறகைப் பறியாதிருந்தால்
வானம் அவர்களின் எல்லையன்றோ?
துதித்திடும் வழக்கம் வேண்டாம் இங்கே
மதித்திடும் வழக்கம் வேண்டுமன்றோ?
ஆணும் பெண்ணும் ஆணையிட்டழைத்தால்
வானம் பூமியில் வந்து வணங்காதோ
எத்தனை யுகங்கள் எத்தனை எத்தனை யுகங்கள்
இன்றே தோன்றின எங்கள் முகங்கள் "[58]

இப்பாடல், திரு.வைரமுத்து எழுதித் தாயன்பன் இசையில் வாணி ஜெயராம், எஸ்.பி.பாலசுப்ரமணியன் பாட, திரைப்பட கலைஞர்கள் மூலம் ஏவி.எம்.நிறுவனத்தார், ஸ்ரீராம் போன்றோர் இயக்கத்தில் தயாரிக்கப்பட்ட பாடல் சென்னைத் தொலைக்காட்சியில் வாரம் ஒரு முறை ஒளிபரப்பி மக்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்தியது என்கிறார் சிவசங்கரி.

**ஹங்கர் பிராஜெக்ட் உலக மாநாடு**

'ஹங்கர் பிராஜெக்ட்' என்ற உலக மாநாடு சுவிச்சர்லாந்தில் நடைபெற்ற போது, அதில் ஆசியாவின் பிரதிநிதியாகக் கலந்து கொண்டவர் தமிழ்நாட்டைச் சேர்ந்த எழுத்தாளர் சிவசங்கரி என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

இம்மாநாட்டில் நடைபெற்ற கருத்தரங்கில் இந்தியாவின் மறுபக்கத்தைத் திருப்பிக் காட்டினார். அதைக் கண்டு கேட்ட சுவிச்சர்லாந்து மக்களில் ஒரு பெண், "சுவிட்சர்லாந்து பொருளாதாரம், இயற்கை வளம், வாழ்க்கைத் தரம் ஆகிய அனைத்திலும் உயர்ந்த நாடு. அந்நாட்டு மக்கள் வறுமை என்றால் என்ன? பட்டினிச்சாவு என்றால் என்ன? பெண் சிசுக்கொலை, வரதட்சணை இவற்றுக்காகக் கொலை செய்தல் ஆகியவற்றை செய்தியின் வாயிலாக அறிந்திருந்தோம். ஆனால் சிவசங்கரி இவற்றை நேரில் காண்பதுபோல் விளக்கப் படங்கள் மூலம் தெளிவுபடுத்தியுள்ளார். அன்பு (ANBU) விழிப்புணர்வு இயக்கத்தின் மூலம், அந்த மக்களின் உணர்ச்சிப் பூர்வமான பிரச்சனைகளை நாங்களும் உணர்ந்து கொள்ளும்படி செய்ததற்கு நன்றி "[59] எனக் கூறியுள்ளார்.

**ஹங்கர் பிராஜெட்டுக்கு நிதியுதவி**

சுவிஸ் நாட்டில் நடைபெற்ற 'உலக மக்களின் பசி பட்டினி போக்கும்' மாநாட்டின் மூலம் இத்திட்டத்திற்காக அரைமணி நேரத்தில் இதில் கலந்து கொண்ட மக்கள் வழங்கிய தொகை ரூ.60 லட்சம் (இரண்டு லட்சம் டாலர்).

அக்கூட்டத்தில் 40 வயது குடும்பப் பெண்மணி எடுத்த சபதம், "பல நாடுகளில் மக்கள் உண்ண உணவு கூட இல்லாமல் தவிக்கும் நிலையைப் போக்க, நானும் என்னால் இயன்ற விதத்தில் உதவப் பங்குகொள்ள விரும்புகிறேன். ஆனால் அதிகப் பணம் இப்போது என்னிடம் இல்லை என்றாலும் உலக மக்களின் பசியைப் போக்க தேவைக்கு அதிகமாக உழைத்து ஒரு வருடத்தில் லட்சம் பிராங்குகளை மூன்றாம் உலக நாட்டு மக்களின் வளர்ச்சிக்குக் கொடுக்கச் சபதம் எடுக்கிறேன்"[60]

என்று கூறி நிதி விண்ணப்பத்தில் கையெழுத்துப் போட்டுத் தந்தார். அவர்களின் ஈடுபாடு பண்டைய தமிழர்தம் பரந்த உள்ளத்தைப் போன்றதாகும். பசிப்பிணி போக்கிய மணிமேகலை, வள்ளலார் அமைத்த 'சத்திய தருமசாலை' (1867) போன்று உலகெல்லாம் திரண்டு பசிப்பிணிக்கு மருந்து உணவு வழங்குதல் என்ற இத்திட்டத்தை உருவாக்கியுள்ளார்கள். தனக்கென வாழாமல் பிறருக்கென வாழ்ந்த விழுமியம் போற்றத்தக்கதாகும்.

**தமிழகத்தின் பெண் குழந்தைகள்**

தமிழகத்தில் இன்று சிசுக்கொலை தடுப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. தொட்டில் குழந்தைத் திட்டம், பாலர் பள்ளி, சத்துணவு மையம், கர்ப்பிணிப் பெண்களுக்குச் சத்துணவு வழங்குதல், பெண் கல்வி, தாழ்த்தப்பட்ட இனப் பெண்களுக்கு எட்டாவது வரை படித்திருந்தால் அவர்களின் திருமணத்தின்போது ரூ.10,000 வழங்குதல் போன்ற திட்டங்கள் நடைமுறையில் உள்ளன.

பெண்கள் பொருளாதார மேம்பாட்டிற்காக 'மகளிர் குழு' க்கள் இயங்கி வருகின்றன. இதன் மூலம் பெண்கள் சிறுதொழில் செய்தல், அதன் வழி தங்களின் பொருளாதாரத் தேவையை மேம்படுத்திக்கொள்ள வாய்ப்பாக உள்ளது. மகளிர் குழுக்கள் மூலமாகப் பல சமுதாயச் சீர்திருத்தங்களும் மேம்பாடுகளும் நடைபெற்றுவருகிறது. 'சின்னப்பிள்ளை' என்ற அம்மையார் முன்னாள் பாரதப்பிரதமர்

வாஜ்பாய் அவர்களிடம் மகளிர்குழுப் பணிக்காக விருது பெற்று வந்தார் என்பது எல்லோரும் அறிந்த செய்தியாகும்.

சமுதாயம் பழக்க வழக்ககளாலும் மாற்றம் பெற வேண்டும், தொலை நோக்குப் பார்வை பெற வேண்டும், தன்னைப்போல் பிறரை நேசிக்கும் உள்ளம் பெற வேண்டும், சமுதாயக் கட்டுக்கோப்பைக் காக்கப் பாடுபடல் வேண்டும்.

**முடிவுரை**

குடும்ப உறவுகளைப் போன்றதே, தனிமனிதனைச் சுற்றியுள்ள சமூக உறவுமாகும். அது தனிமனித மேம்பாட்டுக்கும், வெற்றிக்கும் துணையாகிறது. அவனது சமூக மதிப்பு அவன் காத்து வைத்துள்ள சமூக உறவுகளைச் சார்ந்தே அமைகின்றன என்பதையும், சமுதாய அமைப்பு என்றும் ஒன்றையொன்று சார்ந்து நிற்கும் நிலையாகும். மனிதன் தனித்து வாழ்வதில் மனநிறைவோ, மகிழ்வோ கொள்ளமுடியாது. அதனால் சமுதாயம் அவனுக்குத் தேவைப்படுகிறது. அதனாலேயே அவன் சமூகத்தோடு இணைந்து வாழ்கிறான். சமுதாயத்தில் மனிதர்கள் அனைவரும் அவரவர் தேவைகளைப் பூர்த்தி செய்து மனநிறைவு கொள்ள வேண்டுமெனில் ஒருவரை ஒருவர் சார்ந்தே இருத்தல் அவசியம் என்பதையும் இவ்வாய்வின்மூலம் உணர்கிறோம்.

எந்த இடத்தில் சிக்கல்கள் உள்ளனவோ, அவற்றை அப்போதைய நிலைக்குத் தக்கவாறு போர்க்கால அடிப்படையில் தீர்க்கப்படுதல் வேண்டும் என்றும், நாடுமுழுமையும் தூய்மை அடைய ஒவ்வொரு தனிமனிதனும் இணைந்து தான் சார்ந்திருக்கும் இடத்தைத் தூய்மைப்படுத்தப்பாடுபடல் வேண்டும் என்றும் அறிகிறோம்.

பெரியபுராணத்தில் சேக்கிழார் கண்ணப்ப நாயனார்மூலம் கண்தானம் பற்றி அறிமுகம் செய்துள்ளார். இன்று கண்தானம் செய்வதைத்தம் எழுத்துமூலம் சிவசங்கரி எழுதி வலியுறுத்தி வருகிறார்.

தனிமனிதரிடம் விழிப்புணர்வு ஏற்பட்டுவிட்டால் அது குடும்பம் - அடுத்த வீடு - தெரு - வட்டாரம் - ஊர் - நாடு என்று விரிந்த கொண்டே போவது இயல்பு என்றும் எழுத்தாளர் சிவசங்கரி குறிப்பிட்டுள்ளார்.

தனிமனிதர்களிடையே இலக்கியங்கள் மூலம் விழிப்புணர்வை உண்டாக்க வேண்டும் என்பதற்காகக் கவிராத்திரி என்ற நிகழ்ச்சியை 'அக்னி' என்ற அமைப்பின் மூலம் பல மொழிக் கவிஞர்களை வரவழைத்துக் கவிதைகள் படிக்க ஏற்பாடு செய்தவர் எழுத்தாளர் சிவசங்கரி என்பதை அறிகிறோம்.

எழுத்தாளர் சிவசங்கரியின் முயற்சியால் சென்னை, தரமணியில் **1992** ஆம் வருடம் நவம்பர் **14**-ந் தேதி திருமதி எம்.எஸ்.சுப்புலட்சுமி குத்துவிளக்கேற்றி, மேதகு ஆளுநர் பீஷ்மநாராயண சிங் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது வி.எச்.எஸ்.மருத்துவமனை. அம் மருத்துவமனையில் குடிபோதையில் உடல் நலம், மன நலம் குன்றியவர்களுக்கு மருத்துவம் செய்து குடிப்பழக்கத்திலிருந்தே விலக்கி மனிதனை மனிதனாக மாற்றி வருகிறது. அத்துடன் நில்லாமல் நோயாளி சிகிச்சைப் பெற்று வீடு சென்றபின்பும் தொடர்ந்து அவரைக் கண்காணித்து வருகிறது. இச்செயல் சிவசங்கரி கொண்டுள்ள மனித நேயச் செயல்பாட்டை வெளிப்படுத்துகிறது.

பாலியல் என்பது வாழ்க்கைக் கலையே. அது ஆபாசமன்று. அதை முறையாக அறிந்து நீண்ட இன்பத்துடன் வாழ வேண்டும் என்பதை உலகிற்கு உணர்த்தியவர்கள் இந்தியர்கள் அவர்களுள்ளும் தமிழர்கள். அதனால் தான் தமிழகக் கோயில்களில் சிற்பங்கள், சித்திரங்களில் பாலுணர்வுக் காட்சிகளை வரைந்தும் செதுக்கியும் வைத்துள்ளனர். மனித வாழ்வின் மைய உணர்வான பாலுணர்வால் ஆண், பெண் இருவரும் பிணைக்கப்பட்டால் குடும்பத்தில் விவாகரத்து, முறையற்ற உறவுகள் மற்றும் சமூகச் சீர்கேடுகள் தோன்றாமல் தடுக்க முடியும் என்று எழுத்தாளர் சிவசங்கரி குறிப்பிட்டுள்ளார்.

எழுத்தாளர் சிவசங்கரி தம் எழுத்துக்களில் சமுதாயத்தின் அவல நிலையை எடுத்துக்காட்டி மாற்றம் ஏற்பட வழிகாட்டியுள்ளார். குடிபோதை, எய்ட்ஸ், பெண்சிசுக்கொலை, கணவனை இழந்தபெண் என்று தனிமனிதச் சிக்கல்களுக்குத் தீர்வுகள் ஆய்ந்து அறிந்து, அதிலிருந்து விடுதலை பெற வழிமுறைகளை இன்றளவும் கூறிவருகிறார் என்பதை அறிந்து கொள்ளமுடிகிறது.

**சான்றெண்விளக்கம்**

1. பாஸ்கரன்.க, சமுதாயத் தத்துவம், பிஎச்.டி. ஆய்வேடு, ப, 26.
2. கோவிந்தராஜ்.சு, ஆழ்வார்களின் சமுதாயத் தத்துவம், பிஎச்.டி ஆய்வேடு, ப, 113.
3. பாஸ்கரன், சமுதாயத் தத்துவம், பிஎச்.டி. ஆய்வேடு, ப, 28.
4. ஈசுவரப்பிள்ளை, பக்தி இலக்கியத்தில் சமுதாயப் பார்வை, பிஎச்.டி. ஆய்வேடு, பக், 13-14.
5. சுஜாதா, பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் சமுதாயப் பார்வை, ப, 36.
6. சிவசங்கரி, சின்னநூல் கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, பக். 290-291.
7. மேலது, ப, 291.
8. மேலது, ப, 292.
9. மேலது, ப, 294.
10. மேலது, ப, 295.
11. சிவசங்கரி, உரத்த சிந்தனை, ப. 100.
12. மேலது, ப, 100.
13. மேலது, ப, 103.
14. மேலது, ப, 64.
15. மேலது, பக், 64-65.
16. மேலது, ப, 65.
17. மேலது, ப, 128.
18. மேலது, ப, 129.
19. மேலது, பக், 130-131.
20. மேலது, ப, 131.
21. மேலது, ப, 131.
22. சிவசங்கரி, கொஞ்சம் யோசிக்கலாமே, ப, 102.
23. மேலது, ப, 104.
24. மேலது, ப, 107.
25. மேலது, ப, 109.
26. திருமந்திரம், பாடல்எண், 1857.
27. சிவசங்கரி, உரத்த சிந்தனை, ப, 183.
28. மேலது, ப, 188.
29. மேலது, ப, 189.
30. மேலது, ப, 190.
31. மேலது, ப, 86.

32. மேலது, ப, 89.

33. மேலது, ப, 90.

34. மேலது, பக், 93-98.

35. ரங்கராஜன், ஜெ., 'உலக எய்ட்ஸ் தின செய்திகள்', தினமணி, 02-12-06, ப, 10.

36. ரங்கராஜன், ஜெ., 'உலக எய்ட்ஸ் தின செய்திகள்', தினமணி, 1-12-06, ப, 1.

37. அமைச்சர் அன்புமணி, 'போதை ஊசி பழக்கத்துக்கு அடிமையாகும் சென்னை இளைஞர்கள்', தினமணி, 19-11-06, ப. 7.

38. திருக்குறள், 1101.

39. காமராஜ் டாக்டர். க., பாலியல் ஆபாசம் அல்ல, தினமணி, புதன்கிழமை, 25-01-2006, ப. 10.

40. ரங்கராஜன், உங்கள் நலம், தினமணி, 28-11-2006, ப.13.

41. ஔவை நடராஜன், சங்க இலக்கியத்தில் சமுக அமைப்புகள் அணிந்துரை, ப, 6.

42. பாலசுப்பிரமணியன்.கு.வெ, சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள் அணிந்துரை, ப.1.

43. சிவசங்கரி, உரத்த சிந்தனை, ப, 148.

44. மேலது, ப, 150.

45. மேலது, ப, 153.

46. மேலது, பக், 204-205.

47. மேலது, பக், 207-208.

48. அருள்மொழி, சூரியக் கதிர்கள் பெண்சிசுக்கொலை ஒரு பார்வை, ப, 232.

49. சிவசங்கரி, உரத்த சிந்தனை, ப, 212.

50. மேலது, ப, 212.

51. பாவண்ணன், உறுத்தும் குற்ற உணர்வு, தினமணி, 27-9-2003, ப, 4.

52. மாலதி.எஸ், 'இந்திய நாட்டில் மலிவு விலைப்பொருள்', தினமணி, 9-12-06, ப, 8.

53. நீரஜா சௌத்திரி, 'குழந்தைகளுக்காக் குரல்கொடுங்கள்', தினமணி, 11-12-06, ப, 4.

54. நீரஜா சௌத்திரி, 'குழந்தைகளுக்காக் குரல்கொடுங்கள்', தினமணி, 11-12-06, ப, 4.

55. சிவசங்கரி, உரத்த சிந்தனை, ப, 216.

56. மேலது, ப, 217.

57. மேலது, ப, 218.

58. மேலது, ப, 220.

59. மேலது, ப, 226.

60. மேலது, ப, 228.

இயல் - 5

# சிவசங்கரியின் எழுத்துகளில் உத்திகள்

## முன்னுரை

சிவசங்கரி தமிழ் உரைநடை வாயிலாகத் தம், கருத்துக்களைப் பதிவுசெய்து வருகின்றார். அவர் நாவல், சிறுகதை, கட்டுரை எனத் தமது இலக்கிய வடிவங்களைப் பயன்படுத்தியுள்ளார்.

சிவசங்கரி எழுதும் கட்டுரைகள் சமுதாய விழிப்புணர்வைத் தூண்டுவதாகவும், தனி மனித மேம்பாடு, குடும்ப நலன் ஆகிய மனித மேம்பாட்டிற்கான காரணிகளை மையப்படுத்தியும் அமைந்திருக்கும். மனித வாழ்க்கைக்கு உறுதி அளிக்கும் உண்மைகளைப் படிப்பவர் மனம் ஏற்கும் வகையில் எழுதுகிறார். அவரது படைப்புகள் புதுப்புதுப் பொருள்களை அறியவும், ஆழ்ந்து ஆய்ந்த உண்மைகளைப் புலப்படுத்துவதாகவும் உள்ளன. சிவசங்கரி பல புதிய கோணங்களில் கருத்துகளை வழங்குகிறார். அதற்காக அவர் பயன்படுத்தும் உத்திகள் குறித்து இவ்வியல் ஆய்கிறது.

## இலக்கிய உத்திகள்

படைப்பாளன் தான் சொல்ல வந்த கருத்தை வெளிப்படுத்த உதவும் முறையே உத்தி எனப்படும். அவற்றுள் உவமை, உருவகம், படிமம், குறியீடு, இருண்மை, நனவோடை போன்றவை அடங்கும். தொல்காப்பியர் உத்தியின் வகைகள் 32 என உரைப்பர்.

## உத்தி வரையறை

சொல்லுவதை அழகுறச் சொல்லுவதற்கும், படிப்பவர் உள்ளத்தை ஊடுருவி நிற்கும் வகையில் சொல்லுவதற்கும் உத்திகள் பயன்படுகின்றன. ஒருவரது கவனத்தைக் கவரும் வகையில் சொல்வதற்குப் புதிய உத்திகள் தேவைப்படுகின்றன.

“பாரதி, கவிதையில் சொல்ல முடியாத சில செய்திகளை வசன கவிதை வடிவத்திலும், சிந்து, கண்ணி போன்ற நாட்டுப் பாடல் வகையிலும் கூறுவது ஒரு வகை உத்தி என்று கூறுவர்.

உத்தி என்ற சொல்லை *‘Technique’* என்ற ஆங்கிலச் சொல்லுக்கு இணையாக இக்காலத் திறனாய்வாளர்கள் பயன்படுத்துகின்றனர்”[1] என்பார் தமிழ்அழகன்.

படைப்பாளன் தன் முத்திரையைப் பதிப்பதற்கும், தன் கருத்தை வெளிப்படுத்துவதற்கும் ஏதுவாய் அமைவது உத்தி எனப்படும்.

**சிவசங்கரி பயன்படுத்தியுள்ள உத்திகள்**

சிவசங்கரி தம் எழுத்தில் வாசகர்களுக்குக் கடிதம் மூலம் ஆலோசனை வழங்குதல், உளவியல் நோக்கில் சிக்கல்களுக்குத் தீர்வு கூறுதல், வினா விடை மூலம் கருத்து விளக்கம் கூறல், சின்னச் சின்னகதை மூலம் தம் கருத்துகளுக்கு வலுச்சேர்த்தல், தம் கருத்துகளை வரிசைப்படுத்திப் பட்டியலிடுதல், இவைகளுக்கேற்ற மொழிநடையைக் கையாளுதல் ஆகிய உத்திமுறைகளை எழுத்தாளர் கையாண்டுள்ளார். இது பற்றி இனிக் காண்போம்.

சிவசங்கரி தம் கருத்துகளை நாவல், சிறுகதைகளின் வாயிலாக வெளிப்படுத்தி வந்தார். சிலவற்றை அந்த வடிவத்தில் கொடுக்க முடியாத நிலையில் கட்டுரை வடிவத்தில் வடிக்கின்றார். எய்ட்ஸ் பற்றி எழுத அவர் எடுத்துக் கொண்ட வடிவம் கட்டுரை வடிவமே ஆகும். அதற்கான காரணத்தை அவர் விளக்குகின்றார்.

> “எய்ட்ஸ் குறித்து எழுத வேண்டும் என்றால் முக்கிய கதாபாத்திரம் போதை மருந்துக்கு அடிமையானவர் அல்லது தவறான உடல் உறவுகளில் நாட்டம் கொண்டவர் அல்லது அறுவை சிகிச்சை செய்து கொண்டபோது ஏற்றப்பட்ட ரத்தத்தின் மூலம் நோய் வருவதாக விவரித்து எழுதலாம். போதை மருந்தை வைத்து ஏற்கனவே ‘அவன்’ என்ற புதினத்தை எழுதிவிட்டேன். அதனால்

முதல் பாத்திர அமைப்பு சரிப்பட்டுவராது. இரண்டாவது ரத்தத்தில் தேர்ந்தெடுத்தால் எய்ட்ஸுக்குக் கொடுக்க வேண்டிய முக்கியத்துவத்தை மறந்து வாசகர்களில் சிலராவது 'nயே இத்தனை ஆபாசமாக எழுத எப்படித் துணிந்தார்?' என்று முகம் சுளிப்பார்களோ என்று பயமாக இருக்கிறது. மிஞ்சி இருப்பது கடைசிப் பிரிவு இது எந்த அளவுக்கு கதை ஆணி அடித்த மாதிரி மனசில் பதிய உதவும். நிஜமாய் புரியவில்லை... எய்ட்ஸ் பற்றி நான் தெரிந்து கொண்ட சில விவரங்களையாவது உங்களுடன் பகிர்ந்து கொள்வது அவசியம் என்றே நினைக்கின்றேன்."[2]

என்கிறார் சிவசங்கரி. கருத்தைத் தடுமாற்றம் இல்லாமல் கதாபாத்திரத்தில் கொண்டு செல்ல இயலாதபோது, சிவசங்கரி கட்டுரை வடிவத்தைப் பயன்படுத்தியுள்ளார் என்பது தெரிகிறது.

சிவசங்கரி தன் கருத்துக்களை விளக்க, கட்டுரையில் பயன்படுத்திய உத்திகள்,

- . வாசகர் கடிதங்களுக்கு விளக்கம், ஆலோசனை அளித்தல்.
- . உளவியல் நோக்கில் சிக்கல்களுக்குத் தீர்வு கூறல்.
- . வினா விடை மூலம் புதிய கருத்துக்களை மக்களிடம் கொண்டு செல்லல்.
- . சின்னச் சின்ன கதை கூறிக் கருத்துக்கு வலுச்சேர்த்தல்.
- . முக்கியக் கருத்துக்களைப் பட்டியலிட்டு வரிசைப்படுத்தி உரைத்தல்.
- . மொழி நடை.

## I. வாசகர் கடிதங்களுக்கு விளக்கம், ஆலோசனை அளித்தல்

### 1. முரளி என்ற வாசகரிடமிருந்து ஒரு கடிதம்

முரளி என்பவர் ஏழு மாதங்களுக்கு முன் ஒரு விபத்தில் தன் மனைவியைப் பறிகொடுத்தவர். மனைவிக்கு வயது 24 முரளிக்கு 28 வயதாகிறது. இளந்தம்பதியர், முரளியின் மனைவி கருவுற்றிருந்தாள்.

தன் மனைவி உண்டாகி இருக்கிறாள் என்பதை அறிந்து மகிழ்ந்து, அக்குழந்தைக்குப் பெயர் தேர்வுசெய்து தங்கள் எதிர்காலம் எப்படி அமைய வேண்டும் எனத் திட்டங்கள் தீட்டி, மனக் கோட்டைகள் கட்டி கனவுகளில் மிதந்த, அந்த நேரத்தில் ஏற்பட்ட விபத்து மனைவியைப் பறித்துக்கொண்டது. முரளியை அது பெரிதும் பாதித்து தான் இனி உயிர் வாழ்வதில் பொருளே இல்லை என்ற முடிவுக்குக் கொண்டுவந்தது. இது குறித்துச் சிவசங்கரிக்குத் தன் மன உணர்வுகளை வெளிப்படுத்தி ஒரு கடிதம் எழுதுகிறார்.

"தானும், தன் மனைவியும் வாழ்ந்த அந்த இனிமையான தாம்பத்தியம், பிறக்கப் போகும் குழந்தைக்காகத் தேர்ந்தெடுத்துவிட்ட பேர், எதிர்காலத்துக்காக யோசித்துத் தீட்டிய அற்புதமான திட்டங்கள்... இத்தனையும் விரிவாக (18 பக்கங்கள்) எழுதியதாகவும் கர்ப்ப காலத்தில் பறிக்கப்பட்டுவிட்டதால் உண்டாகிவிட்ட சூன்யத்தைத் தாங்கத் தெரியாமல் தவிப்பதையும் விவரித்து, 'சத்தியமாகச் சொல்கிறேன் எனக்கு வாழ விருப்பம் இல்லை - செத்தால் என்ன? இனி யாருக்காக வாழ வேண்டும்? என்ற கசப்பு, விரக்திதான் அணு அணுவாய் பரவியிருக்கிறது' என் நிலை உங்களுக்குப் புரிகிறது அல்லவா? என்று எழுதி இருந்தார்"[3] என்று சிவசங்கரி எழுதுவதுடன் முரளி, சிவசங்கரியின் எழுத்துக்களைப் படித்ததன் மூலமாக மட்டுமே அறிந்தவர், அந்த எழுத்துக்களைப் படித்ததன் மூலம் ஏற்பட்டிருந்த ஒரு பிடிப்பினால் இக்கடிதத்தைச் சிவசங்கரிக்கு எழுதுவதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

சிவசங்கரி, "அந்தக் கடிதம் வந்த அன்றைக்கு வேறு எந்த வேலையிலும் புத்தி போக முடியாமல் முரளியின் துக்கம் என்னையும் பாதிக்க, எனக்குத் தெரிந்தவிதத்தில் அவருக்கு ஆறுதல் சொல்லி நான் பதில் கடிதம் எழுதினேன். பதில் கிடைத்த மூன்றாம் நாள் முரளி என்னைச் சந்திக்க நேரில் வந்தார்.

பின் நாலைந்து கடிதங்கள்
ஒவ்வொன்றிலும் முன்னேற்றம்
இன்று இந்தக் கடிதம்...

'இன்று எனக்குக் கிடைத்திருக்கும் நிம்மதிக்கு முழு காரணகர்த்தா நீங்கள்தான்' என்று நன்றியுடன் குறிப்பிடும் முரளி, ஆறு மாதங்களாக வேலைக்குச் செல்லாமல் இருந்தவர், இன்று உற்சாகத்துடன் வேலைக்குச் செல்லவும், குழப்பம் நீங்கித் தெளிவுடன் இருப்பதாகவும் எழுதி இருப்பது"[4] நிச்சயமாகச் சிவசங்கரியின் எழுத்திற்கு உரிய மந்திர ஆற்றல்தான் என்றே கருதத் தூண்டுகிறது.

அவர் எழுதிய கடிதம், ஆறுதல் வார்த்தை வாழ்க்கையில் முரளிக்கு ஒரு பிடிப்பை ஏற்படுத்தியுள்ளதை உணர்கிறோம்.

**2. சுந்தரராஜன் எழுதிய கடிதம்**

சுந்தரராஜன் சிவசங்கரியை ஒரு இலக்கியக் கூட்டத்தில் பார்க்கிறார். சிவசங்கரியின் படைப்புகளை விரும்பிப்படிப்பவர் சுந்தர்ராஜன். அதனால் சிவசங்கரியினிடத்து அளவுகடந்த அன்புடையவராகிறார். சிவசங்கரியைக் கண்டு பேசவேண்டும் என விரும்பியவருக்கு, இலக்கிய மேடையில் அவரைக்கண்டதும் மிகவும் மகிழ்ந்தார். நிகழ்ச்சி நிறைவுற்றவுடன், அவரிடம் கையெழுத்து வாங்கச் செல்கிறார் சுந்தர்ராஜன். சிவசங்கரி அவர்முகத்தைப் பார்த்துவிட்டுக் கையெழுத்து போட்டுக் கொடுத்துவிட்டார். சுந்தர்ராஜன், சிவசங்கரி தன்னுடன் பேசவேண்டும் என எதிர்பார்த்து அது நிகழாதபோது, தன் அழகில்லாத முகத்தைப் பார்க்க அவர் விரும்பியவில்லை என்று தவறாகக் கருதி, இக்கடிதத்தை எழுதியுள்ளார்.

"இலக்கிய வட்டதில் உங்களைச் சந்தித்தேன். நீங்கள் என்னிடம் முகம் கொடுத்துப் பேசவில்லை. நிமிர்ந்து ஒரு பார்வை பார்த்தவர் உடனே குனிந்து கையெழுத்துப் போட்டுத் தந்துவிட்டு, அடுத்தவரிடம் கவனத்தைச் செலுத்திவிட்டீர்கள் இதற்குக் காரணம் என் அவலட்சணமான தோற்றம் தானே? எனக் கேட்டு எழுதுகிறார்."[5]

இக்கடிதத்தைப் பார்த்த உடனேயே ஆசிரியர் அவருக்குக் கடிதம் எழுதுகிறார். "இது சின்னக் குறைதான் இதற்காக இடிந்து போகலாமா? " என்று சிவசங்கரி அவர் மனதைத் தேற்றும் வகையில் எழுதினார் சுந்தரராஜன் மீண்டும் பதில் எழுதுகிறார்.

"என் மூக்கு ரொம்பப் பெரியது! என்னைப் பார்ப்பவர்கள் முகத்தைத் திருப்பிக் கொள்கிறார்கள். நான் வாழ்வதினால் என்ன பிரயோஜம்?" என்று நினைத்தவர்க்குப் பதிலாகச் சிவசங்கரி பிளாஸ்டிக் சர்ஜரி பற்றிக் கூறிப் பதில் எழுதுகிறார்.

"பிளாஸ்டிக் சர்ஜரி பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா! விகாரமாகப் பெரிதாக இருக்கும் எந்த உறுப்பையும் சின்னது செய்து, அழகூட்டும் சக்தி அதற்கு உள்ளது. ஆனால், செலவு எக்கச்சக்கமாக ஆகும். உங்கள் வசதி இடம் கொடுத்தால், இதைப்பற்றிச் சிந்தித்துப் பாருங்கள்" [6] என்று எழுதினார். எட்டு மாதங்களுக்குப்பின் சுந்தரராஜன் தொலைபேசியில் சிவசங்கரியுடன் பேசுகிறார்.

"அம்மா நான் பிளாஸ்டிக் சர்ஜன் ஒருவரைச் சந்தித்து, மூக்கைச் சின்னதாக்கச் சிகிச்சை செய்து கொண்டேன். தழும்பு சிறிதும் தெரியாமல் முகம் இப்போது நன்றாக இருக்கிறது. என் அப்பாவின் கம்பெனியிலேயே சேர்ந்து ஒரு மாதமாக வேலைக்குச் செல்கிறேன். வாழ்க்கை இப்போது ரசிக்கக்கூடியதாக உள்ளது " [7] என்று பதில் எழுதியுள்ளார்.

சுந்தர்ராஜனுக்குப் பண வசதி இருந்தது அவர் சிகிச்சை செய்துகொண்டார். சிகிச்சை செய்துகொள்ள முடியாதவர்களுக்கு, சிவசங்கரி ஆலோசனை கூறியுள்ளார்.

"கண்ணாடிக்கு முன் நின்று கொண்டு, தன் பிம்பத்தை உற்றுப்பார்த்து 'அ! இது என்ன பெரிய குறை! அவனவன் கை, கால், விழி போன்ற முக்கிய அங்கங்கள் ஊனத்தோடு வாழ்கிறதை நினைத்துப் பார்த்தால், இது ஒரு குறையே இல்லை. என்னால் ஒதுக்கித்தள்ளக் கூடியதுதான் என்று முணுமுணுத்துக் கொள்ள வேண்டும். காலையில்

கண் விழித்ததும் மறக்காமல் என் குறை மிகமிகச் சிறியது. இது என்னை வேதனைக்குள்ளாக்க சின்ன இடம் தரமாட்டேன் என்று பத்துதரம் நம்பிக்கையுடன் சங்கல்பம் செய்துகொள்ள வேண்டும்"[8] என்கிறார்.

முரளி, சுந்தர்ராஜன் இருவருக்கும் சிவசங்கரி உளவியல் தன்மையில் அவர்கள் மனம் அறிந்து ஆறுதல் வார்த்தைகளும், சரியான வழிகாட்டுதலும் செய்துள்ளதால் அவர்கள் தங்கள் வாழ்க்கையை அவரவர் வழியில் வாழ வழி வகுத்துள்ளது என்பது சிவசங்கரியின் எழுத்திற்குக் கிடைத்த வெற்றி.

இக்கடிதங்களில் சிவசங்கரி உளவியல் தன்மையில் கடிதம் எழுதியிருப்பது திருவள்ளுவரின் 'மன நலம் மன்னுயிர்க்கு ஆக்கம்' (குறள் 457) என்பது போல் அமைந்தது. உளவியலாளர், உள்ளம் அல்லது மனத்தின் செயல்களை விளக்கும் இயல் உளவியல் என்பர். இவர் உளவியலை நனவு நிலை (Consciousness) பற்றிய இயல் என்று விளக்கியுள்ளார். இந்தக் கோணங்களில் சிவசங்கரியின்கடிதங்கள் அமைந்துள்ளன.

சிவசங்கரி தம் எழுத்துகளில் கடித உத்தியைப் பயன்படுத்தித் தம் வாசகரின் துன்பத்தைப் போக்கி நல்வாழ்க்கை வாழ வழி வகுத்துள்ளமை தெளிவாகத் தெரிகிறது.

## II. உளவியல் நோக்கில் சிக்கல்களுக்குத் தீர்வுகூறல்

சிவசங்கரி எந்த ஒரு சிக்கலையும் சாதாரணமாக எடுத்துக் கூறுவதில்லை. அதை அலசி ஆய்ந்து நோக்கி ஓர் உளவியல் அணுகுமுறையில் கண்டது பற்றிக் காண்போம்.

மனிதன் சந்திக்கும் வாழ்க்கைச் சிக்கல்களை ஆய்ந்தவர். அதனை மூன்றாக வகைப்படுத்துகின்றார்.

1. தானாக உண்டாகும் சிக்கல்.
2. நாமாக உண்டாக்கும் சிக்கல்.
3. பிரச்சனை இல்லாதபோதும் இருப்பதாக நம்புவதால் உண்டாகும் சிக்கல்.

உள்ளதை உள்ளவாறு உரைப்பது அறிவியல். இது இதனால் உண்டாவது என்று காரண காரியத்தை விளக்கும் போது அது ஏற்றுக்கொள்ளப்படும் அறிவியல் நோக்காகிறது. அந்த வகையில் இச்சிக்கல்களை வகைப்படுத்தியுள்ளார்.

### 1. தானாக உண்டாகும் சிக்கல்

முனுசாமி என்பவர் டீக்கடையில் அமர்ந்து டீக்குடித்துக் கொண்டிருக்கின்றார். யாரும் எதிர்பாராத வகையில் 'டைராட்' உடைந்து தாறுமாறாக ஓடி வந்த லாரி டீக்கடையில் மோதியதில் அங்கு அமர்ந்து டீக்குடித்துக் கொண்டிருந்த முனுசாமியின் மேல் ஏறி, அவர் அந்த இடத்திலேயே இறந்துவிடுகிறார்.

இந்நிகழ்வு மனிதன் தானாக உருவாக்கவில்லை; எதிர்பாராதவிதமாக அது அமைந்துவிட்டது. இந்தச் சிக்கலை எப்படி எதில் நோக்குவது, அதிலிருந்து எவ்வாறு மீண்டு வருவது என்று புரியாது தவிப்பதுதான் தானாக வரும் சிக்கல் ஆகும். இங்கு முனுசாமியின் குடும்பம் அவனை இழந்ததால் தவிக்கும் நிலை உருவாகியுள்ளது. அதை அவர்கள் எதிர் நோக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது.

இதற்கு ஆசிரியர் எரிக்எரிக்ஸன் என்ற உளவியல் அறிஞர் குறிப்பிட்ட கருத்தை ஏற்றுக் கூறுவார். "இதைப் போன்ற சம்பவங்கள் எப்போதும் பிரச்சனைகளில்தான் முடியும் என்பதில்லை. சில சமயம் திருப்புமுனையாகவும் அமையும்"[9] என்று கூறுவார்.

### 2. நாமாக உண்டாக்கும் சிக்கல்

"புத்தகம் படித்துக்கொண்டிருந்த கணவரிடம், அவர் மனைவி வந்து, மாமியார், நாத்தனார் பற்றிக் குற்றம் கூற, அவர் தன் மனைவி மீது கோபம் கொண்டு பேச, வாக்குவாதம் ஏற்பட்டது. அது தொடர்ந்து கடைசியில் கணவர் மனைவியை அடிக்கும் நிலைக்குச் சென்று, மனைவி கோபித்துக் கொண்டு தன் பிறந்த வீட்டிற்குச் சென்று விட்டார்.

எதிர்த்துப் பேசினால் மேனேஜருக்குப் பிடிக்காது என்று தெரிந்தும், அவருடன் தேவையில்லாமல் பேசி, வேலை போகும் அளவில் நடந்து கொண்டார் எழுத்தர் பணி புரியும் ரங்கநாதன்."[10]

மேற்கூறிய சான்றுகள் மனிதன் தனக்குத் தானே உண்டாக்கிக்கொண்ட சிக்கல்கள். இவற்றுக்குத் தீர்வு தங்களுடைய வேண்டாத பழக்கவழக்கம், சிந்தனையைத் தேவையான அளவு மாற்றி அமைத்துக் கொள்ளுதலே ஆகும்.

பழக்கவழக்கம் என்பது எந்த நேரத்தில் எதைச் செய்ய வேண்டும் என்று அறிந்து செய்தல் ஆகும். முதலில் கூறிய நிகழ்வில் கணவன் புத்தகம் படித்துக் கொண்டிருக்கும் நேரத்தில் மனைவி சென்று குற்றம் கூறிக் கொண்டிருந்தது வேண்டாத செயல். அதை அவர் அமைதியாக ஓய்வு கொள்ளும் நேரத்திலோ, கணவன் - மனைவி தனியாக இருக்கும் பொழுதிலோ சொல்லி இருத்தல் வேண்டும். அவ்வாறு செய்யாத மனைவியின் பேச்சு தானாகச் சிக்கலை உண்டாக்கிக் கொண்டது.

வேலை செய்யும் இடத்தில் தன்னுடைய நிலையை உணர்ந்து, மேலதிகாரிகளிடம் பேசத் தனக்கு உரிய நிலையை அறிந்து நடந்து கொள்ளல் அவ்வாறு நடக்காதபோது தன்னுடைய வேலையே பறிபோகத் தானே காரணம் ஆகிவிட்டநிலை. தங்கள் சிந்தனையை வளப்படுத்திச் சூழ்நிலையை உணர்ந்து செயல்படல் வேண்டும் என்று சிவசங்கரி கூறியுள்ளார்.

**3. பிரச்சனை இல்லாதபோதும் இருப்பதாக நம்புவதால் உண்டாகும் சிக்கல்**

ஒரு குடும்பத்தலைவியின் செயல்களாகச் சிவசங்கரி இதை விளக்குகிறார்.

"வீட்டிலிருந்து வேலைக்காரி முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு சென்றாள். அதனால் அவள் வராமல் இருந்துவிடுவாளோ? என்ற எண்ணம், வேலைக்காரி செய்ய இருக்கும் வேலைகளை எல்லாம் தானே செய்ய வேண்டுமே என்று எண்ணிப் பயந்து தலைவலியைத்

தானே உண்டாக்கிக் கொண்டாள். இது போன்று நடக்காத ஒரு விசயத்தை நடப்பதாகக் கற்பனை பண்ணிச் சிக்கலை உண்டாக்கிக் கொள்வதுதான் பிரச்சனை இல்லாத போது, பிரச்சனை இருப்பதாக நம்புவதாகும். இதற்குச் சிவசங்கரி தீர்வு கூறியுள்ளார்.

"சின்னப் பொறியை ஊதி ஊதிப் பெரிய தீயாக வலுக்கச் செய்வதுபோலக் கடுகத்தனை விஷயத்திலும் பேசிப்பேசி அங்கலாய்த்து, மாய்ந்து உருகி, தவித்து, படபடத்து விஸ்வரூபம் எடுக்கச் செய்து விடுகிறோம் என்பதுதான் நிஜம். கொஞ்சம் நிதானித்தால், கொஞ்சம் யோசித்தால், நம்மால் உருவாக்கப் படுபவைகளை நாமே அடக்குவதும், மறையச் செய்வதும் சுலபம். ஏனென்றால், ஆரம்ப காலத்தில் எந்த ஒரு பிரச்சனையும் ரொம்ப ரொம்பச் சின்னதுதான் என்பதை மறக்காதீர்கள்"[11]

## III. வினா – விடைமூலம் புதிய கருத்துக்களை மக்களிடம் கொண்டு செல்லல்

உலகின் தலை சிறந்த விவசாய விஞ்ஞானிகளில் ஒருவர் எனக் கருதப்படுபவர் டாக்டர்.எம்.எஸ்.சுவாமிநாதன். அவர், எதிர்காலத்தை மனதில் கொண்டு ஓர் ஆராய்ச்சி மையத்தை ஏற்படுத்தி இருக்கிறார். மக்களின் மேம்பாட்டிற்காக, அக்கறையுடன் கொசு ஒழிப்பு, சுற்றுச்சூழல், சுகாதாரம், பெண் குழந்தைகளின் ஆரோக்கியம் அதன் வளர்ச்சி போன்ற கருத்துக்களைத் தம்முடைய ஆராய்ச்சித் திட்டத்தில் இணைத்துச் செயலாற்றி வருபவர். அவரிடத்து மக்களுக்குத் தேவையான கருத்துக்களைப் பெற்று வழங்குகிறார். அக்கருத்துக்களை வினா-விடை அமைப்பில் தந்திருப்பது சிவசங்கரியின் இலக்கிய உத்தியாகும். "பசுமைப்புரட்சி - *(Green Revolution)* பற்றி மக்கள் அறிந்திருப்பார்கள். ஆனால் விவரம் தெரியாத சிலருக்காகக் கேள்விகேட்டு, அதை விளக்குகிறார்.

### 1. 'பசுமைப் புரட்சி' என்றால் என்ன? விளக்க முடியுமா?

பசுமை புரட்சி என்கிற வார்த்தை முதன் முதலில் 'வில்லியம் கார்ட்' என்ற அமெரிக்கரால் உருவாக்கப்பட்டது. உரம், தண்ணீர்,

விதையின் தரம் ஆகியவற்றை வித்தியாசமாகத் தேர்ந்தெடுத்துப் பயிரிடும் போது குறைந்த மகசூல் காணும் நிலத்தில் பல மடங்கு அதிகமாக அறுவடை செய்ய முடிந்ததைத்தான் பசுமைப்புரட்சி என்று குறிப்பிடுகிறோம். இந்தத் திட்டத்தைச் சில உலக நாடுகள் முக்கியமாக இந்தியா கடைப்பிடித்துச் சாதனை செய்திருப்பது பெருமைக்குரிய விஷயம்.

**2. தானிய உற்பத்தியில் இந்தியா தன்னிறைவு பெற்றுவிட்டாலும், வறுமை, பசி, பட்டினி எல்லாம் சுற்றிலும் நிறையவே காணப்படுவது ஏன்?**

உற்பத்தியைப் பெருக்குவது என்பது வேறு, மக்கள் பொருளாதார நிலையை மேம்படுத்துவது என்பது வேறு. நம் நாட்டில் இன்று எண்பது கோடி மக்களுக்குத் தேவையான தான்யத்தை உற்பத்தி செய்கிறோம் என்பது நிஜம். ஆனால் அந்த உணவுப் பொருள்களை வாங்கும் பணவசதி பெரும்பாலான மக்களிடம் இல்லை என்பது உண்மை நிலை.

**3. வறுமையும் பட்டினியும் இன்னமும் இருப்பதற்குக் காரணம் உணவு உற்பத்தியில் பஞ்சம் இல்லை. மக்களின் பொருளாதார நிலை மேம்படாததுதான் என்கிறீர்களா?**

நிச்சயமாய் இந்தியாவில் மட்டும் அல்ல. உலகின் பல நாடுகளில் நிரந்தர பட்டினிச் சாவுகள் அதிக அளவில் இன்னமும் நடக்கின்றன. சரியான உணவு பாலன்ஸ்ட் ஃபுட் சத்துணவு, சுத்தமான குடிநீர் கிடைக்காமல் தினமும் உலகில் சுமார் 70,000 மனிதர்கள் இறக்கிறார்கள். இதில் குழந்தைகள் மட்டும் 25,000 பேர். மொத்த இறப்பில் இந்தியாவில் மட்டும் மூன்றில் ஒரு பங்கு நிகழ்கிறது என்பது நிபுணர்களின் கணிப்பு.

**4. ஒரு நாளைக்கு இந்தியாவில் மட்டும் சுமார் 23,000 மனிதர்கள் பட்டினியால் இறக்கிறார்கள் என்பது கேட்க அதிர்ச்சியாக இருக்கிறது. உலக நாடுகள் ஒன்று திரண்டு இப்பயங்கரத்துக்குத் தீர்வு காண வேண்டாமா?**

உலகளவில் பட்டினியை ஒழிக்கும் திட்டம் (*Global Gunger Project*) என்று சில நாடுகள் ஒன்றாகச் சேர்ந்து கொண்டு அமெரிக்காவில் ஒரு இயக்கத்தைத் துவக்கி இருக்கின்றன. இதன் மூலம் பல நாடுகளிலும் பலதரப்பட்ட நடிவடிக்கைகள் எடுத்து மெது மெதுவாய் பட்டினிச் சாவுகளை அறவே ஒழிக்கும் பணியில் நாங்கள் ஈடுபட்டிருக்கிறோம்.

**5. பட்டினிச் சாவுகளைத் தவிர்ப்பதில் பொது மக்களுக்கும் கடமை இருப்பதாக நினைக்கிறீர்களா?**

கண்டிப்பாக... காந்திஜி அன்று சொன்னார் - 'கிராமங்களிலிருந்து உழைப்பையும், அறிவையும் நகரங்களுக்குக் கொண்டு வருவது தடுக்கப்பட வேண்டும்' என்று. இதை நினைவில் கொண்டு கிராமங்களின் வளர்ச்சியில் கவனம் செலுத்த வேண்டும். இன்றைய மக்கள் தொகையில் பாதி இளைய சமுதாயம்தான். இவர்கள் முனைந்தால் எந்தப் பிரச்சனைக்கும் சுலபமாகத் தீர்வு கண்டுவிடலாம். இளைஞர்கள் கிராமங்களுக்குப் போக, தங்கிப் பணிபுரிய அதன் மேம்பாட்டிற்கு உழைக்க உற்சாகப்படுத்த வேண்டும்.

**6. சமீபத்தில் 'உலகப் பட்டினி ஒழிப்பு இயக்கத்தார்' நடத்திய கூட்டத்தில் பெண் குழந்தைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து வளர்ப்பதன் மூலம் உங்கள் குறிக்கோளைச் சுலபமாக அடையலாம் என்கிறீர்களே. இதை விளக்க முடியுமா?**

இந்தியாவையும், வளரும் ஆசிய நாடுகளையும் எடுத்துக் கொண்டால் பெண் குழந்தையைச் சுமையாக நினைப்பவர்களே அதிகம். இந்தக் கண்ணோட்டம் மாற வேண்டும். இன்றைக்கு நாட்டில் இருக்கும் சுகாதார பிரச்சனை, மக்கள் தொகை பெருக்கம், வறுமை, பட்டினி போன்ற பலவற்றுக்குப் பெண்களின் அறியாமை ஒரு முக்கிய காரணம். தேவையான படிப்பு, தன்னம்பிக்கையுடன் ஒரு பெண் உருவானால் அவள் பேணிக்காக்கும் குடும்பத்துக்குச் சுகாதாரம், ஆரோக்கியம், பொருளாதாரம், சுற்றுப்புறச் சூழ்நிலை என்று அனைத்திலும் அது பிரதிபலித்து நன்மைகளைச் செய்கிறது.

**7. சென்னை நகரில் பெருகியுள்ள கொசுக்களை மாணவர்களைக் கொண்டு கட்டுப்படுத்தும் இயக்கம் ஒன்றை நீங்கள் துவக்கி இருப்பதைப் பற்றிக் கொஞ்சம் கூற முடியுமா?**

மக்களின் ஒத்துழைப்பு இருந்தால்தான் எந்தச் சமுதாயப் பிரச்சனைக்கும் தீர்வு காணுவது சாத்தியமாகும். 1934 ஆம் ஆண்டு என் தந்தை டாக்டர்.சாம்பசிவம் கும்பகோணத்தில் முனிஸிபல் சேர்மனாக இருந்தார். அந்தக் காலத்தில் கும்பகோணத்து யானைக்கால் நோய் மிகவும் பிரசித்தம். அதனால் தெருத் தெருவாய்ச் சென்று மக்களிடம் விழிப்புணர்வு உண்டாக்கி, கொசுக்கள் உற்பத்தியாகும் நீர்த்தேக்கங்களை மூடிக் கச்சா எண்ணெய் தெளித்து ஒன்றரை ஆண்டுக் காலத்தில் அந்த மாபெரும் பிரச்சனைக்குத் தீர்வு கண்டார். அப்படி இப்போதும் மக்கள் உதவ முன்வந்தால் நிச்சயம் தமிழ் நாட்டில் கொசுக்களை அறவே ஒழிக்கலாம். அசுத்த நீரில் தான் மலேரியா கொசுக்கள் உற்பத்தி ஆகும் என்பது தவறான எண்ணம். வீட்டில் பிடித்து வைத்திருக்கும் தொட்டித் தண்ணீர், மொட்டை மாடி நீர்த் தொட்டி, கிணற்று நீரில்தான் அனாஃபிலஸ் கொசு இனப்பெருக்கம் செய்கிறது. இவைகளை மூடிச் சுத்தமாக வைப்பதன் மூலம் மலேரியா கொசுக்களை அடியோடு அழிக்கலாம். இது செய்வதற்கு எளிது. தற்சமயம் வீட்டுக்கு ஒரு மாணவர் இருக்கும் நிலையில் அவர்களைக் கொண்டே பெரியவர்களிடம் எடுத்துச் சொல்ல வைத்து விழிப்புணர்வை உண்டாக்குவது இந்த இயக்கத்தின் குறிக்கோள்.

**8. பொதுவாக நாட்டின் இன்றைய நிலைபற்றி உங்கள் கருத்து என்ன?**

இந்தியா ஏழை நாடுதான் ஒப்புக் கொள்கிறேன். ஆனாலும் நம்மிடம் மனித சக்தி இயற்கை வளங்கள் நிறைய இருக்கின்றன. இவற்றைப் பயன்படுத்தி ஆக்கப்பூர்வமான முன்னேற்றத்தில் ஈடுபட வேண்டும். சமுதாயப் பாதுகாப்பு முன்பு இருந்த மாதிரி இன்று இல்லை. இந்த நிலை மாற வேண்டும். 'எந்த கஷ்டமும் என் குழந்தைக்கு, எனக்கு வந்தால் தான், நான் அதில் கவனம்

செலுத்துவேன்' என்ற கேவலமான சுயநலம் நிறையபேர்களிடம் காணப்படுகிறது. நாட்டுக்கு ஒரு கேடு வந்தால் அது நமக்கு வந்த மாதிரி. பல விஷயங்கள் குறித்து விழிப்புணர்வே மக்களிடம் இல்லை. விழிப்புணர்வு உண்டாக்க வேண்டும்.

**9. விமோசனம் இல்லாத அளவுக்கு நிலைமை சீர் குலைந்து விட்டது என்றுநினைக்கிறீர்களா?**

பல விஷயங்களில் நாடு மிகவும் தாழ்ந்துவிட்டது என்பது உண்மைதான் என்றாலும், தீர்வு காண முடியாத நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்டதாக நான் கருதவில்லை. முன்பு சொன்னது போன்று இன்றைய மக்கள் தொகையில் பாதி இளைய சமுதாயமாக இருப்பது நம் நாட்டின் மிகப்பெரிய பலம். இவர்களைச் சிறு வயது முதற்கொண்டே சரியான வழியில் கொண்டு சென்று, உருவாக்கி, பொறுப்பு, நேர்மை, உழைப்பின் அவசியம் ஆகியவற்றை உணர்ந்த மக்களாக உருவாக்கி, சமுதாயத்தை மாற்றுவதன் மூலம் எத்தகைய பிரச்சனைக்கும் எதிர் காலத்தில் தீர்வு கண்டு, இந்தியாவை ஆரோக்கியமான, சக்தி மிகுந்த நாடாக மாற்ற முடியும் என்கிற நம்பிக்கை எனக்கு நிறையவே இருக்கிறது என்கிறார்"[12] எம்.சுவாமிநாதன்.

எம்.எஸ்.சுவாமிநாதன் எடுத்துக் கொண்டுள்ள பணி உயர்வானது. அவரைத் தொடர்ந்து இன்றைய குடியரசுத் தலைவர் ஏ.பி.ஜெ.அப்துல் கலாம் அவர்களின் சிந்தனையும், இன்றைய இளைஞர்களை ஊக்கப்படுத்தி, நெறிப்படுத்தினால், அந்த இளஞ்சிங்கங்கள் சமுதாய மாற்றத்திற்குப் பெரும் சக்தியாக விளங்குவார்கள். இன்று நாட்டுநலப் பணித்திட்டம் பள்ளி, கல்லூரிகளில் இத்தகைய பணியையே செய்து வருகிறது. முன்னுதாரணங்களும், வழி நடத்திச் செல்ல நெறியாளர்களும் இருந்தால் இளைஞர்சக்தி பெரும் பணிபுரியும் என்பது மறுக்கமுடியாத உண்மையாகும்.

துறை சார்ந்த அறிஞர்களை அணுகி நாட்டின் நிலை, பொருளாதாரச் சிக்கல், அதனை மாற்றும் வழி ஆகிய கோணங்களில் வினாக்களைக் கொடுத்து விடைகளைப் பெற்று, சாதாரண மக்களிடம்

சமுதாய விழிப்புணர்வை ஏற்படுத்தும் ஆற்றல் மிக்கவர் சிவசங்கரி என்பதை வினா-விடை உத்தியின் மூலம் காட்டியுள்ளார்.

## IV. சின்னச்சின்ன கதை கூறிக் கருத்துக்கு வலுச்சேர்த்தல்

தனி மனிதனின் ஆளுமைத் தன்மையை விளக்கச் சிவசங்கரி சின்னச்சின்ன உதாரணங்களையும், கதையையும் கொண்டு விளக்குகிறார்.

வேலைக்கான நேர்முகத் தேர்வு ஒன்று நடைபெறுகிறது. அதில் பங்கேற்ற இளைஞரிடம், கேட்கப்பட்ட கேள்வி, "வாழ்க்கையில் வெற்றிபெறத் தேவையான தகுதிகள் உங்களிடம் இருக்கின்றனவா?" என்று,

அதற்கு வந்திருந்த பட்டதாரி இளைஞர் பதில், "என்னால் காத்திருக்க முடியும், என்னால் பட்டினி கிடக்க முடியும், என்னால் பிரார்த்தனை செய்ய முடியும்" *(I can wait, I can fast and I can pray)* என்று தயங்காமல் கூறுகிறார்.

இதற்கான விளக்கத்தை எடுத்துக்கொண்டு, அந்த இளைஞரின் ஆளுமையை சிவசங்கரி விளக்குகிறார்.

1. "பதறாத காரியம் சிதறாது. நான் எதற்கும் பதட்டமடையாமல், என் முறைவரும் வரை காத்திருந்து, அச்சந்தர்ப்பத்தைச் சரியானபடி உபயோகித்துப் பணி செய்வேன். எனவே என் வேலையில் தடுமாற்றமோ, அள்ளித் தெளித்த அவசர கோலமோ இருக்காது.

2. என்னால் பட்டினி கிடக்க முடியும் என்பதால், கோபமோ, ஆத்திரமோ என்னைத் தாக்க வழியில்லை. 'பசி வந்திடப் பத்தும் பறந்து போகும்' என்ற சீரழிவு எனக்கு வராது. என்னால் பொறுமையாக இருந்து எந்த நேரத்திலும் உணர்வுகளைக் கட்டுப்படுத்த முடியும்.

3. என் குறைகளை நான் நன்றாக அறிவேன். அதனால் எனக்கும் மேலுள்ள சக்தியான கடவுளிடம் என் குறைகளைக் குறைக்கும்படியும் கூடவே நின்று உதவும்படியும் வேண்டுவேன்." என்று விளக்கம் கூறினார். இந்த விளக்கத்தை எடுத்து எழுதும் சிவசங்கரி;

"சுய அலசல் மூலம் வரும் விழிப்புணர்வுகள் இப்படித்தான் இருக்க வேண்டும். 'விரலுக்குத் தகுந்த வீக்கம்' என்பதுபோல் தன் தகுதி அறிந்து வைத்திருப்பதுதான் விழிப்புணர்வு. ஆளுமையை வளர்த்துக் கொள்ளும் வழிமுறை இதுதான்"[13] என்று குறிப்பிட்டுள்ளார்.

**சூழ்நிலையின் முக்கியத்துவத்தை விளக்கும் கதை**

ஒரு மனிதனின் ஆளுமையை உருவாக்குவது அகம், புறம் சார்ந்த தன்மை மட்டும் அல்ல. சூழ்நிலைகளும் ஒரு மனிதனின் ஆளுமையைத் தீர்மானிப்பதில் மிகுதியான பங்கு வசிக்கிறது என்பதைச் சிறுகதை மூலம் விளக்குகிறார்.

ஒரு ராஜா மிகவும் நல்லவர். எதிலும் சுத்தத்தைக் கடைப் பிடிப்பவர். அழகும், ஒழுங்கும் கட்டுப்பாடும் நிறைந்திருப்பதை எதிர்பார்ப்பவர். அவை நாடு, வீடு எல்லா இடத்திலும் இருக்க வேண்டும் என்பார். அவர் தன்னை முதலில் தூய்மையாகப் பேணி, அதன் மூலம் மக்களுக்கு முன்னுதாரணமாக விளங்குபவர்.

அவர் ஒரு முறை வேட்டையாடக் காட்டுக்குச் சென்றார். அங்கு அவர் காட்டு மிருகம் என்று நினைத்து ஒரு முனிவர் மீது தவறாக அம்பு எய்திவிட்டார். முனிவர் கோபம் கொண்டு, "என்னை மிருகம் என்று எண்ணிய நீ நாளைக்காலை பொழுது விடியும்போது பன்றியாகி விடுவாய் ! " என்று சாபமிட்டுவிட்டார்.

"ராஜாவுக்குத் தாங்க முடியாத வேதனை. சாபம் பெற்றதற்காக அவர் வருந்தவில்லை. தன்னைப் பன்றியாகிப் போகும்படி முனிவர் சாபம் விட்டுவிட்டாரே என்றுதான் துக்கம் அடைந்தார். பன்றி, அசுத்தங்களிலும், தேங்கிய குட்டை, அழுக்குநீர்களில் புரளும்

விலங்காயிற்றோ. இத்தனை ஆண்டுகளாக எவ்வளவு தூய்மை, ஒழுங்கு, அழகு என்று வாழ்ந்துவிட்டு, இப்போது இப்படி ஒரு நிலை ஏற்பட்டுவிட்டதே என்பது அவருக்குக் கவலை அளித்தது. அரண்மனைக்கு வந்ததும், தன் மூத்த மகனை அழைத்துக் காட்டில் நடந்தவற்றைக் கூறினார். பின் நான் பன்றியாக அரண்மனையில் வாழ விரும்பவில்லை. அதனால் இன்று மாலையே மறுபடி காட்டுக்குப் போய் விடுகிறேன். நாளை நான் பன்றியானதும் நீ அங்கு வந்து கண்ணில் படும் பன்றிக் கூட்டத்தின் அருகில் நின்று 'அப்பா' என்று அழைத்தால், நான் உடனே என்னை அடையாளம் காட்டிக்கொள்கிறேன். நீ என்னைக் கொன்றுவிடு! இத்தனை உயர்ந்த வாழ்க்கை வாழ்ந்த பிறகு கேவலமாக வாழ எனக்கு இஷ்டமில்லை" என்று பணிக்கிறார். மகனும் வேறு வழியின்றி ஒப்புக்கொள்ள, மறுபடி காட்டுக்குப் போய்விடுகிறார்.

மறுநாள், மகன் காட்டுக்குப்போய் கண்ணில்பட்ட பன்றிக் கூட்டத்திலெல்லாம் தன் தந்தையைத் தேட, எங்குமே அவர் குரல் கேட்கவில்லை. மகனும் சோர்வடையாமல் ஒவ்வொரு நாளும், வாரமும், மாதமும் வந்து தேடியும் பலனில்லை.

கடைசியில் ஆறு மாதம் கழிந்த நிலையில் ஒரு சகதிக் குட்டையில் இரு பன்றிகள் அருகே சின்னச்சின்ன குட்டிகளைக் கண்டான். வழக்கம் போல 'அப்பா' என்று அழைக்க, உடனே 'மகனே' என்ற பதில் கேட்கிறது. ஒரு வழியாகத் தந்தையைக் கண்டுபிடித்தோம் என்கிற நிம்மதியில் மகன் வில்லில் அம்பைப் பூட்டி குறி பார்க்க, "வேண்டாம், அடிக்காதே, மகனே நில் !" என்று அப்பாவின் குரல் ஒலிக்கிறது. "மகனே, இது உன் சித்தி, இவை உன் தம்பி தங்கைகள் ! இந்தப் பன்றி வாழ்க்கை கூட நன்றாகத்தான் இருக்கிறது ! அதனால் என்னை வாழ விட்டுவிடு! என்கிறார்."[14]

'சூழ்நிலையின் தாக்கம் மனிதனின் ஆளுமையை எப்படி மாற்றி அமைக்கிறது; எவ்வாறு உயர்வாக வாழ்ந்த மனிதரைக் கூட சூழ்நிலையும் தேவையும் மாற்றிவிட்டன' என்பது ஆசிரியரின் கருத்தாகும்.

இன்று சமுதாயத்தில் பல உயர்ந்த மனிதர்கள் இவ்வாறே வாழ்கிறார்கள். சிவசங்கரி தன் வாழ்க்கையில் கடைப்பிடிக்கும் சில பண்புகளை மக்களுக்கு எடுத்துரைப்பது வழக்கம். இங்குத் தன் நண்பரின் கருத்தை ஏற்று, அவர் கடைப்பிடிப்பதைக் குறிப்பிடுகின்றார்.

"கூடுமானவரையில் நீ யாரையும் காயப்படுத்தாதே; உன்னையும் யாரும் காயப்படுத்த இடம் கொடாதே என்பதும், 'எதிர்பார்ப்புகள் இல்லாமல் இருக்கப் பழகிக்கொள் அதன் மூலம் ஏமாற்றத்தையும், வலியையும் குறைக்கலாம்' என்பதும் நண்பரிடமிருந்து நான் கற்றிருக்கும் பாடங்களில் முக்கியமானவை"[15] என்று கூறும் சிவசங்கரி இதற்கு வலுவூட்டுவதாக மனோதத்துவ நிபுணர்களின் கருத்தையும் கூறுகிறார். "மனதளவில் நம்மை அடுத்தவர் ரணப்படுத்த அனுமதிப்பதும் அனுமதிக்காததும் நம் கையில் மட்டுமே இருக்கிறது என்கிறார் டாக்டர்.டயர்"[16]

இவ்விரு கருத்துக்களையும் உறுதிபடுத்தப் புத்தரின் கதை ஒன்றையும் கூறித் தான் கூற வரும் கருத்துக்கு உறுதி சேர்ப்பது சிவசங்கரியின் உத்திகளுள் ஒன்றாகும்.

"புத்தர் தினமும் யாசகத்திற்குச் சென்று பிச்சை கேட்டு வாங்கி உண்ணுவது வழக்கம். அப்படி இருக்கும் போது ஒரு நாள் ஒரு மனிதர் "என்ன இது ராஜ குடும்பத்தில் பிறந்து பிச்சையெடுக்கிறாயே வெட்கமாக இல்லையா?" என்று ஆரம்பித்து கொஞ்சம் கேவலமாகவே திட்ட, புத்தர் எதற்கும் பதில் கூறாமல் சிரித்துக் கொண்டே இருந்தாராம். புததர் கூட வந்த சிஷ்யர்களுக்குத் தாங்கவில்லை. திட்டின ஆள் நகர்ந்த பிறகு 'ஐயா, அவர் திட்டியதற்குப் பதிலுக்கு அடிக்க வேண்டாம், திட்ட வேண்டாம் ஆனால், சிரிக்காமலாவது இருந்திருக்கலாம் இல்லையா' என்று கேட்டபோது புத்தர் இன்னும் அதிகமாகச் சிரித்தவாறு 'அப்பனே, நீ ஒரு பொருளைக் கொடுத்து அதை நான் வாங்கிக் கொண்டால்தான் அது என்னுடையது, வாங்காதவரை அது உன்னுடையதுதான். அதைப்போலவே அந்த ஆள் சொன்ன வார்த்தைகளை நான் வாங்கவேயில்லை அவை

அவனிடத்திலேயே இருக்கின்றன !' என்று சொன்னாராம்."[17] ஆகவே மனிதன் மற்றவர் தன்னை அடிக்கும் போதும், வார்த்தைகளால் அடிப்படுவதும், அதைத் தூக்கி எறிந்து நிம்மதியாய் இருப்பதும், அவரவர் மனநிலையைப் பொறுத்ததாகும் என்பது தெரிகிறது.

## V. முக்கியக் கருத்துக்களைப் பட்டியலிட்டு வரிசைப்படுத்தி உரைத்தல்

போதைப்பொருள் பயன்படுத்த அடிப்படைக் காரணங்களை வரிசைப்படுத்துகிறார்.

"1. அது என்ன என்று அறியும் ஆர்வம்.
2. அதைப் பயன்படுத்தினால் இன்பம் தரும் என்கின்ற நம்பிக்கை.
3. அடுத்தவரின் நிர்ப்பந்தம்.
4. வாழ்க்கையில் ஒரு சலிப்பு, விரக்தி.
5. தன்னை யாரும் சரியாகப் புரிநதுகொள்ளவில்லை என்கின்ற ஏக்கம்.
6. கனவுகள் நனவாகாத ஏமாற்றம்.
7. அதிகமான பணப்புழக்கம்
8. சிரமமில்லாமல் போதை மருந்துகள் கிடைக்கும் வாய்ப்பு.
9. உடல், மனம் அதற்கு அடிமையாகிவிட்டால் தொடர வேண்டிய கட்டாயம்."[18]

இவ்வாறு போதைப் பொருளைப் பயன்படுத்தப் பல காரணங்களைப் பட்டியலிட்டு எழுத்தாளர் சிவசங்கரி காட்டியுள்ளார்.

## போதைப்பொருள்களின் தன்மையை வகைப்படுத்துதல்

போதை மருந்து என்பது பல வகைகளைக் கொண்டது. இயற்கையாய் உற்பத்தி செய்யப்படுபவை, செயற்கையாய் உண்டாக்கப்படுபவை, உற்சாகப்படுத்துபவை, பிரமை உண்டாக்கு பவை என்று சில பிரிவுகள் உள்ளன.

1. மத்திய நரம்பு மண்டலத்தின் இயக்கங்களைத் தூண்டி விடுபவை. (எ.கா - ஸ்பீட் எனப்படும் மாத்திரை வகைகள், கொக்கேன், நிக்கோடின்.)

2. மத்திய நரம்பு மண்டலத்தின் இயக்கத்தை மட்டுப் படுத்துபவை-தூக்க மாத்திரைகள், குடித்தல்.

3. பிரமை உண்டாக்குபவை - எல்.எஸ்.டி மாத்திரைகள், சில காளான் வகைகள்

4. ஒரு வகை மிதப்பைத் தருபவை-கஞ்சா.

5. வலி, மனவேதனை குறைக்க உதவுபவை - ஒபியம், பெத்தடின், உறிராயின், ப்ரவுன்ஷுகர். போன்றவை.[19]

**ஒருவர் போதை மருந்து உபயோகிப்பவர் என்பதைக் கண்டறிய உதவும் அறிகுறிகளைத் தொகுத்துக் கூறல்**

1. கண்ணில் சிகப்பு
2. கண்ணில் சுரக்கும் நீர்
3. பேச்சில் குழறல்
4. நிதானமில்லாத நடை
5. பசியின்மை
6. எடை குறைதல்
7. அனாவசிய கோப, தாபக் கத்தல்கள்
8. கை, இதர பகுதிகளில் ஊசி போடுவதால் உண்டாகும் கரும்புள்ளிகள்.
9. உடைகளில் ரத்தக் கறைகள்
10. துணி, சுவாசித்தல் ஒரு வகை வாடை
11. இஞ்செக்ஷன் கருவிகள், நூதனமான சாதனங்களை வைத்திருப்பது.
12. வீட்டிலிருந்த பொருட்கள் காணாமல் போவது
13. தனிமையை நாடிச் செல்லுவது, மொட்டை மாடி, குளியல் அறையில் தேவையில்லாமல் தனித்திருப்பது [20]

**போதை மருந்து உபயோகிக்கும் பிள்ளைக்கு, பெற்றோர் செய்ய வேண்டியவை கடமைகள் பற்றிக் கூறல்**

1. குழந்தைகளுடன் நண்பர்களாகப் பழக முயன்று பையனின் ரசனைகளை, நடவடிக்கைகளை, நண்பர்களை அறிந்து கொள்ள வேண்டும்.

2. பிள்ளை போதை மருந்து உபயோகிப்பது தெரிய வந்தால், அதற்கான காரணத்தை ஆராய்ந்து உதவ முன்வருதல்.

3. குழந்தைக்கு நல்ல முன் உதாரணம் (Role Model) அவசியம். குடிக்காமல், சிகரெட் பிடிக்காமல் இருந்து தாமே சிறந்த உதாரணமாக விளங்க முயற்சிப்பது.

4. வீட்டில் உள்ள தேவையற்ற மருந்துகளை அப்புறப்படுத்தி விடுவது.

5. போதை மருந்துப் பழக்கமா? அது மேலைநாட்டுப் பிரச்சனை அல்லவா? என்று பயந்து ஒதுங்காமல் யதார்த்தத்தை உணர்ந்து, அது பற்றிய விவரங்களைத் தெரிந்துகொண்டு விழிப்போடு இருக்க முயல்வது.[21]

**நமக்குத் தெரிந்தவர்க்கு இந்தப் பிரச்சனை இருந்தால் நாம் செய்ய வேண்டியவை**

1. முதலில் அது உண்மைதானா? என்று உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும்.
2. அவருடைய பிரச்சனைகளைப் புரிந்து நாம் செயல்படுவதை உணர்த்த வேண்டும்.
3. போதை மருந்து தீங்கு விளைவிக்கும் என்பதைப் பக்குவமாக உணர்த்த முயல வேண்டும்.
4. 'உனக்கு நான் உதவ விரும்புகிறேன்' என்பது புரியும் விதத்தில் நடந்து கொள்ள வேண்டும்.
5. மடக்க, சண்டைபோட, திட்ட, அறிவுரை கூற முயற்சிக்கவே கூடாது.

6. அளவுக்கு மீறின பச்சாதாபத்தைக் கண்டிப்பாய்க் கொடுக்கக் கூடாது.

7. நாமாகவே கவனித்துவிடலாம் மருத்துவர் உதவி தேவையில்லை என்று முடிவுக்கு மட்டும் வரவே கூடாது[22]

குடிப்பழக்கம் 20 வருடங்களில் ஒரு சமுதாயத்துக்குச் செய்யும் தீமைகளைப் போதை மருந்து இரண்டே வருடங்களில் செய்துவிடுகிறது என்கிறார்கள் நிபுணர்கள். இவ்வளவு கொடிய செய்திகளை மக்கள் எளிதில் புரியும் வகையில், கருத்துக்களைப் பிழிந்து எடுத்து, முத்து முத்தாகக் கொடுப்பது சிவசங்கரியின் எழுத்து உத்தியின் தனித் தன்மையாகும்.

போதை மருந்துப் பிரச்சனையை மும்முனைத் தாக்குதல் மூலம் சமாளித்தல் நல்ல விளைவுகளைத் தரும் என்று தன் அனுபவத்தை வகைப்படுத்துகின்றார்.

1. **விழிப்புணர்வு** *(Awareness)*: எழுத்து, வானொலி, திரைப்படம், நாடகம், தொலைக்காட்சிக் கூட்டங்கள் மூலம் 'வேண்டாம் என்று சொல்லுவோம்; வரும் முன் காப்போம்' என்று பிரச்சாரம் செய்து பிரச்சனையின் பயங்கரத்தை மக்கள் உணரச்செய்வது.

2. **புனர்வாழ்வு** *(ReHabilitation)*: அறியாமையினால் அடிமையாகித் தவிப்பவர்க்கு உதவி கரம் நீட்டி, புது வாழ்வு அமைய உதவுவது.

3. **சரியான சட்டம்** *(Proper legislation)*: சட்டத்தைக் கண்டிப்பாக்கி, போதை மருந்து கடத்துபவர், விற்பவர்களுக்குக் கடும் தண்டனை வழங்குவதன் மூலம் அதன் புழக்கத்தை எளிதாய் கிடைப்பதைத் தடை செய்வது[23]

மேற்கூறிய கருத்துக்களை மக்கள் மனதில் கொண்டு செயல்பட வேண்டும் என்று சிவசங்கரி தம் எழுத்து மூலம் வலியுறுத்திக் கூறியுள்ளார்.

## VI. சிவசங்கரியின் மொழிநடை

சிவசங்கரி அந்தணர் குடும்பத்தைச் சார்ந்தவர். அவர் தமிழ் மொழியைப் பாடமாக எடுத்தும் படிக்கவில்லை. பள்ளி, கல்லூரிகளில் வடமொழி பயின்றவர். மேலும் அவர் எழுத வேண்டும் என்ற குறிக்கோள் எதுவும் படிக்கின்ற காலங்களில் கொள்ளவில்லை. அவரது எழுத்தின் தொடக்கம், அவரது மனவேதனை, மன உந்துதல் காரணமாகத் திடீரென எழுதத் தோன்றியது. முதல் கதையே அனுப்பியவுடன் கல்கியில் வெளிவந்தது. அது அவரது வாழ்க்கையில் ஏற்பட்ட திருப்பம் என்று கருதலாம்.

அப்படி எழுதத் தொடங்கியவர், தன்னைச் சுற்றி நிகழும் நிகழ்வுகள், மனிதர்களின் அவலங்கள், தன்னுடைய அனுபவங்களை எழுத்தில் கொடுக்க முனைந்தார். அந்த வித்து இன்று வளர்ந்து பெரிய ஆலமரமாக, தமிழ் இலக்கியத்தில் விளங்குகிறது.

சிவசங்கரியின் எழுத்தை ஆரம்ப காலங்களில் விமர்சனம் செய்தவர்கள் அவர் ஆங்கிலம், வடமொழிக்கலப்பு அதிகம் கையாளுகிறார் என்று குற்றம் சாட்டினர். அதற்குச் சிவசங்கரி கூறும் விளக்கம் தான் வாழும் சூழல் பழகும் மக்கள் மேட்டுக்குடியினர். அதனாலும், அவர்களைச் சார்ந்து எழுதுவதனாலும் அவ்வாறு அமைந்துள்ளது. பின்னர் அவர் விழுப்புரத்திற்கு வந்தபோது, அங்கு வாழ்ந்த போதும் அம்மக்களுடன் கொண்ட உறவாலும் என் எழுத்தில் மாற்றத்தைக் கொண்டுள்ளேன் என்றும் கூறுகிறார்.

அவர் ஆரம்பகால எழுத்து பாரதியின் எழுத்துத் தாக்கத்தைக் கொண்டிருந்தது என்று அவர் கூறுவார். தன்னை வாசகர்கள் விமர்சனம் செய்த போது, "இவள் ஆங்கிலம் கலந்து எழுதுகிறாள், இவள் வடமொழி பித்துக் கொண்டவள் என்றெல்லாம் என் மீது பலர் குற்றம் சாட்டிய போது எனக்குப் பக்கபலமாக என் வேதனைக்கு மருந்தாகப் பாரதியார் எழுத்துக்கள் இருந்தன என்பது உண்மை" [24] என்கிறார்.

பாரதியின் எழுத்து நடை, "தமிழையும், வடமொழியையும் கலந்து புதுச் சொற்றொடர் அமைந்திருக்கும். அவர் வசன நடை பற்றிக் குறிப்பிடுவது, கூடிய வரை பேசுவது போலவே தான் எழுதுவது உத்தமம் என்பது என்னுடைய கட்சி, எந்த விஷயம் எழுதினாலும் சரி, ஒரு கதை அல்லது ஒரு தர்க்கம், ஒரு சாஸ்திரம், ஒரு பத்திரிகை விஷயம் எதை எழுதினாலும் வார்த்தை, சொல்லுகிற மாதிரியாகவே அமைந்துவிட்டால் நல்லது ... ஆனால் எழுதி முடிக்கும் போது வாய்க்கு வழங்குகிறதா என்று வாசித்துப் பார்த்துக் கொள்ளுதல் நல்லது"[25] என்பார் பாரதியார்.

பாரதியின் இந்தக் கட்டுரையைப் படிக்கும் முன்னரே, "இதே கண்ணோட்டத்தோடு எழுதத் துவங்கிய எனக்கு அவரது வார்த்தைகள் எத்தனை மகிழ்ச்சியைத் தந்திருக்கும்"[26] என்று வியந்து கூறுகிறார் சிவசங்கரி.

பின்னர் சிவசங்கரியின் எழுத்தின் போக்கில் மாற்றம் ஏற்பட்டது. அது அந்தந்த மக்கள் பேசும் மொழி அமைப்பைக் கொண்டு விளங்கியது. அந்தமொழிநடையில் அந்தணர் வழக்கும் அல்லாமல், கிராமிய வழக்கும் இல்லாத இயல்பான நிலையில் பேச்சு வழக்கு நடையைப் பயன்படுத்தியுள்ளார் என்பதை அறிய முடிகிறது.

ஒரு பெண்ணுக்கு உடல் நலமில்லை. அது குறித்து அவளுடைய புகுந்தவீட்டில், அவ்வீட்டு மக்கள் நடந்து கொண்ட விதத்தை விளக்குகிறார் வருமாறு :

திருமணம் ஆகிக் குழந்தைகள் பிறந்த பின், மாதவிலக்குப் பிரச்சனையில் மாற்றம் ஏதும் இல்லாது போனதோடு, உதிரப் போக்கு ஏகமாய் இருக்க முற்பட புருஷன், மாமியார், அம்மாவிடம் தயக்கத்துடன் கூறியவருக்குப் புகுந்த வீட்டில் கிடைத்த பதில், "இது பெண்கள் விவகாரம், என்னிடம் ஏன்சொல்கிறாய்?" என்று கணவனும், "பெண்ணாகப் பிறந்தாலே இந்த ரோதனைதான் என்ன செய்வது? உங்கள் பரம்பரையில் இந்தக் கோளாறு உண்டா? என்று அம்மாவிடம்

கேள்" என்று மாமியாரும், "ஐயோ - என்னைக் கொள்ளாமல், உன் அத்தையைக் கொண்டுவிட்டாயே! அவளுக்கு இப்படித்தான் ஓயாமல் போகும். அவலக் குணத்துக்கு அத்தை என்று சொல்வது உன் விஷயத்தில் சரியாகப் போயிற்று போ" என்று அம்மாவும் கூற, 'குமாரியும் நிலைமையை அப்படியே ஏற்றுக் கொண்டாள்."[27]

இதில் நடுத்தர மக்களின் பேச்சு வழக்கு அப்படியே பதிந்து இருப்பது சிவசங்கரி தன் மொழிநடையைப் பழைய நிலையில் இருந்து சற்று மாற்றியுள்ளார் என்பது தெரிகிறது.

**கிராமத்து மக்கள் பேச்சுவழக்கு**

உசிலம்பட்டியில் நடக்கும் சிசுக் கொலை பற்றி அறிந்து கொள்ள அங்குச் சென்றிருந்தார் சிவசங்கரி. அங்குச் சமீபத்தில் நடந்த சிசுக்கொலை பற்றி அந்தப் பெண்ணிடம் வினவுகிறார்.

"... போன மாசம் உனக்கு மூணாவதா ஒரு பொம்பளைக் குழந்தை பிறந்து செத்துருச்சுனு கேள்விப்பட்டேன்... அது எப்படி செத்தது?" அந்தப் பெண் காதில் விழாதமாதிரி, பிஸ்கட்டை மகனுக்குப் பிரித்துக் கொடுப்பதில் முனைந்திருக்க, மறுபடிகேட்டேன், பதில் இல்லை. இப்போது பூசாரி குறுக்கிட்டார். "பரவாயில்லை ... பயப்படாம சொல்லு" அவள் நிமிராமலேயே பேசினாள். "தானா சாகலை ... நாங்கதான் கொதிக்கற கோழிக் கொழம்ப வாயில ஊத்தி கொன்னுட்டம்" நாங்க.. னா? "எம் மாமியார் கிழவியும், நானும்.." குப்பையைப் பெருக்கி, அள்ளிக் கொட்டினேன் என்கிற மாதிரி விட்டேத்தியாய் அவள் பதில் கூற, நான் லேசாய் குரல் உயர பதைத்தேன்"[28] என்கிறார். இதில் கிராமத்துமக்களுக்கு ஏற்பத் தன் மொழிநடையை மாற்றி அமைத்து எழுதியிருக்கின்றார். இவ்வாறு அந்தந்தச் சூழலில் அந்தந்த மக்களின் பேச்சு வழக்கைப் பயன்படுத்தி மொழி நடையை வளப்படுத்தி எழுதியுள்ளார் என்பது தெளிவாக்கப் புலனாகிறது.

**முடிவுரை**

காலத்திற்கேற்ப வடிவமும், உள்ளீடும் மாறிக்கொண்டே வருவதுபோல், புதுப்புது உத்திமுறைகளும் தோன்றி வளர்ந்துவருகின்றன. அப்புது உத்திகளை எழுத்தாளர் சிவசங்கரி தம் எழுத்துக்களின் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது.

எழுத்தாளர் சிவசங்கரி, வாசகர்களிடம் கருத்துகள் எளிமையாகச் சென்றடைய வேண்டும் என்பதற்காகத் தம் எழுத்துகளில் புதுப்புது உத்திமுறைகளைக் கையாள்வதில் அதிக கவனம் செலுத்தியுள்ளார். இதில் வாசகர்களுக்குக் கடிதம் மூலம் ஆலோசனை வழங்குதல், உளவியல் நோக்கில் சிக்கல்களுக்குத் தீர்வு கூறுதல், வினா விடை மூலம் கருத்து விளக்கம் கூறல், சின்னச்சின்ன கதைமூலம் தம் கருத்துகளுக்கு வலுச்சேர்த்தல், தம் கருத்துகளை வரிசைப்படுத்திப் பட்டியலிடுதல், இவைகளுக்கேற்ற மொழீநடையைக் கையாளுதல் ஆகியவற்றிற்கு உரைநடையை ஒரு கருவியாகப் பயன்படுத்தியுள்ளது தெரிகிறது. (கட்டுரை வடிவில் அமைந்த உரைநடையில் நிகழ்ச்சிகள் மற்றும் சம்பந்தப்பட்ட நபர்கள் வாயிலாகச் சமுதாயப் பிரச்சனைகளை வெளியிட்டுள்ளார்.)

எழுத்தாளர் சிவசங்கரி சமுதாயத்தில் நிலவும் எந்த ஒரு சிக்கலையும் சாதாரணமாக எடுத்துக்கூறுவதில்லை. அதை அலசி ஆராய்ந்து ஓர் உளவியல் அணுகுமுறையில் தாம் கண்டது பற்றித் தம் எழுத்துகளில் வெளிப்படுத்தியவர் என்பதை அறிகிறோம்.

வினா விடைப்போக்கைத் தம் எழுத்தில் கையாண்டு, சிறந்த கருத்தை வெளியிடும் போது, சமுதாய அக்கறை அவர் எழுத்தில் வெளிப்பட்டு நிற்பதை உணர்கிறோம்.

வாசகர்களின் மனத்தில் கருத்துக்களை ஆழமாகப் பதியச் செய்வதற்குச் சின்னச்சின்ன உதாரணங்களையும் தம் எழுத்துகளில் எழுத்தாளர் பயன்படுத்தியுள்ளார். மேலும் தாம் ஈடுபட்ட துறை

அனைத்திலும் தமது கருத்தை, கனவை, நம்பிக்கையை வெளிப்படுத்துதற்கு தம் எழுத்தைக் கையாண்டுள்ளமை நன்கு தெரிகிறது.

கருத்துப் புலப்பாட்டிற்குப் பேச்சு மொழிச் சொற்கள், வட்டார வழக்குச் சொற்கள், வினாவிடை அமைப்பு, வடமொழி ஆங்கிலம் கலந்து எழுதும்முறை முதலான உத்திகளை எழுத்தாளர் சிவசங்கரி தம் எழுத்துகளில் கையாண்டு, தாம் சொல்ல வந்த கருத்தை வாசகர் மனதில் பதியும்படி செய்துள்ளமை புலனாகிறது.

எழுத்தாளர் சிவசங்கரி பல பரிமாணங்களைத் தம்முள் கொண்டவர். அவரது ஈடுபாடும், திறனும் தெளிவும் வாழ்வின்பல துறைகளில் பரவியிருந்தன என்பதையும், தனிமனிதன் கடைப்பிடிக்க வேண்டிய பண்புகள், பொருளாதாரம், குடும்ப உறவு, சமுதாய மேம்பாட்டுச் சிந்தனை, எய்ட்ஸ், இளைய தலைமுறை, பெண்கள், பசிப்பிணி ஆகியன பற்றியும் சிந்தித்தவர் என்பதையும் நமது சிந்தனைகளையும் முடிவுகளையும் தம் எழுத்தின் வாயிலாகவும் வெளியிட்டவர் என்பதையும் அறியமுடிகிறது.

**சான்றெண்விளக்கம்**


1. சிவசங்கரி, அழகு நிலா படைப்பின் உத்திகள், ப, 9.
2. சிவசங்கரி, உரத்த சிந்தனை, ப, 78.
3. சிவசங்கரி, சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப, 6.
4. மேலது, ப, 7.
5. மேலது, ப, 120.
6. மேலது, ப, 122.
7. மேலது, ப, 123.
8. மேலது, ப, 123.
9. மேலது, ப, 35.
10. மேலது, ப, 35.
11. மேலது, ப, 35.
12. சிவசங்கரி, புதிய கோணங்கள், பக், 40-48.
13. சிவசங்கரி, உரத்த சிந்தனை, பக், 52-53.
14. மேலது, பக், 53-55.
15. மேலது, ப, 230.
16. மேலது, ப, 231.
17. மேலது, ப, 231.
18. சிவசங்கரி, புதிய கோணங்கள், ப, 179.
19. மேலது, ப, 180.
20. மேலது, ப, 182.
21. மேலது, ப, 184.
22. மேலது, ப, 184.
23. மேலது, ப, 186.
24. சிவசங்கரி, என் கண்ணோட்டத்தில், பக், 183-184.
25. மேலது, ப, 184.
26. மேலது, ப, 185.
27. சிவசங்கரி, உரத்த சிந்தனை, ப, 155.
28. மேலது, பக், 211-212.

# முடிவுரை

மனித மேம்பாட்டிற்குச் சிவசங்கரியின் பங்களிப்பு என்ற இவ்வாய்வில் இன்றியமையாத செய்திகள் விரிவாக இயம்பப்பட்டுள்ளன. ஆய்வில் குறிப்பிடத்தக்க முடிவுகளுள் ஒருசில மட்டும் இப்பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.

இந்த ஆய்வின்மூலம் எழுத்தாளர் சிவசங்கரி அவர்கள் எழுத்துலகில் அடிஎடுத்து வைத்த சூழலை அறிந்துகொள்ள முடிகிறது.

தனிமனிதன் சுய மதிப்பீட்டின் மூலம் தன்னிடமுள்ள வேண்டாத குணங்களை நீக்கி, நல்ல பண்புகளை வளர்த்துக் கொள்கிறான். நல்ல பண்புகள் மனிதனை நல்லவனாக விளங்கச் செய்யும் என்பதை எழுத்தாளர் சிவசங்கரி தம்படைப்புகளில் கையாண்டுள்ளமையை அறிகிறோம்.

குடும்பம், குடும்ப உறவுகள், அதன்கடமை, பகிர்ந்துகொள்ளலின் இன்றியமையாமை, கணவன் மனைவி இணைந்து வாழ்தல், நெறிப்படுத்துதல், நன்மக்களைப் பெறுதல், அவர்களை நல்வழியில் வளர்த்து உருவாக்கல் ஆகியன குடும்பத்தின் வெற்றி என்பதைச் சிவசங்கரி வலியுறுத்திக் கூறியுள்ளார்.

நல்ல குடும்பத்தின் திறவுகோல் அந்தந்த குடும்பத்தின், கணவன் மனைவியின் கைகளில் தான் உள்ளது. கணவன், மனைவியைத் தூக்கி நிறுத்துவது, மனைவியின் பேச்சு, செயல், நடத்தையில் தான்உள்ளது. நன்கு சிந்தித்து செயல்படும் ஒவ்வொரு செயலும் சிறப்பாக அமையும். அதன் மூலம் குடும்பம் அமைதியாக இன்பமாக விளங்கும் என்பதை ஆய்வு உணர்த்துகிறது.

எந்த ஒரு செயலுக்கும் இரு கோணங்கள் உண்டு. அவை, மனிதன் நினைப்பது நடந்துவிடுவது அல்லது நடக்காமல்போவது என்பதாகும். இவை இரண்டும் அல்லாமல் மனிதன் நினைக்காததும் நடக்கும் என்ற மூன்றாவது ஒன்றும் உண்டு என்பதை உணர்தல் வேண்டும். அப்போது

வாழ்க்கைச் சிக்கலை எதிர்கொள்வது எளிதாகும் என்பதைச் சிவசங்கரி புலப்படுத்தியுள்ளமை புலனாகின்றது.

குடும்பம் சிறப்பாக அமைய வேண்டுமானால் விட்டுக் கொடுத்தல், அன்பு செலுத்துதல், அரவணைத்துச் செல்லல், பொறுமையைக் கடைப்பிடித்தல் என்ற கொள்கைகளைப் பின்பற்றினால் தனிமனிதன் மேம்பாடு அடையமுடியும் என்பது தெரிகிறது.

வாழ்க்கையைத் திறம்பட நடத்தப் பொருள் இன்றியமையாததாகிறது. மனிதன் பொருளாதாரத்தில் முன்னேற்றம் அடைய வேண்டுமானால், அவன் நன்கு சிந்தித்துத் திட்டங்களை முதலில் வகுக்க வேண்டும். திட்டம் ⟶ முயற்சி ⟶ கடின உழைப்பு ⟶ வெற்றி என்ற படிநிலைகளில் மனிதன் பொருளாதார முன்னேற்றத்தை அடையலாம் என நெறிப்படுத்தியுள்ளார் சிவசங்கரி.

எழுத்தாளர் சிவசங்கரி தம் எழுத்தின் மூலம் முற்போக்குச் சிந்தனைகளைப் படைத்துத் தந்துள்ளார். பலருக்கு வழிகாட்டியாகத் திகழ்கிறார். விழிப்புணர்வைத் தனிமனிதன் மற்றும் சமுதாய மக்களிடம் ஏற்படுத்தி வருகிறார் என்பன இந்த ஆய்வின் மூலம் தெளிவுபெறும் உண்மைகளாகும்.

சிவசங்கரியின் படைப்புகளில் தனிமனிதன் வாழும் சூழல், பின்னணி, சமுதாயம் வழி சிக்கல்கள் ஆராயப்பட்டு தீர்வு தெளியப்பட்டுள்ளது.

சமூகத்தில் இன்று புரையோடிக்கிடக்கும் அவலங்களை நீக்கல், மக்கள் விழிப்புணர்வுடன் வாழ்தலின் அவசியம், இளைஞர்களிடம் தேசப்பற்று உருவாக்கல் ஆகியவை உலக அரங்கில் பாரதத்தை உயர்த்தக் கூடிய வழிகளாகும்.

இளைஞர்களிடம் ஆரோக்கியம், சுகாதாரம் குறித்த கருத்துக்களை எடுத்துக் கூறி, அவர்கள் மூலம் சமூக விழிப்புணர்வு உண்டாக்கலும், பள்ளி, கல்லூரிகளின் வாயிலாகச் சுகாதார, சமூக விழிப்புணர்வை

ஏற்படுத்துதலும் பெரும் பயன் அளிக்கும் எனச் சிவசங்கரி எடுத்துரைப்பதை நடைமுறைப்படுத்துதல் சமூகத்தின் வெற்றிக்கு வழிவகுக்கும்.

எந்த இடத்தில் சிக்கல்கள் தீவிரமாகின்றனவோ, அங்கு அப்போதைய நிலைக்குத் தக்கவாறு போர்க்கால அடிப்படையில் சிக்கல்கள் தீர்க்கப்பட வேண்டும் என்று எழுத்தாளர் சிவசங்கரி வலியுறுத்தி வருவதை இவ்வாய்வு நிறுவுகிறது.

தனிமனிதனிடம் விழிப்புணர்வை ஏற்படுத்திவிட்டால், அது குடும்பம் - அக்கம் பக்கத்து வீட்டினர் - தெரு - வட்டாரம் - ஊர், நாடு என்று விரிந்து கொண்டேபோவது இயல்பு என்பதை எழுத்தாளர் சிவசங்கரி குறிப்பிட்டுள்ளதை இவ்வாய்வு புலப்படுத்துகிறது.

எழுத்தாளர் சிவசங்கரி அவர்கள், சமூகத்தின் அவலங்களை மாற்றப் பல வழிகளிலும் களம் இறங்கிப் பணியாற்றி வருகிறார் என்பதையும், மனித மேம்பாட்டிற்குச் சிவசங்கரியின் எழுத்துப் பணியும், சமூகப் பணியும் ஒப்பற்றனவாகும் என்பதையும் இவ்வாய்வின் வழி அறிய முடிகிறது.

தனிமனிதர்களிடையே இலக்கியங்கள் மூலம் விழிப்புணர்வை உண்டாக்க வேண்டும் என்பதற்காகக் கவிராத்திரி என்ற நிகழ்ச்சியை 'அக்னி' என்ற அமைப்பின்மூலம் பலமொழிக்கவிஞர்களை வரவழைத்துக் கவிதைகள் படிக்க ஏற்பாடு செய்தவர் எழுத்தாளர் சிவசங்கரி என்பதை அறிகிறோம்.

எழுத்தாளர் சிவசங்கரியின் முயற்சியால், சென்னை தரமணியில் 1992 ஆம் வருடம் வி.எச்.எஸ். மருத்துவமனை அமைக்கப்பட்டது. அம்மருத்துவமனையில் குடிபோதையில் உடல்நலம் மனநலம் குன்றியவர்களுக்கு மருத்துவம் செய்து, குடிப்பழக்கத்திலிருந்தே விலக்கி மனிதனை மனிதனாக மாற்றிவருகிறது. அத்துடன் நில்லாமல் நோயாளி சிகிச்சை பெற்று வீடு சென்றபின்பும் தொடர்ந்து அவரைக் கண்காணித்து வருகிறது. இச்செயல் சிவசங்கரி கொண்டுள்ள மனிதநேயச் செயல்பாட்டை வெளிப்படுத்துகின்றது.

எழுத்தாளர் சிவசங்கரி, தம் கட்டுரைகளில் சமுதாயத்தின் அவலநிலையை எடுத்துக்காட்டி மாற்றம் ஏற்பட வழிகாட்டியுள்ளார். குடிபோதை, எய்ட்ஸ், பெண்சிசுக்கொலை, கணவனை இழந்தபெண் என்று தனிமனிதச் சிக்கல்களுக்குத் தீர்வுகள் ஆய்ந்து அறிந்து, அதிலிருந்து விடுதலைபெற வழிமுறைகளை இன்றளவும் கூறிவருகிறார் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

எழுத்தாளர் சிவசங்கரி தம் கட்டுரைகளில் காலத்திற்கேற்ப, புதுப்புது உத்திகளைக் கையாண்டுள்ளதை அறியமுடிகிறது. உளவியல் நோக்கில் சிக்கல்களுக்குத் தீர்வுகூறுதல், வினாவிடைமூலம் தம் கருத்துகளுக்கு வலுச்சேர்த்தல், தம் கருத்துகளை வரிசைப்படுத்திப் பட்டியலிடுதல் இவைகளுக்கேற்ற உரைநடையை ஒரு கருவியாகப் பயன்படுத்தியுள்ளமை தெரிகிறது.

கருத்துப்புலப்பாட்டிற்குப் பேச்சுமொழிச் சொற்கள், வட்டார வழக்குச் சொற்கள், வடமொழி ஆங்கிலம் கலந்து எழுதும் முறை முதலானவற்றை எழுத்தாளர் சிவசங்கரி தம் கட்டுரைகளில் கையாண்டு தாம் சொல்லவந்த கருத்தை வாசகர் மனதில் பதியும்படி செய்துள்ளமை புலனாகிறது.

எழுத்தாளர் சிவசங்கரி, பல பரிமாணங்களைத் தம்முள் கொண்டவர். அவரது ஈடுபாடும் திறனும் தெளிவும் வாழ்வின் பல துறைகளில் பரவியிருந்தன. அவ்வகையில் தனிமனிதன் கடைப்பிடிக்க வேண்டிய பண்புகள், பொருளாதாரம், குடும்பஉறவு, சமுதாய மேம்பாட்டுச் சிந்தனை, இளைய தலைமுறை பின்பற்ற வேண்டிய கொள்கைகள் ஆகியன பற்றியும் சிந்தித்தவர் என்பதையும், தமது சிந்தனைகளையும் முடிவுகளையும் தம் கட்டுரைகளின் வாயிலாக வெளியிட்டு வெற்றி கண்டவர் என்பதையும் இவ்வாய்வின் வாயிலாக அறியமுடிகிறது.

சிவசங்கரியின் கணவர், இச் 'சமுதாயத்தையே' தத்து எடுத்துக் கொள் என்று கூறியதற்கேற்ப, அதில் பெரும் அக்கறை கொண்டு எழுத்தாளர் சிவசங்கரி செயலாற்றி வருகிறார் என்பது அவர்தம் எழுத்துக்களாலும், பொதுநலச் செயல்பாடுகளாலும் உணர முடிகிறது.

சிவசங்கரி பற்றியும் அவரது எழுத்துகள் பற்றியும் அவரது சமூகப் பணிகள் பற்றியும் ஆய்வு நிகழ்த்தவரும் ஆய்வாளர்களுக்கு இவ்வாய்வு ஏதேனும் ஒருவகையில் துணைசெய்யும் என்று நம்பலாம்.

# துணை நூற்பட்டியல்

**முதன்மை நூல்கள்**


01. சிவசங்கரி., - **அப்பா**
திருமகள் நிலையம்,
சென்னை, முதற்பதிப்பு, 1988.

02. ,, - **இந்திராவின் கதை,**
திருமகள் நிலையம்,
சென்னை, 2 ஆம் பதிப்பு, 1988.

03. ,, - **உரத்த சிந்தனை,**
வானதி பதிப்பகம்,
சென்னை, முதற்பதிப்பு, 1993.

04. ,, - **என் கண்ணோட்டத்தில்,**
திருமகள் நிலையம்,
சென்னை, முதற்பதிப்பு, 1993.

05. ,, - **குழப்பங்கள்,**
திருமகள் நிலையம்,
சென்னை, 2 ஆம் பதிப்பு, 1994.

06. ,, - **கொஞ்சம் யோசிக்கலாமே,**
திருமகள் நிலையம்,
சென்னை, 2 ஆம் பதிப்பு, 1994.

07. ,, - **சில அனுபவங்கள் சில மனிதர்கள்,**
கற்பகம் நிலையம்,
சென்னை, முதற்பதிப்பு, 1981.

08. ,, - **சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது,**
வானதி பதிப்பகம்,
சென்னை, 13 ஆம் பதிப்பு, 1999.

09. சிவசங்கரி - **புதிய கோணங்கள்,** வானதி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1991.

**துணைநூல்கள்**

01. - **அகநானூறு,** கழக வெளியீடு, சென்னை, முதல் பதிப்பு, 1970.

02. - **குறிஞ்சிப்பாட்டு,** கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்பு, 1978.

03. - **குறுந்தொகை,** அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், முதல் பதிப்பு, 1983.

04. - **நற்றிணை,** கழக வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1970.

05. - **புறநானூறு,** தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், ஆறாம் பதிப்பு, 1963.

06. - **நாலாயிரதிவ்யப் பிரபந்தம்,** ஆழ்வார்கள் ஆய்வு மையம், தியாகரராயர் நகர், சென்னை-17.

07. அகிலன் - **எழுத்தும் வாழ்க்கையும்,** தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, முதற்பதிப்பு, 1972.

08. அசோகமித்திரன் - **படைப்புக்கலை,** ஞானச்சேரி வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1987.

09. அண்ணாதுரை.சி.என்., - **மறுமலர்ச்சி,**
திராவிடன் பதிப்பகம்,
வேலூர், முதற்பதிப்பு - 1945.

10. இராக்கி., - **நிறம் மாறும் மனிதர்கள்,**
திருமகள் நிலையம்,
சென்னை, முதற்பதிப்பு, 1984.

11. இராசா.கி., - **இலக்கியவகைத் திறனாய்வு,**
பார்த்திபன் பதிப்பகம்,
திருச்சி, முதற்பதிப்பு, 1996.

12. இராமலிங்கம்.மா., - **இருபதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம்,**
தமிழ் புத்தகாலயம்,
சென்னை, 3-ம் பதிப்பு, 1975.

13. ,, - **அகிலனின் கலையும் கருத்தும்,**
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை, முதற்பதிப்பு, 1974.

14. இராமநாதன். ஆறு., - **நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல்,**
மணிவாசகர் நூலகம்,
சென்னை, முதற்பதிப்பு, 1982.

15. இலக்குமிதரன், பாரதி.சோ.,- **நமது சமூகம் (சமூகவியல்),**
முதற்பதிப்பு - 1969.

16. இளந்திரையன்.சாலை., - **சமுதாய நோக்கு,**
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை, பதிப்பு, 1980.

17. உதயமூர்த்தி.எம்.எஸ்., - **சொந்தக்காலில் நில்,**
கங்கை புத்தக நிலையம்,
சென்னை - 17,
முதற்பதிப்பு, 1996.

18. உதயமூர்த்தி.எம்.எஸ்., - **மனித உறவுகள்,**
கங்கை பதிப்பகம்,
சென்னை, முதற்பதிப்பு, 1986.

19. ,, - **வளரும் தமிழிலக்கியம்,**
கிறுத்துவ இலக்கியச் சங்க வெளியீடு,
சென்னை, முதற்பதிப்பு, 1970.

20. ஏங்கல்ஸ்.பி., - **குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்,**
முன்னேற்றப் பதிப்பகம்,
மாஸ்கோ, மூன்றாம் பதிப்பு,

21. ஔவையார்., - **தனிப்பாடல்கள், தனிப்பாடல் திரட்டு,**
பி.இரத்தின நாயகர் சன்ஸ்,
சென்னை, முதற்பதிப்பு, 1957.

22. கண்ணதாசன். கவிஞர்., - **தமிழர் திருமணமும் தாலியும்,**
அருணோதயம் வெளியீடு,
சென்னை, முதற்பதிப்பு, 1954.

23. கண்ணப்ப முதலியார்., - **தமிழர் திருமணம்,**
அருணோதயம் வெளியீடு,
சென்னை, முதற்பதிப்பு, 1953.

24. காந்தி.கா., - **தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்,**
உலகத் தமிழ் ஆராய்ச்சிநிறுவனம்,
சென்னை, முதற்பதிப்பு, 1980.

25. கல்பகம்.செல்வி இரா., - **சமூகவியல்,**
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை, முதல்பதிப்பு, 1973.

26. கல்யாண சுந்தரனார்.வி., - **பெண்ணின் பெருமை,**
பூம்புகார் பிரசுரம்,
சென்னை, 12 ஆம் பதிப்பு, 1982.

27. கார்த்திகேசு சிவத்தம்பி., - **நாவலும் வாழ்க்கையும்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 2-ம் பதிப்பு, 1988.

28. குஞ்சிதபாத தேசிகர்., - **உளநூல்,**
கூட்டுறவு பதிப்பகம்,
கரந்தை, முதற்பதிப்பு, 1952.

29. கைலாசபதி.க., - **சமூகவியலும் இலக்கியமும்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 2-ம் பதிப்பு, 1988.

30. கோதண்டராமன்.பொன்., - **ஆராய்ச்சி நெறிமுறைகள்,**
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை, முதற்பதிப்பு, 2000.

31. சந்திரசேகரன்.தி.க., - **முடிவெடுப்போம் சிக்கல்களை முறியடிப்போம்,**
விஜயா பதிப்பகம்,
கோயமுத்தூர்,
முதற்பதிப்பு, 2001.

32. சரசுவதி.வி., - **நாட்டுப்புறப் பாடல்கள் சமூக ஒப்பாய்வு,**
பதிப்புத்துறை,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,
மதுரை, முதற்பதிப்பு, 1962.

33. சரளா ராஜகோபாலன்., - **தமிழ்த்தென்றலும் பெண்மையும்,**
ஒளிப் பதிப்பகம்,
சென்னை, முதற்பதிப்பு, 1988.

34. சரளா ராஜகோபாலன்., - **வேதநாயகரும் பெண்மையும்,**
ஒளிப்பதிப்பகம்,
சென்னை, முதற்பதிப்பு - 1985.

35. சாரதா நம்பி ஆரூரன்., - **நீலாம்பிகை அம்மையாரின் படைப்புகளில் சமூகச்சிந்தனைகள்,** தென்னிந்திய சைவ சித்தாந்த நூல் பதிப்புக் கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1990.

36. சரோஜா சண்முகம்.ஆ., - **பெண்களுக்கு பயனுள்ள சிறுதொழில்கள்,** பூங்கொடி பதிப்பகம், சென்னை, 3-ம் பதிப்பு, 1979.

37. சாவித்திரி.எஸ்., - **சமூகவியல்,** மோகன் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1987.

38. சிதம்பரநாதன்.வே., - **ஆய்வியல் முறைகள்,** சுபாபதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1964.

39. சிதம்பரரகுநாதன்., - **இலக்கிய விமர்சனம்,** ஸ்டார் பிரசுரம், சென்னை, முதற்பதிப்பு, 1964.

40. சாமி.பி.எல்., - **தமிழ் இலக்கியத்தில் தாய்தெய்வ வழிபாடு,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1980.

41. சிவகாம சுந்தரி.சு., - **தமிழகப் பெண்கள் வாழ்வும் வளர்ச்சியும்,** கோவை, முதற்பதிப்பு, 1971.

42. சின்னச்சாமி - **தமிழர் சமுதாய வரலாறு,** வானதி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1979.

43. சீத்தலைச் சாத்தனார் - **மணிமேகலை,**
கழக வெளியீடு,
சென்னை,
மறுபதிப்பு, 1985.

44. சுந்தரமூர்த்தி. இ., - **நடையியல் அறிமுகம்,**
அன்பு நூலகம்,
சென்னை, முதல் பதிப்பு, 1978.

45. சுந்தரமூர்த்தி.இ., - **நடையியல் சிந்தனைகள்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, முதற்பதிப்பு, 1994.

46. சுப்புரெட்டியார்.ந., - **இல்லறநெறி,**
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை, முதற்பதிப்பு, 1976.

47. சுப்ரமணியன்.டாக்டர் ச.வே., - **தமிழ் இலக்கிய வகையும் வடிவும்,**
தமிழர் பதிப்பகம்,
சென்னை, முதற்பதிப்பு, 1984.

48. சுப்ரமணியன். சி.ப., - **பண்பாட்டுக் கோலங்கள்,**
தமிழ் வெளியீட்டுக் கழகம்,
சென்னை, முதற்பதிப்பு, 1981.

49. சுப்ரமணியன்.சி.ப., - **பண்பாட்டுக் கோலங்கள்,**
தமிழ் வெளியீட்டுக் கழகம்,
சென்னை, முதற்பதிப்பு, 1964.

50. செல்வராசு.நா., - **சமூக மானுடவியல் பார்வைகள்.**
காரனேஷன் பதிப்பகம்,
புதுச்சேரி, முதற்பதிப்பு, 1991.

51. செயராமன்.நா., - **ஈன்ற தாய்,**
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை, முதற்பதிப்பு, 1975.

52. சோமலே., - **தமிழ் நாட்டு மக்களின் மரபும் பண்பாடும்,**
பாரிநிலையம், சென்னை,
முதற்பதிப்பு, 1974.

53. ஜான் சாமுவேல்.ஜி., - **இலக்கியத்தில் சமுதாயப் பார்வை,**
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை, முதற்பதிப்பு, 1984.

54. ஜான் சாமுவேல்.ஜி., - **பண்பாட்டுக் கலப்பும் இலக்கிய ஒருமையும்,**
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை, முதற்பதிப்பு, 1986.

55. ஞானசம்பந்தன்.அ.ச., - **இலக்கியக் கலை,**
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை, முதற்பதிப்பு, 1976.

56. ஞானமூர்த்தி.தா.ஏ., - **இலக்கியத்திறனாய்வியல்,**
யாழ் வெளியீடு,
சென்னை, முதற்பதிப்பு, 1996.

57. தண்டாயுதம்.இரா., - **தற்காலத்தமிழ் இலக்கியம்,**
தமிழ்ப்புத்தகாலயம்,
சென்னை, 3-ம் பதிப்பு, 1983.

58. தண்டாயுதம்.இரா., - **ஓர் இலக்கிய ஆய்வு - தற்காலம்,**
தமிழ்ப்புத்தகாலயம்,
சென்னை, முதற்பதிப்பு, 1985.

59. தனிநாயக அடிகள்., - **தமிழ்த்தூது,**
பாரிநிலையம்,
சென்னை,
திருந்திய ஐந்தாம் பதிப்பு, 1962.

60. திருமூலர்., - **திருமந்திரம்,**
கழக வெளியீடு, சென்னை,
முதற்பதிப்பு, 1989.

61. திருவள்ளுவர்., - **திருக்குறள்,**
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
சென்னை, 17 ஆவது பதிப்பு, 1979.

62. தூரன்.பெ., - **பாரதியும் பெண்மையும்,**
வானதி பதிப்பகம்,
சென்னை, முதற்பதிப்பு, 1979.

63. தூரன்.பெ., - **மனமும் அதன் விளக்கமும்,**
பாரிநிலையம்,
சென்னை, முதற்பதிப்பு, 1968.

64. தேவநேயன். ஞா., - **தமிழர் திருமணம்,**
சேலம் கூட்டுறவு அச்சகம்,
முதற்பதிப்பு, 1956.

65. தொல்காப்பியர்., - **தொல்காப்பியம்,**
இளம்பூரணர் உரை,
கழக வெளியீடு, சென்னை,
மறுபதிப்பு, 1985.

66. நடராஜன்.தி.சு., - **திறனாய்வுக் கொள்கைகள்,**
அன்னம் பதிப்பகம்,
மதுரை,
முதற்பதிப்பு, 1976.

67. நாசர்அலி.மீ.அ.மு., - **நாட்டுப்புறப் பண்பாட்டியல்,**
இக்ரஷ் பப்ளிகேஷன்ஸ்,
திருச்சி, முதற்பதிப்பு, 1987.

68. நாதன்., - **கல்யாண வைபோகமே,**
பிரதிபாபிரசுரம்,
சென்னை, முதற்பதிப்பு, 1979.

69. நீதிவாணன்.ஜெ., - **நடையியல்,**
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம், முதற்பதிப்பு, 1983.

70. நுஹ்மான்., - **திறனாய்வுக் கட்டுரைகள்,**
அன்னம் பிரைவேட் லிமிடெட்,
சிவகங்கை, முதற்பதிப்பு, 1985.

71. பக்தவச்சல பாரதி.சீ., - **பண்பாட்டு மானிடவியல்,**
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம், முதற்பதிப்பு, 1990.

72. பரமசிவானந்தம்.அ.மு., - **சமுதாயமும் பண்பாடும்,**
தமிழ்க் கலைப் பதிப்பகம்,
சென்னை, முதற்பதிப்பு, 1962.

73. பரமசிவானந்தம்.அ.மு., - **தமிழர் வாழ்வு,**
வள்ளியம்மாள் கல்வி அறம்,
40. முதல் பெருந்தெரு,
சென்னை, முதற்பதிப்பு, 102.

74. பாரதியார்., - **பாரதியார் கவிதைகள்,**
சக்தி காரியாலயம்,
சென்னை, 3 ஆம் பதிப்பு, 1967.

75. பாலதண்டாயுதம்., - **இலக்கியத்தில் மனிதநேயம்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, முதற்பதிப்பு, 1975.

76. பாலச்சந்திரன்.சு., - **இலக்கியத்திறனாய்வு,**
அணியகம், சென்னை,
முதற்பதிப்பு, 1976.

77. பாலசுப்ரமணியன்.கு.வெ., - **சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள்,**
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சை, முதற்பதிப்பு, 1994.

78. பாலசுப்பிரமணியன்.இரா., - **நாவல் கலையியல்,**
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, முதல் பதிப்பு, 2004.

79. பிச்சமுத்து.நா., - **மு.வ. நாவல்களில் சமுதாய மறுமலர்ச்சியின் தாக்கம்**
சக்தி புக் ஹவுஸ்,
சென்னை, முதற்பதிப்பு, 1990.

80. மதியழகன்.ம., - **விடுதலைக்குப்பின் தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி,**
மணிவாசகர் பதிகம்,
சிதம்பரம், முதற்பதிப்பு, 1998.

81. மாணிக்கம்.வ.சுப., - **தமிழ்க்காதல்,**
பாரிநிலையம்,
சென்னை, முதற்பதிப்பு, 1962.

82. மாணிக்கவாசகர்., - **திருவாசகம்.**
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம், மறுபதிப்பு, 2002.

83. மறைமலை.சி.கி., - **இலக்கியக்கொள்கைகள்,**
ஸ்ரீ நீலமலர் வெளியீட்டகம்,
சென்னை, முதற்பதிப்பு, 1976.

84. மீனாட்சி சுந்தரனார்.தெ.பொ., - **தமிழும்பிற பண்பாடும்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, ஏழாம் அச்சு, 1998.

85. மெர்வின்., - **அன்பின் அதிபதி ஆப்ரகாம் லிங்கன்,**
சுவாமி மலை பதிப்பகம்,
சென்னை - 17,
முதற்பதிப்பு, 2001.

86. முத்துச்சண்முகம்., - **தமிழ் இலக்கியக் கோட்பாடுகள்,** சர்வோதய இலக்கியப்பண்ணை, மதுரை - 1976.

87. முருகானந்தம்., - **ஆராய்ச்சித் தொகுதி,** ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1990.

88. யண்டமூரி வீரேந்திரநாத் (தமிழாக்கம், குணசேகர்.ஜு); - **வெற்றிக்கு ஐந்து படிகள்,** நவசாஹிதி புக் ஹவுஸ், விஜயவாடா, முதற்பதிப்பு, 2000.

89. ராஜன்கிருஷ்ணன்., - **காலந்தோறும் பெண்,** தாகம், சென்னை, முதற்பதிப்பு, 1980.

90. ரஸ்ஸல் பெட்ரண்டு (கோ.மாதவன்) (மொ.பெ.ஆ); - **திருமணமுறைகள்,** பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, முதற்பதிப்பு, 1965.

91. வரதராசன்.மு., - **தமிழ் இலக்கிய வரலாறு,** சாகித்ய அகாதமி, புதுடெல்லி, முதற்பதிப்பு, 1979.

92. ,, - **இலக்கியத்திறன்,** பாரிநிலையம், சென்னை, முதற்பதிப்பு, 1979.

93. ,, - **இலக்கிய மரபு,** பாரிநிலையம், சென்னை, முதற்பதிப்பு, 1979.

94. ,, - **பெண்மை வாழ்க,** பாரிநிலையம், சென்னை, ஐந்தாம் பதிப்பு, 1979.

95. விமலானந்தம்.மது.ச., - **தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம்,** ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு - 1987.

**ஆங்கில நூல்கள்**

1. *Kuppusamy. B.,* - *Sociel Change in India, Vikas Publishing House, Delhi - 1975.*

2. *Mitra.S.M.,* - *The Position of Women In Indian Life, Meeraj Publishing House, Delhi, IInd Edition - 1984.*

3. *Mandelbaun.David.G.,* - *Society in India, Popular Prakasam, Bombay - 1972.*

4. *Rema Mebta.,* - *Divorced Hindu Women, Vikas Publishing House, Delhi - 1975.*

5. *Russelli Bertrand.,* - *Marriage and Morals, Aeorge Allan Sunwin, London - 1976.*

6. *Srinivas.M.S.,* - *Marriage and Family in Mysore, New book company, Bombay - 1942.*

7. *Toganayagi Nannithambi.,* - *Women in Modern Tamil Literature, (1880 - 1960) University of Malaya, Kolalumpur - 1969.*

8. ........................................ *Women and Equality, Oxford University Press, Newyork - 1977.*

**கட்டுரைத் தொகுப்பு**

1. **நாட்டுப்புறவியலில் மனித உறவுகள்,**
தமிழ்த்துறை,
பெரியார் கலைக்கல்லூரி, கடலூர்
முதற்பதிப்பு, ஜுன் 2005.

2. **வேர்களைத் தேடி,**
தமிழியல் துறை,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்,
சிதம்பரம், முதற்பதிப்பு, 2004.

**தினமணி நாளிதழ்**

01. பாவண்ணன்., - **'உறுத்தும் குற்ற உணர்வு',** நாள் : 27-09-2003

02. ,, - **'மாறாத மனிதநேயம்',** நாள் : 30-04-2004

03. தட்சிணாமூர்த்தி., - **'மாறாத மனிதநேயம்',** நாள் : 09-12-2005

04. காமராஜ், டாக்டர் க., - **'பாலியல் ஆபாசம் அல்ல'** நாள் : 25-01-2006

05. ரவிசங்கர்., - **'உலகமே ஒரே குடும்பம்',** நாள் : 12-02-2006,

06. கிருஷ்ணன். டி.வி., - **'பேசப்படாத மௌனம்',** நாள் : 27-04-2006

07. ஜீவானந்தம், க., - **'முகம் தெரியாத முன்னோர்கள்',** நாள் : 15-09-2006.

08. முத்து, நெல்லை சு., - **'நூறுமுறை சூரியனைச் சுற்றலாம்',** நாள் : 31-10-2006.

09. முரளி, எஸ்., - **'முதியோர் இல்ல டூப்ளிகேட் சாவி',** நாள் : 05-11-2006.

10. அமைச்சர் அன்புமணி., - **'போதை ஊசி பழக்கத்துக்கு அடிமையாகும் சென்னை இளைஞர்கள்',** நாள் : 19-11-2006.

11. ரங்கராஜன், ஜெ., - **'எய்ட்ஸ் நோயாளிகளுக்கு உதவும் அமுக்கரா',** நாள் : 28-11-2006.

12. ................................ - **'எய்ட்ஸ் பாதித்த குழந்தைகளுக்குச் சிகிச்சை',** நாள் : 01-12-2006.

13. ................................ - **'உலக எய்ட்ஸ் தினச் செய்திகள்',** நாள் : 02-12-2006.

14. நடராஜர், ஆர்., - **'தேவை மனிதநேயம்',** நாள் : 09-12-2006.

15. மாலதி, எஸ்., - **இந்திய நாட்டில் மலிவு விலைப்பொருள்,** நாள் : 29-12-2006.

16. நீரஜா சௌத்திரி, (தமிழில் - சாரி) - **'குழந்தைகளுக்காகக் குரல் கொடுங்கள்',** நாள் : 11-12-2006.

**வார, மாத இதழ்கள்**


01. *முத்தையா வெள்ளையன்.,* - **'கௌரவமான வாழ்வை நோக்கி',** *தினமணி கதிர், 06-11-2005.*

02. *ஞாநி, எஸ். உமாபதி.,* - **'ஆண்களாகும் பெண்கள்',** *அவள் விகடன், 30-12-2006.*

03. *நாராயணராஜா.,* - **'நாளைய அப்துல்கலாம்களே',** *மங்கையர் மலர், மே, 2006.*


**ஆய்வேடு**


1. *அனார்கலி.,* - **மகளிர் நாவல்களில் குடும்ப உறவுகள்,** *மதுரை காமராசர் பல்கலைக் கழகம், பதிப்பு, 1993.*

2. *ஈசுவரப்பிள்ளை.தா.,* - **பக்தி இலக்கியத்தில் சமுதாயப் பார்வை,** *தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2000.*

3. *கோவிந்தராஜ்.சு.,* - **ஆழ்வார்களின் சமுதாயத் தத்துவம்,** *வைணவ அறக்கட்டளை தத்துவ மையம், தமிழ்ப் பல்கலைக் கழகம் - 1993.*

4. *பாஸ்கரன்.க.,* - **சமுதாயத் தத்துவம்,** *தமிழ்ப் பல்கலைக் காகம் - 1991.*

5. *சுஜாதா.,* - **பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் சமுதாயப் பார்வை,** *தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 2000.*


——— ∘ ○ ∘ ———